# குன்றக்குடி அடிகளார்

# நூல்வரிசை

தொகுதி - 8

## சமய இலக்கியம்

# குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை

15 தொகுதிகள்
6000 பக்கங்கள்

## தொகுதி 8

## சமய இலக்கியம்



முதன்மைப் பதிப்பாசிரியர்
தவத்திரு பொன்னம்பல அடிகளார்

விற்பனை உரிமை :

மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதல் பதிப்பு : டிசம்பர், 2001
திருவள்ளுவர் ஆண்டு : 2032

மணிவாசகர் வெளியீட்டு எண் : 891

**விலை : ரூ. 100-00**

பதிப்பாசிரியர் குழு :
தமிழாகரர் தெ. முருகசாமி
நா. சுப்பிரமணியம்
குன்றக்குடி பெரியபெருமாள்
க. கதிரேசன்
மரு. பரமகுரு

செயலர் :
பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பன்

கிடைக்குமிடம் :
**மணிவாசகர் நூலகம்**
12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608 001.
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 108.
9, சிவப்பிரகாசம் தெரு, தி.நகர், சென்னை - 600 017.
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625 001.
15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641 001.
28, நந்தி கோயில் தெரு, திருச்சி - 620 002.

தொலைபேசி :

| | | |
|---|---|---|
| சிதம்பரம் | : | **30069** |
| சென்னை | : | **5361039** |
| தி. நகர் | : | **4357832** |
| மதுரை | : | **622853** |
| கோயமுத்தூர் | : | **397155** |
| திருச்சி | : | **706450** |

**பிரிண்டர்ஸ் : சக்தி பிராசஸ், சென்னை – 81. 5956006, 5950331**

## தமிழ்மாமுனிவர் அருள்நெறித் தந்தை

# தவத்திரு குன்றக்குடி அடிகளார்

## வாழ்க்கைக் குறிப்புகள்

| ஆண்டு | நிகழ்வுகள் |
|---|---|
| 1925 | • தோற்றம் |
| | • பூர்வாசிரமம் : தந்தையார் : திரு. சீனிவாசம் பிள்ளை<br>தாயார் : திருமதி. சொர்ணத்தாச்சி |
| | • பிள்ளைத் திருநாமம் : அரங்கநாதன் |
| | • தோற்றம் பெற்ற ஊர் : தஞ்சை மாவட்டம் திருவாளப்புத்தூர் அருகேயுள்ள நடுத்திட்டுக் கிராமம். |
| 1931 - 1936 | • சிதம்பரம் அண்ணாமலை நகரில் வாசம். |
| | • 'சொல்லின் செல்வர்' ரா.பி. சேதுப்பிள்ளை, நாவலர் நாட்டார், சுவாமி விபுலானந்தர் ஆகியோர் தொடர்பு. |
| 1937-1942 | • தலைமையாசிரியர் திரு. கோபாலகிருஷ்ண பிள்ளை வீட்டில் கடியாபட்டியில் வாழ்தல். |
| | • பள்ளியிறுதித் தேர்வு எழுதுதல். |
| | • 1942 விடுதலைப் போராட்டத்தில் ஈடுபாடு. |
| | • 'வினோபா பாவே படிப்பகம்' தொடங்கி நடத்துதல். |
| 1945 | • தருமபுரம் ஆதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம் கயிலைக் குருமணி அவர்களிடம் கந்தசாமித் தம்பிரான் என தீட்சாநாமத்துடன் தம்பிரானாதல். |
| | • தருமபுரம் தமிழ்க் கல்லூரியில் பயிலுதல். |
| 1947 - 1948 | • சீர்காழிக் கட்டளைத் தம்பிரான் - திருஞான சம்பந்தர் திருமடம் தூய்மைப் பணி; திருமுறை வகுப்பு, விழா நடத்துதல். |
| 1949 | • குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் இளவரசு பட்டம் ஏற்பு. திருநாமம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள். |
| 1951 | • காரைக்குடிக் கம்பன் விழாவில் 'புதரிடைமலர்' என்ற தலைப்பில், அறிஞர்களின் நெஞ்சம் கவர்ந்த சொற்பொழிவு. |
| 1952 | • குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் 45ஆவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளல். |

- அருள்நெறித் திருக்கூட்டம் தோற்றம்.
- 'மணிமொழி' என்னும் பெயரில் இயக்கப் பத்திரிகை வெளியிடல்.

1953
- ஆதீனத்தின் அருளாட்சியிலுள்ள பிரான்மலைத் திருக்கோயில் சித்திரைத் திருவிழாவின்போது (சங்க கால வள்ளல் பாரி வாழ்ந்திருந்த மலையில்) வள்ளல் பாரி விழாத் தொடங்குதல்.
- பல்லக்கில் பட்டணப் பிரவேசம் வருதலைத் தவிர்த்தல்.
- இலங்கைப் பயணம் - இரண்டு வாரம் சுற்றுப் பயணம்.

1954
- இராசாசி தலைமையில் தேவகோட்டையில் அருள்நெறித் திருக்கூட்ட மாநாடு.
- திராவிடர் கழகத் தலைவர் பெரியார் சந்திப்பு.
- தாய்லாந்து, இந்தோசீனா, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் சுற்றுப்பயணம் (3 திங்கள்)

1955
- அருள்நெறித் திருப்பணி மன்றம் தொடங்குதல்.
- 'தமிழ்நாடு' நாளிதழ் தவத்திரு குன்றக்குடி அடிகளார் என்ற பெயரை அறிமுகப்படுத்துதல்.

1956
- அறிஞர் அண்ணா குன்றக்குடி திருமடத்திற்கு வருகை.
- ஆச்சார்ய வினோபா பாவே திருமடத்திற்கு வருகை.

1958
- குன்றக்குடியில் உயர்நிலைப்பள்ளி தொடங்குதல்.

1959
- ஆ. தெக்கூரில் பள்ளிச் சீரமைப்பு மாநாடு நடத்துதல்; பாரதப் பிரதமர் நேரு மாநாட்டிற்கு வருகை.

1960
- மத்திய அரசு சேமநலக் குழு உறுப்பினராதல்.

1962
- சீனப்போரின்போது தங்க உருத்திராட்ச மாலையைத் திருவொற்றியூர்க் கூட்டத்தில் ஏலம் விட்டு ரூ. 4000 தருதல்.
- மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் திருக்கோயிலில் திருமுறைத் தமிழ் அருச்சனை தொடங்குதல்.

1965
- இந்தி எதிர்ப்புப் போராட்டம்; அரசு வழக்கு தொடர்தல்.

1966
- தமிழ்நாடு தெய்வீகப் பேரவைத் தோற்றம்.

1967
- திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம் தோற்றம்.
- திருக்கோயில் கருவறைக்குள் சீலமுடைய அனைவரும் சாதி வேறுபாடின்றி திருமுறை நெறிப்படி - போதொடு நீர் சுமந்தேத்தி வழிபாடு செய்வதெனத் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம் தீர்மானம் நிறைவேற்றுதல்.

1968
- இரண்டாம் உலகத் தமிழ்மாநாடு - 'திருக்குறள் உரைக்கோவை' நிகழ்ச்சி தொடக்கவுரை நிகழ்த்தல்

- திருக்குறள் இந்திய நாட்டின் தேசிய நூலாக வேண்டுமென்று இம்மாநாட்டில் வலியுறுத்தல்.

- இலங்கைப் பயணம். இரண்டு வாரங்கள், இலங்கை யாழ்ப்பாணத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் திருக்கோயில் நுழைவுக்காக உண்ணா நோன்பிருத்தல்.
- கீழவெண்மணித் தீவைப்பு நடந்த இடத்தைப் பார்வையிட்டுப் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதல் கூறுதல்; புத்தாடை வழங்குதல்.

1969
- பாபநாசம் பொதிகையடி திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி ஏற்பு;
- கலைஞர் மு. கருணாநிதி பாரி விழாவிற்கு வருகை
- கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் விருப்பத்தின் வழி தமிழ்நாடு சட்டமன்ற மேலவை பொறுப்பேற்றல்
- தமிழ்நாடு தெய்விகப் பேரவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெறல்.

1970
- சட்டமன்ற மேலவையில் இந்து அறநிலையத் திருத்த மசோதா - சாதி வேறுபாடின்றி அனைவரையும் அர்ச்சகராக நியமனம் செய்தல் பற்றிப் பேசுதல்.

1971
- தமிழ்நாடு சமாதானக் குழுத் தலைவராதல்.
- சோவியத் பயணம்; 22 நாள் சுற்றுப் பயணம்.

1972
- பாபநாசம் பொதிகையடி திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி, திருவள்ளுவர் கலைக் கல்லூரியாக உருவாதல்.
- சென்னை, மயிலாப்பூர் திருவள்ளுவர் திருக்கோயில் திருப்பணிக்குழுத் தலைவராக நியமனம்; வள்ளுவர் கோட்டம் திருப்பணித் தலைவராக நியமனம்.
- குன்றக்குடித் தருமைக் கயிலைக் குருமணி உயர்நிலைப் பள்ளிக்குப் புதிய இடத்தில் கட்டடம் கட்டித் திறத்தல்.

1973
- திருக்குறள் பேரவைத் தோற்றம்.
- திருச்சியில் தமிழ்நாடு தெய்விகப் பேரவை இரண்டாவது மாநில மாநாடு நடத்துதல்.
- "கோயிலைத் தழுவிய குடிகளும் குடிகளைத் தழுவிய கோயிலும்" என்ற முழக்கம் நாட்டளவில் வைக்கப்பெற்றது.
- குன்றக்குடி கிராமத்தைத் தன்னிறைவுக் கிராமமாக ஆக்கும் திட்டம் உருவானது.

1975
- நாகர்கோவிலில் தமிழ்நாடு தெய்விகப் பேரவை மூன்றாவது மாநில மாநாடு நடைபெறல்.

- சென்னைப் பல்கலைக் கழகத்தில் சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ஏ.பி.சி. வீரபாகு சைவசித்தாந்த அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- இராமநாதபுரம் இனக் கலவரம் - அமைதிப்பணி.

1982
- குமரி மாவட்டம் மண்டைக்காடு கலவரம் - அமைதிப் பணியாற்றல்.
- மண்டைக்காடு அமைதிப்பணி பற்றிச் சட்ட மன்றத்தில் முதல்வர் மாண்புமிகு எம்.ஜி.ஆர். பாராட்டுதல்.
- திருவருட்பேரவை தொடங்குதல்.
- மலேசியா, கொரியா, ஹாங்காங், ஜப்பான், செஞ்சீனா முதலிய நாடுகளில் சுற்றுப்பயணம்.
- புளியங்குடி இனக்கலவரம் - அமைதிப்பணி.

1984
- பாரதத் தலைமை அமைச்சர் திருமதி. இந்திராகாந்தி அவர்கள் குன்றக்குடிக் கிராமத் திட்டக்குழுவின் பணிகளைப் பாராட்டல்.

1985
- நடுவணரசு திட்ட ஆணைக்குழுப் பிரதிநிதிகள் குன்றக்குடி வருகை; கிராம வளர்ச்சிப் பணிகளைப் பார்வையிட்டுப் பாராட்டுதல்.
- பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் வளர்ச்சிப் பணிக்குத் திட்டக்குழு அமைத்தல்.
- மணிவிழா

1986
- தமிழ்நாடு அரசின் முதல் திருவள்ளுவர் விருது பெறுதல்
- இந்திய அரசு திட்டக்குழு குன்றக்குடித் திட்டப் பணியைப் பாராட்டி "Kundrakudi Pattern" என்று அறிவித்தது.

1989
- இவர் எழுதிய 'ஆலயங்கள் சமுதாய மையங்கள்' என்னும் நூல் தமிழ்நாடு அரசின் முதற்பரிசு பெற்றது.
- அண்ணாமலைப் பல்கலைக்கழகம் கௌரவ டாக்டர் (D.Litt) பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

1991
- இந்திய அரசின் அறிவியல் செய்தி பரப்பும் தேசியக்குழு, தேசிய விருது வழங்கிச் சிறப்பித்தது.
- இலண்டன், அமெரிக்கா சுற்றுப்பயணம்.
- அரபு நாடுகள் பயணம்.

1993
- மதுரை காமராசர் பல்கலைக்கழகம் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' விருது வழங்கிச் சிறப்பித்தது.

1995
- இறைநிலை யடைதல்.



# அடிகளாரின் சமய, இலக்கியப் பணிகள்

**பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பன்**
**நிறுவனர் : மெய்யப்பன் தமிழாய்வகம்**

தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழ்கூறு நல்லுலகில் சமய மறுமலர்ச்சிக்கு வழிகண்டவர். அடிகளார் பூர்வாசிரமத்தில் செட்டிநாட்டில் எங்கள் ஊராகிய இராமச்சந்திரபுரத்தில் உயர்நிலைக் கல்வி பயின்றார்கள். எங்கள் தந்தையார் குங்கிலியம் பழ. சண்முகனார் அவர்களும், அடிகளாரின் அண்ணன் அவர்களும் விநோபா பாவே வாசகசாலையைத் தொடங்கினர். அடிநாள் தொட்டு அடிகளாரை நான் நன்கறிவேன். அடிகளார் திருவண்ணாமலை ஆதீனத்தில் பொறுப்பேற்ற பின்னர் சிறந்த சொற்பொழிவாளராக விளங்கினார்கள். முதன்முதலில் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களும் அடிகளார் அவர்களும் நாங்கள் நடத்திய தமிழர் திருநாள் திருக்குறள் விழாவில் ஒரே மேடையில் பேசினர். அப்பொழுது ஆத்திகமும் நாத்திகமும் ஒரே மேடையில் சந்திக்கின்றன என்ற செய்தியை வியப்புடன் நாளிதழ்கள் வெளியிட்டன.

50, 60களில் அடிகளார் தமிழ்மேடைக்குத் தம் பேச்சால் புதிய வலிமை சேர்த்தார்கள். தமிழகம் முழுவதும் அடிக்கடி பயணம் செய்யும் நான் அடிகளாரின் நூற்றுக்கு மேற்பட்ட பொழிவுகளைச் செவிமடுக்கும் நல்வாய்ப்பைப் பெற்றேன். அடிகளார் நூல் பலவற்றைப் படிக்கும் பேறும் பெற்றேன். அப்பொழுதெல்லாம் அடிகளார் சிந்தனைகள் அனைத்தையும் ஒருசேரத் தொகுத்துப் பார்க்க வேண்டும் என்ற வேணவா என்னுள்ளத்தில் முகிழ்த்தது. அது இன்று கைகூடுகிறது.

தமிழ் மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழ்நாடு செய்த தவப்பயனால் 1925இல் தோன்றி 70 ஆண்டு காலம் தமிழகத்திற்குப் பல்வேறு பணிகள் வாயிலாகக் கடமை ஆற்றிய நாட்டுத் துறவியாவார்.

தவத்திரு அடிகளாரைப் புரட்சித்துறவி என்றும், மிகச் சிறந்த சொற்பொழிவாளர் என்றும் நாடு கருதும்.

அடிகளார் எழுத்துக்கள் அனைத்தையும் நூல்வரிசையாகத் தொகுக்கும் போது ஒவ்வொரு தொகுதியிலும் 400 பக்கங்களுக்குக் குறையாமல் 15 தொகுதிகளாக மொத்தம் சற்றொப்ப 6000 பக்கங்கள் அளவில் விரிந்தன. தம் 50 ஆண்டுப் பொது வாழ்வில் அடிகளார் எழுதிய 60 நூல்களையும் பதிப்பாசிரியர் குழு 5 தலைப்புக்களில் வகைப்படுத்தியது. நூற்றொகுதி அனைத்தையும் ஒருசேர வைத்து நோக்கும்போது அடிகளார் மிகச் சிறந்த நூலாசிரியராகச் சிறப்பதை நாம் உணர்கிறோம்.

1999 டிசம்பர் திங்களில் முதல் தொகுதி முகிழ்த்தது. 2001 நவம்பரில் தொகுதிகளின் அச்சுப் பணி முடிந்தது. திருக்குறள் பற்றி மட்டும் அடிகளார் கட்டுரைகள் 4 தொகுதிகளாகச் சற்றொப்ப 1600 பக்க அளவில் விரிந்துள்ளது.

தருமபுரம் ஆதீனம், பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க அடிகள் ஆகியோர் அளித்துள்ள அணிந்துரைகளில் அடிகளாரின் இறையுணர்வையும், பக்திவழி நாட்டுக்கு ஆற்றிய பங்களிப்பையும், சைவத்திற்கும், தமிழுக்கும் அடிகள் ஆற்றிய அளவிடற்கரிய பணிகளையும் போற்றியுள்ளனர்.

தமிழ்நாட்டின் மிகச் சிறந்த திறனாய்வாளர்களான சிலம்பொலி செல்லப்பர், வா.செ. குழந்தைசாமி, தமிழண்ணல், வை. இரத்தினசபாபதி, ஔவை நடராஜன், சிற்பி பாலசுப்பிரமணியன், ச.வே. சுப்பிரமணியம், கு. சுந்தரமூர்த்தி முதலியோர் அடிகளார் நூல்வரிசையை ஆராய்ந்து, தேர்ந்து, தெளிந்து அடிகளாரின் சிந்தனை வளத்தையும், சமூக உணர்வினையும், பல்துறை அறிவினையும், மனித நேயத்தையும், தமிழாற்றலையும், அழுத்தமாக எடுத்துக் கூறும் பெற்றியினையும் தங்கள் அணிந்துரைகளில் சான்றுகளுடன் விளக்கி உள்ளனர்.

பொதுவாக 15 தொகுதிகளிலும் அடிகளாரின் ஆளுமை வெளிப்பட்டாலும், மூல இழையாகச் செல்வது தமிழ்ச் சமூகத்திற்குரிய விழுமங்கள், உன்னதங்கள், உயர்வுகள், சிறப்புக்களே. பழந்தமிழ் இலக்கியமாகிய பத்துப்பாட்டு, எட்டுத் தொகையில் தொடங்கி பாரதி பாடல்வரை தமிழரின் தனி அடையாளங்களின் வேர்களை அவை இனங்காட்டுவன. அயல் வழக்கினைத் தமிழ் வழக்கு வென்ற திறத்தினை அடிகளார் அழுத்தம் திருத்தமாக ஆவணமாக்கி விடுவார்.

சமயக் கட்டுரைகள் பொதிந்துள்ள இத்தொகுதிகள் வாழ்முதலாகிய இறைவனைப் பற்றிய அடிகளாரின் சிந்தனைப் பதிவுகளைக் கொண்டன. இந்தப்புலம் அடிகளாரின் ஆன்மா விரும்பும் விருப்பமான நிலம். அவர்கள் நாளும் பயணம் செய்யும் ஞானபூமி. ஆதலால் சமயம்பற்றி அடிகள் கொண்ட அனைத்துக் கருத்துக்களின் கருவூலமாக இத்தொகுதிகள் திகழ்கின்றன. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல, கோயிலைத் தழுவிய குடிகளும், குடிகளைத் தழுவிய கோயிலும் என்னும் கொள்கை உருவாக்கம் அடிகளாரின் தனிக்கொடை.

தமிழ் இலக்கியம் சமயம் சார்ந்த இலக்கியம். சமணமும் தமிழும், பௌத்தமும் தமிழும் எனப் பகுத்தாலும் இலக்கிய நிலப்பரப்பில், பங்களிப்பில் சைவமும் தமிழும்தான் தனிச்சிறப்பு பெறுகிறது.

அடிகளார் சிவநெறியினைச் சிரத்திலும் சிந்தையிலும் வைத்துப் போற்றிக் கூறிய, எழுதிய கருத்துக்கள் சைவ சமயத்திற்குப் புத்துணர்வையும், புத்தொளியையும் நல்குவன. புரட்சித் துறவியாகிய அடிகளாரின் புதிய பார்வை திருமுறைகளை மறுமைக்கு மட்டுமின்றி இம்மைக்கும் வழிகாட்டும் என நிறுவுவன. மனிதனை மேம்படுத்தும் எண்ணங்களை, சீரிய செவ்வறங்களைக் கூறுவன திருமுறைகள்.

அடிகளார் அப்பரடிகளிடம் கொண்ட அன்பு அளவிடற் கரியது. நாவுக்கரசர் காட்டிய நல்லறங்களை நாளும் சொல்லி மகிழ்பவர். எட்டாந் திருமுறை ஆகிய திருவாசகத்தை எண்ணி எண்ணி எப்போதும் இறும்பூது எய்துபவர். சேக்கிழார் இயற்றிய 12ஆம் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தை நிகழ்கால சமூக வாழ்க்கையோடு இயைத்துக்காட்டி, சைவ சமயம் என்பது தமிழர் வாழ்க்கை நெறி என்பதை ஒல்லும் வகையெலாம் உணர்த்தியவர்.

கோயிற் பண்பாடு என்னும் கோட்பாட்டை விளக்குவதில் அடிகளார் முதல் வரிசையர். சைவ சமய, தோத்திர, சாத்திர சரித்திரக் கருத்துக்களில் ஆழங்கால் பட்டவர். பரந்துபட்ட தமிழ்நூற் பயிற்சியும் வாழ்வியல் அனுபவங்களும் இத் தொகுதிகளில் ஒளி வீசுகின்றன.

இறைவன், பிறவித்துன்பம், வினைக் கொள்கை, ஊழ் உண்மை, ஓதி உணர்தல், புலனடக்கம், மெய்ப்பொருளை உணர்தல், விண்ணும் மண்ணும், வீட்டுலகம் முதலியன பற்றி அடிகளார் கூறிச் செல்லும் கருத்துக்கள் ஆழ்ந்த சிந்தனைகளின் வெளிப்பாடு.

அடிகளார் தெளிவுற அறிந்திடுதல், தெளிவுற மொழிந்திடுதல் என்ற இரு நிலையிலும் சிறப்பாக விளங்கியவர் என்பதனை இத்தொகுதிகள் பறைசாற்றுகின்றன. இலக்கியக் கட்டுரைகளாயினும் சரி, சமயக் கட்டுரைகளாயினும் சரி அடிகள் மனித குல மேம்பாடு ஒன்றிற்கே உயர்வளிப்பவர் என்பது விளங்கும்.

இந்நூல் வரிசையால் அடிகளாரிடம் தமிழ் முனிவர் திரு.வி.க.வின் சமுதாயப் பார்வையும், சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம் அவர்களின் சமுதாய அரசியற் பார்வையும் இலங்கியதை அறியலாம். தமிழ் தேசியம் வேர்கொள்ள அடிகளார் ஆற்றிய பணி தமிழர் வரலாற்றில் பதிவு செய்யப் பெற்று விட்டது.

அருள் நெறித் திருக்கூட்டம், தெய்வீகப் பேரவை, திருக்குறட் பேரவை, திருவருட் பேரவை முதலிய அமைப்புக்களைத் தோற்றுவித்து, தமிழ் இனம், நாடு முன்னேறப் பல்லாற்றானும் பணிசெய்தவர்

உலகின் பெரும் பகுதியினைப் பலமுறை வலம் வந்தவராதலால் இவர் தம் எழுத்தும் பேச்சும் சமூக உணர்வுடன் சிறந்து விளங்கின. பயணத்திற்குப் பயணம் இவரது அனுபவ அறிவு செழுமை பெற்றதை இந்நூல்வரிசை பரிணாம முறைப்படி உணர்த்துகிறது. சமுதாய உய்வுக்கு அடிகள் உரைத்த பொன்மொழிகளின் படிமுறை வளர்ச்சியை, வாழ்வியல் அறங்கள் பற்றிய அடிகளாரின் நோக்கும் போக்கும் மாற்றம் பெற்ற திறத்தினை இவ்வரிசை நூல்கள் உயிரோவிய மாக்குகின்றன. தமிழகத் துறவிகள் வரலாற்றில் அடிகளாரைப் போல அனைத்துலகையும் வலம் வந்தவர் வேறு எவரும் இலர்.

பரிபாடலின் பக்திநெறி பற்றிப் பேசினாலும், பாரதியின் பக்திமைபற்றிப் பேசினாலும் பக்திநெறியில் அடிகளின் பார்வை புதியது. 'பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம், பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்' என்கிற கோட்பாட்டை, 'நாமார்க்கும் குடி அல்லோம்' என்னும் நாவுக்கரசரின் குரலோடு இணைத்து சுதந்திரக் குரலாக எடுத்துரைப்பார். விடுதலை வேள்விக்கு வித்திட்டவர் என வீறார்ந்த மரபை விளக்கிக் கூறுவார்.

கடவுட் பற்றும், கவிதைப் பற்றும், கட்சிசாரா நாட்டுப் பற்றும் அடிகளார் எழுத்துக்களில் எங்கும் பரக்கக் காணலாம்.

பாரதியாரை ப. ஜீவானந்தம் ஆரவாரமாக, உணர்ச்சி பொங்கச் சொல்லிக் கூத்தாடுவார், அடிகளாரோ ஆரவாரமின்றி ஆழ்ந்த அமைதியோடு அழகு தமிழில் ஆற்றொழுக்காக எடுத்துரைப்பார். இவர் எழுத்து நடை திரு.வி.கவைப் போல, பேச்சு நடை தழுவியது. சிறிய தொடர்கள் சிந்தனையைத் தூண்டுபவை.

ஒட்டுமொத்தமாக எழுத்துக்கள் அனைத்தையும் ஒருசேரத் தொகுத்துப் பார்க்கிறபோது அடிகளாரின் அறிவாற்றலும், எழுத்தாற்றலும், தமிழாற்றலும் நம்மை வியப்படையச் செய்கின்றன. ஒரு நொடியும் வீணாக்காது தமிழினம் உய்ய அடிகள் ஆற்றிய அரும் பணிகளின் ஆழத்தையும், அகலத்தையும் விரிவையும் இந்நூல் வரிசைகள் விளக்குகின்றன. உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை.

# முன்னுரை

## தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

இருபதாம் நூற்றாண்டின் அப்பரடிகள், காவி உடுத்திய கார்ல் மார்க்ஸ், அருள்நெறித் தந்தை என அனைவராலும் அன்பொழுகப் பாராட்டப்பெற்ற குருமகாசந்நிதானம் ஆற்றிய அற்புதச் சொற்பொழிவுகள் சமய இலக்கியம் என்று முகிழ்த்திருப்பது மிகுந்த மனநிறைவைத் தருகின்றது. சமயம் மனிதனைச் சமைப்பதற்கே; பண்படுத்துவதற்கே! சமயம் வாழ்க்கை நெறி; வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் நெறி. சமய உலகம் சமூகத்தை விட்டு விலகிச் சென்ற பொழுதுதான் - ஏழாம் நூற்றாண்டில் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தப் பெருமானாலும், நாவுக்கரசர் பெருமானாலும் ஏற்றப்பட்ட ஞானவேள்வி சுடர்விட்டுப் பிரகாசித்து, பன்னிரண்டாம் நூற்றாண்டில் சேக்கிழார் காலத்தில் உச்சக் கட்டமாகப் பொங்கிப் பரிணமித்தது. இடையில் சமய உலகில் ஒரு தொய்வு ஏற்பட்டது.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சமய உலகில் மிகப்பெரிய மறுமலர்ச்சியை உருவாக்கியவர்கள் அருள்நெறித் தந்தை குருமகாசந்நிதானம் தவத்திரு அடிகளார் பெருமான். இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உலகம் முழுவதும் "அடிகளார்" என்ற சொல் அவர்கள் ஒருவரைத்தான் குறித்தது. சமயத்தையும் சமுதாயத்தையும் ஒருங்கிணைக்கின்ற உறவுப் பாலமாக விளங்கினார்கள். சமூகத்தை விட்டுச் சமயம் விலகிச் சென்ற பொழுது சடங்கும் ஆரவாரத் தன்மையும் நிறைந்திருந்த சமயத்தை மக்களுக்குரியதாக மாற்றிக் காட்டினார்கள்.

சமய இலக்கியத்தை ஓதி உணர்வதோடு அல்லாமல் வாழ்வில் நடைமுறைப்படுத்தினார்கள். நாட்குறிப்பேடு போல் சமய இலக்கிய நாட்குறிப்பேடு ஒன்று பேணப்பட்டது. அதில் அறுபத்து மூன்று நாயன்மார் ஒவ்வொருவரின் நாள் குறிக்கப்பட்டிருக்கும், உதாரணமாக, கண்ணப்பநாயனாரின் நாளன்று கண்ணொளி வழங்க உதவி செய்தல் என்ற

திட்டங்கள் செயற்படுத்தப்படும். நாயன்மார்களின் அடிச்சுவட்டில் அவர்களின் தொண்டு வாழ்வியல் மீண்டும் நடைமுறைக்குக் கொணரத் திட்டம் செயற்பட்டது. சமயத்தை இயக்கமாக, வாழ்வியலாக மாற்றுகின்ற முயற்சியில் சிறப்பாகச் செயற் படுத்தினார்கள். உழவாரக் கருவி ஏந்தித் தமிழகம் முழுவதும் உலாவந்தார்கள். உழவாரக் கருவி திருக்கோயில்களில் முளைத்த முட்புதர்களை மட்டும் களையவில்லை, சமுதாயத்தில் முளைத்திருந்த முட்புதர்களையும் களைந்தது.

சமய இலக்கியம் வெறும் தத்துவ நூல் அல்ல, அனுதினமும் சமயத்தை வாழ்வில் நடைமுறைப் படுத்திய அனுபவசாரம், 'அப்பர் விருந்து' என்ற நூலில் முழங்காலுக்கு மேல் வேட்டி உடுத்தி, உருத்திராக்க மாலை அணிந்த பழைமையான தோற்றத்திற்குரிய அப்பர் பெருமானின் புதுமைச் சிந்தனையைப் புதிய கோணத்தில் சமய உலகுக்கு அடையாளம் காட்டியுள்ளார்கள்! என்னே புதுமை. இதோ, பானைச் சோற்றுக்குப் பதச் சோறுபோல், அப்பர் பெருமான் பாடலுக்குப் புதிய விளக்கம்.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே!"

என்று அப்பர் பெருமான் பாடுகின்றார்! இந்தப் பாடலுக்குப் புதிய விளக்கம்! குற்றமற்ற வீணையின் இனிய கீதத்தை எல்லோரும் கேட்டு மகிழலாம். தேவையான நிபந்தனை நம் காதுகளுக்குக் கேட்கின்ற சக்தி வேண்டும், மாலைக் காலத்து அழகிய நிலவை எல்லோரும் பார்த்து மகிழலாம். அதற்குத் தேவையான நிபந்தனை நம் பார்வையில் குறைபாடு இல்லாது இருக்க வேண்டும். வீசுகின்ற தென்றல் காற்று எல்லோருக்கும் பொதுவானது, ஆண்டவனுக்கும் பொதுவானது; அடிமைக்கும் பொதுவானது, அதைப் போலவே பரம்பொருள் எல்லோருக்கும் பொதுவானது, வல்லார்க்கும் மாட்டார்க்கும் வாய்ப்பளிக்கும் வாய்ப்பாக, எல்லோருக்கும் பொதுமைப் பொருளாக இறையின்பத்தை அடையாளம் காட்டினார்.

அருள்நெறித் தந்தையின் சமயம் பற்றிய புதிய சிந்தனை எந்நாளும் எண்ணி இன்புறத்தக்கது. உடல் வாழ்வு தன்னலம் பற்றியது; உயிர் வாழ்வு பொது நலம் பற்றியது, சராசரி மனித வாழ்க்கையை உயிர்ப்புள்ளதாக்கி முழுமையாக்கும் உணர்வின் தேவையிலே தோன்றியது சமயம், இதனை நிறுவிய மகாசந்நிதானம் "பொதுவில் ஆடுபவன் நிழலின் பொதுமையைக் காணாமல், தீமையை அகற்றாமல் நன்மையைச் சாதிக்காமல், துன்பத்தைத் துடைக்காமல், இன்பத்தைப் படைக்காமல் கிழடுதட்டிச் செயலிழந்து போன நமது சமய அமைப்புகள் குறையுடைய நடைமுறைகளே!" என்று சமய உலகை மாபெரும் புனருத்தாரணம் செய்ய வேண்டும் என்று அறைகூவுகின்றார்கள். சமயம் மனிதத்தை மேம்படுத்த! சமயம் மனித வாழ்வுக்கே! சமயம் மனிதத்தைப் புனிதமாக்க என்ற உயர்நிலையில் சமய உலகப் பாதைக்கு நம்மை அழைத்துச் செல்லும் அருள்நெறித் தந்தையின் பாதையில் பயணம் செய்ய, சமய இலக்கியம் வாழும் மானிடத்திற்கு அற்புத வழிகாட்டியாகும்.

இவ் அரிய நூல் ஆக்கத்தைத் தமிழ் கூறும் நல்லுலகத்திற்குத் தொகுப்பு நூலாக வெளியிடும் மணிவாசகர் பதிப்பக ச. மெய்யப்பன் அவர்களுக்கு நெஞ்சு நிறை நன்றிகள்! இந்நூல் தொகுப்புக்குப் பெரிதும் பாடுபட்ட நம் ஆதீனக் கவிஞர் மரு. பரமகுரு, பலவகைகளில் இந்நூல் தொகுக்கும் களத்தில் கடமையாற்றிய இராமசாமி தமிழ்க் கல்லூரி முன்னாள் முதல்வர் தெ. முருகசாமி ஆகியோருக்குப் பெரும் நன்றியறிதலுடன் கூடிய பாராட்டுக்கள்! இந்நூலுக்கு அரியதொரு அணிந்துரை வழங்கியுள்ள **சைவ சித்தாந்த வித்தகர் வை. இரத்தினசபாபதி** அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி.

முன்னைப் பழமைக்கும் பழமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் நமது சமய உலகப் பாதையில் பயணம் செய்ய 'சமய இலக்கியம்' வழிகாட்டும் என்று நம்புகின்றோம். 'சமய இலக்கியம்' இயக்கமாக மாறினால் அதுவே சமய உலகத்தின் மாபெரும் புனருத் தாரணம் ஆகும். 'சமய இலக்கியம்' புதிய மறுமலர்ச்சிக்கு வழிகாட்டும் என்று இறையருளைப் போற்றிப் பிரார்த்திப்போம்!

# அணிந்துரை

## சித்தாந்தசரபம்

ஞானத் தமிழாகரர், டாக்டர் **வை. இரத்தினசபாபதி,**

ஆசிரியர் 'சித்தாந்தம்'

தமிழ் மாமுனிவர், அருள்நெறித் தந்தை, தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் பன்னோக்குச் சமுதாயச் சிந்தனைகளின் எழுத்துருவங்களைத் தொகுத்து நூல் வடிவாக்கித் தமிழ்ச் சமுதாயத்துக்கு அளிக்க முன்வந்திருக்கும் பதிப்புச்செம்மல், தமிழவேள், மெய்யப்பனார் அவர்களின் தொண்டு பாராட்டுதற் குரியது; காலத்துக்கேற்ற தமிழ்ச் சமுதாயக் களப்பணியும் ஆகும்.

அடிகளாரின் நோக்கில் ஒருவகையான வட்ட உத்தி அமைந்திருக்கும்.

தமிழ்ச் சமுதாயத்தின் வழியாக உலகச் சமுதாயத்தை நோக்குவதும் உலகச் சமுதாய நோக்கிலிருந்து தான் வாழும் தம்மையும் தம் உடனுறை உயிர்ப் பொருள்களையும் உயிரல் பொருள்களையும் இணைத்த நிலையில் தம்மைப் புரந்து வரும் தமிழ்ச் சமுதாயத்தை நோக்குவதும் ஆகிய வட்டம் அமைந்திருக்கும்.

தமிழக அருளாளர்களின் கொள்கையை அருளனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு உலக அருளாளர்களின் கொள்கையை-அவர்தம் அருளனுபவத்தைப் பார்ப்பதோடு நின்று விடமாட்டார். உலக அருளாளர்களின் அனுபவத்தையும் அவர்தம் செயற்பாட்டுறுதியையும் தமிழக அருளாளர்களின் கொள்கை-அனுபவம் ஆகியவற்றோடு இணைத்து ஒரு வட்டமமைத்துப் பார்க்கும்-பார்த்த திறன் அவர்தம் அணுகுமுறை.

தமிழ்ச் சமுதாயம்-தமிழ்க் கொள்கை, இன்னும் சொல்லப்போனால் தமிழ் ஆகியவைகளின் அடிப்படையில் நின்று, அவர்தம் சிந்தனையானது - நோக்கானது உலகச் சமுதாயம் ஆகியவற்றைக் காணும்போது அவர்தம் கண்கள் மலரும். உலகச் சமுதாய நோக்கிலிருந்து தமிழ்ச் சமுதாய அமைப்பைக் காணும்போது அவர்தம் கண்களில் நீர் மல்கும்.

அடிகள் தனிமையாக அமர்ந்திருக்கும் போதும், தளர்நடை சார்ந்த உலாவலின் போதும் இத்தகைய வட்ட உத்தி நிகழ்வதைக் கூர்ந்து கவனித்தால் கொள்ளலாகும்.

1954-ல் அடிகள..... மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடு களுக்குச் சென்று திரும்பிய ஞான்று திருச்சியில் நடைபெற்ற வரவேற்பு விழாவில் கலந்து கொண்டு பேசினேன்.

"சைவமும் தமிழும் உலக அரங்கில் கொலுவீற்றிருப்ப தற்காகப் பரசிவனால் நமக்களிக்கப் பெற்ற விவேகானந்தர் போல விளங்குகிறார் அடிகளார்" என்று வரவேற்பில் கூறினேன். மீண்டும் 1958-ல் திருப்புகலூரில் அடிகளைத் தரிசித்தபோதுதான் திருமடத்துக்கு வரவேண்டும் எனப் பணித்தருளினார்கள்.

1959- 60-ல் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கப் பணிகள் தொடங்கி விட்டன எனக் கூறலாம். ஆனால் அது முறைப் படிச் செயல்படத் தொடங்கிய காலம் 1967 ஆக அமையலாம்.

திருமுறைகள் வழிச் சமயக் கொள்கைகளையும் தமிழ் வழியில் தமிழகச் சமுதாயக் கொள்கைகளையும் வரையறை செய்யும் கொள்கை விளக்க நிறுவனமாக விளங்கியது திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம்.

பழைமையையும் புதுமையையும் நேருக்கு நேர் மோதவிட்டு, உண்மைக் கொள்கை-தமிழ்ச் சமுதாய வாழ்வியற் கொள்கை இதுதான் என வரையறுப்பதற்கும், அடிகள்தம் சிந்தனை அராவி, அராவி, முழுமையான சிந்தனையாக உருப்பெறுவதற்கும் உரிய உலைக்கூடமாக விளங்கியது திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம்.

தமிழகச் சிந்தனை வழியில் பண்பட்ட 63 உறுப்பினர்களை அடிகளின் வழியில் சிந்திக்கவும், செயற்படவுமாக ஆக்கித் தந்த களப்பணி நிறுவனமே திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம்.

பழமைக்கு இருவர்; மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர், தத்புருஷதேசிகர்; புதுமைக்கு சிவத்திரு சங்கர நாராயணன், அடியேன். திருவையாறு சுவர்ண காளீஸ்வரனிடத்தில் அடிகளுக்கு ஒரு தனித்த அன்பு உண்டு. இவ்விருவகை அணிகளுக்கும் பாலமாக நின்று புதுமைக் கொள்கை தோன்றவும் புதுமைச் சமுதாயம் காணவும் இடைநின்று வினாக்களை எழுப்பி எழுப்பிச் சிந்தனைகளைக் கூர்மையாக்கும் அருந்தவப் பணியே அடிகளின் பணி. இப்போது யான் தனி மரமாக நிற்கிறேன்.

ஒருவர் தனித்துச் சிந்திக்கலாம்; சிக்கல்களுக்குத் தீர்வு காணலாம். ஆனால் 63 பேர் அடங்கிய கூட்டத்தைச் சமுதாய முன்னேற்றம் என்ற தனி வழியில் சிந்திக்க வைப்பதும் செயற்பட வைப்பதும் மிக

மிகக் கடுமையான செயல். அத்தகைய அருந் தவத்தை அடிகள் செய்தருளினார்கள்.

அடிகளின் சிந்தனைக் களமாக விளங்கியது திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம்.

திருப்புத்தூர்த் தமிழ் சங்கம் உருவாக்கிய கொள்கைகளைச் செயற்படுத்தும் திணைக் களங்க்ளாக விளங்கியவை அருள்நெறித் திருக்கூட்டமும், தமிழ்நாடு தெய்விகப் பேரவையும் ஆகும்.

மரபு வழி மாறாப் பழமையையும் சமுதாய முன்னேற்றத்தை உள்ளீடாகக் கொண்ட புதுமையையும் இணைத்த கொள்கையை உருவாக்கும் போதும் செயற்படுத்தும் போதும் தவத்திரு பேரூர் சாந்தலிங்க ராமசாமி அடிகளாரை முன்னிலைப்படுத்தித் திட்டமிடுவார்கள். பேரூரடிகளுடன் இணைந்தே செயல்முறைத் திட்டம் அரங்கேறும். முக்கியமான கொள்கை முடிவு எடுக்கப் பெறுகின்ற காலத்தில் பேரூர் அடிகள் இல்லையானால் மனம் வருந்துவார்கள்.

அடிகள் பெருந்தகையுடன் விமானம் மூலம் வடநாட்டுப் பயணம் செய்தமைக்குரிய நல்லூழ் எனக்கு அமைந்தது. இருடிகேசம், அலெக்நந்தா, தேவ ப்ரயாக் ஆகிய இடங்களில் அடிகளுடன் யான் மட்டுமே இருந்து, பணிசெய்து, கலந்துரையாடி மகிழ்ந்த காலமும் உண்டு.

தெய்விகப் பேரவையின் சார்பில் திருக்கோயிலை மையமாகக் கொண்ட பல்கலைக்கழகம் அமைக்க வேண்டும் என்று அயராது உழைத்தார்கள். திருக்கோயிலை மையமாகக் கொண்ட அனைத்துக் கலைகளுக்கும் பட்டயப்படிப்பு, முதுகலைப் படிப்புக்குரிய திட்டமும் பாடத்திட்டமும் பன்னாள் முயன்று உருவாக்கப்பெற்றன. பல்துறை சார்ந்த கலைஞர்கள், அறிஞர்கள் பாடுபட்டார்கள். அந்தத் திட்டம் முழுமையாகத் தகர்ந்தபோது அடிகள் சமுதாய முன்னேற்றத்தை நேர்நின்று நோக்கினார்கள்.

திருக்கோயிலின் வழியில் சமுதாய முன்னேற்றம் என்ற வகையில் 'குடிகளைத் தழுவிய கோயில், கோயிலைத் தழுவிய குடிகள்' என்ற மகாவாக்கியம் எழுப்பப் பெற்றது. பின்னர் மெல்ல, மெல்ல அடிகள் சமுதாய முன்னேற்றத்தை நேர்நின்று நோக்கியருளினார்கள். விளைவு; 'குன்றக்குடித் திட்டம்'. இத்திட்டம் உலகளாவிய புகழ்

பெற்றது. மைய அரசின் பார்வையைக் குன்றக்குடிப் பக்கம் திருப்பியது இத்திட்டமே.

அடிகள் திருமுறைத் தொடர்களைக் கையாளுவதுபோல, சாத்திரத் தொடர்களைக் கையாளமாட்டார்கள். ஓரளவே எடுத்துச் சொல்வார்கள். குன்றக்குடித் திட்டம் மைய அரசின் பார்வையை ஈர்த்தபோது அடிகள் அருளிய தொடர்,

**"தானாகத் தந்தது என்று உந்தீபற"**

என்று கூறிப் புன்னகைத்தார்கள்.

அடிகள் சோர்வின்றிச் சிந்திப்பார்கள்; தொடர்ந்து சிந்திப்பார்கள்; முறைப்படுத்தப் பெற்ற சிந்தனையாளர்களையும் தன் வயப்படுத்திவிடும் கூர்த்த சிந்தனையுடையவர்கள். அடிகள் 'சிந்தனை' என்ற ஒரு திங்கள் இதழைத் தொடங்கினார்கள். 'அடிகள்-ஒரு தத்துவம்' என்ற தலைப்பில் அடிகளைப் பற்றிய - அவர்தம் சிந்தனையோட்டம் பற்றிய திறனாய்வுக் கட்டுரை ஒன்றை எழுதியுள்ளேன். அப்போது அடிகள் எனக்கு ஒரு பேனாவை அன்பளிப்பாக வழங்கியருளினார்கள். இன்றும், ஏன் இந்த அணிந்துரையையும் அந்தப் பேனாவால்தான் எழுதுகிறேன். அதில் குன்றக்குடி அடிகளார் என ஆங்கிலத்தில் எழுதப் பெற்றிருக்கும்.

பெங்களூர்த் தமிழ்ச் சங்கத்தில் அடிகளுக்கு ஒரு பாராட்டு விழா நடத்தப்பெற்றது. ஆண்டு நினைவில்லை, அடிகளாரைப் பற்றிப் பாராட்டிப் பேசுவதற்கு அடிகளின் இயல்பை-சிந்தனையை-தொண்டினை நன்கு தெரிந்த ஒரு பேச்சாளர் வேண்டுமெனக் கேட்டிருந்தார்கள். அப்போது அடிகள், என் பெயரைப் பரிந்துரை செய்தார்கள். யானும் சென்று அடிகளைப் பற்றிப் பாராட்டிப் பேசி வந்தேன். அடிகள்தம் திருவுளத்தில் அடியனைப் பற்றிய ஒரு தெளிந்த எண்ணம் நின்று நிலவியமைக்கு யான் பல பிறப்புகளில் செய்த நற்றவம் ஒன்றே காரணம் என இன்றும் நினைக்கிறேன்.

திருச்சிராப்பள்ளி உறையூரில் வாகீசபக்த ஜனச் சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தின் தலைவனாக யான் இருந்தேன். சற்றொப்ப 35 ஆண்டுக்காலம் அடிகளும் யானும் நெருங்கிப் பணியாற்றினோம். அப்போதுதான் பெரியபுராணத்தில் பட்டிமன்றம் அமைத்தோம். முதலில் அது தோல்வியைத் தான் தந்தது. ஆயினும் மனம் தளராது பெரியபுராணத் தலைப்பையே அமைத்தோம். சமுதாய மறுமலர்ச்சிக்காக இப்படித்தான் தீர்ப்பு அமைப்பது என

முன்கூட்டியே முடிவு செய்து அதற்கேற்ப வாதத்தை அமைத்துக்கொள்ளும் முறையைப் பின்பற்றினோம்.

ஒவ்வோர் ஆண்டும் மார்கழி இறுதி ஞாயிற்றுக்கிழமை ஆண்டு விழா நடைபெறும். காலையில் பட்டிமன்றம். மாலையில் திருவாசகம் பற்றி அடிகள் தனிப் பேச்சு நிகழ்த்த வேண்டும் என்று வற்புறுத்துவேன். அடிகள் திருவாசகம் பற்றி உரை நிகழ்த்தும் போது கண்ணீர் மல்க, உடல் குலுங்க, நாத் தழுதழுக்கப் பேசுவார்கள். அத்தகைய பொழிவுகளெல்லாம் இன்று எழுத்துருவம் பெற்று நூல் வடிவமாக வந்திருக்கும் போது அவைகளையெல்லாம் பார்த்து, படித்து ஆனந்தம் கொள்ளும் பேற்றையும் எனக்குத் தமிழ் மாமுனித் தெய்வம் தந்துள்ளமையை எண்ணி மகிழ்கிறேன்.

மாணிக்கவாசகர், திருவாசகத்தேன், திருவாசக உண்மைகள், திருவாசகத்தில் சமுதாய நோக்குகள், ஞானப் பனுவல், பாட்டும் பொருளும், வாழும்நெறி, குழந்தையும் பொற்கிண்ணமும், அழுதால் பெறலாம், வாழாதநெஞ்சம், புலன்களும் பொறிகளும், நினைந்தூட்டும் தாயினும், எல்லாமே இறைவனின் திருக்கோலம், தகைசால் தலைமை, நியாயமே, மாணிக்கவாசகர் கண்ட காட்சி, திருவெம்பாவை-திருப்பள்ளி யெழுச்சி விளக்கம், தாய்போற் கருணையன், பேசு, வாழ். ஞான உழவு, எல்லை கடந்த பொருள், பிழை தவிர்த்தாளும் பெருமான், கொல்லாமை வேண்டும், தேடிப் பெறுவதா?, பரபரக்காதே, குமரகுருபரரின் உயிர்க்கொள்கை, காக்கை விரும்பும் கனி, நற்சொல் எது?, பெரியோரின் செயல், தாயுமான சுவாமிகள், வள்ளலார் நெறி I, II, அருள்மழை, பணி செய்க, உய்வளிக்கும் தெய்வசிகாமணி என முப்பத்தைந்து தலைப்புகளில் அடிகளின் சிந்தனைப் பட்டறையில் உருவாக்கப்பெற்ற வாழ்வியற் பொறிகள்.

சொற்களுக்கு அகராதிப் பொருள் விளக்கம் காண்பது புலவர் தொழில்; நயம் சார்ந்த விளக்கங்களைக் காண்பது இலக்கியச் சிந்தனையாளர்களின் புதுமை; ஆனால் அடிகளோ சொற்களுக்கு வாழ்வியற் பொருள் காணும் உத்தியைக் கையாளுவார்கள். இந்த உத்தியே அடிகளை மக்கள் மன்றத்தில் கொலுவீற்றிருக்கச் செய்து, தமிழ் மாமுனிவராக ஆக்கியது என்றால் மிகையாகாது. எடுத்துக் காட்டாகச் சிலவற்றை எடுத்தாளலாம்.

'புகுதல்' என்பது இன்றும் மக்களிடத்தில் பயின்று வரும் எளிய தமிழ்ச்சொல்.

திருவாசகத்தில் இச்சொல் இருகோணங்களில் எடுத்தாளப் பெறுகின்றது.

"நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து
நான் நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும்
விரைகின்றேன்"

இம்மணிவாசகத் திருவார்த்தையில் 'புகுந்து' என்பது மணிவாசகரின் செயலாக வருகிறது. இதற்குக் கள்ளத்தனம் என்று பொருள் கொள்ளும் அடிகள்,

"வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல்"

என வரும் தொடருக்குப் பொருள் காணும் போது "புகுதல் என்பது வரவேற்பு இல்லாத இடத்தில் வலிந்து செல்லுதல் ஆகும்" என உரை விளக்கம் கண்டிருப்பது நினைந்தின்புறத்தக்கது. (பக்கம் 26.)

நாயன்மார்களின் வரலாறுகளில் தோய்ந்த மனம் உடையவர்களாக விளங்கிய அடிகள் அவர்தம் வாழ்வியல் உண்மைகளை இருபதாம் நூற்றாண்டுச் சமுதாயம் விழிப்புணர்வு பெறுமாறு செயல்முறைப்படுத்திக் காட்டினார்கள்.

நாயன்மார்களின் குருபூசையைக் கொண்டாடி மகிழ்ந்தால் மட்டும் போதாது என்று எடுத்துக் கூறிய அடிகளார் அவர்களின் வாழ்வியல் அடிப்படைக் கொள்கைகளை எவ்வாறு செயற்படுத்த வேண்டும் என்ற திட்டத்தையும் வகுத்து வழங்கினார்கள்.

சமய குரவர்கள் நால்வர் வரலாறுகளில் அப்பரடிகள் வாழ்வியற் கொள்கைகளைத் தம் வாழ்விலும் நடைமுறைப் படுத்தினார்கள். ஆனால், மணிவாசகர் வாழ்வும் சுந்தரர் வாழ்வும் அடிகள் வாழ்க்கையில் மிக மிக உயர்ந்த அருளியல் வாழ்வாகக் கருதப்பெற்றன.

அப்பரடிகள், சுந்தரர், மணிவாசகர் ஆகிய மூவர் வாழ்வியலையும் பேசும்போதும் நினைக்கும் போதும் விளக்கும் போதும் அடிகளின் கண்களில் நீர்மல்கும். அப்பரடிகளைப் போல ஒரு தனிமனிதன் வாழ முடியும் என்ற எண்ணம் மகிழ்ச்சியில் வெளிப்படும் கண்ணீராக மலரும். ஆனால் மணிவாசகர் வரலாற்றையும் சுந்தரர்

வரலாற்றையும் எண்ணும்போது வரும் கண்ணீர் வேறானது. இறைவன் தானே முன்னின்று ஆன்மாவின் வாழ்வியலில் நுழைந்து பக்குவப்படுத்தும் அருளியல் வரலாறு நிகழவும் முடியும் என எண்ணிச் சைவப் பெருமைத் தனி நாயகன் நந்தியின் அருளியலை வியந்து வடிக்கும் ஆனந்தக் கண்ணீர்.

மேற்கண்ட காரணத்தாலேயே அடிகள் மணிவாசகர் வரலாற்றை விளக்கும் போது பல வேறு நிலைகளில் நின்று விளக்கம் கூறுவதைக் காணலாம்.

மனிதன் வாழவேண்டும் என்று மட்டுமே நினைப்பதோடு அடிகளின் சிந்தனை நின்று விடாது. அவன் மானிடனாகவும் நல்லவனாகவும் வாழ வேண்டும் என்பதுதான் அவர்தம் சிந்தனைச் செழுமை. அதனால் பல்வேறு வாழ்வியல் எழுச்சிக் கருத்துகளை இடையிடையே அமைப்பார்.

சான்றாகச் சில:

கொடுங்கோன்மையும் ஆற்றலின்மையும்
பொய்யைப் பிறப்பிக்கின்றன. (29)
நிர்வாக இயலில் தொடர் கண்காணிப்பு
இன்றியமையாதது. (38)
உடல் பெருத்தால் உயிர் சிறுத்துவிடும்.
உடலின் ஊனைப் பெருக்குவது தீது.

உடல் ஊனை உருக்கி உயிரை வளர்ப்பது நல்லது. இதற்குக் கடவுளின் கருணை உண்டு. (36)

"இந்தக் கதைதான் ஆன்மாவின் கதையும்" என்று எடுத்துக்காட்டும் 'பேபி' என்ற நாயின் கதை. (68)

'திருவாசக உவமைகள்' என்ற தலைப்பில் அடிகள் கூறும் விளக்கங்கள் :

"பற்று விடுதல் என்றால் பற்றை ஒழித்துவிடுதல் என்பது பொருளல்ல; பற்றை வேறு திசையில் திருப்பி விட வேண்டும். இதற்கு மடை மாற்றுதல் என்பது பெயர், நமது தேவைகள் பிறருக்கும் உண்டு என்று கருதித் திசைமாற்றி விடுதல் வேண்டும்".

"வாழ வேண்டியவர்களைப் பற்றி எண்ணுமின்! அவர்களுக்குரிய நன்மைகளைப் பற்றி நினைமின்! அவர்கள்

நல்லுரை மறுத்தாலும் நினைவகற்றாதீர்! செயலிழக்காதீர்! சாலப் பரிந்து அன்பு செய்ம்மின்! அவர்களிடத்தில் அறிவொளியை ஏற்றித் தருக! அவர்கள் இன்புறு நலன்கள் பெற்றுவளர, வாழப் பணி செய்க! செய்த பணியைத் தொடர்ந்து பேணுக!

இஃது ஒரு சிறந்த வாழும் நெறி." (267)

இதனை அடிகள் பிறருக்காகச் சொல்லவில்லை. தாம் மேற்கொண்டு வாழ்ந்த நெறி இது என உலகவர்களுக்கு எடுத்துக்காட்டும் மெய்யியல் வாழ்நிலை விளக்கங்கள்.

"இன்று பத்திமை மேவியுள்ள அளவுக்கு மக்களுக்கு ஞானத்தில் ஆர்வம் இல்லை; வேட்கை இல்லை" (299)

"உழைப்பே உலகத்திற்கு உயிர்நாடி.

ஞான வாழ்க்கைக்கும் தளராத உழைப்புத்தான்

தேவை". (373)

சமுதாய அறிவு வேறு; சமுதாயத் தத்துவம் வேறு. சமுதாய அறிவானது சமுதாயச் சிந்தனையாளர்களைத் தோற்றுவிக்கும். சமுதாயத் தத்துவமானது சமுதாயக் கண்ணோட்டத்தைத் தோற்றுவிக்கும். இருவகையினர்களும் சமுதாய அமைப்பைப் பற்றிச் சிந்திப்பவர்களே. சமுதாயச் சிந்தனையாளர்கள் உலகில் எக்காலத்திலும் தோன்றியிருக்கிறார்கள். சமுதாயக் கண்ணோட்டம் உடையவர்கள் தோன்றுதல் அருமை.

அடிகளார் போன்றவர்கள் சமுதாயக் கண்ணோட்டம் உடையவர்கள். சமுதாயச் சீரழிவை இரக்கக் கண்கொண்டு பார்த்து, அழுது அச்சீரழிவைப் போக்கத் தாம் பாடு படுவதோடு இறைவனையும் வேண்டித் தவமுஞற்றுவார்கள்.

அடிகளின் சமுதாயக் கண்ணோட்டத்துக்கு எவ்வளவோ சான்றுகள் , ஆயினும் ஒன்றினை எடுத்துக்காட்டலாம்.

"சிலர் பரபரப்பாகவே திரிவார்கள்; அமைதியாக எதையும் பார்க்கும்-அனுபவிக்கும் ஆற்றலற்றவர்களாகப் பலர் இருப்பார்கள். தாமும் மாறுவார்கள்; பிறரையும் தம் வழி மாற்ற முயற்சிப்பார்கள். எல்லாவற்றையும் தாமே தாங்குவது போல எண்ணிக் கவலைப்படுவார்கள். அஃது **ஆன்மீக வளர்ச்சி இன்மையின் சின்னம்**".

சமுதாயக் கண்ணோட்டத்தின் மதிப்பீடு இது.

அடிகளாரின் கருத்துக்களை இந்நூலில் நாம் காண்கிறோம். இந்நூலைப் படிப்பவர்கள் அத்துடன் நின்று விடுதல் ஆகாது. அடிகளார் கருத்தின் வழியில் நின்று அடிகளாரைத் திறனாய்வு செய்தல் வேண்டும். அவ்வகையில் அடிகளாரைத் திறனாய்வு செய்தால் அங்கே ஒரு புத்தம் புதிய சமுதாய ஒளி பிறக்கும். அந்த ஒளியில் சமுதாயக் கருணை என்ற அருவியானது பெருக்கெடுத்தோடும். அத்தகைய அருவிப் பெருக்கில் அறியாமை வழிப்பட்ட தத்துவம், சமயம், நீதி ஆகிய அனைத்தும் அழிந்து, சமுதாய மறுமலர்ச்சிச் சோதியமைந்த தத்துவம், சமயம், நீதி ஆகியவை வெளிப்பட்டுத் தோன்றும்.

சமுதாயக் கண்ணோட்டம் மலர்ந்த நிலையில் அடிகளார் செய்த புரட்சி ஒன்றை எடுத்துக்காட்டி இவ்வணிந்துரையை நிறைவு செய்கிறேன்.

"பேறு, இழவு, இன்பமோடு பிணி, மூப்புச் சாக்காடு என்னும் ஆறும் முன் கருவுட்பட்டது" என்பது சிவஞான சித்தியார் தொடர்.

ஊழ்வினையினால் வருவது பிணி. இதனை அறுதியிட்டுக் கூறியது சிவஞான சித்தியார்.

"நோய் இயற்கையன்று; நோய்க்குப் பழவினைகள் காரணமல்ல; நோய் செயற்கை; நோய் வரவேற்றுக் கொள்வது". நோய்க்கும் இவன் புதியவனே; அவை நாடி உண்டமை; உழைப்பில்லாத வாழ்க்கை; தூய்மையற்ற உடல்; தூய்மையற்ற மனம்; கெட்ட புத்தி, அறியாமையின் இரும்புப் பிடியில் சிக்கிய ஆன்மா. இவையெல்லாம் நோய்க்குக் காரணங்கள்" (பக்கம் 121.)

இது எழுத்துருவம், ஆனால் இக்கருத்தானது அடிகள் பவளவாய் மூலம் ஒலியாக வெளிப்பட்டபோது யான் உடனிருந்தவன். பின்னர் அடிகளுடன் யானும் கவிஞர் பரமகுருவும் காரில் சென்றோம். வழியில் நோய் பற்றிய பேச்சு வந்தது. யான் மேலே கண்ட தத்துவ வரியை எடுத்துக் காட்டினேன். சிறிது நேரம் அமைதியாக இருந்த அடிகள், 'தத்துவ வரியில் உள்ளது பிணி, நான் குறிப்பிட்டது நோய்' என்றார்கள்.

என்னுடையது தத்துவ ஞானம். அடிகள் பார்வையானது தத்துவக் கண்ணோட்டம்.

அடிகளாரின் சிந்தனையை எழுத்துருவில் தமிழ்ச் சமுதாய உலகத்துக்குப் பத்துத் தொகுதிகளாக அமைத்துத் தந்தவர்கள் தமிழவேள் ச. மெய்யப்பனார் அவர்கள். அவர்களும் யானும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இணைந்து பணி யாற்றியவர்கள். அவர்களுக்கு ஆயிரம் பெருமைகள் உண்டு. ஆயினும் உலகமளந்த மேன்மைத் தமிழைத் தம்முடைய வாழ்வியலாக அமைத்து வாழ்ந்த தமிழ்முதுமுனைவர் வ.சுப. மாணிக்கம் அவர்களால் தமிழுலகத்துக்கு - தமிழ்த் தொண்டுக்கு இவர் என்று சுட்டிக் காட்டப்பெற்ற பெருமை ஒன்றே சிறந்த பெருமை.

அதேபோல் இந்நூலுக்குரிய தனிப்பெருமை இன்னொன்றும் உண்டு. அடிகளாரின் சிந்தனை ஓட்டம், எந்த எந்த வழித் தடங்களில் சென்று எங்கே நிறைவுபெறும் என்ற முறைமையை முறையுறத் தெரிந்த மரு. பரமகுரு அவர்கள் பதிப்பாசிரியர் குழுவில் இருப்பதுதான்.

நூலுக்கு அணிந்துரைதான் எழுத முற்பட்டேன். ஆனால் அது ஆய்வுரையாக மலர்ந்து விட்டது.

சைவத் தமிழுலகம் கொள்ளுவன கொண்டு தள்ளுவன தள்ளுக. எவ்வாறாயினும் அடிகளின் நூல் வரிசையானது தமிழகத்தின்- தமிழ்ச் சமுதாயத்தின், பண்பாட்டின்-சமயத்தின் வரலாற்றுக் களஞ்சியம் மட்டுமன்று; வாழ்வியல் நெறி காட்டும் வற்றாத கொள்கைக் கருவூலம் என்று கொண்டு போற்றுவது தமிழ்ச் சமுதாயத்தின் கடமை.

> வாழ்க அடிகளாரின் சமுதாயச் சிந்தனைக்
> கண்ணோட்டம்.
> வளர்க 'என்றும் வேண்டும் இன்ப அன்பு' என எழுதி
> முடிக்கும் அடிகளாரின் தொண்டுள்ளம்.

# உள்ளுறை

# 1

# மாணிக்கவாசகர்

தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டுப் பறம்பு நாட்டில் உள்ள திருவாதவூரில் அவதரித்தவர், திருவாதவூரர். திருவாதவூர் ஒரு சிற்றூர். ஆயினும் செந்தமிழ் நலங்கொழித்த சிறப்பான ஊர். புலனழுக்கு அற்ற அந்தணாளர் கபிலர் பிறந்தது திருவாதவூரே என்று கூறுவர்.

பைந்தமிழ் மண்டலமாகத் திகழ்ந்த பறம்பு நாட்டில் வள்ளல் பாரியின் அவைக்களப் புலவராக விளங்கியவர் கபிலர். திருவாதவூரில் அவதரித்த திருவாதவூரர் முறையாகக் கல்வி பயின்றும் தனித் திறன்கள் பல பெற்றும் விளங்கினார்.

இந்தச் செய்தி, பாண்டிய அரசன் அரிமர்த்தன பாண்டியனுக்குத் தெரியவந்தது. அன்றைய அரசு முறைப்படி - பெரியோரை துணையாய்த் தேடியும் அமைத்துக் கொள்ளல் என்ற முறைப்படி - திருவாதவூரரை முதலமைச்ச ராக்கிக் கொண்டான் அரிமர்த்தன பாண்டியன்.

## ஞானவேட்கை கொண்ட மாணிக்கவாசகர்

திருவாதவூரர் பாண்டிய நாட்டரசின் முதலமைச்ச ராகப் பொறுப்பேற்றுச் சிறப்புற, நாட்டு மக்கள் நலமுடன் வாழும் வகையில், ஆட்சி செய்து வந்தார். ஆயினும்

பதவியிலும் ஆட்சியிலும் இவருக்கு இருந்த ஈடுபாடு குறைவு. சிவசிந்தனை அவரை ஆட்கொண்டிருந்தது.

அதன் காரணமாக நாளும் பல்வேறு அரசியல் - பணிகளில் அவர் ஈடுபட்டாலும் மானுட வாழ்க்கையின் அருமைப்பாடு, வாழும் முறைமை, உய்தி யடைதற்குரிய நெறிமுறைகள் முதலியவற்றில் தம் மனத்தைச் செலுத்தினார்; "ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணுடைய"ராகவே விளங்கினார்.

திருவாதவூருடைய ஆட்சியில் பாண்டிய நாட்டு மக்கள் பயமின்றிப் பண்பாட்டுடன் வாழ்ந்து வந்தனர். முதலமைச்சர் மாணிக்கவாசகர் அரிமர்த்தன பாண்டியனுக்கு, கண் ஆகவும் கவசமாகவும் இருந்து பாதுகாத்தார்; பணி செய்தார்.

அமைச்சுப் பணி செய்தபொழுது பணிக்குரிய காலம் தவிர எஞ்சிய காலத்தில், மெய்ப்பொருள் நூல்கள் கற்றுத் தெளிந்தாரை அணுகி அளவளாவிப் பேசி அரிய உண்மைகளைத் தெரிந்து கொண்டார்; ஞானநெறி நிற்கும் வேட்கையில் முறுகி வளர்ந்தார். திருவாதவூரரின் உடல் அமைச்சுப் பணி செய்தது; ஆன்மா, சிவசிந்தனை செய்தது.

## பணிகொண்ட பரமன்

இந்நிலையில் குதிரைப்படைக் காவலர்கள் அரசனை அணுகி "இலாயத்தில் உள்ள குதிரைகள் மூப்படைந்து விட்டன. புதிய குதிரைகள் வாங்கவேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

அரசுக்கு, குதிரைகள் இன்றியமையாதன. அரசர்கள் நாடும் நகரும் பார்க்க, குதிரை மீதுதான் இவர்ந்து செல்வது வழக்கம். ஒரோவழிதான் யானையைப் பயன்படுத்துவர். அத் தேரினை இழுத்துச் செல்லவும் குதிரைகள் தேவை, அரசப் படைகளுள் குதிரைப் படையும் ஒன்று.

ஆதலால் அரசன், அமைச்சர் திருவாதவூரரை நோக்கி வேண்டிய பொருள் எடுத்துக்கொண்டு சென்று குதிரைகள் வாங்கி வரும்படி பணித்தான். திருவாதவூரரும் பயண மானார். திருவாதவூரர் குதிரைகள் வாங்கப் பொருள் எடுத்துக்கொண்டு பயணம் செய்த பொழுதே கையில் உள்ள பொருள் இறைபணிக்கும் சிவனடியார்களின் பணிக்கும் பயன்படுத்தப்பட வேண்டும் என்று இறைவனிடம் விண்ணப்பிக்கின்றார்.

ஆதி சைவனாம் அருச்சகன் ஒருவன் நேர் வந்து திருநீறு வழங்கியருள்கின்றனன். திருவாதவூரர் இதனை நன்னிமித்தம் என்று எண்ணிப் பயணத்தைத் தொடர் கின்றார். திருப்பெருந்துறையை அணுகுகின்றார், திருவாத வூரர்.

இறைவனும் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் எழுந்தருளித் திருவாதவூரரைப் பணி கொண்டருளக் காத்திருந்தனன், திருவாதவூரரும் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் எழுந்தருளியிருந்த, கருணையே உருவெனக் கொண்ட மூர்த்தியைக் கண்டார்; தொழுதார்; அருள் வசத்தரானார்.

குருந்த மரத்தடியில் எழுந்தருளியிருந்த நாயகன், திருக்கண் நோக்கால் திருவாதவூரரின் ஆன்மாவைப் பந்தித் திருந்த ஆணவ மலத்தைக் கழுவினான்; திருவடிகளைச் சூட்டித் தீட்சை செய்தான். திருவாதவூரர்க்குத் திருவைந் தெழுத்து ஓதிக் - கொடுத்தான். திருவாதவூரர் தன்னை மறந்தார்; தலைவன் தாள் நினைந்துருகினார்.

பழுதிலாத சொற்களினால் பக்திப் பாடல்களைப் பாடினார்; ஈசன் திருவடிகளையும் அவன் ஆட்கொண் டருளிய பாங்கினையும் நினைந்து நினைந்து அழுது அழுது பாடினார். திருப்பெருந்துறை ஈசன் திருவாதவூரர் பாடல் களைக் கேட்டு உவந்து "மாணிக்கவாசகர்" என்றழைத்தார்.

அப்போது தொடங்கித் திருவாதவூரர் மாணிக்கவாசகர் ஆனார்.

இறைவன், மாணிக்கவாசகரைக் கொண்டு மண்ணில் பல பணிகள் செய்திட எண்ணியதால் மாணிக்கவாசகரை மண்மேல் இருத்தி உடன் இருந்த மற்ற அடியார்களுடன் மறைந்து விட்டார். இந்தப் பிரிவினால் வருந்தி மாணிக்க வாசகர் பாடிய பாடல்கள் கல் நெஞ்சினையும் உருக்கும் தன்மையன.

மாணிக்கவாசகர், திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் ஒரு பேரொளியைக் காண்கின்றார்; அணுகு கின்றார். இல்லை, அந்தப் பேரொளி அவரை ஈர்க்கிறது. அதனையடைந்து அண்ணித்து நிற்கிறார்; அப்போது சுடரைக் காண்கிறார். மிகவும் நெருக்கமாக அண்ணித் துள்ளமையால் "சூழ் ஒளிவிளக்கை"க் காண்கிறார்.

உலக இருள் நீக்க, சோதி, வாழும் இடத்தில் இருள் நீக்கச் சுடர். அகத்திருள் நீக்க விளக்கு! இப்படி ஒரு திருக்காட்சி தெரிகிறது. அக்காட்சியை "சோதியே! சுடரே! சூழொளி விளக்கே!" என்று பாடுகிறார் மாணிக்கவாசகர்.

> "திருப்பெருந் துறையில் நிறை மலர்க் குருந்தம்
> மேவிய சீர் ஆதியே!"

என்று தொடர்கிறது மணிமொழி.

## எல்லாம் அவன் செயல்

திருப்பெருந்துறை ஈசனின் பிரிவு தாங்காது மாணிக்க வாசகர் பாடிய பாடல்கள் ஊனினையும் உயிரினையும் உருக்கும் பாடல்கள். மாணிக்கவாசகர் தம்மை இறைவன் ஆட்கொண்டருளியதையும் ஐந்தெழுத்தோத எடுத்துத் தந்தருளியதையும் நினைந்து நினைந்துருகிப் பாடுகிறார்.

"நானேயோ தவம் செய்தேன்; சிவாய நம எனப்பெற்றேன்!" என்பது மாணிக்கவாசகரின் வாக்கு. "என்னை ஓர் வார்த்தை யுட்படுத்துப் பற்றினாய்" என்பதும் அவர் வாக்கு. "ஓர் வார்த்தை" ஐந்தெழுத்து. மாணிக்கவாசகர் பத்திமையில் முறுகி வளர்ந்தார்.

குதிரை வாங்க கொண்டுவந்த பொருளைக் கொண்டு திருப்பெருந்துறைத் திருக்கோயில் திருப்பணி செய்தார். அரசனிடமிருந்து தூதுவர் வந்தனர். திருப்பெருந்துறை இறைவனிடம் மாணிக்கவாசகர் வேண்டுகிறார். அரசனுக்கு என்ன விடை சொல்ல என்று! ஏன்?

திருப்பெருந்துறையில் ஆட்கொள்ளப்பெற்ற நிலையில் மாணிக்கவாசகர் திருப்பெருந்துறைச் சிவபெருமானின் உடைமையானார். இதனை,

> "அன்றே என்றன் ஆவியும்
> உடலும் உடைமை எல்லாமும்
> குன்றே அனையாய் என்னை ஆட்
> கொண்ட போதே கொண்டிலையோ!
> இன்றோர் இடையூ றெனக் குண்டோ
> எண்தோள் முக்கண் எம்மானே!
> நன்றே செய்வாய்! பிழை செய்வாய்
> நானோ இதற்கு நாயகமே!
>
> (குழைத்த பத்து–7)

என்ற திருவாசகத்தால் அறியலாம்.

உடல், உயிர், உடைமை மூன்றையும் தியாகம் செய்தால்தான் ஞானம் சித்திக்கும். ஆன்மா, ஒரே நேரத்தில் இரண்டு எஜமானர்களுக்குச் சேவகம் செய்ய முடியா தல்லவா? இங்கு தியாகம் செய்தல் என்பது உடல், உயிர் உடைமை இவற்றுக்கு முதன்மை கொடுக்காது இலட்சியத் திற்காக வாழ்தலைக் குறிக்கும்.

உடல், உயிர், உடைமைகளைக் கருவியாகக் கருதாமல் பயனாகவே எண்ணி வாழ்தல் தவறு. இறைவன் எப்போதும் நன்றே செய்வான். ஆன்மாக்களின் பழக்க வாசனையால் நன்மையும் தீமையாகப்படுகிறது.

இதனையே "நன்றே செய்வாய்? பிழை செய்யாய்?" என்றார். "இன்று ஓர் இடையூறு எனக்குண்டோ?" என்றது அரசனால் வரவிருக்கும் இடையூற்றை எண்ணிக் கூறினார் போலும்.

## நரி பரியாக்கியது

இறைவனிடத்தில் தன்னை ஒப்படைப்புச் செய்து விட்டதால் மாணிக்கவாசகர் தன் பிறவி, பிறவித் தொடர்பான கடமைகள் அனைத்தையும் இறைவன் வசமே ஒப்படைத்துவிட்டார். ஆதலால், அரசனுக்குப் பதில் கூறவேண்டியது என் அதிகாரத்தில் இல்லை என்ற பொருள் பட "என்னதோ இங்கு அதிகாரம்?" என்று கேட்கிறார்.

இறைவன், "ஆவணி மூல நன்னாளில் குதிரைகள் வரும் எனச் சொல்லி அனுப்புக!" என்று உத்தரவு தருகிறான். மாணிக்கவாசகர் அவ்வண்ணமே குதிரைகள் வரும் என்று திருவருளாணைவழி ஓலை அனுப்புகிறார்.

இறைவன் குதிரைகளுடன் தான் பின்னே வருவதாகவும் மாணிக்கவாசகரை முன்னே செல்லும்படியும் ஆணை பிறப்பிக்கின்றான்.

மாணிக்கவாசகர் அவ்வாறே மதுரைக்கு வந்து அரசவையை அணுகிக் குதிரைகள் வரும் செய்தியை அறிவிப்பதோடன்றி நல்ல குதிரைகளாக, விரைந்து செல்லும் குதிரைகளாக வரும். இதனால் நீ "துரகபதி" யெனப் பெருமையடைவாய் என்றும் கூறினார்.

நாள்கள் உருண்டோடின. குதிரைகள் வரவில்லை. அரசன் சினம் கொண்டான். மாணிக்கவாசகரைக் கொடுந்

தண்டனைக்குள்ளாக்குகிறான். மாணிக்கவாசகர் திருவருட் குறிப்பின் வண்ணம் என்ன நிகழ்ந்தாலும் இறைவன் திருவுள்ளமே என்று "சிவனை மறக்கிலம்" என்று துன்பங் களை அனுபவித்தார்.

## பிட்டுக்கு மண் சுமந்த பெருமான்

திருப்பெருந்துறைச் சிவன் நரிகளைப் பரிகளாக்கித் தாமே குதிரைச் சேவகனாக அமர்ந்து ஆவணி மூல நாளில் மதுரைக்கு வருகிறான்.

குதிரைக் கயிறு மாறும்பொழுது "இன்று இப்போது உள்ள நிலையில் குதிரைகளை ஒப்புக்கொள்கிறாய்! நாளை இவை என்னவாயினும் என் பொறுப்பு இல்லை" என்று கூறுகிறான் குதிரைச் சேவகன்-திருப்பெருந்துறை ஈசன். நள்ளிரவில் குதிரைகள் நரிகளாகின்றன.

மீண்டும் அரசனுக்கு ஆற்றமாட்டாமை. மாணிக்க வாசகருக்கு எழுதிக் காட்டொணாத தண்டனை. மாணிக்க வாசகருக்குக் கிடைத்த தண்டனை பொறுத்தாற்ற இயலாதது!

எனவே இயற்கை சினம் கொண்டது; இயற்கை அழுதது! அதன் விளைவு வைகையாற்றில் பெருவெள்ளம்! மதுரை மாநகரை அழிக்கக்கூடிய வெள்ளம்! வைகை ஆற்றுக் கரையை உடைப்பு எடுக்காமல் அடைக்க வீட்டுக்கு ஓர் ஆள் அழைக்கிறான் அரசன்.

மதுரை மாநகரில் பிட்டு அவித்து விற்றுப் பிழைப்பு நடத்தும் மூதாட்டி - வந்தியம்மை! இவளுக்கு வேறு யாரும் துணையில்லை. ஆள் இல்லாமல் கவலைப்படுகிறாள்.

இந்த நேரத்தில் எடுப்பான தோற்றத்துடன் "கூலி கொடுத்து எனை வேலை கொள்வார் உண்டோ" என்று கூவி வந்தான் ஒரு கூலியாள்! மூதாட்டி வந்தியம்மை அந்தக்

கூலியாளை அழைத்தாள்; அவனிடம் பேரம் பேசினாள். கூலியாள் மிகவும் நல்லவன்.

அதனால், அதிகம் கூலி கேட்கவில்லை. பசிக்கு கொஞ்சம் உதிர்ந்த பிட்டுப் போதும் என்றான். உதிர்ந்த பிட்டு வாங்கிப் பசியாற உண்டான். முடிச்சில் பெற்றும் கொண்டான்.

வைகைக் கரை அடைக்க, தட்டும், மண்வெட்டியும் சுமந்து சென்றான். மண் வெட்டினான்; சுமந்தான். உடைப்பில் கொட்டினான்; பாடினான்; விளையாடினான்; களைத்துப் போனான்; தட்டை தலையணையாகக் கொண்டு தூங்கினான்.

பாண்டிய அரசன் உடைப்புக்கு அணை போடுவதைப் பார்க்க வந்தான். வந்தியின் ஆள் வேலை பார்க்காமல் தூங்குவதைக் கண்டு எழுப்பினான். அவனோ எழுந்திருக்க வில்லை. உடன் கையில் இருந்த பிரம்புகொண்டு அடித்தான்.

அவ்வாறு அடித்தபோது அரசன் முதுகிலும் அடி விழுந்தது. இந்த உலகில் உள்ள அனைத்து உயிர்களின் முதுகிலும் அடி விழுந்தது! அரசன் உணர்ந்தான்! அனை வரும் உணர்ந்தனர். கொற்றாளாக வந்தவன் கொற்றாளன் அல்லன். தனக்குவமை இல்லாதவனாகிய திருப்பெருந்துறை ஈசன் என்று உணர்ந்தனர்.

மாணிக்கவாசகர் வரலாற்றில் நரியைப் பரியாக்கியது, பரியை நரியாக்கியது பிட்டுக்கு மண் சுமந்தது இவை அனைத்துக்கும் அவர் அருளிச் செய்த திருவாசகத்தில் சான்று உண்டு, பரியை நரியாக்கியதை,

> "நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
> ஆண்டு கொண்டருள அழகுறு திருவடி
> பாண்டி யன்தனக் குப்பரி மாவிற்று

ஈண்டு கனகம் இசையப் பெறா அது
ஆண்டான் எங்கோன்! "........"

(கீர்த்தித் திருவகவல் 36–40)

என்ற வரிகளாலும்,

இரும்பு தரு மனத் தேனை ஈர்த்தீர்த் தென் என்புருக்கிக்
கரும்பு தரு சுவை எனக்குக் காட்டினை உன்
கழலிணைகள்
ஒருங்கு தீரை உலவுசடை உடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை ஆக்கியவா றன்றே உன் பேரருளே!

(திருவேசறவு–1)

என்ற பாடலாலும் அறியலாம். மதுரைப் பெருநகரில் பெருமான் குதிரைச் சேவகனாக வந்தருளியதை,

"மதுரைப் பெரு நன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்"

(கீர்த்தித் திருவகவல் 44–47)

என்ற வரிகளாலும், இறைவன் பிட்டுக்கு மண்சுமந்த நிகழ்ச்சியை,

பிட்டு நேர்பட மண் சுமந்த
பெருந்து றைப் பெரும் பித்தனே!
சட்ட நேர்பட வந்தி லாத
சழக்க னேன் உனைச் சார்ந்திலேன்
சிட்ட னேசிவ லோக னே சிறு
நாயி னுங்கடை யாய வெங்
கட்ட னேனையும் ஆட் கொள் வான் வந்து
காட்டி னாய் கழுக் குன்றிலே!

(திருக்கழுக்குன்றப் பதிகம்–2)

என்ற பாடல் வாயிலாகவும் உணர முடிகிறது.
தி.தி. VIII. 3.

இறைவன் மண் சுமந்து கூலி கொண்டு, கோலால் மொத்துண்டு அதன் பயனாகப் பண் சுமந்த பாடலைப் பரிசாகப் பெற்ற செய்தியை,

*பண் சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்*
*பெண் சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்*
*விண் சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்*
*கண் சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை*
*மண் சுமந்த கூலி கொண் டக்கோலால் மொத்துண்டு*
*புண் சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்!*

(திருவம்மானை—8)

என்ற பாடலாலும் அறிந்துகொள்ள முடிகிறது.

## முறையான செயலா?

மாணிக்கவாசகரின் வரலாற்றில் உய்த்து உணர்ந்து உரைக்கத்தக்க பகுதிகள் சில உண்டு. அரசன் குதிரைகள் வாங்க தந்த பணத்தைக் கொண்டு குதிரைகள் வாங்காமல் திருக்கோயில் கட்டியது—இன்னபிற அறங்கள் செய்தது சரியா? முறையான செயல்கள்தாமா? வெளிப்படப் பார்க்கின் தவறாகத்தான் தெரியும்.

உய்த்துணர்ந்து மெய்ப்பொருள் உணரின் உண்மைப் பொருள் விளங்கும். அரிமர்த்தன பாண்டியன் குதிரைகள் வாங்க விரும்பியதன் நோக்கம் என்ன? அண்டை அயல் அரசர்களுடன் போர் செய்து வெற்றிபெற்று பாண்டிய அரசையும் பேரரசாக்கத்தானே! இது,

*"பொற்பி லங்கு புதுப் பரி இங்கு நம்*
*கொற்றம் ஓங்க விரைவிற் கொளப்படும்"*

(ஞானோபதேசஞ் செய்த திருவிளையாடல்—15)

என்று பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணம் கூறுவதன் வாயிலாக அறியக் கிடக்கிறது. அரசுக்கு

மக்கள் வரி கொடுப்பது மக்கள் நலன் கருதிய பணிகளுக்கே யன்றிப் போர் செய்து மக்களை அழித்து வல்லரசு அமைப் பதற்காக அன்று.

போரற்ற உலகமே வாழ்க்கைக்கு இசைந்தது. ஆதலால் அரிமர்த்தன பாண்டியன் குதிரை வாங்குவதை ஈசன் தன் திருவருள் விரும்பவில்லை என்பதை மாணிக்கவாசகர் மூலம் உணர்த்த விரும்பியதே இந்த வரலாறு.

தகுதி மிகுதியும் உடையான் ஒருவன் தம்முள் கருத்து வேறுபடின், ஏவியது நீக்கிப் பிறிதொன்று செய்யின் காரண காரியம் ஆராய்ந்து அதனை ஏற்பர்.

குதிரை வாங்கக் கொடுத்த பணத்தில் குதிரை வாங்காமல் சிறந்த அமைச்சராகிய மாணிக்கவாசகர் திருக் கோயில் திருப்பணி செய்ததை நன்றெனத் தேர்ந்து உய்த்துணர்ந்து இருத்தல் வேண்டும், அரிமர்த்த பாண்டியன், அல்லது கேட்டாவது தெரிந்து கொள்ள முயன்றிருக்க வேண்டும். பாண்டியனுக்கு அந்த நல்லூழ் இல்லை.

ஆனால் தமிழகத்திற்குத் திருவாசகம் பெறும் நல்லூழ் இருந்திருக்கிறது. அதனால் பாண்டியன் தெளிந்துணர மறுத்துவிட்டான். நல்லாட்சி என்ற நோக்கில் பார்த்தால் குதிரை வாங்காமல் திருக்கோயில் திருப்பணி செய்தது சரியே. அமைச்சரின் கடமையைத்தான் மாணிக்கவாசகர் செய்திருக்கிறார்.

குதிரைகள் போரின் சின்னம்; அவை அழிவு தரும். திருக்கோயில் ஆக்கம், கலைகளுக்கு ஆக்கம்; வேலை வாய்ப்பு வழங்குவது. மேலும் சமுதாய வளர்ச்சிக்கும் சமய வளர்ச்சிக்கும் உரியது. திருக்கோயில் மக்கட் சமுதாயத்திற்கு நிலையான சொத்து.

ஆதலால், பயனுடைய பணி செய்தது நன்றே. அப்படியானால் மாணிக்கவாசகர்-இறைவன் இருவருமே அரசனுக்கு அறிவுறுத்திக் குதிரைகளைப் பற்றிக்

கவலைப்படாமல் செய்திருக்கலாமே! "குதிரைகள் வருகின்றன!" என்று சொல்வானேன்? "போலியாகக் குதிரைகளைக் காட்டுவானேன்?" என்ற கேள்விகள் எழலாம்.

ஆம்! கேள்விகள் ஏற்புடையனவே! இந்தச் செய்தியை அரசன் பாண்டியன் அணுகு முறையிலிருந்து அவன் குதிரை வாங்குவதில் பெரிதும் நாட்டமுடையவனாக இருக்கிறான் என்பதை உணர்ந்த இறைவன், அது தவறு என்பதைக் கொஞ்சம் கடுமையான முறையில் உணர்த்தக் கருதியே தொடக்கத்திலேயே கூறவில்லை. ஆனால், வரலாற்றுப் போக்கு வினாவுக்கு விடை காணும் திசையிலேயே செல்கிறது.

## படிப்பினை

இறைவன் நரிகளைப் பரிகளாக்கி நடத்திச் சென்றான். பகலில் பரிகளாக இருந்த அவை இரவில் நரிகளாகிவிட்டன. பகற்பொழுதை இம்மையாகவும் இரவுப் பொழுதை மறுமையாகவும் கூறுவது மரபு.

> *"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி*
> *விழிப்பது போலும் பிறப்பு"*

என்னும் குறள் இங்கே உணரத்தக்கது. பகலில் இன்பம் பயக்கும் பரிகள், இரவில் நரிகளாகித் துன்பம் விளைவிக்கும் என்ற தத்துவம் உணர்த்தப்பெற்றது.

கொற்றாளாக வந்த இறைவன் ஏன் ஒழுங்காக வேலை செய்யவில்லை? இறைவன் கொற்றாளாக வந்தது எடுத்துக் காட்டுமூலம் மக்களுக்குக் கற்பிக்கவே யாம். அதனால், வேலையை நன்றாகச் செய்யாது போனால் உதை கிடைக்கும் என்ற பாடம் படிப்பிக்கப் பெறுகிறது. இது எதிர்மறையாக அணுகிக் கற்பிக்கும் முறை.

## திருவாசகத்தேன்

மாணிக்கவாசகர் அருளிச்செய்த திருவாசகத்தை 'திரு வாசகத்தேன்' என்று கூறுவர். தேன் உணவு, தேன் மருந்து, தேன், செல்வர்களுக்கு உணவாகவும், மருந்தாகவும் பயன் படும்; ஏழைகளுக்கு மருந்தாகப் பயன்படும்.

திருவாசகம், சிவஞானிகளுக்கு மேலும் மேலும் சிவஞானம் பெருகி வளரத் துணை செய்யும்; ஆணத்தின் ஆதிக்கத்தில் இருப்பவர்களுக்கு மருந்தாகப் பயன்படும். திருவாசகம் பயிலுதல், ஓதுதல் மருத்துவம் போன்றதாகும்.

மாணிக்கவாசகராகிய வண்டு சேகரித்தது திருவாசகத் தேன்; மாணிக்கவாசகராகிய வண்டு சிவம் என்கிற பரம் பொருளின் திருவடித் தாமரைகளில் மட்டுமே உட்கார்ந்து சேகரித்த ஒரு பூத்தேன். வேறு எந்த மலரையும் (வேறு எந்த தெய்வத்தையும்) மாணிக்கவாசகர் அணுகவில்லை.

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல் லால் நரகம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே இயக்கப் பெறின் இறைவா
உள்ளேன் பிற தெய்வம் உன்னையல் லாதெங்கள்
உத்தமனே!

(திருச்சதகம்–2)

என்பது திருவாசகம். நரகமே புக நேரினும் சிவனைத் தவிர வேறு தெய்வத்தைத் தொழ உடன்பாடிலாத உறுதிப்பாட்டை உன்னுக; எண்ணுக!

## வினைக்கேடன்

மாணிக்கவாசகர் அமைச்சராக இருந்தவர். அவர் மேற்கொண்ட செயல்கள் எத்தனை, எத்தனை! அவர் வினைகளிலேயே மூழ்கிக் கிடக்க வேண்டியிருந்தது! இந்தச்

சூழ்நிலையில் திருப்பெருந்துறைச் சிவன் மாணிக்கவாசகர் வாழ்க்கையில் புகுகின்றான்.

அவ்வாறு புகும்போது, வினைகளின்பால் ஒன்றிக் கிடந்த மாணிக்கவாசகரால் இறைவனை வரவேற்கக்கூட இயலவில்லை; 'புகுதல்' என்பது வரவேற்பு இல்லாத இடத்தில் வலிந்து செல்லுதல் ஆகும்.

உலகியலில் தாழ்ந்தோர் உயர்ந்தோரிடம் அறிமுகப் படுத்திக் கொள்வர்.

அருளியலில் மூவர் தலைவனாய் விளங்கும் மூர்த்தி, மாணிக்கவாசகரிடம் தன்னை "வினைக்கேடன்" என்று அறிமுகம் செய்து கொள்கின்றான்.

அளவற்ற கருணை அது! ஆயினும் என்ன? வினையின் தாக்கம் பெரிதாக இருந்ததால் இறைவன் ஆட்கொண் டருளிய அருமைப்பாட்டினை அறிந்து உணர்ந்து மாணிக்க வாசகருக்கு அழத் தெரியவில்லை; பாடத் தெரியவில்லை; ஆவி சோர்ந்து நிற்கத் தெரியவில்லை. அதனால் "இரும்பின் பாவை" என்று தன்னைக் குறிப்பிட்டுக்கொள்கிறார்.

*வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று*
*போது நான் வினைக்கேடன் என்பாய் போல*
*இனையன் நான் என்றுன்னை அறிவித் தென்னை*
*ஆட்கொண்டெம் பிரானானாய்க் கிரும்பின் பாவை*
*அனைய நான், பாடேன் நின் றாடேன் அந்தோ*
*அலறிடேன்; உலறிடேன்; ஆவி சோரேன்!*
*முனைவனே, முறையோ நான் ஆன வாறு*
*முடிவறியேன் முதல் அந்தம் ஆயினானே!*

(திருச்சதகம்–22)

என்று பாடுகிறார்.

## சிவபதம் அளித்த செல்வம்

மானிட வாழ்வில் அம்மா, அப்பா இவர்களில் யார் முதன்மை பெறுகின்றனர்? இது ஒரு விவாதம். இந்த விவாதத் திற்குச் சைவம் விடையளித்ததுபோல யாரும் விடையளிக்க வில்லை. நெருப்பும் சூடும்போல, பண்பும் பண்பியும் போல அம்மா, அப்பா நிலை.

சைவம் அம்மையப்பரை ஒருருவமாகவே மொழிகிறது. "அம்மையப்பரே உலகுக்கு அம்மை யப்பர்" குமரகுருபரர் அம்மையப்பன் நிலையை இலக்கண நயத்துடன் வியப்பு மேலிட விளக்குவார்.

ஒருவன் என்கோ? ஒருத்தி என்கோ? இந்த இடர்ப்பாடு தமிழுக்கு இல்லை. தமிழில் இருவரையும் குறிப்பிடும் "ஒருவர்" என்ற பலர்பால் குறிக்கும் இயற்சொல் இருக்கிறது என்பார்.

*"ஒருவனுக்கும் ஒருத்திக்கும்*
*உருவொன்றால் அவ்*
*வுருவையிஃ தொருத்தன் என்கோ?*
*ஒருத்தி என்கோ?*
*இருவருக்கும் உரித்தாக*
*"ஒருவர்" என்றோர்*
*இயற்சொல் இல தெனை யானமற்று*
*என் சொல் கேனே!*

(சிதம்பரச் செய்யுட் கோவை 54: 3–4)

திருமுறைகள் முழுவதும் அம்மையப்பன் வழிபாடே பேசப் பெறுகிறது. அப்பரடிகள்,

**"அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ"**

என்று அப்பனை, ஐயனை, சிவனை முதல்நிலையில் வைத்துப் பேசுகின்றார், ஏன்?

அப்பரடிகள் வரலாற்றில் அம்மையின் அருள்நிலை மேம்பட்டு விளங்கவில்லை; சூலை நோய் துன்புறுத்தியது. மாணிக்கவாசகர் வரலாற்றில் அம்மையின் அருளும் நிலை முதல் நிலையாகும்; வலியவந்து ஆட்கொண்ட நிலை. ஆதலால், 'அம்மையே!' என்று விளிக்கிறார்.

நாயன்மார்களுக்கு அருளும் நிலையிலும்கூட அம்மை யொடு உடனாய நிலையிற்தான் அருளிப்பாடு நிகழ்கிறது. "அருளது சக்தியாகும்" என்பது அருணந்தி சிவம் வாக்கு.

மானிடத்திற்குத் தாய் உற்ற துணை! குழந்தையின் நோய்க்கு, தாய்தான் மருந்துண்பாள். தாய் ஓர் அன்புப் பிறவி! தன்னல மறுப்பே தாயின் பிறவிக்குணம். இந்த உலகில் இறைவனின் கருணை சிறந்தது; மிகமிகச் சிறந்தது. அடுத்த நிலையில் சிறந்தது, தாயின் அன்பே! "கடவுள் எல்லா இடத்திற்கும் வர முடியாமையினாலேயே தாயைப் படைத்தான்" என்று ஆன்றோர் கூறுவர்.

எல்லாரும் எல்லாப் பதவிகளையும் ஏற்க முடியும், வகிக்க முடியும். தாயாக முடியுமா? ஒருக்காலும் முடியாது. தாயின் அன்பே உலகில் சிறந்தது; நிறை மிகுதியும் உடையது. தாய் ஓர் அற்புதமான படைப்பு; புனிதமான பிறப்பு. தாய்க்கு ஒப்பாக யாருளர்? எவரும் இல்லை! எனவே, மாணிக்க வாசகர் அம்மையை முதன்மைப்படுத்துகின்றார்.

**"அம்மையே அப்பா! ஒப்பிலா மணியே!**<br>**அன்பினில் விளைந்த ஆரமுதே!"**

என்பார். அம்மையே மனிதர்கள் செய்யும் தவறுகளை மன்னிப்பாள். அருளுவதில் அன்னையே முதல் நிலையில் இருக்கிறாள். உணர்ச்சி தரும் இன்பம் வழங்குவதிலும் அம்மையே முன் நிற்கிறாள்.

எனவே, இருளகற்றி இன்பம் பெருக்கி வாழ்நிலை அருளும் அன்னையை-பராசக்தியை 'அம்மை' என்றார்.

அடுத்து "அப்பா" என்று விளித்தார். அம்மையப்பன் உறவுநிலை எத்தகையது? அப்பன் பொருள்! அம்மை பொருளின் ஆற்றல். அம்மை-ஆற்றலே அண்டமெலாம் பூத்து நிற்கிறது! பூத்த வண்ணம் காக்கிறது!

அம்மையின் ஆற்றல் பற்றுக்கோடாக நின்று செயற் படுவது அப்பனிடத்திலேயே. ஆதலால், "அப்பா" என்றார். மணிகளுள் சிறந்தது மாணிக்கம்! மாணிக்கம் ஒளி மிக்கது! ஒளிமிக்க மாணிக்கத்தினும் அப்பன் இறைவன் ஒளி மிக்குடையவன். இறைவனின் ஒளி வடிவம் ஒப்புவமை இல்லாதது. ஆதலால், "ஒப்பிலா மணியே" என்றார்.

வாழ்வியலில் அன்பே உயர்ந்தது. இறைவனுக்கு அன்பே உரிமைப்பொருள். ஆன்மாக்களிடம் இறைவன் விரும்புவது அன்பேயாம். 'அன்பலாற் பொருளுமில்லை ஐயன். ஐயாறனார்க்கே" என்பார் அப்பரடிகள்.

அன்பு விரிவினையே விரும்பும். அன்பால் அனைத்தும் விரிவடையும். அன்புக்கு ஒப்பு அன்புதான்! அன்புக்கு அழிவில்லை. அன்பால் விளைவது ஆக்கம். அதனால் "அன்பினில் விளைந்த ஆரமுதே" என்றார்.

வாழ்க்கை குழந்தைமையில் தொடங்குகிறது. குழந்தமை நிலையில் பொய் இல்லை; குழந்தைகளுக்குப் பொய் சொல்லத் தெரியாது. குழந்தைகளுக்குப் பொய் சொல்லக் கற்றுக்கொடுப்பதே பெற்றோர்தான்! சமூகம்தான்!

கொடுங்கோன்மையும் ஆற்றலின்மையும் பொய்யைப் பிறப்பிக்கின்றன. பாபத்தின் கருவிகளில் தலையாயது பொய். ஒரு குழந்தை பிறந்து வளர்ந்து வரும் பருவங்கள் தோறும் பொய்யும் பெருகி வளர்ந்து வருகிறது. அதனால், 'பொய் யினைப் பெருக்கி' என்றார்.

அடுத்து, மனிதனின் வாழ்நாள் எல்லையில்லாததா? இல்லை! இல்லை! மனிதனின் வாழ்நாள் காலவரையறை - எல்லைக்குட்பட்டதேயாம்! மனிதர் தம் வாழ்நாளை

அவர்தம் விருப்பப்படி நீட்டிக்கொண்டு போகமுடியாது. மரணத்தை ஒத்திப்போட முடியாது!

மனித உடம்பு பச்சை மண்பானை போலவும் கண்ணாடி வளையல் போலவும் உடைந்து போகக் கூடியது; நிலையில்லாதது! அதனால் புத்திசாலித்தனமாக நிலையில்லாதனவற்றைக் கொண்டு நிலையானவற்றைச் செய்து கொள்ளவேண்டும்.

வாழ்வு ஆற்று நீரைப்போல ஓடி ஓடிக் கழிந்து போவது. வாழ்க்கையை நடைமுறையில்-பேச்சு வழக்கில் வளர்வது போலப் பேசுகிறார்கள்; அதாவது பிறந்த குழந்தை வளர்கிறது; ஒரு வயது; இரண்டு-வயது என்று வாழ்க்கையின் காலம் எண்ணப்படுகிறது. இந்த எண்கள் அளவில் ஏறுமுகம்தான்!

ஆனால், உண்மையில் நடப்பது என்ன? வரையறுத்த, வாழ்நாள் காலம் கழிய கழிய, குறைந்துகொண்டே வருகிறது. ஜனவரி மாதம் தேதி நாட்காட்டி கனமானதுதான்! பன்னிரண்டாவது மாதம்-டிசம்பர் மாதம் அந்த நாட்காட்டி இளைத்து விடுகிறது. டிசம்பர் 31 முடிந்ததும் நாட்காட்டியில் நாள் சீட்டு இல்லை. அட்டை மட்டுமே இருக்கிறது. அதுபோலத்தான் மானுட வாழ்க்கையில் வாழ்நாள் கடைசியில் அட்டை மட்டுமே இருக்கிறது. பொய்யோ பெருகி வளர்கிறது.

தலை, மூளையின் இருப்பிடம்! மூளை இயங்க இயங்கத்தான் உருவாகும்; செயற்படும். மூளை பயன்படுத்தப் பெறாவிடில் மூளை இருந்தும் இல்லாததைப் போலத்தான்! மூளை பயன்படுத்தப்படவில்லையாயின். வெறும் தலையே இருக்கும்.

தசையும் நிணமும் உள்ளதலை உயிர்ப்பில்லாத சதை. அந்தச் சதையில் புழுக்கள் வைக்கப்பெறும். வாழ்க்கையை வாழ்க்கையின் அருமையை அறிந்து அறிந்து பயன்படுத்தாத

மாந்தர் புழுத்தலையர் என்பதனைத் தன்மேல் ஏற்றி மாணிக்கவாசகர் 'புழுத்தலைப் புலையனேன்' என்றார். புலையன் எனில் கீழோன் என்பது பொருள். சண்டாளன் என்றுமாம்.

மனிதன் பொய்யினைப் பெருக்கிப் புழுத்தலைப் புலையனாக வாழ்ந்தாலும் இறைவன் ஆட்கொண்டருளத் தவறுவதில்லை. செந்தண்மையும் நேர்மையும் பொருந்திய சிவபதம் சண்டாளருக்கும் உரியது; புலையருக்கும் உரியது.

கல்லைப் பிசைந்து கனியாக்கும் திறனுடைய சிவத்திற்கு – வல்லாளனாகிய திருப்பெருந்துறைச் சிவத்திற்குப் புலைத் தன்மையை மாற்றி ஆட்கொள்வது எளிது! அதுவும் செந்தண்மைக்குரிய நலன்களை உரிமையாகவுடைய சிவத்திற்கு எளிது! எளிது!

இருளில் கிடந்து எய்த்துக் களைத்துப்போன ஆன்மாவுக்கு இன்பமே வழங்கும் சிவம், செல்வம்! அது உடைமைச் செல்வம் அல்ல; உயிர்ச் செல்வம்; உயிரோடு தொடரும் செல்வம்! சிவம் எனும் செல்வத்தினை–சிவகதி என்ற பேற்றினை எப்போது பெறுவது?

"செத்தபிறகு சிவலோகம் வைகுந்தம் சேர்ந்திடலாம் என்று எண்ணியிருப்பார் பித்த மனிதர்" என்று பாரதி எள்ளி நகையாடுவான். மாணிக்கவாசகர் "இப்பிறவியிலேயே, இன்றே, இப்போதே சிவபோகம்" என்றவர். "இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்! இனி எங்கேயும் எழுந்தருள இயலாது! என்றன் உடலிடத்தே இடங்கொண்டாய்!" என்று பேசுகிறார்.

மாணிக்கவாசகர், எதையும் வேண்டிப் பெற்றவரல்லர். சிவபெருமான் தானே வந்தாட்கொண்ட நிலை. "வேண்டுவதும் உன்றன் விருப்பன்றே" என்பது மாணிக்கவாசகரின் வாக்கு. அருளுருவாகிய அம்மை மாணிக்கவாசகரை ஆட்கொண்டருளியது. அமைச்சுப் பணியில் இருந்த மாணிக்க

வாசகர் உலகியல் கருதியும் ஆட்சிநிலை கருதியும் பொய் சொல்ல நேரிட்ட நிலையும் இருந்திருக்கலாம்.

அதனால் "பொய்ம்மையே பெருக்கி" என்றார். ஏன்? ஆவணி மூலத்தன்று குதிரை வரும் என்று சொன்னதும் நம்பிக்கையே தவிர, பொய் என்று கொண்டாலும் தவறில்லை. அமைச்சுப் பதவியிலும் இன்ன பிற பணிகளிலும் பொழுது கழிந்து போவதை எண்ணி வருந்திப் "பொழு தினைச் சுருக்கும் புழுத்தலைப் புலையனேன்" என்றார் போலும்!

> அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
> அன்பினில் விளைந்த ஆரமுதே
> பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
> புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
> செம்மையே ஆய சிவபதம் அளித்த
> செல்வமே சிவபெரு மானே
> இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
> எங்கெழுந் தருளுவது இனியே! (பிடித்தபத்து–3)

அம்மையப்பன் திருவருட் சிந்தனை காலத்தை வென்று விளங்கத் துணை செய்யும். ஆதலால், ஆன்மா காலத்தை வென்று விளங்கும்; பொய்மையினை வெற்றி பெறும். எனவே அம்மையப்பனை எண்ணுக!

## கடவுட் காட்சி

மாணிக்கவாசகர் தம்மை, இறைவன் ஆட்கொள்ளுதற் குரிய தகுதியின்மையைப் பலகாலும் உணர்கின்றார். எடுத் தோதுகின்றார். அதேபோழ்து தம்மை இறைவன், தாமே வலிய ஆட்கொண்ட பாங்கினையும் வியந்து வியந்து நன்றிப் பெருக்குடன் பாடுகின்றார்.

இறைவன் திருவருளைப் பெறுவதற்கு ஒழுக்கம் தேவை; நல்லொழுக்கம் தேவை; புலனில் அழுக்கு அறவே

கூடாது. தவம் செய்யவேண்டும். ஆன்மா சிவத்தையே நினைத்து தவம் செய்யவேண்டும். உடல் பிறருக்கென முயலும் நோன்பு நோற்க வேண்டும். இறைவன் திருவருளில் தோய்ந்த செறிவு பெறவேண்டும். இறைவனைக் கண்டுணரும் அறிவு வேண்டும்.

இவையெல்லாம் பெறாவிடில் இந்த உடம்பு தோற்பாவை போலத்தான்! மாயையினாலாய மயக்கத்தினையும் காட்டி, அம் மயக்கத்தினின்றும் கரையேறுதலுக்குரிய வழியையும் காட்டித் திருக்கோலங்காட்டி இறைவன் ஆண்டருளிய பெற்றிமையை விளக்குகின்றார்.

மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் கடவுளைக் கண்டார்; பேசினார். "கண்ணால் யானும் கண்டேன் காண்க!" என்றருளிச்செய்துள்ளமை அறிக. காட்சியில் மனிதக் காட்சி ஒன்று. கடவுட் காட்சி பிறிதொன்று. இரண்டும் தம்முள் வேறுபட்டவை, என்பதை ஓர்க!

ஒரு மனிதனைத் தொலைவில் பார்க்கும்போது அவன் உருவம் தெரியும். அண்மித்த நிலையிலும் உருவம் தெரியும். அடுத்து நெருங்கிய நிலையில் நிறம் தெரியும். கடவுட் காட்சி அப்படியல்ல. தொலைவில் நிறம் தெரியும்; அடுத்து உருவம் தெரியும்; அடுத்து உறுப்பு - திருவடி தெரியும் என்பதை அறிக.

"வண்ணந்தான் சேயதன்று எளிதே யன்று
அனேகன் ஏகன் அணுவணுவில் இறந்தாய் என்றங்கு
எண்ணந்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்துமா றறியாத எந்தாய் உன்றன்
வண்ணந்தான் அது காட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்கள் அவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவா மற் காத்தாட் கொண்டாய்
எம்பெருமான் என் சொல்லிச் சிந்திக் கேனே!

(திருச்சதகம்–25)

இப்பாடலில் "வண்ணந்தான் அது காட்டி வடிவு காட்டி, மலர்க் கழல்கள். அவை காட்டி" என்ற தொடர் மாணிக்கவாசகரின் கடவுட் காட்சியை-அவர் கடவுளைக் கண்டு அனுபவித்த காட்சியை விளக்குகிறது.

## ஆட்கொண்டருளிய பாங்கு

மாணிக்கவாசகரை எம்பெருமான் ஆட்கொண்டருளினான். ஆட்கொண்டருளியதன் பயன் என்ன? "இறைவன் ஆண்டான்" "மாணிக்கவாசகர் அடிமை என்று இந்த உலகம் கூறட்டும்" என்பது.

"பவன் எம்பிரான் பணி மாமதிக் கண்ணிவிண் -
 ணோர் பெருமான்
சிவன் எம்பிரான் என்னை ஆண்டுகொண் டான்என்
 சிறுமை கண்டும்
அவன் என்பிரான் என்ன நான்அடி யேன்என்ன
 இப்பரிசே
புவன் எம்பிரான்தெரி யும்பரி சாவ
 தியம் புகவே (திருச்சதகம்–9)

என்று அறிவிக்கின்றார். ஆதலால், மாணிக்கவாசகர் வீடு வேண்டி நின்றாரில்லை என்பது புலனாகிறது. அடிமைத் திறம் பூண்டு தொண்டு செய்தலிலேயே அவருக்கு நாட்டம்.

இறைவன், மாணிக்கவாசகரை ஆட்கொண்டருளிய பாங்கு பற்றிய திருவாசகப் பாடல் பலகாலும் படிக்கத்தக்கது; நினைந்து நினைந்து படித்துணர வேண்டிய பாடல்.

## புறம் புறம் திரிந்த செல்வம்!

"கடவுள் அடிக்கடி உலகத்திற்கு வர இயலாமையின் காரணமாகத் தாயைப் படைத்தான்" என்று ஆன்றோர் வழக்கு ஒன்றுண்டு. ஆம்! தாய் ஓர் ஆன்மாவுக்குச் செய்யும் உதவி பெரியது! அளப்பரியது! உணவு எடுத்துண்ண

முடியாக் காலம்தொட்டுப் பாலூட்டிச் சீராட்டி, வளர்ப்பவள் தாய்! உடலை, உயிரை, உணர்வை வளர்ப்பவள் தாய்.

"தாய்" - என்று பெயர் பெற்றவர்களெல்லாரும் நற்றாய் ஆகிவிடுகிறார்களா என்ன? அவருள்ளும் ஒரு சில தாய்மார்களே நற்றாய்கள்! தாய்மார்களில் பலர் சிறந்து விளங்காமைக்குக் காரணம் படைப்பின் குறை அன்று.

சமூக அமைப்பிலும் வளரும் சூழ்நிலையிலும் மிகச் சிலரே நற்றாய்களாகச் சிறந்து விளங்குகிறார்கள்! சான்றாகப் பல தாய்மார்கள் குழந்தைகள் அழுதாலும் உடன் பாலூட்டுவதில்லை? 'சனியன்' என்ற வசைதான் கிடைக்கும்.

சில தாய்மார்கள் அழுத குரல் கேட்டவுடன் பால் ஊட்டுவார்கள். அழுத பிறகு பாலூட்டும் தாய்மார்களே மிகுதி. அதனாலேதான் "அழுத பிள்ளை பால் குடிக்கும்" என்ற பழமொழி பிறந்தது போலும். அழுத பிறகு பாலூட்டும் தாய் மோசமானவளல்லள். ஆனாலும் அவள் நற்றாய் என்ற தகுதி பெற இயலாது.

மிகமிகச் சில தாய்மார்கள் காலக் கணிப்பின்படி குழந்தைக்குப் பசி வரும் என்று உணர்ந்து உரிய காலத்தில் பாலூட்டுவர். இவர்களே நல்ல தாய்மார்கள்! இவர்கள் குழந்தையை அழவிடமாட்டார்கள்; குழந்தையின் நலனில் முழுப் பொறுப்பேற்று, நினைந்து ஊட்டும் தாய்மார்கள் - நல்ல தாய்மார்கள்!

மாணிக்கவாசகருக்கு இவ்வளவில் மனநிறைவு இல்லை. நினைந்தூட்டும் தாய்கூடச் சில நேரங்களில் குழந்தையை மறந்து விடுகிறாள்! நினைப்பு என்பதே மறதியைத் தொடர்ந்து வருவதுதானே! மாணிக்கவாசகர் குழந்தைகளை ஒரு நொடிப் பொழுதும் மறக்காத தாயை நினைவூட்டுகிறார்.

ஆம்! மாணிக்கவாசகரா இறைவனை அழைத்தார்? மாணிக்கவாசகரை இறைவனே தொடர்ந்து வந்து குருந்த

மரத்தடியில் ஆட்கொண்டருளுகின்றார். ஆனால் நினைந் தூட்டும் தாயினும் சால நல்லவன் கடவுள்! இறைவன் உயிர்களை ஒரு பொழுதும் மறப்பதில்லை. இறைவன் உயிர்களை ஒருபொழுதும் மறவாது காத்திருந்து உரிய பொழுதில் ஆட்கொண்டருளுகின்றான். ஆதலால் பால் நினைந்தூட்டும் தாயினும் நல்லவன் இறைவன்.

அதுமட்டுமா? இறைவனின் அருளிப்பாடுகள் அவ்வழி பெறும் அனுபவம் உயிர்களுக்குப் புதியவை. முன்பு எப்போதும் காணாதனவற்றைக் காட்டியும், கேளாதன வற்றைக் கேட்பித்தும் ஆட்கொண்டருள்கின்றான் புதுமையில் நாட்டம் உயிரியற்கை. சமய நெறிக்கும் புதுமை தேவையே. ஆதலால் முதலில் உயிர்கள் இறைவனின் ஆட்கொண்டு அருளும் நிகழ்வுகளுக்கு உடன்பட்டு நில்லா! ஏன்? மறுதலிக்கக்கூடச் செய்யும். ஆயினும் இறைவன் மிகவும் பரிவுணர்வுடன் நடந்து கொள்வான்!

தாய், குழந்தைகளின் தகுதிப்பாடு நோக்கி அன்பு காட்டுவதில்லை. அதுபோலக் கடவுள் உயிர்களின் தகுதி நோக்கி ஆட்கொள்வதில்லை. ஆட்கொள்வதற்கு முன்பும், ஆட்கொண்டருளிய பின்பும் இறைவனின் கருணைக்கும் பாத்திரமான உயிர்கள் தகுதிப்படுத்தப் பெறும்.

உயிர்களின் தகுதி எது? சிறப்பு எது? உயிர், உடலைக் கருவியாகக் கொண்டு உடலை வேலை வாங்குமானால் உயிர் தகுதியுடையது. உயிர்கள் இணைந்துள்ள உடம்பின் ஆளுகைக்கு உட்பட்டு உண்டியை, உடையை உவந்து வருமாயின் தகுதியுடையதல்ல என்பது கருத்து.

ஆதலால், உடல் ஆற்றலுடையதாக இருக்க வேண்டும். ஆனால், உடல் பெருத்தால் உயிர் சிறுத்துவிடும். உடலின் ஊனைப் பெருக்குவது தீது. உடல் ஊனை உருக்கி உயிரை வளர்ப்பது நல்லது. இதற்குக் கடவுளின் கருணை உண்டு.

இல்லை, கடவுட் சிந்தனை உண்டாகி அவனுடைய அருள் தடத்தில் சென்றால் திருவருள் வழி ஊன் உருகும்.

ஊன் உருகினால் ஆன்மாவிடத்தில் ஒளி தோன்றும், ஒளி விளங்கும்! அது ஞான ஒளி! இறை ஒளி! ஊனின் அட்டகாசம் நின்று உள்ளொளி பெற்ற ஆன்மாவினிடத்தில் ஆனந்தமாய தேனினைச் சொரிந்து வளர்க்கிறான் இறைவன்! உயிர் இன்புறுகிறது; இன்ப மயமாகிறது. உயிர், இன்பமே வடிவாகிறது. இந்நிலையில் உயிரின் அறியாமை அகல்கிறது; அறிவு விரிவடைகிறது. ஞான ஒளியாகிறது.

இந்த ஞான ஒளி, எல்லையற்ற இன்பத்தைத் தருகிறது. தேனில் ஊறிய பொருள் எதுவும் கெட்டுப் போகாது. அதுபோலத் திருவாசகத்தின் வழி, திருவருள் தோய்ந்த – நனைந்த உயிர்க்கு என்றும் இன்பமேயாம்!

ஒன்று எவ்வளவு நல்லதாயினும் தொடர் கண் காணிப்பு இல்லையெனில் அது கெடும். அதுவும் உயிர் போதிய பாதுகாப்பு இல்லையெனில் கெடும். ஏன்? உயிர் இயல்பிலேயே தொடக்க நிலையிலேயே அறியாமையுடன் – ஆணவத்துடன் தொடர்புடையது. உயிர் தன் முயற்சியினால் திருவருள் துணையால் ஆணவத்தின் செயற்பாட்டை அடக்க முடிகிறதே தவிர, முற்றாக அகற்ற முடிவதில்லை.

ஏன்? உள்ளது போகாது; இல்லது வாராது. இஃதோர் இயற்கை நியதி. உயிருடன் இயல்பாகப் பொருந்தியிருப்பது ஆணவம்; அறியாமை. ஆதலால், ஆணவம் அகலாது. உயிர் முயன்றால், திருவருள்துணை அமையுமாயின் செயலற்றுப் போகச் செய்யலாம்.

இந்த ஆணவத்தைச் செயலற்றுப் போகச் செய்தலே கூட எளிதல்ல. திருவருளின்பத்தில் உயிர் திளைத்து மகிழும் பொழுதும் கூட ஆணவம் தலைகாட்டும்; சேட்டை செய்யும். அந்த நிலையிலிருந்து கூட ஆணவத்தின் செயற்பாட்டால் உயிர் பின்னடைவு பெறுதல் உண்டு.

தி. தி. VIII. 4.

இங்ஙனம் வளர்ந்த உயிரைத் தாக்கி வீழ்த்தும் ஆணவத்தின் செயலை 'வாசனாமலம்' என்பர். ஆணவத்தினோடு இரண்டறக் கலந்திருந்த பொழுது அடையும் துன்பத்தை விட வாசனாமலத்தால் தாக்கப்படும் துன்பம் கொடிது! கொடிது!

மழை பெய்கிறது! மழை பெய்து ஓய்ந்துவிட்டது! மழை பெய்தபொழுது மரத்து இலைகளின் மறைவில் ஒதுங்கிப் பாதுகாத்துக் கொண்ட பறவைகள், மழை ஓய்ந்தவுடன் இலைகளிலிருந்து விழும் சொட்டுகளின் குளிரைத் தாங்க முடியாமல் தவிப்பதாகக் காஞ்சிப் புராணம் கூறும்.

துய்க்காமலே அடையும் துன்பத்தைவிடத் துய்த்து, பின் அத்துய்த்தலில் இடையறவு ஏற்படும்பொழுது அடையும் துன்பத்தின் அளவு மிகுதி. அதனால் ஒன்றினைப் பெறுவதைவிடப் பெற்றதைப் பாதுகாத்துக் கொள்ளுதல் அவசியம். பாதுகாக்கும் பணியே பெரும்பணி! இதனை ஆங்கிலத்தில் Follow up என்று சொல்வர்.

நிர்வாக இயலில் தொடர் கண்காணிப்பு மிகவும் இன்றியமையாதது. இறைவன் உயிர்களுக்கு இன்பத்தை வழங்கியிருந்தாலும் அதனை அந்த உயிர்கள் தொடர்ந்து அனுபவிக்கும்படியும் வழி நடத்துகின்றான்; கண்காணிக்கின்றான்.

மாணிக்கவாசகரைத் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் எழுந்தருளி ஆட்கொண்டருளினான். ஆனந்த மாய இன்பத்தை வழங்கியருளினான். பின், மாணிக்கவாசகரைத் தொடர்ந்து அவர்பெற்ற இன்ப அனுபவத்தை அவர் இடையறாது அனுபவிக்குமாறு கண்காணித்து நிலை நிறுத்திக் கொள்கின்றான்.

மாணிக்கவாசகரைத் தொடர்ந்து காப்பதற்காகவும், அவர் தோய்ந்த இன்ப அன்பின் அனுபவம் இடையீடு

படாதிருக்கவும், அவ்வழித் திருவாசகம் கிடைக்கவும் இறைவன் ஏற்றுக்கொண்ட பொறுப்புக்கள் பல!

இறைவன் குதிரைச் சேவகனாகும் நிலை, நரியைப் பரியாக்கும் கடமை, பின் பரிகளை நரிகளாக்கும் திருவிளை யாடல், மண் சுமத்தல், புண் சுமத்தல் - இத்தனையும் மாணிக்கவாசகரின் திருவருள் சார்ந்த அனுபவம் இடையீடுபடாமல் இருப்பதற்காகவே யாம் என்பதை எண்ணினால் "புறம் புறம் திரிந்த செல்வ"மாகிய இறைவன் திருவாசகத்தின் இலக்கியம் என்பது புலனாகிறது.

இறைவன் தாயிற் சிறந்தவன்; உயிர்களுக்கு நிலையாக நின்றருள்பவன்.

இந்தப் பாடலுக்குச் சமூக இயல், நிர்வாக இயல் அடிப்படையிலும் பொருள் காணலாம். மனித உலகத்தில் மிகவும் பின்தங்கிய நிலையில், தாழ்ந்த நிலையில் வாழ்வோர் எண்ணிக்கையே மிகுதி. அறியாமை, வறுமை இவர்களுடைய வழிவழிச் சொத்துக்கள்! அச்சமும் அடிமைப் புத்தியும் இவர்களை ஆட்கொண்டுள்ளன. இவர்களுக்கு எப்போது கடைத்தேற்றம்?

ரஸ்கின் என்ற சிந்தனையாளர் "Un to the last" என்று கூறினார். அதாவது கடையனுக்கும் கடைத் தேற்றம் என்பதையே தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டார். இந்த உலகில் இலர் பலர் ஆயினர் ஏன்?

நோன்பு என்றால் என்ன? உண்ணா நோன்பா? உறங்காத நோன்பா? அல்லது பலகாலும் நீராடுதலா? தரையில் படுத்தலா? இவையெல்லாம் நோன்பா? இல்லையா? என்ற ஆராய்ச்சி ஒருபுறம் இருக்கட்டும். "விரதம் எல்லாம் மாண்ட மனத்தான்" என்ற தேவாரத்தின் வழி சிந்தனை செய்யுங்கள்! முடிவு, தலைப்படும்.

புறநானூறு, நோன்பு என்று போற்றுவது எதனை? தனக்கென முயலாது பிறருக்கென முயலும் மாந்தர்

வாழ்வதால் உலகம் இருக்கிறது; இயங்குகிறது என்று போற்றுகிறது!

> "உண்டாலம்ம இவ்வுலகம்..........
> தனக்கென முயலா நோன்றாள்
> பிறர்க்கென வாழுநர் உண்மையானே!"

என்பது புறநானூறு. இத்தகு நோன்பு நோற்பார், வள்ளுவம் கூறியாங்கு மருந்து மரம் என வாழும் பெருந்தகையாளர் அருகிப் போனமையால் இலர் . பலர் ஆயினர்! அறியாமையிலும் ஏழ்மையிலும் கிடந்துழலும் மக்களுக்கு வாழ்தலில்கூட விருப்பம் இல்லை. கடனே என்று வாழ்வார்கள்! பிழைப்பு நடத்துகின்றவர்கள், வெந்ததைத் தின்கின்றனர்; விதி வந்தால் சாகின்றனர்.

இத்தகு மக்களுக்கும், தமது முன்னேற்றம் பற்றிய சிந்தனையே இருக்காது. வாழ்தலையே விரும்பமாட்டார்கள். அவர்களுக்கு வாழ்க்கையில் முதலில் விருப்பம் உண்டாக்க வேண்டும்.

அதனால்தான் நமது சமயத்தில் திருவருட் சக்தி, ஆன்மாக்களுக்கு வேட்கையுண்டாக்க, கரும்பு வில் தாங்குகிறான். 'காம கோட்டம்', 'காமாட்சி' - என்ற வழக்குகள் தோன்றின.

ஆதலால், அறிஞர்கள் சாதாரண மக்களுக்காக அவர் களுடைய நலனுக்குரியவைகளைப் பற்றி எண்ணவேண்டும்; எண்ணிச் செய்யவேண்டும். அவர்களுடைய தேவைகளை அவர்கள் அடைவதற்குரிய வாயில்களைக் காட்டி வழி நடத்தி, அவற்றினை அடைதலுக்குரிய திறனைப் பெற்று வளரத் துணை செய்யவேண்டும்.

அவர்களுடைய வளர்ச்சிப் பாதையில் ஏற்படும் அகநிலைத் தடைகள், புறநிலைத் தடைகள் ஆகியவைகளைக்

கடக்கும் அறிவாற்றலையும் உடல் வலிமையையும் பெறத் தக்கவகையில் நெறிப்படுத்த வேண்டும்.

முன்னேற்றம் என்பது வளரும் தன்மையது; மேலும் நிலையானது. முன்னேற்றத் திசையில் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும் ஊன்றி நிற்றல் வேண்டும். இங்ஙனம் முன்னேற்றத் திசையில் வளர, வாழ நல்ல கண்காணிப்புத் தேவை. கண்காணிப்பும் தொடர் கண்காணிப்பாக இருக்க வேண்டும்.

இதனை நிர்வாக அறிவியல், தொடர் கண்காணிப்பு என்று கூறும். பல நூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய மாணிக்கவாசகர் நிர்வாக அறிவியல் சார்ந்த இந்த உண்மையை விளக்குகிறார்.

மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் ஆட்கொள்ளப் பெற்றார். அந்தம் ஒன்றில்லா ஆனந்தத்தைப் பெற்றார். இந்த ஆனந்த அனுபவமும் இடையீடுபடாமல் இருக்க மாணிக்க வாசகரைத் தொடர்ந்து இறைவன் பின் செல்கிறான். இறைவன் பின்னே செல்பவன். வீழ்ந்தால் தூக்கவேண்டும் என்றால் பின்னே வந்தால்தான் தூக்கமுடியும். இதனைப் 'புறம் புறம் திரிந்த செல்வமே!' என்றார். இன்றும் ஆட்சியியலில் அமைச்சர்களின் பாதுகாப்புக்குச் செல்ப வர்கள் (Escort) பின்னே செல்கிறார்கள்!

*பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்*
*பரிந்து நீ பாவியே னுடைய*
*ஊனினை உருக்கி உள்ளொளி-பெருக்கி*
*உலப்பிலா ஆனந்தம் ஆய*
*தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த*
*செல்வமே! சிவபெரு மானே!*
*யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்*
*எங்கெழுந் தருளுவது இனியே*

(பிடித்த பத்து–9)

என்ற திருவாசகப் பாடல் தாயன்பின் பெருமை, உடலை அடக்கியாளும் ஆன்ம நலம் கருதி ஆட்கொண்டருளல், தொடர்ந்து காக்கும் இறைவனின் கருணை ஆகியவற்றை விளக்கும் இனிய பாடல்!

## பதம் தந்த பரமன்

ஏன் இறைவன் புறம் புறம் திரிய வேண்டியிருக்கிறது? ஆன்மாவுக்கு அருமை எது, பெருமை எது என்று எளிதில் புலனாகாது; புலனானாலும் சோர்வினால் நெகிழவிடும். ஊனுடம்பு வளர்ந்தாலும் பலர் ஆன்ம நிலையில் யாதொன்றும் அறியா நிலையில் இருப்பர்.

குழந்தைகளுக்குப் பொற்கிண்ணத்தின் அருமை தெரியுமா? கையில் உள்ள பொற்கிண்ணத்தை விளை யாட்டுப் பொம்மைக்கும் சுவைத்துத் தின்னும் மிட்டாய்க்கும் ஈடாகக் கொடுத்துவிடுமே!

அதுபோலத்தான் மனிதர்கள் இறைவன் அருளிய பேரருட் கொடையாகிய மானுடப் பிறவியின் பெற்றிமையை உணர்வதில்லை! மானுடம் பிறவியை முறையாகப் பயன் படுத்திப் பயன்பெறுவோர் எத்தனை பேர்?

"என்னால் அறியாப் பதந்தந்தாய்
யான் அது அறியா தே கெட்டேன்
உன்னால் ஒன்றும் குறைவில்லை
உடையாய் அடிமைக் காரென்பேன்
பன்னாள் உன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடியா ரொடுங்கூடாது
என்நா யகமே பிற்பட்டிங்
இருந்தேன் நோய்க்கு விருந்தாயே!

(ஆனந்த மாலை–2)

என்ற பாடலை உணர்க!

*ஆம்! மானுடப் பிறவி, வென்று விளங்கவேண்டிய பிறவி! புவியை நடத்தவேண்டிய பிறவி! ஆனால், நடப்பது என்ன? மனிதன் வண்டியில் சவாரி செய்யவில்லை! வண்டி மனிதன் மீது சவாரி செய்கிறது!*

*அறிவுப் புலன்கள் நிரம்பிய உடல்! ஆற்றல் மிகுதியும் உடைய உடல்! அன்பினைப் பொழியும் இதயம்! கிளர்ந்து கிளர்ந்து வளரும் உயிர்! இத்தனையும் என்னாயின? பாழாய்ப் போயின.*

## ஓர் உவமை

*மாணிக்கவாசகர் ஞான வாழ்வின் அருமையை அறியாதவர்களின் அவலத்தைப் பல்வேறு உவமைகளின் மூலம் தன்னைச் சான்றாக வைத்துக் கூறுவார் போல விளக்குகின்றார்.*

*யானை, உலகிலேயே மிகப் பெரிய விலங்கு. அதன் கை மிகப் பெரியது. ஆயினும் ஏன்? அந்த யானைக்குத் தன் உடலைப் பார்த்துக்கொள்ள முடியாது. யானை தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக்கொள்ளும்! அதுமட்டுமா? அந்தோ, பரிதாபம்! யானை தன்னைக் கட்டும் சங்கிலியைத் தானே எடுத்துப் பாகன் கையில் கொடுக்கும். இது யானையின் இயல்பு.*

*மனிதன் யானை போலப் பெரிய உடலுடைய வனல்லன்; ஆயினும் வலிமை மிகுதியும் உடைய கருவிகளை உடையவன். எனினும் அவன் தன்னை அறிகிலன்; தன்னுடைய தலைவனை அறிகிலன். மனிதன் தனக்குத் தானே துன்பமிழைத்துக் கொள்கிறான். வினைப்பந்தங் களுக்கு உட்படுத்திக் கொள்கிறான்.*

*"இருகை யானையை ஒத்திருந் தென்னுளக்*
*கருவை யான் கண்டி லேன் கண்ட தெய்வமே*

*வருக வென்று பணித்தனை வானுளோர்க்கு*
*ஒருவ னேகிற்றி லேன் கிற்பன் உண்ணவே*

(கைம்மாறு கொடுத்தல்–1)

என்ற பாடலால் இதனை அறியலாம்.

## தனித்துணை

மாணிக்கவாசகர் தனித்துணையைப் பெற்றவர். ஆயினும் தனித்துணையின் அருமை தெரியாமல் தன் போக்கில் நடந்து கொண்டதாகத் தன்னை நொந்து கொள் கிறார். வாழ்க்கைப் பயணத்திற்கு வழித்துணை தேவை.

நம்முடைய வாழ்க்கைக்குப் பல துணைகள் வந்து சேர்கின்றன. தந்தை, தாய்கூடத் துணைதானே! இந்த அற்புதமான பிறவிக்குக் கருவியாக இருந்தவர்கள் அவர்கள். ஆயினும் காலம் அவர்களைப் பிரித்துவிடுகிறது.

மனைவி ஒரு துணையே! ஆயினும் என்? மனைவியும் எல்லா நிலைகளிலும் ஒத்து நிற்பவளா? பிணக்கே கொள்ள மாட்டாளா? ஆதலால், மனைவியும் தனித்துணை ஆக இயலாது. அடுத்து நண்பன் - தோழன். இவனும் என்றும் எப்போதும் எங்கும் எல்லாச் சூழ்நிலையிலும் துணையாக அமைந்து விடுவான் என்று கருதமுடியாது.

கடவுள் அப்படியல்ல. கடவுள் ஏழ்பிறப்பும் துணை; நரகொடு சுவர்க்கத்திலும் துணை. ஆதலால், இறைவனைத் தனித்துணை என்றார். தனித்துணை ஆற்றுப்படுத்தும் வழி, வாழ்தல் வேண்டும். மூளையை மட்டும் நம்பக்கூடாது. இதயத்தையும் நம்பவேண்டும்.

*"தனித் துணை நீ நிற்க யான் தருக்*
*கித்தலை யால் நடந்த*
*வினைத் துணை யேனை விடுதிகண்*
*டாய் வினை யேனுடைய*

*மனத்துணையே யென்தன் வாழ்முத*
*லேயெனக் கெய்ப்பில் வைப்பே*
*தினைத் துணை யேனும் பொறேன் துயர்*
*ஆக்கையின் திண்வ லையே!*

(நீத்தல் விண்ணப்பம்–39)

*என்பது திருவாசகம்.*

## மந்திரப் பாடல்

*மாணிக்கவாசகர் ஆட்கொள்ளப்பெற்ற நிலையில் அம்மை, அப்பனுள்ளும்; அப்பன், அம்மையுள்ளும் இருப் பதை எண்ணி உள்ளம் நெகிழ்கின்றார். அம்மையும் அப்பனு மாகிய நீவிர் இருவீரும் என்னுள்ளத்தில் இருத்தல் வேண்டும் என்று வேண்டுகின்றார். இது ஐந்தெழுத்தின் விளக்கம். "சிவயசிவ" என்பது விளக்ககம்.*

*"உடையாள் உன்றன் நடுவிருக்கும்*
*உடையாள் நடுவுள் நீ யிருத்தி*
*அடியேன் நடுவுள் இருவீரும்*
*இருப்பதானால் அடியேன் உன்*
*அடியார் நடுவுள் இருக்கும்*
*அருளைப்புரி யாய் பொன் னம்பலத் தெம்*
*முடியா முதலே என் கருத்து*
*முடியும் வண்ணம் முன்னின்றே!*

(கோயில் மூத்த திருப்பதிகம்–1)

*என்பது மணிவாசகம்.*

*"சிவயசிவ" – என்பது மீதுண்மை – அதிசூக்கும ஐந் தெழுத்து. இப்பாடலின் இருபுறமும் "உடையாள்" என்று சொல்வது அமைந்துள்ளது. ஆன்மாவைக் குறிக்கும் "ய" நடுவணதாகவும் இரண்டு புறமும் சிவசக்திகள் இருப்பதன் அருமைப்பாட்டையும் உணர்க. ஆன்மாவாகிய "ய" –விற்கு*

'சி' சுரமாகிய உடையானும் "வ" கரமாகிய உடையாளும் இருக்கின்றமையை உணர்த்துகிறது.

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீ யிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால்"

என்பது மீண்டும் ஓர்க; உணர்க.

## கண்ணப்பர் பற்றிய நினைவு

மாணிக்கவாசகர் கண்ணப்பர், சண்டீசர் ஆகிய நாயன்மார்களைப் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளார். கண்ணப்பரை ஊன் உருக, உயிர் உருகப் பாராட்டி உள்ளார்.

"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என் னொப்பில் என்னையும்
ஆட்கொண்டருளி
வண்ணப் பணித் தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப் பொன் நீற்றற்கே சென்றூ தாய் கோத்தும்பீ!

(திருக்கோத்தும்பி—4)

என்ற பாடலால் கண்ணப்பர் அன்புருவாகி நின்ற காட்சியை விளக்குகின்றார். வேறொரு பாடலில் கண்ணப்பருடைய பூசை முறைகளை விளக்கிப் பாடியுள்ளார்.

பொருட் பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல் விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்கு
அருட்பெற்று நின்றவா தோணோக்கம் ஆடாமோ!

(திருத்தோணோக்கம்—3)

என்றும் பாடியிருப்பதறிக. பொருட் பற்றிச் செய்கின்ற பூசனைகள் என்பது ஆன்ம வழியில் செய்யப்படும்

பூசனைகள் என்று பொருள்படும். ஆகமச் சிறப்புடையது பூசை என்று சிறப்பிப்பதால் 'பொருள்' என்பது ஆகமம் ஆயிற்று.

கண்ணப்பர் செய்தது அன்புப் பூசை. ஆராக் காதலால் நிகழ்த்திய பூசை; ஆகமமுறைப்பூசை மரபுகளைக் கடந்த பூசை.

கண்ணப்பர் வாயில் கொணர்ந்த நீர் திருமஞ்சனம். தலையில் சூடிய மலர் இறைவனுக்குச் சூட்டும் மலர்; சுவை பார்த்த ஊன் திருவமுது ஆயிற்று. செருப்பணிந்த கால்கள் நிர்மால்யம் எடுக்கும் கைகளாயின. இந்தப் பூசை, பெருமானால் விருப்புடன் ஏற்றுக் கொள்ளப்பெற்றது.

ஆகம விதிமுறைப்படி பூசை செய்த சிவகோசரியாரின் பூசையினும் கண்ணப்பர் பூசை மிக்குயர்ந்து விளங்குகிறது. கண்ணப்பர் பூசையில் அன்பு முதலிடம் பெற்றிருந்தது; ஊனும் உயிரும் உருகி வழிபட்டார். இதனை,

"அவனுடைய வடி வெல்லாம் நம் பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறி வெல்லாம் நமை அறியும் அறிவென்றும்
அவனுடைய செய லெல்லாம் நமக்கினிய வாம் என்றும்
அவனுடைய நிலை இவ்வாறறி நீ" என்றருள் செய்தார்.

(கண்ணப்பநாயனார். பு. –157)

என்ற பெரியபுராணப் பாடலால் அறியலாம்.

## தொன்மைக் கோலம்

மாணிக்கவாசகர் திருக்கழுக்குன்றத் திருத்தலத்திற்குச் சென்று வழிபாடு செய்தார். அப்போது திருக்கழுக்குன்றப் பதிகத்தை அருளிச் செய்தார். திருக்கழுக்குன்றத்தில் இறைவன் திருவடிவில் மாணிக்கவாசகருக்கு காட்சி யருளினன்.

குரு தரிசன அமைப்பில் திருப்பெருந்துறையும் திருக்கழுக்குன்றமும் மாணிக்கவாசகரின் அனுபவத்தில் கலக்கின்றன. திருக்கழுக்குன்றத்தில் இறைவனைக் கண்ட நிலை மாணிக்கவாசகர் முதிர்ச்சி அடைந்த நிலை. திருக்கழுக் குன்றத்தை எண்ணும் பொழுது மாணிக்கவாசகருக்கு விருப்பு இல்லை; வெறுப்பு இல்லை.

வாழ்க்கையில் வெறுப்பில்லாத நிலை மட்டும் இருந்தால் போதாது. வெறுப்புணர்வு தனி நிலையில் இருக்கக் கூடாது. விருப்பம் இருந்தால் வெறுப்பும் வரும். வளர்ந்த நிலையில், வெறுப்பு அணுகாத விருப்பம் இருத்தல் கூடும். ஆனால் பொதுவாக விருப்பு-வெறுப்பு இல்லாமல் இருந்தால் நல்லது.

நல்லதன் நன்மையிலும் நாட்டம் இல்லை. தீயதன் தீமையிலும் வெறுப்பு இல்லை. இதுவே இருவினை ஒப்பு. இருவினை ஒத்த நிலையில் – பிறவி வித்துக் காய்ந்துபோன நிலையில் திருக்கழுக்குன்றத்தில் வழிபடுகின்றார். திருப் பெருந்துறைச் சிவனையே தொழும் கற்புக் கடம் பூண்டவர் மாணிக்கவாசகர் என்பதறிக.

மாணிக்கவாசகர் தில்லையை அடைகின்றார். திரு வாசகத்தில் தில்லை பாதி என்பர். தில்லையில் மாணிக்க வாசகர் அருளிச் செய்த பாடல்கள் மிகுதி. இவற்றுள் மிகச் சிறந்த பதிகம் திருக்கோத்தும்பி. திருக்கோத்தும்பிப் பதிகத்தில் தமிழ் மக்களுக்கு ஒரு வரலாற்றுண்மையை உணர்த்து கின்றார்.

இன்று நமது திருக்கோயில்களில் பல திருமேனிகள். இவற்றில் சில சிவமூர்த்தங்கள் இடையில் வந்து சேர்ந்தவை. திருக்கோயிலில் பல திருவுருவங்கள் வந்தமையால் நம்ம னோர் வழிபாட்டில் கற்பு நெறியே காண இயலாத நிலை; ஒன்றியறிந்து வழிபாடியற்ற இயலாத நிலை.

நால்வர் பெருமக்கள் காலத்திலும் பல திருவுருவங்கள் பல பெயர்களில் வழங்கின என்பது உண்மை. இந்தத் திருமேனிகளைத் தாம் அருளிய பாடல்களில் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர். ஆயினும் ஆன்ம நாயகனாக ஏற்று வழிபட்டது சிவபெருமானையே! அம்மையப்பனையே!

தமிழர் தம் வழிபடுந் திருமேனி அம்மையப்பனாகவே பழங்காலத்தொட்டு இருந்து வந்திருக்கிறது. அருளிப் பாடுகள் நிகழ்ந்தபோதெல்லாம் அம்மையப்பன் திருக்கோலத்திலேயே நிகழ்ந்துள்ளன.

இன்றும் பழைய திருக்கோயில்களில் எல்லாம் குறிப்பாக அருளிப்பாடுகள் நிகழ்ந்த தலங்களில் எல்லாம் கரு வறையில் அம்மையப்பன் திருக்கோலம் எழுந்தருளியிருப் பதைக் காணலாம். சங்க கால இலக்கியங்களில் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் பெரும்பாலும் அம்மை அப்பன் திருக்கோலமே பேசப்பட்டுள்ளது. ஐங்குறு நூறு,

"நீலமேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே!"

என்று வாழ்த்தும் திருக்களிற்றுப்படியார்.

**அம்மை அப்பரே உலகுக்(கு) அம்மை அப்பர் என்று அறிக**
**அம்மை அப்பர் அப்பரிசே வந்து அளிப்பர்–அம்மை அப்பர்**
**எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்**
**அல்லார்போல் நிற்பர் அவர்.**

என்று கூறும் திருமுறைகள் முழுதும் அம்மையப்பன் வழிபாடே பேசப்பெற்றுள்ளது. மாணிக்கவாசகர் தில்லையம் பதியில் அருளிச் செய்த திருக்கோத்தும்பியில்,

**தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்**
**பால் வெள்ளை நீறும் பசுஞ் சாந்தும் பைங்கிளியும்**

சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ

(திருக்கோத்தும்பி–18)

என்று பாடுகிறார்.

இத் திருப்பாடலில் அம்மையப்பர் ஒருருவாய் எழுந்தருளியுள்ள காட்சி, பாடிப் பரவப் பெறுகிறது. அம்மையப்பர் ஒருருவாய் நிற்கும் கோலமே தொன்மைக் கோலம் என்று அருளிச் செய்தமையை உணர்தல் வேண்டும்.

தோடும், குண்டலமும், திருநீறும் சூலமும் உடைய அப்பன் வலப்புறமாகவும், பட்டாடையும் தோடும் சந்தனமும் பச்சைக் கிளியும் வளையலும் உடைய அம்மை இடப்புறமாகவும் விளங்கும் திருக்கோலம். நமது சமய நெறியில் அம்மையப்பன் வழிபாடு வளர்வது நல்லது; அது வரலாற்றுடன் இசைந்தது; வாழ்வியலுக்கு இசைந்தது.

## சதுரர் யார்?

மாணிக்கவாசகரை இறைவன் ஆட்கொண்டருளினான்; தன்னையே மாணிக்கவாசருக்குத் தந்தருளி மாணிக்கவாசகரின் உடலிடம் எழுந்தருளினான். மாணிக்கவாசகரை எடுத்துக் கொண்டான். இருவருக்குமிடையே வாணிகம் நடந்திருக்கிறது. இந்தப் பரிவர்த்தனையில் மாணிக்கவாசகர் அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றார். இறைவன் என்ன பெற்றார்?

இந்தப் பரிவர்த்தனையில் யார் சதுரப்பாடு மிகுதியும் உடையவர்? இது மாணிக்கவாசகரின் வினா. மாணிக்கவாசகரே விடையும் தருகிறார். ஆம்! மாணிக்கவாசகர் அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றார்; இறைவன் தம் உடலிடம் எழுந்தருளப் பெற்றார். இந்த இரண்டுக்கும் எளிதில் கைம்மாறு செய்ய இயலாது. ஆதலால் "யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே" என்று விடை கூறுகின்றார்.

ஆனால் உண்மையில் யார் சதுரப்பாடு உடையவர்? இறைவனா? மாணிக்கவாசகரா? மாணிக்கவாசகர் என்ற ஓர் ஆன்மாவை ஆட்கொண்டருள இறைவன், குதிரைச் சேவகனாகி, பிட்டுக்கு மண் சுமந்து, கொற்றாளாக வேலை செய்து, கூலி கொண்டு, மொத்துண்டு, புண் சுமந்து அவதிப்பட நேரிட்டிருக்கிறது. எண்ணற்ற உயிர்க் குலத்தை உய்யுமாறு ஆட்கொள்ள எத்தனை தடவை அவன் மண் சுமப்பது? அடிபடுவது? இந்த நடைமுறை தொடர்ந்து சாத்தியமன்று; மாணிக்கவாசகரின் புண் சுமந்த பாடலைப் பரிசாகப் பெற்ற நாள் முதல் திருவாசகம் ஓதியே அனைவரும் இறைவனின் திருவருளைப் பெறலாம்; இன்ப அன்பினை எய்தலாம்.

அறிவால் சிவனேயாய மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகமே உயிர்களுக்கு-மானுடத்திற்கு ஈடிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பத்தை வழங்கும்.

ஆதலால் மானுடத்தை ஆட்கொள்ள மண் சுமக்க வேண்டிய அவசியத்திலிருந்து இறைவனுக்கு விடுதலை கிடைத்தது. மேலும் இறைவனுக்கு, கடையூழியில் தனிமை கழிக்கத் துணையாகத் திருவாசகம் கிடைத்தது.

மாணிக்கவாசகரைப்போல் பலர் இறைவன் அருளைப் பெற்றுள்ளனர். ஆனால், இறைவன் தானே படியெடுத்துச் சுமந்து செல்லக்கூடிய திருவாசகத்தைப் பெற்றது மாணிக்க வாசகரிடத்தில் தான்! எனவே, இறைவனே சதுரப்பாடு டையவன்!

*"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்*
*சங்கரா ஆர்கொலோ சதுரர்*
*அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்*
*யாது நீ பெற்ற தொன் றென்பால்*
*சிந்தையே கோயில் கொண்ட எம் பெருமான்*
*திருப் பெருந் துறையுறை சிவனே*

*எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்*
*யான் இதற் கிலன் ஓர் கைம்மாறே!*

(கோயில் திருப்பதிகம்–10)

என்ற பாடல் எண்ணி மகிழத்தக்கது.

## பணி செய்யப் பணித்தருள்க!

மாணிக்கவாசகர் எம் பெருமானை, திருப்பள்ளி எழுச்சி பாடி எழுப்புகின்றார். இறைவனை, "இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன்" என்று ஆய்வு செய்யும், முடிவுகள் கூறவும் முயன்ற உலகம் தோற்றுப்போயிற்று! எத்தனை உயிர்ப் பேதங்கள் உண்டோ அத்தனை மனங்களும் உண்டு. அவரவர் மனம் நினைந்திடும் உருவம், பெயர்தானே இறைவனுக்கும்!

ஆதலால் இறைவனைப் பற்றிய ஆய்வு தொடர்வதே ஆன்ம அனுபவ வளர்ச்சி; அளவுகோல்! அடையாளம்! இறைவன் எத்தகையவனாக இருந்தால் என்ன? அவன் மானுடத்தை ஆட்கொண்டருளத் திருவுள்ளம் கொண்டு விட்டனாயின் எங்கும் எவ்வுருவிலும் எழுந்தருளுவான்.

நமக்குத்தான் "அவன் சிவன்" என்று தேர்ந்து தெளியும் அறிவு தேவை! உணர்வு தேவை. இறைவன் திருஉத்தர கோசமங்கையில் எழுந்தருளியுள்ளான். அதை ஊராக உவந்துகொண்டு எழுந்தருளியுள்ளான்.

ஆதலால், மாணிக்கவாசகர், "எம் பெருமானே! எழுந் தருள்க; நந்தமக்கு அருளிப்பாடு செய்வதற்கல்ல! என்ன பணி செய்யவேண்டும்? பணித்தருள்க – பணி கொள்வதற்காக எழுந்தருள்க." என்று பிரார்த்திக்கின்றார்.

இத்தகு பிரார்த்தனை சிறந்த பிரார்த்தனை! இந்தப் பிரார்த்தனை முறை நாடெல்லாம் வளரவேண்டும்.

## திருக்கோவையார்

மாணிக்கவாசகர் திருக்கோவையாரையும் அருளிச் செய்தார். "பாவை பாடிய வாயால் கோவை பாடுக" என்ற திருக்குறிப்பின் வழி பாடியதாக வரலாறு.

இறைவனை, ஆடல்வல்லானைத் தில்லையம்பலத்துள் காணலாம்; அங்கு, காண இயலாது போனால், மதுரையின் கண் ஆய்ந்த தமிழ்த்துறையில் காணலாம்; அங்கும் காண இயலாது போயின் ஏழிசைச் சூழலில் காணலாம் என்று திருக்கோவையார் பேசுகிறது.

தில்லையம்பலமும் தமிழ்த்துறையும் ஏழிசைச் சூழலும் மாணிக்கவாசகர் சிந்தையும் ஒன்றேயாம். அதனால்தான், திருவாசகத்தை இறைவன் படியெடுத்தான். தில்லையில் மாணிக்கவாசகரை, திருவாசகத்தின் பொருள் கேட்கின்றனர். மாணிக்கவாசகர் ஆடல்வல்லானையே பொருளாகக் காட்டி அருள்கின்றார்.

## திருவாசகம் ஓதுவோம்

திருவாசகம் பண் சுமந்த பாடல்! இறைவனை முன்னிலைப்படுத்திப் பாடப்பெற்ற பாடல்கள் திருவாச கத்தில் மிகுதி! உயிரின் சிறுமையும் இறைவனின் பெருமையும் பேசப்படுவதால் உருக்கம் மிகுதி! ஊனினை, உயிரினை உருக்கும் பாடல்கள்!

டாக்டர் ஜி.யூ. போப் "என்பினை உருக்கும் பாடல்கள்" என்றார். அழுது அடி அடையும் நெறி, திருவாசக நெறி! திருவாசக நெறி, அன்பு நெறி! பொதுமை நெறி!

திருவாசகம் ஓதுவோம்! மனநலம் அடைவோம்.

2

# திருவாசகத் தேன்*

## திருவாசகம் ஓதுவோம்!

இந்த உலகில் எதுவும் வளரும்; எவரும் வளர்வர். வளர்வன எல்லாம் மாறும் – இதுவே உலகத்து இயற்கை. ஆன்மா வளர வேண்டும். ஆம்! ஆன்மா வளர்வதற்கும் மாற்றங்கள் பெற்று நிறைநலம் பெறுவதற்குமே எடுத்தது பிறப்பு.

நிலம் உழுதால் நிலத்தின் கெட்டித்தன்மை நெகிழ்ந்து கொடுக்கும்; விதைகளை வாங்கி செடியாக்கி, மரமாக்கி வளர்த்துக் கொடுக்கும். உழுத நிலமே பயன்படும். இரும்பை உருக்கவேண்டும். இரும்பை உருக்கிக் காய்ச்சினால்தான் வலிமை பெறும்; சுமை தாங்கும்.

மாற்றுக்குறையாத தங்கமேயானாலும் உருக்கினால் தான் அணிகள் செய்யலாம். பயன் கருதினால் வளர்ச்சி வேண்டும். வளர்ச்சிக்குரிய செயற்பாடுகளுற்றால்தான் வளர்ச்சி ஏற்படும்.

---

* "கலைமகள்" மாத இதழில் வெளிவந்தவை.

மனிதப்படைப்பின் குறிக்கோள் என்ன? அன்புற்றமர்ந்து வாழ்தலே வையகத்தியற்கை. இன்று மனித இனம் எங்குச் சென்று கொண்டிருக்கிறது? இன்றைய மனித இனத்திற்குக் குறிக்கோள் இருக்கிறதா? இன்றைய மனிதன் சாதனைகளையே குறிக்கோள்கள் - இலட்சியங்கள் என்று சொல்கிறான். இன்றைய மனிதனிடம் "மனிதம்" இல்லை; கடின சித்தம் குடிகொண்டு விட்டது. இந்த மனித குலத்துக்கு முதலில் அழக் கற்றுக் கொடுக்க வேண்டும். ஐயா, ஐயா இது என்ன புதிய முயற்சி! இன்று மக்கள் அதிகமாக அழுகிறார்கள்! விலைவாசி ஏற்றம், குடும்பப் பொறுப்பு, மகள் திருமணம் எல்லாமே இன்று; அழுகைக்குரிய நிகழ்வு களாகி விட்டன. இந்த அழுகை போதாதா? இன்னும் என்ன அழுகை? எதற்கு அழுகை? என்று நினைக்கலாம். இப்பொழுது மனிதனின் தேவைகள் எளிதாகக் கிடைக்கும். தேவை ஒரு நல்ல அரசு. அதற்கு மேலும் நன்றெனை ஒன்றுண்டு! அதுவும் கிடைக்கும்! இன்பத்துள் இன்பமும் கிடைக்கும்!

மனிதனின் நெஞ்சக் கனகல்லை நெகிழ்ந்து உருகச் செய்ய வேண்டும். உருகும் மனிதனிடத்தில் உணர்வு சிறக்கும்; ஞானம் முகிழ்க்கும். மனிதன் கடவுளை நினைந்து நினைந்து உருகி அழுதானானால் உருப்பட்டுவிடுவான். மனிதன் கடவுளை நினைந்து அழக் கற்றுக் கொள்ள வில்லையே; என்று இடித்துக் கூறுகிறது திருவாசகம்! அழுதால் இறைவனை- இறைவன் அருளைப் பெறலாம்! இது திண்ணம்! திருவருள் முதல் எண். முதல் எண்ணை வெற்றிகரமாகப் போட்டுவிட்டால் மற்ற எண்கள் தாமே வரும்.

மனித வாழ்வுக்கு உணவு தேவை; மருந்தும் தேவை. உணவாகவும் மருந்தாகவும் ஒருசேரப் பயன்படுவது தேன்! தேன் உணவு! தேன் மருந்து! ஏழைகளுக்குத் தேன் மருந்து. வளமுடையோருக்கு உணவு. தேன், தேனீக்களால் சேகரிக்கப்

பெறுவது. தேனீக்கள் சுறுசுறுப்பானவை. கட்டுப்பாடுடையவை; ஒழுங்குகள் உடையவை. ஒரே தொழில் செய்பவை. தேனீக்கள் பலகாத தூரம் சென்றாலும் தேன் உள்ள மலர்களை நோக்கியே செல்லும். தேனைச் சேகரிக்கும். எப்படி வாழ வேண்டும் என்பதற்குத் தேனீ ஓர் உதாரணம்.

மாணிக்கவாசகராகிய தேனீ இறைவன் திருவடி மலர்களில் மட்டும் உட்கார்ந்து எடுத்த தேன், திருவாசகம். திருவாசகம் என்ற தேன் ஒரே பூவின் தேன். வேறு எந்த மலர்களிலும் மாணிக்கவாசகராகிய தேனீ உட்கார்ந்த தில்லை. பரமசிவமே கொற்றாளாகி மண் சுமந்து பெற்ற பரிசு, பண் சுமந்த பாடலாகிய திருவாசகம்! சிவபெருமானால் படி எடுக்கப்பெற்ற நூல் இது.

எத்தனை எத்தனை பிறப்புக்கள் பிறந்தாயிற்று! எய்ப்பும் களைப்பும் வந்தாயிற்று! கடினமான பிறப்புக்கள்! சூழ்ந்து வந்த தளைகள் எண்ணற்றவை! இவையெல்லாம் கழல வேண்டுமா? திருவாசகத் தேனமுதப் பாடல்களை ஓதுக!

பிறப்பு என்ன? வாழ்க்கை என்ன? நன்மை, தீமை என்ற சுழற்சி வட்டம் ஓயாது வருகிறது. இந்தச் சூழற்சியில் சிக்கிய ஆன்மா அனுபவிக்கும் அல்லல்கள் ஆயிரம்! ஆயிரம்! இந்த அல்லல்கள் தீர ஒரே வழி திருவாசகம் ஓதுதல்.

அல்லல் நீங்கி ஆனந்தம் அடையத் திருவாசகம் பாடுக! திருவாசகம் ஓதுக!

வாழ்க்கையாகிய நெடிய பயணத்துக்குத் துணை வேண்டுமா? தனிமைத் துன்பம் அழியத் துணை வேண்டுமா? இறைவனே கடையூழித் தனிமையிலிருந்து மீள, திருவாசகத்தைப் படி எடுத்துக் கொண்டுளான். நமது தனிமைக்கும் தனித்துணை மருந்து திருவாசகம்தான்! நம்து நெடிய பயணத்துக்குரிய தனித்துணை திருவாசகம்! மாணிக்கவாசகர் பரசிவத்தின் திருவடிகளாகிய மேகத்தில் ஞானத்தை

எடுத்து வந்து பெய்த ஞான மழை திருவாசகம்! திருவாசகத்தை, இராமலிங்க அடிகள் கூறியவாறு "நான் கலந்து பாட" முயற்சி செய்வோம்!

திருவாசகம் ஓர் ஆன்மாவின் பரிணாம வளர்ச்சியை உணர்த்துகிறது. நந்தம் மூதாதையரின் உதட்டில் உலா வந்து உலாவிய பாடல்கள் திருவாசகம். அதனால்தான் போலும் அன்றைய தமிழகத்தில் ஞானம் இருந்தது. இன்றும் நமது உதடுகளில் திருவாசகம் உலா வரட்டும்! திருவாசகச் சிந்தனைகளின் வழி ஆன்மாக்கள் வளரட்டும்! அலைவு உலைவுப் போராட்டங்களிலிருந்து விடுதலை பெறட்டும்; ஆன்ம சுதந்திரம் பெற முதலில் சிந்திக்க வேண்டும். ஆன்ம சுதந்திரமே இறை இன்பத்திற்குப் படி.

சிவப்பிரகாச சுவாமிகள் கூறிய வேளாண்மையைச் செய்க! மாணிக்கவாசகராகிய மாமழை பொழிந்தது; திருவாசகத் தேனமுது. ஓதுபவர் மனக்குளத்தில் திருவாசகம் நிரம்பட்டும். அவர்தம் வாய்வழிப்போந்து கேட்பவர் செவி வழி மனவயலில் பரவட்டும்! அன்பாகிய வித்திலிருந்து சிவம் முளைவிடட்டும்! கருணை மலரட்டும்! கருணையால் இந்த உலகம் சிறக்கட்டும்! மட்கலம் நல்லதேயானாலும் தீண்டாமையாயிற்று. தீண்டாமை இல்லாத பொற்கலமாய திருவாசகம் ஓதுவோம்!

நாளும் திருவாசகம் ஓதுவோர் நாள்தோறும் திருவாச கத்தை நினைந்து நினைந்து ஞானமழையில் நனைந்து நனைந்து உணர்வில் சிறந்து அழுவோம். இறைவனை நினைந்து அழுவதற்குரிய ஞானப்பாடல்கள் திருவாசகம். அழுகின்ற கண்களில்தான் கடவுள்தன்மை பூரணமாகப் பரிணமிக்கிறது. ஏன்?

தமிழ் பத்திமைக்குரிய மொழி பிரிவு துன்பத்தைத் தருவது. குருந்த மரத்தடியில் திருப்பெருந்துறை ஈசனைக் கண்டு அனுபவித்த மாணிக்கவாசகருக்கு ஈசனின் பிரிவுத்

துன்பத்தில் பிறந்த தமிழ் திருவாசகம். ஆதலால் நெஞ்சை உருக்குகிறது. ஆதலாலும் உருக்கும் தன்மை மிக்குடையதாக விளங்குகிறது. மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் ஈசனைக் கண்டார். "கண்ணால் யானும் கண்டேன் காண்க" என்று மாணிக்கவாசகர் அருளிச் செய்கிறார். அது மட்டுமல்ல. கடவுட் காட்சியின் இயல்பையும் விளக்கிக் கூறும் பாடல்களைப் படித்துணரில் மாணிக்கவாசகர் கடவுட் காட்சியில் திளைத்தவர் என்பது உறுதி.

வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்(று)அ
  னேகன் ஏகன் அணுஅணுவில் இறந்தாய் என்(று)அங்(கு)
எண்ணந்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
  எய்துமா(று) அறியாத எந்தாய் உன்றன்
வண்ணந்தா னது காட்டி வடிவு காட்டி
  மலர்க்கழல்க ளவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்
  எம்பெருமான் என் சொல்லிச் சிந்திக் கேனே

(திருச்சதகம்–25)

என்னும் திருவாசகத்தால் இதனை அறியலாம்.

மனிதக்காட்சிக்கும், கடவுட்காட்சிக்கும் இடையே உள்ள வேறுபாடு என்ன? மனிதக்காட்சியில் நெடுந் தொலைவில் உருவமும், அண்மைத் தூரத்தில் உறுப்பும், மிகமிக அண்மையில் வண்ணமும் (நிறமும்) காட்சிக்குப் புலனாகும். கடவுட் காட்சியில் தொலைவில் வண்ணமும் அண்மையில் உருவமும் மிகமிக அண்மையில் உறுப்பும் திருவடியும் காட்சிக்குப் புலனாகும். இந்த மரபு இந்தப் பாடலில் விளக்கப்பெற்றுள்ளது. அதனால் இறைவனை அண்ணித்து– ஒன்றித்து அனுபவித்த அடியார்கள், திருவடிகளையே போற்றுகிறார்கள்.

இங்ஙனம் குருந்த மரத்தடியில் காட்சி தந்த இறைவன் "இரு" என்று சொல்லி மறைந்து போன நிலையில் அந்தப் பிரிவு மாணிக்கவாசகரை மிகவும் துயரத்தில் ஆழ்த்தியது. தினையின் பாகமும் பிரிவது கூடாது என்பது மாணிக்க வாசகரின் விருப்பம். பிரிவுத்துன்பம் தாளாமல் மாணிக்க வாசகர் அழுது அழுது பாடிய பாடல்கள் திருவாசகம். திருவாசகப் பாடல்களுக்கு உருக்கம் அமைந்ததற்கு இதுவே முதற்காரணம்.

அடுத்து, மாணிக்கவாசகர் இறைவனை முன்னிலைப் படுத்தியே பாடுவார். மாணிக்கவாசகர் தனது ஏழ்மையை-எளிமையை நினைந்து நினைந்து இறைவனிடத்தில் உருகி வேண்டுதல் காரணமாகவும் உருக்க நிலை அமைந்துள்ளது.

திருவாசகம் அருளிய மாணிக்கவாசகர் அறிவால் சிவனேயாவார் என்று போற்றப்படுபவர். திருவாசகம் முழுதும் ஞானம். திருவாசக பூசை, சிவபூசைக்கு நிகரானது என்று ஒரு வழக்குண்டு.

திருவாசகம் அருளிய மாணிக்கவாசகர் "நான்" என்பதைக் கெட்டுப் போகச் செய்தவர். "கூடும் அன்பினில் கும்பிடல்" என்பது போல இறைவன் திருவடியைப் போற்றி வணங்குவதைத் தவிர வேறு எதுவும் வேண்டாதவர்.

**வேண்டேன்புகழ் வேண்டேன் செல்வம்**
**வேண்டேன் மண்ணும் விண்ணும்**
**வேண்டேன் பிறப் பிறப்புச்சிவம்**
**வேண்டார்நமை நாளும்**
**தீண்டேன் சென்று சேர்ந்தேன் மன்னு**
**திருப்பெருந்துறை இறைதாள்**
**பூண்டேன்புறம் போகேன் இனிப்**
**புறம் போகவொட் டேனே!** (உயிருண்ணிப்பத்து–7)

என்று பாடியுள்ளார்.

மனிதன் விரும்புவது புகழ்! ஆசைப்படுவது புகழ். ஆனால் புகழ் விருப்பம் கூட மனிதனைக் கெடுத்து வீழ்த்திவிடும் என்பதே அறநெறி முடிவு. அதனால் "வேண்டேன் புகழ்" என்றார். மேலும் "நின்னடியான் என்று ஏசப்பட்டேன்" என்றும் "சகம் பேய் என்று சிரித்திட" என்றும் "நாடவர் பழித்துரை பூணதுவாகக்கொண்டும்" திருவாசகத்தில் என்றும் அருளியுள்ள பிற பகுதிகள் நினைவிற்குரியன. புகழுக்கு அடுத்து மனிதனை ஆட்டிப் படைத்துத் துன்புறுத்துவது செல்வம். ஆதலால் "வேண்டேன் செல்வம்" என்று அருளிச் செய்துள்ளார். மண்ணக இன்பமும் சரி, விண்ணக இன்பமும் சரி வேண்டாம். இது மாணிக்கவாசகரின் தூய பற்றற்ற வாழ்க்கைக்கு அளவுகோல். திருப்பெருந்துறை இறைவனுடைய திருவடித்தாமரைகளை சென்னிக்கு அணியாகச் சூட்டிக்கொண்டார். இனி திருப்பெருந்துறை இறைவனுக்கு ஆட்பட்டிருப்பதே கடன்! "புறம் போகனே இனிப்புறம் போகல் ஒட்டேனே!" என்ற உறுதிப்பாடுடைய வரி பலகாலும் படிக்கத்தக்க வரி!

துறவின் முதிர்ச்சியும் அன்பு நிறைந்த ஆர்வமும் பண்சுமந்த தமிழும் ஒன்று சேர்ந்து உருக்கத்தைத் தந்தன. இதனை "திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்" என்ற பழமொழி உணர்த்துகிறது. திருவாசகத்திற் குரிய பிறிதொரு சிறப்பு எண்ணற்ற உவமைகள், உருவகங்கள் உடையதும் ஆகும். கருத்துக்களை விளக்குவதில் உவமைக்கு ஈடு ஏது? மாணிக்கவாசகர் தம் அனுபவத்தை எண்ணி தம் உடல் முழுதும் கண்களாக அமைந்து அழவேண்டும் என்று ஆசைப்படுகிறார்.

*தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னை*
*சங்கரா ஆர்கொலோ சதுரர்*
*அந்தமொன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்*
*யாது நீ பெற்றதொன்று என்பால்*

*சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்*
*திருப்பெருந்துறையுறை சிவனே*
*எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்*
*யானிதற் கிலன் ஓர் கைம் மாறே!*

என்று பாடுவார். யார் சதுரர்? தமிழால் ஞானம் அடைய முடியும். ஞாலத்தில் உயர்ந்த சிவானுபவத்தைத் தமிழில் பேச முடியும்; பாட முடியும்; எழுத முடியும் என்று செய்து காட்டிய சதுரர்! சிவபெருமானிடம் அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்ற மாணிக்கவாசகர் சதுரர் என்றெல்லாம் எண்ண இடமுண்டு. ஆயினும் கோடானு கோடி ஆன்மாக் களை ஆட்கொண்டருள மீண்டும் மீண்டும் மண் சுமக்க வேண்டிய அவசியமில்லாமல் எளிதில் ஆன்மாக்களை ஆட்கொள்ளத் திருவாசகத்தினைப் பெற்ற சிவபெருமானே சதுரர்!

நாமும் நாளும் திருவாசகம் ஓதி, சதுரப் பாட்டுடன் வாழ முயல்வோம்!

## எருத்தாளும் இறைவன்!

மாணிக்கவாசகர் தமது வாழ்நிலையை எப்போதும் தாழ்த்திப் பேசுவார்! "தாழ்வெனும் தன்மை" – மாணிக்க வாசகருடைய அணி. மாணிக்கவாசகர் அமைச்சராக இருந்த போதும் பழுத்த மனத்தடியாராக புளியம்பழம் போலவே இருந்தார் என்பதை அவருடைய வரலாறு உணர்த்துகிறது. எந்தச் சூழ்நிலையிலும் தன்முனைப்பே இல்லை. "நான்", "எனது" என்ற செருக்கிலிருந்து முற்றாக விடுதலை பெற்றவர் மாணிக்கவாசகர்.

அரசன் குதிரைகள் வாங்கத் தந்தனுப்பிய செல்வம் கொண்டு மாணிக்கவாசகர் குதிரை வாங்கவில்லை. ஏன்? குதிரை வாங்கினால் படைக்கும் பயன்படும். படை போருக் காகும். போரினால் ஏற்படுவது மரணங்கள்; இழப்புக்கள்!

மாணிக்கவாசகர் போரைத் தவிர்க்க எண்ணினார். திருக்கோயில் கட்டினார். திருக்கோயில் கட்டினால் முதலில் மக்களுக்கு வேலை வாய்ப்பு! திருப்பெருந்துறை நன்செய் சூழ்ந்த ஊர். சில மாதங்களுக்கே வேலை இருக்கும். அதனால் மக்களுக்கு வேலை; சிற்பக் கலைக்கு ஆதரவு. மக்கள் வழிபடவும், சமுதாய நோக்கில் கூடி வாழவும் திருக்கோயில் பயன்படும். இசையும் கலையும் திருக்கோயில் வளாகத்தில் வளரும். இன்னிசை வீணையர், யாழினர் மக்கள், மக்கள் மன்றத்திற்குக் களிப்பையும், மகிழ்ச்சியையும் தந்து நல்வாழ்க்கை வாழ்வதற்குத் துணை செய்வர். ஆதலால், திருக்கோயில் தழுவிய சமுதாயம் வளர்ந்தது. களிப்பும்- மகிழ்ச்சியும் நிறைந்த வாழ்க்கை தொழில் முயற்சிக்கு, பொருள் செயலுக்குத் தேவையானது. வினை தொழில் செய்தலில் இருந்து மாணிக்கவாசகர் விடுதலை பெற்ற தில்லை.

இந்திய தத்துவ ஞானத்தில் 'வினை' என்ற சொல் ஆதிக்கம் செலுத்துகிறது. பொதுவாக வினை என்ற சொல்லுக்குச் செயல் என்று பெயர்; பொருள்.

*வினையே ஆடவர்க்கு உயிரே!*

என்பது குறுந்தொகை. தொழில் செய்தால்தான் ஆடவன்! இது சங்ககால வழக்கு. திருவள்ளுவரும் "வினைத் தூய்மை" என்றார். வினை- செயல் செய்தல் உயிர் இயற்கை. வினை, கண்ணுக்குப் புலனாகும் பொறிகளால் செய்கிறார்கள். பொறிகளும், புலன்களும் சேர்ந்து செய்கிற செயல்களும் உண்டு. புலன்கள் மட்டுமே செயற்பாடுறுதலும் உண்டு. உயிரின் இயற்கை ஏதாவதொரு தொழிற்பாட்டில்- இயக்கத்தில் இருந்து கொண்டுதான் இருக்கும். செயலின்றிச் சும்மா இருத்தல் இயலாத ஒன்று.

*சும்மா இரு சொல் லறஎன் றலுமே*
*அம்மா பொருளொன்றும் அறிந்திலனே*

என்பார் அருணகிரிநாதர். மனம் மாண்டுபோனால்தான் ஆன்மாவிற்குச் செயலாற்ற இயலா நிலை உருவாகும். அதுமட்டுமல்ல. மாந்தர் வினை – தொழில் செய்தால்தான் உலகம் வளரும்; வாழும் உயிர்க்குலமும் வாழ இயலும். வினை செய்தல் கோட்பாடு மாந்தருக்குத் தவிர்க்க முடியாத தேவை. வையகம் இயங்க – வாழ மாந்தர்தம் செயலே மூச்சு; உயிர்!

ஆதலால், மாந்தர் வினை செய்தல் இயற்கை. ஆக்கமும் கூட! இங்ஙனம் நல்லனவே பயப்பது வினை. சமய உலகில் வினையின் எதிர்விளைவைப் பற்றி மட்டுமே எடுத்துக் கூறினார்கள்; கூறிவருகிறார்கள். வினையின் விளைவு மக்களுக்குப் பொருளாக்கம்; மக்களுக்கு வாழ்வு. சமய உலகமும் வினை செய்தலை வேண்டாம் என்று ஒரு பொழுதும் கூறியதில்லை; கூற இயலாது. இறைவனே ஐந் தொழில் செய்கிறான். சமய உலகமும் தொண்டு செய்யுமாறு பணிக்கிறது. திருத்தொண்டு செய்யுமாறு உணர்த்துகிறது. சிந்தனை, சொல், தொண்டு எல்லாமே வினைதான்! புலன்களால், பொறிகளால் வரும் செயலாக்கங்களைவிட, சிந்தனையால் வரும் வினையாக்கம் கூடுதல் என்பதே உண்மை. மாணிக்கவாசகரே கூடச் செயல் செய்தவர் தானே! திருக்கோயில் கட்டியவர்தானே! அது ஒரு வினை தானே! ஆதலால் வினை இயற்றல் இயற்கை. வினை செய்யும்பொழுது கொள்ளும் மனப்பாங்குதான் முக்கியம். வினையை – தொழிலைச் செய்யும்பொழுது எத்தகைய மனப்பாங்குடன் செய்கிறோம் என்பதே கேள்வி! செய்யும் வினையைவிட, தொழிலைவிட மனப்பாங்கே விளைவுகள், எதிர்விளைவுகளுக்குக் காரணமாக அமைகின்றன. அல்லது விளைவுகளே இல்லாமலும் போகின்றன. வினைகளின் செயற்பாடுகள் மனம், மொழி, மெய்யால் அமைகின்றன. மனம் விரும்பியும் விரும்பாமலும் செய்யும் வினைகளுக்கும் பயன் உண்டு. மனம் விரும்பிச் செய்கின்ற வினைகள்

இன்பநலத் துய்ப்பிற்குக் காரணமாக அமைவன. மனம் விருப்பமில்லாமல் செய்யும் வினைகள் எதிர்விளைவுகளைத் தரும். மனம் வெறுப்பால் செய்யும் வினைகளும் உண்டு. இத்தகு வினைகளின் விளைவு துன்பமேயாம். ஆதலால் வினை- தொழில் இன்பமோ துன்பமோ தருவதில்லை. வினைகள் இயற்றும்போது மனம் நிற்கும் நிலையைப் பொறுத்தே இன்பமும் துன்பமும் விளையும். வினைகளைச் செய்தவர்கள் அனுபவித்தே தீரவேண்டும். இது இயற்கை - நியதி! கடவுளின் ஆணை!

கையால் நெருப்பை அள்ளிக்கொட்டினால் கைகளுக்குச் சூடு உண்டு. கை புண்ணாகும். இது இயற்கை. இதுபோல வினைகளை மனம் அழுந்திச் செய்தால், விருப்பு வெறுப்புகளுக்கு ஆளாகிச் செய்தால் அந்த வினையின் பயனை, செய்தவர் அனுபவிக்குமாறு செய்வது இயற்கை நியதி! இறைவனின் நெறிப்படுத்தும் தொழிற்பாடு! "ஊட்டும் வினை" என்பார் திருஞானசம்பந்தர். வினை செய்தலில் மனமே விளைவுகளுக்கு அல்லது எதிர் விளைவுகளுக்கு அடிப்படை என்பதற்கு எடுத்துக்காட்டு, சாக்கிய நாயனாரின் கல்லடியும் கண்ணப்பரின் செருப்படியும்! இவை இரண்டும் இறைவனுக்கு உவப்பாயின! காமவேளின் மலர்க்கணை உவப்பைத் தராதது மட்டுமல்ல. காமவேள் எரிய வேண்டியதாயிற்று. இவர்கள் வரலாற்றில் செய்த வினைப்பயன் கூட்டவில்லை. வினை செய்த நோக்கமும் உளப்பாங்குமே பயன் தந்தன. வினை இயற்றாமல் இருத்தல் கூடாது. வினைகள் இயற்றாமல் போனால் ஆன்மா வளராது; பக்குவப்படாது. குற்றங்களிலிருந்து விடுதலை பெறாது. வாழ்க்கையில் தேக்கம் ஏற்பட்டுவிடும். அதுவும் ஒருவிதத்தில் குற்றமேயாம்! ஆதலால் வினைகள் இயற்றி வாழ்தல் வேண்டும். செய்யும் வினைகள் - காரியங்கள் தற்சார்பாக அமையாமல் பொதுமை அடிப்படை காரணமாக அமைய வேண்டும்! புவியை நடத்தும் வினைகள் இயற்றுதல்- நடத்துதல் வேண்டும். அதேபோழ்து பொதுவில் நடத்துதல்

வேண்டும். செய்யும் வினைகளின் பயனை அவ்வப்பொழுது கணக்குப் பார்த்து நேர்செய்தல் வேண்டும். அப்படிச் செய்யத் தவறினால் வினைகளின் பயனும் தொகுநிலை அடைந்து எளிதில் அனுபவித்துக் கழிக்க இயலாத நிலையை அடையும். அன்றாடம் கணக்கு நேர் செய்தலே சிறந்த வாழ்வியல் முறை.

"வினையிலே கிடத்தல்!"- மனிதன் பிறந்த நாள் தொட்டு ஏதேனும் செய்து கொண்டிருக்கிறான்; செய்து கொண்டே இருக்கிறான். ஏன் செய்கிறான்? எதற்காகச் செய்கின்றான்? இது அவனுக்கே புரியாத புதிர். பலர் பயன், இலாபம் கருதியே வினை இயற்றுகின்றனர்; தொழில் புரிகின்றனர். ஏன்? இலாபம் மட்டுமல்ல, கரண்டுவதற் காகவேகூட வினை இயற்றுகின்றனர்; தொழில் செய் கின்றனர். இந்த மனப்போக்கில் செய்யும் வினைகள் இன்ப வட்டங்களாக அமையும். அந்த இன்பத்தைத் துய்க்கும் பொழுது மனம் அடையும் நிலை என்ன? யார் கூறமுடியும்? அந்த இன்பத்தை விருப்பு வெறுப்புக்களுடன் அனுபவித்தால் அந்த இன்பத் துய்ப்பு துன்பத்தின் விளைவுக்கு இரையாகும். அந்த இன்பத்தைப் பற்றின்றித் துய்த்தால் பின் தொடர்ச்சி இல்லாமல் போகிறது. அந்த இன்பத்தைத் தாமே துய்க்கவேண்டும் என்று துய்க்கும்பொழுது அது தொடர் நிலையாகிறது.

வினைகள் இயற்றும்போது உணர்வின்றிக் கிடத்தல் என்றால் என்ன? வினை இயற்றுகின்ற ஆன்மா இரு வேறு நிலைகள் அடையும். ஒன்று மெய்மறந்த நிலை. இது நல்லது. பிறிதொன்று போதையில் பிறந்த கிறுக்கு நிலை. இது தீயது. உணர்வு, 'நான்' இழந்த நிலையில் வினை இயற்றும் வினை வரவேற்கத்தக்கது. பிறந்த உயிர்கள், வாழும் மாந்தர்கள் ஓயாது ஒழியாது வினை இயற்றிக் கொண்டே உள்ளனர். இந்தவினை, பிறவி வட்டத்தை நீர் அலையின் வட்டம் போல விரிவடையச் செய்து கொண்டே போகிறது. பிறப்பின்

எண்ணிக்கை கூடிக் கொண்டே போகிறது. இந்தச் சூழ்நிலையில் இறைவன் கருணையால் பிறவிச் சூழலைக் கட்டுப்படுத்தி ஆட்கொண்டருள எண்ணி அருள்பாலிக் கிறான். இறைவன் வினைகள் இயற்றி வாழும் மாந்தரிடத்தில் தாயாக, தந்தையாக, ஆசிரியனாகக் காட்சி தருகின்றான். ஆனால், இந்த ஆட்கொள்ளலை எந்த ஆன்மாவும் விரும்புவதில்லை; விரும்பி வரவேற்பதில்லை. ஆனாலும் மனிதகுலம் ஏற்றுக் கொண்டாலும் சரி, ஏற்றுக் கொள்ளாது போனாலும் சரி, இறைவன் உயிர்க்குலத்தை உய்யும் வகையில் எல்லாம் ஆட்கொண்டருளத் தவறியதில்லை. அவனே வலிந்து செய்யும் கருணை நிறைந்த கடமை இது.

சாதாரணமாக உலகியலில் உயிர் நிலையில் உள்ளவர்களிடம் தாழ்ந்தவர்கள் போய் அறிமுகம் செய்து கொள்வதே பழக்கம். ஆனால், இறைவன் ஆட்கொண் டருளும் பணியில் ஈடுபட்டிருக்கும் பொழுதெல்லாம் பெரியோனாகிய இறைவன், அவனுடைய கருணையினால் ஆட்கொள்ளப்பட வேண்டிய நிலையில் உள்ள உயிர்களிடம் தாமே போய் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ளும் நிலையே நடைமுறை. இந்த மண்ணகத்தில் வினைகள் இயற்றுதல், இலாபம் ஈட்டல், புகழ் பெறுதல், அதிகாரம் செய்தல் அம்மம்ம! எத்தனை வினைகள்! எத்தனை எத்தனை செயல்கள்! இந்தச் செயல்களைச் செய்யும் பொழுதெல்லாம் பொறிகளில் படியும் கறைகள்! புலன்களில் ஏறும் அழுக்குகள்! ஆன்மாவில்- உயிரில் ஏற்படும் விகாரங்கள்! இவையெல்லாவற்றையும் பொருட்படுத்தாது அழுக்குடலே யானாலும் அழுக்கேறிய ஆன்மாவேயானாலும் தாயினும் சாலப்பரிந்து ஆட்கொள்ள இறைவன் வருகின்றான். ஆனால் ஆன்மாக்கள் ஆட்பட ஒருப்படுவதில்லை. விரும்புவதில்லை. அறுவை மருத்துவத்துக்குப் பயந்து நோயினால் தொல்லைப் படுவாரில்லையா? பத்தியத்துக்குப் பயந்து நோய்ப் படுக்கையில் கிடப்பாரில்லையா? அதுபோலத்தான்.

ஆனால், இறைவனின் கருணை கைவிடுவதில்லை. நோயாளி அறுவை மருத்துவம் செய்து கொள்ள விரும்பாது போனால் மருத்துவன் விடலாமா? விடக்கூடாது. அதுபோல, இறைவன் உயிர்களை எப்போதும் நரகத்திலும் கூடக் கைவிடமாட்டான். இறைவன் சிறந்த மருத்துவன், வைத்தியநாதன், மூல நோய் தீர்க்கும் முதல்வன் இறைவன், ஆதலால், பிணியாளனைக் கைவிடுவதில்லை. அவன் பிணிகளை அடக்கியாளும் தலைவனாகின்றான். அவன் தலைவனானது மக்களுக்காகவே, வேறு காரணங்களுக்காக அல்ல. இறைவன் பைத்தியக்காரன்! குறியொன்றும் இல்லாதவன்! எது பற்றியும் கவலைப்படான்! ஏசினாலும் ஏத்தினாலும் உயிர்களை ஆட்கொண்டருளுவதே இறைவனின் தொழில்.

ஒரு செல்வன், செல்லமாக நாய் வளர்க்கிறான். வேளா வேளைக்குப் பாற்சோறு பஞ்சணை எல்லாம் கிடைக்கிறது. ஒருநாள் செல்வன் வீட்டு 'பேபி'யான நாய் தெருவில் சுற்றிய ஊர் நாயைப் பார்த்தது. அது சுதந்திரமாகச் சுற்றியது. இந்த வளர்ப்பு பேபிக்கு ஊர் நாயுடன் சேர ஆசை! பெரிய இடத்தில் இருந்தாலும் சின்னப் புத்தி எளிதில் போகுமா? பேபி சங்கிலியை தலையால் சுழற்றிக் கொண்டு வீட்டை விட்டு ஓடிவிட்டது. எங்கு ஓடிற்று! மாடி வீட்டில் பஞ்சணையில் கிடந்த நாய் அடுத்த வீட்டுக் குப்பை மேட்டுக்கு ஓடிற்று; அந்தக் குப்பை மேட்டில் ஊர் நாயுடன் கூடி விளையாடிக் கும்மாளமிட்டது. பேபியை வளர்த்தவன் பேபியைக் காணாமல் தவித்தான்; தேடினான்; தேடிப் போன நிலையில் பேபி குப்பை மேட்டில் விளை யாடுவதைப் பார்த்தான்; அங்கே சென்றான். செல்லமாக 'பேபி!' என்றழைத்தான். பேபி வரவில்லை; நிமிர்ந்து பார்த்தது; உறவைப் புரிந்து கொள்ளவில்லை; உறவை அது பாராட்டவில்லை; மதிக்கவில்லை. மிக நெருக்கமாகப் போய் 'பேபி!' என்று ஆசையோடு அழைத்தான்! **ஊகூம்! ஊகூம்!** பேபி தன்னை வளர்த்த தலைவனைப் புரிந்து

கொள்ளவில்லை. அது மட்டுமல்ல, நிராகரிக்கிறது! வளர்த்த வனுக்குப் பரிவு, பாசம் விடவில்லை! பேபியின் அருகில் போய் பேபியைக் குப்பை படிந்த உடலுடன் அள்ளித் தூக்குகிறான்! துடைக்கிறான்! முத்தமிடுகிறான்! பேபி செய்வதறியாமல் விழிக்கிறது! குப்பை மேட்டுச் சுகம் பறிபோவதில் கவலைதான்! ஆயினும், வளர்த்தவனின் பிடி இறுக்கமான பிடி! ஓட இயலவில்லை! இந்தக் கதைதான் ஆன்மாவின் கதையும்!

இறைவன் எவ்வளவு அற்புதமான வாழ்க்கையைத் தந்திருக்கிறான்! இந்த உலகத்தில் வினைகள் பலவற்றையும் தொழில்கள் பலவற்றையும் செய்து பாருள்ளோர் வாழத் தொண்டு செய்யலாம்! உலகம் உண்ண உண்டு வாழ்ந்தால் தீமையில்லை! நாடெல்லாம் வாழக் கேடொன்றும் இல்லை. ஏன் சண்டை? கலகம்? அழுக்காற்றினால் உயர்ந்தார் உண்டா? கலகம் செய்து காரியம் சாதித்தவர்கள் உண்டா? இல்லை! இல்லை!

இறைவனிடத்தில் பத்திமை செய்க! இறைவன் காந்தம்! நம்மை ஈர்த்து ஈர்த்து ஆட்கொண்டருளத் தக்க வகையில் ஈர்க்கப்படும் ஆற்றலுடைய இரும்பாக வாழ் வோம்! பட்டமரக் கட்டையாக கிடந்து என்ன பயன்? வினைகள் இயற்றுதல், தொழில் செய்தலில் இரும்பு போல உறுதியாக இருப்போம்! துருப்பிடித்து அழியும் இரும்பு போல் ஆன்மாவை ஆணவத்தால் ஆசையால் அழிந்து போகாமல் பாதுகாத்து அன்பு, தொண்டு ஆகியவற்றால் ஆன்மாவை வளர்ப்போம். பாதுகாப்போம். ஆன்மாவை நாளும் தொழில் செய்யும் மனப்போக்கால் உயிர்ப்புள்ள ஆனந்தத்தை ஈர்க்கும் ஆற்றலுடையதாகப் பாதுகாப்போம்.

“வினை, வினை”யென்று பயந்து விடாதீர்கள்! வினை செய்தலே இயற்கை! கடமை! மனக்கோணலின்றிப் பொதுவில் நன்மை செய்யுங்கள்!

**வளர்க இவ்வையகம்! வாழ்க இவ்வையகம்!**

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன் நான் என்றுன்னை அறிவித்து என்னை
ஆட்கொண்டு எம்பிரான் ஆனாய்க்கு இரும்பின் பாவை
அனையநான் பாடேன் நின்றாடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்!
முனைவனே முறையோ நான் ஆன வாறு
முடிவறியேன் முதல் அந்தம் ஆயி னானே!

(திருச்சதகம்–22)

## உயிரின் தவிப்பு

யானை பெரிய விலங்கு. ஆம்! உடலால் பெரிய விலங்கு! அதனால் பெரிய கையால் உண்கிறது! தும்பிக்கை நீண்ட பெரிய கை! ஒரே நேரத்தில் தும்பிக்கையாலும் வாயிலும் உணவு வைத்துக் கொண்டு அளவுக்கு அதிகமாக உண்டு. ஊன் பெருக்கும் யானை! அந்தோ பரிதாபம்! தன்னை, தன் உடலை அறிந்து கொள்ள இயலாதது யானை! சமய நெறியில் கடவுளைத் தெரிந்து கொள்ளுதல், கடவுளை வழிபடுதல் இரண்டாம் நிலையே! முதலில், மனிதன் தன்னை அறிந்து கொள்ளுதல் வேண்டும். அதனால்தான் மாணிக்கவாசகர் ஆன்ம ஆய்வில் "நான் ஆர்" என்று முதலில் தன்னைப் பற்றிய ஆய்வைத் தொடங்குகின்றார். "தன்னை யறிதல்" முதல் கடமை! தன்னுடைய குறைகள் அறிந்தால் தானே நிறைகளை நாடிப் பயணம் செய்ய இயலும்? "தம்மை யறிந்து தலைவனை உணர்தல்" என்பது மெய்கண்டார் வாக்கு!

மனிதன் யார்? மனிதன் தானா! மிருகத்தில் மனிதன்; மனிதனில் மிருகம்; மனிதனில் மனிதன் என்ற படிமுறைகள் உண்டு! இந்த வரிசையில் மனிதன் யார்? தான் யார் என்று அறியாத நிலையில் வளர்ச்சியில்லை! ஆதலால், தன்னை

யறிதல் வாழ்க்கையில் முதல் நிலை! யானைக்கு எப்படி தன்னை தன் உடலை அறிய முடியாத நிலையோ அது போலவே மனிதனுக்கும் தன்னை அறிய முடியாத நிலை! யானை, இரு கையாலும் உண்டு ஊனைப் பெருக்கி வளர்த்துக் கொள்கிறது! இன்றைய மனிதனின் நிலை என்ன? எங்குப் பார்த்தாலும் உணவுச் சாலைகள்! இரை தேடி அலைகிறான்! திருக்கோயில்களையும் உணவு விற்கும் சாலைகளாக மாற்றிவிட்டான்! உண்டி நாலு விதத்தால் அறுசுவையில் தேர்ந்து உண்டு ஊனினைப் பெருக்கி வளர்கிறான்! இதன் விளைவே நீரிழிவு நோய் உடற் கனம்! இதயப் பாதிப்பு! மூட்டு வலிகள்! ஊனின் எடை குறையவேண்டும்! ஊனாகிய உடல் ஆன்மாவுக்குப் பணி செய்யவேண்டம்! ஊன் உருகுதல் வேண்டும்!

யானை, கட்டுத் தறியில் தன் தலையில் தானே புழுதியை அள்ளிப் போட்டுக் கொள்ளும்! அதுபோல ஆன்மா தன்னுடைய துன்பத்தைத் தானே வரவழைத்துக் கொள்கிறது. இன்பமே உலகத்து இயற்கை! துன்பமெலாம் மனிதனின் படைப்பே! அறியாமையின் காரணமாக மனிதன் தனக்குத் தானே துன்பம் செய்து கொள்கிறான்! அறியாமை என்றால் என்ன? ஒன்றும் தெரியாமை அறியாமை அல்ல. ஒன்றைப் பிறிதொன்றாக முறைபிறழ உணர்தலே அறியாமை! "நன்றுடையான், தீயதிலான்"- இறைவன் என்பது திருஞானசம்பந்தர் வாக்கு! "நன்றுடையான்" என்று சொன்னால் போதுமே! ஏன் எதிர்மறையாலும் "தீயதிலான்" என்று சொல்ல வேண்டும்? எது நன்மை! எங்கும் எப்பொழுதும் எல்லாருக்கும் நன்மையாக எது இருக்கிறதோ அதுவே நன்மை! ஒரு பொழுது நன்மையாகவும் ஒருபொழுது தீமையாகவும் இருப்பது நன்மையாகாது. இன்று மனிதர் நன்மை யென்று நினைத்துக் கொண்டிருப்பது தீமை . கலந்த நன்மையையேயாம்! ஆதலால் பழக்க வாசனையால் தீமை

கலந்த நன்மையை-தீமையாக உள்ளதை நன்மையாக மனிதர் அறியாமையால் கருதுகின்றனர். இறைவன் முற்றாக நன்மை. ஆதலால், மனிதர்கள் யானை தன் தலையில் மண்ணை யள்ளிப் போட்டுக் கொள்ளுதல் போலத் தங்களுக்குத் தாங்களே தீமை செய்து கொள்கின்றனர். ஆதலால், மனிதருக்கு வரும் துன்பம், பிறர் செய்ததன்று, தீதும் நன்றும் பிறர்தர வாரா! கடவுள் தந்ததுமன்று! எல்லாம் அவரவர் செய்து கொள்வதே! யானை தலையில் புழுதி அள்ளிப் போட்டுக் கொண்ட கதைதான்!

அடுத்து யானை தன்னைக் கட்ட, சங்கிலியைத் தானே எடுத்துப் பாகனிடம் கொடுக்கும். அதுபோல மனிதன் தன்னைத்தானே வினைக் கட்டுகளுக்கு உட்படுத்திக் கொள் கிறான். ஆன்மாவின் முதற் பிறப்பு கருமேனி கழிக்க வந்த பிறப்பே! அறியாமை அகல இறைவன் அருளிச் செய்த பிறப்பே! அற்புதமான பிறப்பு. அறிவுக் கருவிகள் செயற் கருவிகள் இணைந்த மகத்தான தோற்றம் "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்!" என்பது திருமுறை. ஆயினும் என்? உயிர்கள் தற்சார்பு, தன்முனைப்பு காரண மாக 'நான்', 'எனது', என்ற செருக்கின் வழியாக இருவினை பெருக்கி அல்லற்பட்டு உழல்கின்றன. வினைகட்டு—வினைத் துன்பம் உயிர்களின் ஈட்டம்! அவரவர் வினைவழி அவரவர் வந்தனர். எவர் எவர்க்கு உதவினர்? எவர் எவர்க்கு உதவிலர்? என்றெல்லாம் சிந்திப்பது தவறு. உயிர்கள் தமக்குத் தாமே யானையைப் போலக் கட்டுக்களைப் போட்டுக் கொள் கின்றன.

இவையெல்லாம் போகட்டும்! யானைக்குத் தன் மேல் யானைப் பாகன் இருந்து செலுத்துகிறான் என்பது தெரியுமா? உணருமா? தெரியாது! உணராது! அதுபோலத் தான் உயிர்களுக்கு! உயிர்களின் உயிருக்குள் உயிரதாக இருந்து விளங்கி உயிர்களை இயக்கிடும் கடவுளைப் பலர் அறியார்; உணரார். கடவுள் உயிர்க்குக் கருவாக, உயிராக

விளங்கியருள் செய்யும் பான்மையை அறியாதன! உண ராதன! வேடிக்கை என்னவென்றால் யானை தன் முதுகுப் புறத்தே இருந்து செலுத்தும் பாகனை அறிவதில்லை. ஆன்மாக்களோ உயிர் நிலையில் உயிர்க்கு உயிராக—கருவாக இருந்தருளும் கடவுளைத் தெரிந்து கொள்ள இயலவில்லை; தெரிந்து கொள்ளும் முயற்சி இல்லை. இதனால், விளைந்த பயன் என்ன? துன்பமே ஒழிய வேறில்லை. உயிர்க்கு உயிராக உள்ள இறைவனை நினைந்து, உணர்ந்து, அந்தப் பேரறிவு ஒளிக்காட்சியின் திசையில் வாழ்ந்தால் துன்பம் வராது. அங்ஙனமின்றி ஆணவத்தோடு தொடக்குண்டு ஆணவத்தின் வழி இயங்குவதால் கண்டதெல்லாம் துன்பமேயாம்! இந்த உலக இன்பங்களில் துன்பம் தொடக்கு இல்லாத—துன்பக் கலப்பு இல்லாத இன்பம் எது? ஒன்றும் இல்லை! அதிலும் இறை ஒளியுடன் தொடர்பில்லாதன எல்லாம் துன்பமே யாம்!

கடவுளைக் காணப் பலரும் முயற்சி செய்கின்றனர். புற்றாக, மரமாகத் தவம் செய்கின்றனர். ஆனாலும் கடவுட் காட்சி கிடைப்பதில்லை; திருவருட் சார்பில்லாத—திருவருள் துணையல்லாத ஆன்ம அறிவால் கடவுளைக் காண முடியாது. கடவுளைக் கண்ணால் சிலர் அல்லது பலர் காணாமையால் கடவுள் இல்லை என்றே கூறுகின்றனர். மானுடம் அறிவுப் படைப்பு! அறிவின் அனுபவத்தின் எல்லையில் கடவுட்காட்சி விலங்குகள்—கால்நடைகள்! அவை சிந்திக்கும் இயல்பின அல்ல! மனிதன் காலால் நடக்கின்றான். அதனால் மனிதனைக் ‘கால்நடை’ என்று கூற இயலுமா? விலங்குகள் கால்களால் மட்டுமே நடக்கும் இயல்பின. மனிதன் கால்களால் நடப்பதற்கு முன் சிந்தனை யால் நடந்து, கருத்தால் நடந்து பின்தான் கால்களால் நடப்பான்! ஆதலால், உயிர்தோறும் உள்ளக் கருவாய், ஒளியாய் விளங்கும் கடவுளை அறிஞராயோர், ஞானியர் சிந்திப்பர்; உணர்வர்; காண்பர்! இங்ஙனம் கடவுளைக்

காணவில்லையே என்று மாணிக்கவாசகர் கவலைப் படுகிறார். கடவுளைக் காணாததால் அந்தப் பேரொளி காட்டும் திசையில் செல்லாததால்; கண்டது துன்பமே! சைத்தானுக்குப் பணி செய்தால் துன்பந்தவிர வேறு என்ன பயன்? கடவுள் ஒளி வழி எது செயினும் இன்பமாக அமையும். ஆணவத்தின் திசைவழி நன்றே செயினும் துன்பமேயாம். ஏன்? ஆணவத்தின் வழிகாட்டுதலில் உயிர்கள் நன்று நினைத்தல் இயலாது; நன்று செய்ய இயலாது. ஒரோவழி செய்யப்படுவன நன்மை போலத் தோன்றும். ஆயினும் நன்மையல்ல. உலை நீரில் கிடக்கும் ஆமைக்கு இளஞ்சூடு தரும் இதமான இன்பம் யாது செய்யும்? நன்மை போலக் காட்டித் துன்பம் செய்யும்!

மாணிக்கவாசகர் அனுபவம் வேறு! மற்றவர் அனுபவம் வேறு! இறைவனைக் காண—அனுபவிக்கப் பலர் முயற்சி செய்தனர்; முயன்று கொண்டுள்ளனர். ஆனால், கண்டவர் சிலரே! ஆன்மாவின் அறிவு, சிற்றறிவு! மறதிக்குள் ளாகும் அறிவு, பாசபந்தங்களுக்கும் ஆசாபாசங்களுக்கும் இரையாகும் அறிவு. இந்த அறிவால் தூய்மையே அறிவே வடிவாக உள்ள கடவுளை எப்படிக் காணமுடியும்? நான்முகனும் திருமாலும் தேடிக் காணமுடியாத பொருள், கடவுள் என்ற வரலாறு கற்றுத் தரும் படிப்பினை என்ன? கடவுள் கருணை பாலித்தாலன்றிக் கடவுளைக் காண இயலாது. மாணிக்கவாசகருக்கு, இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளி உபதேசித்தருளினான்; காட்சி தந்தான். 'வருக' என்று அழைத்தான். ஆனால், அழைத்துக்கொண்டு போகாமல் இறைவன் மறைந்துவிட்டான்! ஏன்? மாணிக்க வாசகரின் அன்பு பெருகி வளர்தல் வேண்டும். அந்த அன்பைத் துய்க்க வேண்டும் என்ற திருவுள்ளம்தான்! கடவுள் மாணிக்கவாசகருக்கு மறைந்தான். புணர்ச்சி,

அன்பை வளர்க்காது! பிரிவுதான் அன்பை வளர்க்கும். மாணிக்கவாசகர் கடவுளைக் கண்டார்; அனுபவித்தார். கடவுள் பிரிந்து போனார். மாணிக்கவாசகர் கடவுளிடம் கொண்ட பிரிவு, திருவாசகத்தைத் தந்தது.

கடவுள் ஒருவனே! வணங்குவனவெல்லாம் கடவுள் அல்ல! கடவுள் பல இல்லை. கடவுள் பல என்ற கொள்கை ஏற்புடையதுமன்று. வானிலுள்ள தேவர்க்கு எல்லாம் கடவுள் ஒருவனே! அமரர்களுக்கு எல்லாம் ஒருவனாக, தேவர்கோ அறியாத தேவதேவனாக விளங்கும் கடவுள் வலியவந்து, 'வா'வென்று அழைத்து வான்கருணை பொழிந்த பிறகும் உடன் போகாது பின்நின்று போனதை நினைந்து நினைந்து வருந்துகின்றார்! ஒன்றை அனுபவிக்காமலே இருந்து விடலாம்! அனுபவித்துப் பின் இழத்தல் கொடிய துன்பத்தைத் தரும். மாணிக்கவாசகர் இறைவனைக் கண்டார். அந்தம் ஒன்றில்லா ஆனந்தத்தைப் பெற்றார்; அனுபவித்தார். இடையில் பிரிவு ஏற்பட்டுவிட்டது. ஆனந்த அனுபவத்தில் இடையீடு பட்டுவிட்டது. இதனை மாணிக்கவாசகர் ஆற்றிக் கொள்ள இயலாமல் தவிக்கிறார். கடவுளின் பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலில்லாமல் அல்லற்படுகிறார். இந்த ஆற்றாமையால் தற்கொலை எண்ணம்கூட மாணிக்கவாசகருக்கு வருகிறது! "திண்வரை உருள்கிலேன்; தீயில் புக்கிலேன்!" "சாகேன்" என்றெல்லாம் அலமருகிறார்; புலம்புகிறார். மீண்டும் உண்ணவே ஆசைப்படுகிறார். பசியும் உண்ணுதலும் சுழன்று வரும் தீய வட்டமாயிற்றே! எத்தனை தடவை உண்டாலும் பசி என்று நீங்கும்! ஒருபோதும் நீங்காது! ஞானம்பெற்றால் ஒழிய உடற் பசி தணிய வழியில்லை! பிறப்பு தொடங்கிய நாள் தொட்டு உண்ட உணவுக்கு அளவில்லை! கடவுளே! இறைவா! அருள்செய்க! வருக என்றருள் செய்க! வெறுமனே செத்துப்போகும்படி விட்டு விடாதே! உன்னால் ஆட் கொள்ளப்பட்ட நான் வெறுமனே செத்துப்போனால் சிரிப்

பார்கள்! இந்த அவலம் வேண்டாம்! வேண்டவே வேண்டாம்! உன் பணி செய்ய வருக என்றருள் செய்க! திருப்பெருந்துறை சிவனே அருள் செய்க! என்று உருகுகின்றார் மாணிக்கவாசகர்.

*இருகை யானையை ஒத்திருந்(து) என்உளக்*
*கருவை யான் கண்டி லேன்கண்ட(து) என்னமே*
*'வருக' என்று பணித்தனை வானுளோர்க்(கு)*
*ஒருவ னேகிற்றி லேன்கிற்பன் உண்ணவே!*

(திருச்சதகம்–41)

## ஊர் நாயிற் கடையானேன்!

சுதந்திரம் என்பது அடிமை நிலையிலிருந்து விடுதலை பெறுவது மட்டுமல்ல; தற்சார்பு நிலையில் வாழ்வதுமாகும்! இந்தச் சுதந்திரம் ஆன்மாக்களுக்கு, திருவருளைச் சார்ந்த வழிதான் கிடைக்கும். ஆன்மாக்கள் இறைவனுக்கு அடிமை யாய் வாழ்வதில் சுதந்திரத்தை இழப்பதில்லை. ஏன்? இறைவன் குறியொன்றும் இல்லாதவன். ஆதலால், ஆன்மாக் களை அடிமைப்படுத்தமாட்டான். சீவன் மூத்த நிலையில் ஆன்மாக்களின் அடிமைப் பண்பு தன் விருப்பமேயாம்.

சுதந்திரம் இல்லாதன எல்லாம் சுதந்திரமான ஒன்றிற்கு உடையமையாக இருத்தல் இயல்பு. ஆன்மாக்களுக்குச் சுதந்திரம் இல்லை. ஆன்மாக்கள் ஆணவத்துடன் கூடி, ஆணவத்தின் ஆதிக்கத்திற்குக் கட்டுப்பட்டு இருக்கும் பொழுது ஆணவத்தின் வழியிலேயே வாழும். அருட்சத்தியின் அருளால் தெய்வம் என்னும் சித்தம் உண்டாகி மடைமாற்றம் ஏற்பட்டு விருப்பு—வெறுப்புக்களிலிருந்து ஆன்மா விடுதலை பெறும். திருவருளைக் கண்ணாகக் கொண்டு வாழும் இந்த நிலையில் ஆன்மா திருவருள் ஆட்டுவிக்கும் வழியிலேயே வாழும்; ஆடும்! இந்த உலகம் முழுதும், உயிர்கள் அனைத்தும்

கடவுளுக்கே உரிமை உடையன. ஆதலால் இறைவனுக்கு ஆன்மாக்கள் உடைமைப் பொருள்கள்.

உடைமை என்பது ஒரு மந்திரச்சொல். மனிதர்கள் தன் உடைமைகளைக் காப்பதற்குப் போராடுகிறார்கள். ஆனால், பொது உடைமையைப் பேண யாரும் போராடுவதில்லை. ஏன்? பொது உடைமையை அழிக்காமல் இருந்தாலே பாராட்டலாம். பழங்காலத்தில் உடைமையைப் பொது நலத்திற்காகத் தியாகம் செய்தனர். வீட்டையே நாட்டிற்கு அர்ப்பணித்தார்கள். இப்பொழுது நாட்டையே வீட்டிற்குக் கொண்டு போகிறார்கள். ஆதலால், உடைமை என்ற உரிமையில் இறைவன் ஆன்மாவை—மாணிக்கவாசகரைக் காக்கக் கடமைப்பட்டுள்ளான். "அப்படிக் காக்கத் தவறி னால் உன்னை ஊர்ப் பிச்சன் என்று கூறி உன்னைச் சிரிப்பிப்பன்; பழி தூற்றுவன்" என்று இறைவனை எச்சரிக் கிறார் மாணிக்கவாசகர். உடையவன் உடைமையைக் கவனிக்க வேண்டாமா? பேண வேண்டாமா? "இறைவன் உடைமையாளன்; ஆன்மா உடைமை" என்பது திருவாச கத்தின் திரண்ட கருத்து.

வீட்டுப் பிராணிகளில் நாய் ஒன்று. நாய் வளர்ப்பது இதயத்திற்கு இதத்தைத் தரும். நாய் அளவற்ற பரிவைக் காட்டும். வளர்ப்பவனைக் காணும் பொழுதெல்லாம் குழைந்து வாலாட்டும். சில உயரிய நாய்கள் வளர்ப்பவனின் சாவிலும் ஒன்றாகச் செல்லும்! இந்த இயல்புகள் நாய்க்கு இயற்கையாய் அமைந்தவையல்ல; வளர்ப்பில் வருபவை! நாய் வளர்ப்பில் கவனம் தேவை! ஒருவர் கைப்பட வளர்க்க வேண்டும். பொதுவாக நாய்க்கு நன்றியுண்டு என்று கற்பிக்கப்படுகிறது! நாய் நன்றியுடையதாயிருத்தல் பொதுப் பண்பு அல்ல; சிறப்புப் பண்பேயோம். வளர்ப்பவனைப் பொறுத்தே இது அமைகிறது. நாய்களில் தாய் நாயும் குட்டி நாயும் குரைத்துச் சண்டையிட்டுக் கொள்வதைப் பார்த்தாலும் தெரியுமே! ஏன்? சில நாள்களுக்கு வீட்டுப்

பணியாள் நாய்க்குத் தீனி கொடுத்து அதை வயப்படுத்திக் கொண்டு கொலை, கொள்ளைகள் செய்துவிடுகின்றானே! அப்போது இந்த நாய் காவல் தொழிலை இழந்து விடுகிறது; குரைப்பதும்கூட இல்லை. இந்தக் குற்றங் குறைகள் வளர்ப்பு நாய்க்கேயாம்! ஆனால், திருவாசகத்தில் நாய் நன்றியில் உயர்ந்தது என்றே பேசப்பெறுகிறது. 'நாய்' முப்பது இடங்களுக்கு மேலாகப் பேசப்படுகிறது. இதில் பொதுவாக நாயின் சிறப்புக் கூறப்படுகிறது. மனிதன் நாயினும் கீழானவனாக இருக்கிறான். ஆம்! நாய்! உணவளித்து உண்டு கொண்டு இருக்கும்பொழுது உணவளிப்பவனுக்கு எந்தத் தீங்கும் நினைப்பதில்லை; செய்வதில்லை! உணவளிப்பவன் உணவளிக்காமல் வேறு ஒருவர் உணவளித்தால் அவனுக்கும் நன்றிப் பெருக்குடையதாக இருக்கிறது. அவ்வளவுதான்! ஆனால், மனிதனோ உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்கிறான்; உண்டு கொண்டு இருக்கும் போதேகூட தீமை நினைக்கிறான்! நாய், தான் பெற்ற பேற்றை எண்ணிப் பார்ப்பதில்லை. நாய்,—வளர்ப்பு நாய் வளர்ப்பவனின் அருமை உணர்வதில்லை. "நாய் பெற்ற தெங்கம்பழ"த்திற்கு "ஏது பயன்?" அதுபோல் மனிதரில் பலர் இறைவனின் அருமையை உணர்வதில்லை. இறைவனின் அருட்கொடையால் எத்தனை எத்தனை கோடி இன்பங்கள் இந்த உலகில் உள்ளன? இவற்றை உணர்வார் யார்? இவற்றினைத் தந்தருளிய கடவுளை நினைப்பார் யார்?

நாயில் ஊர் நாய் ஒருவகை! அதாவது வளர்ப்பார் இல்லாத நாய்! அது சுதந்திரமாய்த் திரியும். காலையில் அம்மம்ம, எவ்வளவு சுறுசுறுப்பு! எழுந்து ஊர் சுற்றும்! தன்னை ஒத்த ஊர் நாய்கள் நிற்கும் இடங்களில் நிற்கும்! விளையாடும்! சண்டைபோடும்! குடும்பம் நடத்தும்! எச்சில் இலைகளைத் தேடி ஓடும்! ஆங்கும் ஒரு யுத்தம்! படுகளம்! கிடைக்கும் எலும்பைக் கடிக்கும். செங்குருதி சொட்டச் சொட்ட ஒதுங்கிப் போய் இருக்கும்! மீண்டும் எழுந்து

எலும்பினைக் கடிக்கும்! உடம்பு முழுதும் வங்கு பிடித்து இழுக்கும்! போதாக் குறைக்குச் சொறியும் உண்டு! இவையே ஊர் நாயின் இலக்கணம்! இந்த ஊர் நாயை உவமிக்கின்றார் மாணிக்கவாசகர்! ஆம்! கூர்ந்து நோக்கின் பல மனிதர்கள் ஊர் நாய்கள்தாம்! இல்லை, இல்லை! ஊர் நாயினும் கடையர்கள். கடவுளின் ஆணை வழி திரோதான சக்தியால் வளர்க்கப்பெறாத மனிதன்—வளராத மனிதன் ஊர் நாய்! இல்லை, இல்லை! ஊர் நாயைவிட மோசமானவன்! ஆம்! இவனும் எழுந்திருக்கிறான்; ஊர் சுற்றுகிறான். மூலைக்கு மூலை நின்று புறணி பேசுகின்றான்; புறம் பேசுகிறான்; வம்பு செய்கிறான்; வம்பு வளர்க்கின்றான்! வம்பு வழக்குகளைத் தூண்டி விடுகிறான்; கிடைத்த இடத்தில் தின்கிறான்; இரந்து திரிகின்றான். இரந்தும் தின்கிறான், இழிதொழில்கள் செய்தும் தின்கின்றான். பல இடங்களில் குடும்பம் நடத்துகிறான். இவனுடைய உடல், நோய்களின் கொள்கலன். இப்படியும் மனிதர்கள் இன்று வாழவில்லையா? இவர்களைச் சொன்னால் உடம்பெல்லாம் பற்றி எரியும் என்பதால் மாணிக்கவாசகர் தம்மீது பழி சுமத்திக் கொள்கிறார்.

ஊர் நாயிற் கடையனானேன் என்கிறார். இந்த ஊர் நாய்கள் தரங்கெட்டுப் போனதோடு அல்லாமல் வளர்ப்பு நாய்களையும் கவர்ச்சித்து கெடுக்கும்! வளர்ச்சியில் முதிர்ச்சி பெறாத வளர்ப்பு நாய்கள் பல விதிமுறைகள், கட்டுப் பாடுகள், தண்டனைகளுக்கு அஞ்சி வளர்ப்பிலிருந்து வழுவி ஊர் நாய்க் கூட்டத்தில் போய்ச் சேர்ந்து விடுவது உண்டு. ஐயோ பாவம்! விதிவழியே நடத்தல் பாதுகாப்பு! விதி முறைகளின்படி வாழ்தல், பழக்கப்பட்டவர்களுக்கு எளிது! பாதுகாப்பும்கூட! விதிமுறைகளே தவறுகளிலிருந்தும் பிழை களிலிருந்தும் பாதுகாப்பளிக்கும். அயர்ந்தறியாது செய்யும் தவறுகளுக்குக் கண்டித்தலும் தண்டனைகளும் பெறுவது மருத்துவமேயாகும். "புளியம் வளாரினால் மோதுவிப்பாய் பின்னை உசுப்பாய்!" என்று அப்பரடிகள் கூறுவார்.

தெரிந்தும் தெரியாமலும் அயர்ந்தும் சோர்ந்தும் செய்யும் மனிதரின் பிழைகளைப் பொறுத்தாற்றாது தேவசிகாமணி குருதேவர் சுடுவது அவரையல்ல; தவறு செய்பவர்களின் பாசத்தினையே குற்றங்களையே என்று கூறுவர். ஆதலால் வளர்ப்பு நாய் வளர்ந்து வாழ்ந்து பேறடைய முயல்வதே சிறப்பு! ஊர் நாய்க் கூட்டத்தில் போய்ச் சேரக்கூடாது.

வளர்ப்பின் இலக்கணம் என்ன? அடையாளம் என்ன? வளர்ப்பில் கல்வி இருக்கும்! கலைஞானம் இருக்கும்! கல்வியும் கலைஞானமும் வாழ்க்கையை வளர்ப்பனவாம்! வாழ் நிலையில் உயிர் நிலையாகிய அன்பு, கலைஞானத்தின் பயனேயாம். அதனால்தான் சிவகோசரியாருக்குக் கிட்டாத "கலைமலிந்த சீர் நம்பி" என்ற சிறப்பு, கண்ணப்பருக்குக் கிடைத்தது. மனம் இயல்பாக நல்லதும் அல்ல கெட்டதுவும் அல்ல. நல்லது செய்வதும் அல்ல. ஓயாது ஒழியாது சலித்துக்கொண்டே இருக்கும். அதாவது இயக்க நிலையில் இருக்கும். இந்த இயக்கத்தைப் பயன்படுத்திக்கொண்டு எவ்வழியில் இயக்கினாலும்—அவ்வழியில் ஆன்மா இயங்கும். ஆன்மாவின் இயல்பு சார்ந்த தன் வண்ணம் ஆதல். ஆன்மாவைச் சார்பு இயக்கினால் ஊர் நாயைப் போல் இயங்கும். திருவருட் சார்பு இயக்கினால் வளர்ப்பு நாய்போல் இயங்கும். உண்மையில் ஆன்மாவை இயக்குவது சார்புநிலை; சுற்றுப்புறச் சூழ்நிலை. அதனால்தானே "மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்றார் ஔவை மூதாட்டி. மனத்தைப் பக்குவப்படுத்துவது கல்வியும் கலை ஞானமுமாம்! ஈசன் கூட கல்லார் நெஞ்சில் நில்லான்! கல்லா மனத்தராக இருப்பவர்களே, ஊர் நாய்போல வாழ் வார்கள்.

கல்வியும் கலைஞானமும் இல்லாதாருக்கு உடம்பின் அருமை தெரியாது. அதனால் உடம்பினைப் பேணவும்

மாட்டார்கள்! உடம்பினை வளர்க்கவும் மாட்டார்கள்! அவர்களுடைய உடம்பு புழுக்கூடாகத்தான் விளங்கும். முடைநாற்றம் வீசும் புழுக்கூடாகத்தான் விளங்கும். ஐயகோ, இந்த உடல் அற்புதமான உடல்! ஞான விளக்கெரிய வேண்டிய உடல்! இறைவன் எழுந்தருளும் விமானமாக விளங்கவேண்டியது இந்தப் பொன்னுடல்! இறைவன் விரும்பி எழுந்தருளும் திருக்கோயில் இந்த உடம்புதான்! ஆயினும் என்? அருமைகள், அறிவோருக்குத் தானே! உடம்பு, இறைவன் எழுந்தருளும் திருக்கோயிலானால் விடுதலை உண்டு! இந்த நிலையில் உடல், உயிரைக் காக்கும்! ஆனால் உடம்பை இகழ்ந்து புழுக் கூடாக்கினால் உடம்பு காவல் தகுதியை இழக்கும், உடம்பைக் காத்துக் கிடக்கும் பணி வேறு வரும்.

கல்வியும் கலைஞானமும் தேடாது இறைவன் திருவருட் சிந்தனை வழி வளர்ப்பாக வாழக் கற்றுக் கொள்ளாது போனால் மானிட வாழ்வு வறிதே பாழாகும். திருவுடல், ஊனுடலாக, புழுக்குரம்பையாக மாறி, மனிதன் சுமந்து காத்து நிற்க வேண்டிய பொருளாகும்! இதனால் பிறவியும் நீங்காது! செத்துப் பிறக்கும் தொழிலுக்கு ஆட்பட்டு இங்கேயே ஊனுடலைக் காத்துக்கிடக்க வேண்டிய பரிதாப நிலை ஏற்படும்! ஊர் நாய் வாழ்க்கையை வெறுத்திடுக! வளர்ப்பு நாய் வாழ்க்கையை ஏற்றிடுக!

வளர்ப்பிலும் பின்பற்றுதலிலும் தொடர்ச்சி தேவை. இடையீடு வந்ததோ, தொலைந்தது! ஆணவம் விழிப்புடன் இருக்கும்! திருவருள் வழிச் செல்வதில் அயர்வு— சோர்வு தலைப்பட்டால் மீண்டும் ஆணவச் சார்பு பற்றிக் கொள்ளும்! உயிர்களுக்கு ஆணவச் சார்பு— அநாதிச் சார்பு, இயற்கையாக அமைந்தது. அது தேடாமலே வந்தமையும். உயிர்களுக்குத் திருவருட் சார்பு பிறவிச் சார்பேயாம். இது வலியவந்து உயிர்களைப் பற்றாது. மேட்டிலிருந்து பள்ளத்தை

நோக்கி ஓடும் புனல் போன்றது ஆணவச் சார்பு. பள்ளத்திலிருந்து மேட்டினை நோக்கித் தண்ணீரை ஏற்றுவது போன்றது திருவருட் சார்பு. ஆதலால், ஞானப்பயிற்சியில் — திருவருட் சார்பில் கவனம் தேவை. இதனைத்தான் ஞானிகள் "விழித்திரு" என்றனர். ஆன்மாவின் விழிப்புணர்வே ஆணவச் சார்பை மட்டுப்படுத்தும்; திருவருட் சார்பைக் கூட்டுவிக்கும். திருவருட் சார்புடையவர்கள் எத்தொழில் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் இறைவன் திருவருளையே பற்றுக் கோடாகக் கொள்வார்கள். கை வீசி நடக்கும் மோர்க் காரிக்குக் கவனம் முழுதும் மோர்ப்பானையில் இருப்பதைப் போல திருவருட் சார்புடையவர்கள் எந்தப் பணியை மேற்கொண்டாலும்—செய்தாலும் திருவருள் நினைப்பாக இருப்பார்கள். நின்றும் இருந்தும் கிடந்தும் தொழுவார்கள், தொழும்பாய்த் தொண்டு செய்வார்கள். இந்த நிலையை எண்ணி, அழும் கல்வியைத் தேடுக! கசிந்துருகி அழக் கற்றுக்கொள்க! இந்த நிலையில் இறைவனுக்கு உடைமை யாகலாம். இறைவனுக்கு உடைமையாம் நிலை எய்தி விட்டால் அவன் காப்பான்! பெருங்காதல் மூளும்! ஊனும் உயிரும் உருக வாழலாம்! இன்ப அன்பினை எய்தலாம்! யாதுமோர் குறைவில்லை!

உடையானே நின்றனை உள்கி
உள்ளம் உருகும் பெருங்காதல்
உடையா ருடையாய் நின்பாதம்
சேரக் கண்டு இங்கு ஊர் நாயின்
கடையா னேன்; நெஞ் சுருகாதேன்;
கல்லா மனத்தேன்; கசியாதேன்;
முடையார் புழுக்கூடு இது காத்திங்கு
இருப்ப தாக முடித்தாயே!

(திருச்சதகம்–60)

## மழலையின் கையிலே பொற்கிண்ணம்!

மாணிக்கவாசகர் துறைதோறும் வளர்ந்தவர். திருவாசகம் ஓர் ஆன்மாவின் பரிணாம வளர்ச்சியைத் தெளிவாகக் காட்டுகிறது. ஆன்மா அதன் பயணத்தை இறைவனின் கருணையினால் கருவூரில் தொடங்குகிறது. திருவூரில் பயணம் நிறைவுறும். பயணம் செவ்வியதாக அமைந்தால் எளிதில் திருவூரை ஆன்மா அடையும். பல ஆன்மாக்கள் தத்தம் விருப்பம் மேவிய தடத்தின் வழியே மட்டும் பயணம் செய்வதன் விளைவாகப் பயணம் நீட்டிக்கவும். செய்யலாம்.

மானிடப் பிறவியின் தகுதிக்கு ஏற்றவாறு வாழ்ந்திடாவிடில் என்ன நிகழும்? மீண்டும் புழுவின் பிறப்பிலிருந்து தொடங்க வேண்டும் என்று அப்பரடிகள் கூறுகின்றார்.

*புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா*
*நின்னடி என்மனத்தே*
*வழுவா திருக்க வரம்தர*
*வேண்டும் இவ் வையகத்தே*
*தொழுவார்க் கிரங்கி இருந்தருள்*
*செய்பா திரிப்புலியூர்ச்*
*செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை*
*மேல்வைத்த தீவண்ணனே!*

என்னும் அப்பரடிகள் திருப்பாடலை ஓர்க. மேலும் மானிடப் பிறவிக்கு மட்டுந்தான் நினைக்கும் புலன் உண்டு; திறன் உண்டு. அப்பரடிகள்.

*முன்னே உரைத்தால் முகமனே ஒக்கும்*
*இம்மூவுலகுக்(கு)*
*அன்னையும் அந்தனு மாவாய் அழல்வனா*
*நீயலையோ*

*உன்னை நினைந்தே கழியும்என் ஆவி*
*கழிந்ததற்பின்*
*என்னை மறக்கப் பெறாய் என் பிரான் உன்னை*
*வேண்டியதே!*

என்று இரந்து வேண்டுகிறார். அதாவது நினைக்கும் தகுதி யுடைய மானிடப் பிறப்பில் உள்ளவரை இறைவா, உன்னை நினைப்பேன்! ஒருகால் மானிடப் பிறவியை இழந்து நினைத்தற்கு வாய்ப்பில்லாத புழுப் பிறப்பை அடையின் இறைவா, நீ என்னை மறக்கக்கூடாது என்று வேண்டுவதறிக. ஆதலால் பிறப்பை அறிந்து ஆன்மா தகுதிப்பாடுறுதல் வரை சுற்றும் என்பதறிக.

இறைவனின் கருணையே உயிர்களின் பயணத் தொடக்கத்திற்குக் காரணம். பயணங்கள் நிகழ்வதற்கும் மாறு வதற்கும் முற்றுப்பெறுவதற்கும் ஆன்மாவின் வாழ்நிலையே காரணம். ஒரு ஆன்மா மானுட நிலையை எய்துதலே கூடிப் பல பிறவிகளுக்குப் பிறகுதான்! பலப்பல இடர்ப்பாடு களுக்கும் பிறகுதான்! மனிதன் மிருகமும் அல்லன்; தெய்வமும் அல்லன், மனிதன் மிருகத் தன்மையிலிருந்து விலகி, மானுடத் தகுதியைப் பெற்று மெய்மை நிலையையும் தெய்வத் தன்மையையும் அடைதலே ஆன்மாவின் பயணக் குறிக்கோள்; பயன்! மாணிக்கவாசகரிடம் ஆன்ம வளர்ச்சிக் குரிய தகுதியின்மைகளுக்குக் கழிவிரக்கம் கொள்ளல், ஆராக் காதலுடன் உண்மையை நாடுதல், இறைவனைத் தேடுதல் முதலிய தகுதிகள் அமைந்திருக்கின்றன. தகுதியில்லாதார் தகுதி நோக்கி—வளர்தலே வாழ்வு.

இறைவழிபாட்டின் நோக்கமே தகுதிப்பாடுறுதல் என்பதுதான். வட்டம் வரைய வேண்டுமாயின் காம்பஸ் தேவை. காம்பஸில் நீண்ட முனையை ஊன்றி, சிறிய முனையில் எழுதுகோலைப் பொருத்தி வட்டமிடுகிறோம். இப்படி வரையப்பெறும் வட்டம் கோணல் இல்லாமல்

அமையும். அதுபோல ஆன்மா தன் இதயத்தை — சிந்தனையைத் திருவருளிடத்தில் நிறுத்தித் தன் செயலைச் செய்யுமாயின் குறையினின்றும் விலகி நிறைவு பெறும்; அறியாமையிலிருந்து விலகி அறிவு பெறும்; வாழ்க்கை வடிவம் பெறும்; நிறைநலம் பெறும்; இன்ப அன்பினை எய்தும். இதற்கு மாணிக்கவாசகர் வரலாறு சான்று.

மாணிக்கவாசகர் தேர்ந்தெடுத்த வாழ்க்கை தவ வாழ்க்கை அல்ல. மாணிக்கவாசகருக்கு வாய்த்தது அரசியல் வாழ்க்கை; அமைச்சியல் வாழ்க்கை. அரசியல்—அமைச்சியல் வாழ்க்கையில் தவம் மேவுதல் இயற்கையன்று; மரபும் அன்று. அரசியல்—அமைச்சியல் வாழ்க்கையில் வினைகளும் வினைகளின் பயனாகிய அதிகாரங்களும் அமையும். ஒரோவழி பத்திமை பொருந்தி அமைதலும் கூடும். இது விதிவிலக்கு. ஆயினும் மாணிக்கவாசகர் அமைச்சியல் வாழ்க்கையையே தவ வாழ்க்கையாக நடத்திய அருமை அறிதலுக்குரியது. அதனாலேயே மாணிக்கவாசகர் பாண்டியனின் ஆணைவழி குதிரை வாங்க நாட்டமில்லாமல் திருக்கோயில் கட்டினார். மாணிக்கவாசகர் செய்தது தவறா? உலகியல் முறைப்படி தவறு; அறநெறி விதிகளின்படி தவறன்று. அரசன் அறநெறியறிந்து உணர்வான் என்று மாணிக்கவாசகர் நம்பினார். தகுதி இல்லாதாரை — நெறிமுறை தவறுகிறவர்களைத் திருத்தும் பாங்குகள் பலப்பல. திருத்தங்காணும் முயற்சி, நெறிமுறை தவறுகிறவர்களின் தகுதிப் பாட்டிற்கேற்ப அமையும். கயவர் ஒறுத்துத் திருத்தப் படுவர். சான்றோர் சொல்லத் திருந்துவர். மிக உயர்ந்தோர் குறிப்பாக, அரசியலில் ஏவினது ஒழிந்து பிறிதொன்று செய்தலாலே ஏவினது த்வறு என்று உணர்ந்து திருந்துவர் என்பது மரபுவழி வந்த வழிமுறை. மாணிக்கவாசகர் அரசன் ஏவியவழி, குதிரை வாங்காது திருக்கோயில் கட்டியமையால் குதிரை வாங்குதல் தவறு, திருக்கோயில் கட்டியது நன்று என்று உணர்வான் என்று நம்பினார். ஆனால், பாண்டியன்

தவமின்மையின் காரணமாக அங்ஙனம் உணரவில்லை. நடைமுறை வேறுவிதமாக அமைந்துவிட்டது!

அமைச்சியல் வாழ்க்கையில் இருந்த மாணிக்கவாசகர் திருப்பெருந்துறைக்குக் குதிரை வாங்கப் போன நாள் முதல் அவர்தம் வாழ்க்கையில் அற்புதமான மாற்றம் ஏற்பட்டது; தவமே மேலிட்டது. ஊராரை மறந்தார்; உற்றாரை மறந்தார்; இறைப்பணியில் நின்றார். திருப்பெருந்துறையுறை சிவன், மாணிக்கவாசகரைத் தேடி வந்து ஆட்கொண்டான்! ஆம்! இதுவே சிவபெருமான் வழக்கம். சிவபெருமானுக்கு எப்போதும் அடியார்களுக்குப் பஞ்சம்! அதனால் தேடிவந்து தகுதியானவர்களை அழைத்துக் கொள்வான். மாணிக்க வாசகரை, திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் ஞானாசிரியனாக வந்தருளி ஐந்தெழுத்தருளி ஆட்கொண் டருளினன். இதனை,

> "நானேயோ தவம் செய்தேன்;
> சிவாயநம எனப் பெற்றேன்"

என்று வியந்து கூறுகின்றார். மாணிக்கவாசகருடைய தவம் ஐந்தெழுத்தைத் தரவில்லை; சிவபெருமானுடைய கருணையே தந்தது என்பது கருத்து.

ஓர் ஆன்மா அதன் தகுதியைத் தானே வியந்து கூறுதல் ஆணவத்தின் பாற்படும். அவ்வழி, தகுதியின்மையேமேவும். சிவநெறி ஒழுக்கத்திற்குரிய தகுதிப்பாடுகளுள் ஒன்று "தாழ் வெனும் தன்மை". அதாவது, அடக்கம், நிலத்தினைக் கிண்டிக் கொண்டு விண்நோக்கி வளரும் மரம் நிலத்தடியிலும் வேர் பாவும். நிலத்தடியில் பாவும் வேரின் வலிமையில்தான் மரத்தின் வலிவு இருக்கிறது. அதுபோல ஆன்மாக்களின் வளர்ச்சி—நிலைப்பாடு ஆரவாரத்தில் இல்லை; அடக்கத்தில் தான் இருக்கிறது. தாழ்ந்து பழகும் இயல்பில்தான் வளர்ச்சியின் அமைவு இருக்கிறது.

"தாழ்வெனும் தன்மை நோக்கிச்
சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெறல் அரிது"

என்று அருணந்திசிவம் கூறுவார். "கல்லா மனத்துக் கடைப் பட்ட நாயேனை" என்று கூறுவார் மாணிக்கவாசகர். திருத்தொண்டத் தொகையின் தோற்றமே இதற்கு ஒரு சான்று. தொண்டர்நாதனைத் தூதனுப்பிய நம்பியாரூரர், "அடியார்க்கும் அடியேன்" என்று பாடும் நிலை அடக்கத்தின் அருமையை—பயனை விளக்கத்தானே! ஆதலால் மாணிக்கவாசகர் தம்மை வியந்து பாராட்டிக் கொள்வ தில்லை. திருவாசகம் முழுதும் தாழ்வின் தன்மையே பரவிக்கிடக்கிறது. மாணிக்கவாசகர் தனது தகுதியை அங்கீகரித்து ஒப்புக் கொண்டதில்லை! வியந்து பாராட்டிக் கொண்டதும் இல்லை. இறைவனின் அளப்பரும் கருணையே ஆட்கொண்டது என்பார். ஆயினும் மாணிக்கவாசகர் இறைவனின் அருமையை—ஆட்கொண்டருளிய அருமையை உணரவில்லை; அறிந்து கொள்ளவில்லை என்கிறார்.

மழலை மொழி பேசும் குழந்தை; விளையாட்டுப் பிள்ளை. பிள்ளை கையில் தங்கக் கிண்ணம் கிடைத்தது. குழந்தைக்குத் தங்கக் கிண்ணம் தேவையா? விளையாட்டுப் பொம்மை தேவையா? தின்னும் மிட்டாய் தேவையா? பருவத்தின் இச்சையே தேவை; அதுவே வெளிப்படும். குழந்தை தங்கக் கிண்ணத்தின் மதிப்பறியாது. தங்கக் கிண்ணத்தைத் தந்து அதற்கு ஈடாக ஒரு பொம்மையை அல்லது ஒரு மிட்டாயை வாங்கினாலும் வியப்பில்லை. அது போல மாணிக்கவாசகர் செய்யவில்லை. ஆனால் மாணிக்க வாசகர் இந்த உண்மையைத் தமது ஆன்மிக வாழ்க்கைக்குச் சான்றாகக் காட்டுகிறார். ஏன்? மாணிக்கவாசகரைப் போல இறைவனின் அருமையை உணர்ந்தவர்களும் இல்லை; தேடினவர்களும் இருந்ததில்லை. அந்தண வாழ்வைத் துறந்து

அமைச்சு வாழ்விற்குச் சென்றமையை எண்ணிப் பாடு கின்றாரா? வாழ்க்கையின் குறிக்கோள் ஆன்மாவைப் பூரணத்துவமாக்கும் தவ வாழ்க்கையை மேற்கொள்ளுதலே யாம். அஃதில்லாமல் அமைச்சு வாழ்க்கையை ஏற்றதை எண்ணி வருந்துகிறார் போலும்!

இனம், இனத்துடன் சேரும். இஃது இயற்கை. மாணிக்க வாசகருடன் பலர் இருந்தனர். அவர்கள் மெய்யன்பர்கள், அவர்கள் சிவபெருமானிடம் எளிதில் சேர்ந்தனர்; மெய்ம்மை ஆயினர். ஆனால், மாணிக்கவாசகர் பின்தங்கி விட்டார்! ஏன்? இறைவனை அடைதலுக்கு மெய்ம்மை தேவை. மாணிக்கவாசகரிடம் மெய்ம்மை இல்லை. பொய்ம்மையே இருந்தது!—இது, மாணிக்கவாசகரின் சொந்த விமர்சனம்! உண்மை உணர்வது நமது கடமை. மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையிலும் செயல் மாள விடவில்லை. திருப் பெருந்துறைத் திருக்கோயிலைக் கட்டினார். அல்லவா? அது ஒரு பணி! செயல்! ஆதலால், செயல் அடங்கவில்லை என்று எண்ணினால் தவறில்லை! தவக்கோலம்! பத்திமைப் பரவசம்! ஆயினும், செய்வினைகளும் இருந்தன. வினை நீக்கம் பெற்ற வாழ்க்கை வந்தமையவில்லை. அதனால் 'பொய்யிலங்கெனை" என்று கூறினார் போலும்.

இறைவன் மெய்ப்பொருள்; மெய்யன்பர்கள் மெய்ம்மை மேவினார். தகுதியுடையார்க்கு வழங்குவதில் என்ன சிறப்பு இருக்கிறது. தகுதி இல்லாதாரைத் தகுதியுடையாராக்கி ஆட்கொள்ளுதலே சான்றோருக்கு அழகு. தகுதி மிகுதியும் உடையோருக்குக் கடன். இறைவன் வெண்ணீறு சண்ணித்த மேனியன். இறைவன் ஏன் வெண்ணீறணிகின்றான்? ஆன்மாக்கள் தாம் செய்த வினை கெட நீறணிகின்றான். இது இயல்பு; மரபு. இயல்பிலேயே வினையின் நீங்கி விளங்கிய அறிவினன் இறைவன். அப்படியானால் இறைவன் உடம்பில் திருநீறு எதற்கு? இந்த வினாவுக்கு விடை திருக்கோவையார் தருகிறது. குழந்தைக்கு

நோய்! குழந்தை மருந்துண்ண இயலாது. ஏன்? குழந்தையின் பசுங்குடல் மருந்தைத் தாங்காது. அதுபோல, ஆன்மாக் களின் வினைவளம் நீறெழ நீறணிவான் அம்பலவன் என்று கூறுகிறது திருக்கோவையார். இறைவா! நின்னைத் தொழு தெழுவார் வினைவளம் நீறாய்ப் போக நீறணிந்து நிலவும் நின் கருணையால் என் பொய் கெடட்டும் என்பது கருத்து. ஆட்கொண்டருளும் கடப்பாடுடைய இறைவன் பொய்ம் மையை அல்லவா மெய்ம்மையாக்க வேண்டும்? அதுதானே பிறவா யாக்கைப் பெரியோனுக்குப் பொருத்தமானது என்பது மாணிக்கவாசகர் எண்ணம்.

"இறைவா! அம்மையப்பனே! அருளே உருவமாகிய சிவசக்தியைப் பாசத்தில் கொண்டருளியவனே! நீயே வந்து என்னைத் திருப்பெருந்துறையில் 'வா'வென்றருளினை! பணி கொண்டருளினை! திருப்பெருந்துறை சிவனே, நின்னை அடைவதற்கு முன் உன்னை மூவர்கோனாய், மூவர் தலை வனாய்க் கண்டனன். அருமையில் எளிய அழகெனக் கண்டனன். ஆனால் நீயே வந்தெனைத் தலையளித்து ஆட்கொண்டருளிய பின் நின்னருமை உணர்கிலேன்! மழலையின் கையில் பொற்கிண்ணம் போலாயிற்று! நின்னருள் என்வசம்! திருப்பெருந்துறை சிவனே! கால காலனே! ஊழி முதல்வனே! ஊழிப் புழுதியே திருநீறாகப் கொண்டருளும் பெருமானே! என்றும் உள்ளவன் நீ! மெய்ப்பொருள் நீ! நின் திருமேனியில் படிந்துள்ள திருநீறு, ஆன்மாக்களின வினைவளம் நீறாக அணிந்தருளிய மாண்பு! உண்மை அன்பர் நின்னை மேவினார்! நானோ பொய்யன்! நீயோ அன்பருள் புக வைத்தாலும் போய் உய்யும் தரமறி யேன்! தகுதியிலேன்! நெறியறியேன்! ஆயினும் நீ பெரியோன்! சிறியேன் பிழையெலாம் பொறுத்தருளும் பெரியோன்! ஆதலால், என்னை இடையில் விட்டுவிட்டுப் போவது அழகா? பொருத்தமா, அருள்கூர்ந்து சொல்லுக" என்று மாணிக்கவாசகர் பாடுகிறார்.

இத்திருப்பாடலில் "போவதோ சொலாய்" என்பது நினையத்தக்கது. அடைக்கலப் பொருளைப் பாதுகாக்காமல் வறிதே விட்டுச் செல்லல் பெரியோருக்குப் பொருத்தமல்ல என்று எடுத்துக் கூறிய அருமையை அறிக.

*மையி லங்கு நற் கண்ணி பங்கனே*
*வந்தெனைப் பணி கொண்ட பின் மழக்*
*கையி லங்குபொற் கிண்ண மென்றலால்*
*அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்*
*மெய்யி லங்கு வெண் ணீற்று மேனியாய்*
*மெய்மை அன்பருள் மெய்மை மேவினார்*
*பொய்யி லங் கெனைப் புகுத விட்டு நீ*
*போவதோ சொலாய் பொருத்த மாவதோ?*

(திருச்சதகம்—96)

## புறம் புறம் திரிந்த செல்வம்!

தாய்!—உயிர்க்குலத்தில் தாய்க்கு நிகரான படைப்பு ஏது? இந்த உலகத்தில் தாய் கடவுள்! தாய், கடவுளை நினைப்பிப்பவள். தாய், கடவுளின் பிரதிநிதி. ஆம், குழந்தையின் உருவாக்கத்தில் தாயின் பங்கு மிகுதி. கடவுளின் கருத்தை முடித்துத் தருபவள் தாய். கருவில் மட்டுமன்று; மண்ணிற்கு வந்த பிறகும் குழந்தையின் வளர்ப்பில், காப்பில் தாயின் பங்கு அதிகம். குழந்தையின் நோய்க்குத் தாய் மருந்துண்கிறாள்! பத்தியம் பிடிக்கிறாள்! உறக்கத்திலும் தன் குழந்தையின் மீது விழும் பூங்கொத்தை ஒதுக்கித் தள்ளும் தாயை, பாரதிதாசன் படைத்துக் காட்டுகிறான். திருமுறைகள் "அம்மையே! அம்மையே!" என்று போற்றுகின்றன. "அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்" என்று திருக்களிற்றுப் படியார் பேசும். "நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்" என்று ஐங்குறு நூறு வழுத்தும். மாணிக்கவாசகரின்

திருவாசகம் முழுதும் தாயன்பு பரிணமித்துள்ள. "அன்னைப் பத்து" என்றே ஒரு பதிகம், திருவாசகத்தில் உண்டு.

தாய்!—மகவைப் பெற்று வளர்ப்பவள் தாய்! ஆனாலும் மகவைப் பெறுபவர்கள் எல்லாரும் நல்ல தாயாகிவிடுவ தில்லை. தாயிலும் தரங்கள் உண்டு. ஈன்றெடுத்த மகவு அழுதாலும் பாலூட்டாத தாயும் உண்டு. இந்தக் காட்சியைப் பெரும்பாலும் வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள ஏழைகள் வீட்டில் காணலாம். தாயும் உடலுழைப்பில் ஈடுபட்டுப் பொருளீட்ட வேண்டும்; வீட்டிலும் வேலை பார்க்க வேண்டும். களியாட்டமோ பொழுதுபோக்கோ இல்லாத நிலையில் பல குழந்தைகளுக்குத் தாயாகிறாள். அதனால் உடலில் சோர்வு; வாழ்வின் சுமை ஆன்மாவில் அழுத்தும் போக்கு; அலுத்தும் சலித்தும் வாழும் நிலை! இந்தச் சூழ்நிலையில் வாழும் தாய்மார்கள் விரும்பினாலும் நற்றாயாக வாழமுடிவதில்லை. இது ஏழைத் தாயின் நிலை! இது அவள் குற்றமல்ல. சமூகத்தின் குற்றம். இனி, தான் பாலூட்டாமல் மாற்றுத் தாயின் மூலம் பாலூட்டும் தாயும் உண்டு. இது செல்வச் செழிப்பில் நிகழ்வது. இது வாழும் கலையறியாத குடும்பங்களில் காணப்படும் காட்சி! இளமை—அழகில் உள்ள கவர்ச்சியின் விளைவு. இது அடாவடித்தனம்; இயற்கையை இகழ்ந்த வாழ்வு. சில தாய்மார்கள் குழந்தையின் அழுகுரல் கேட்டதும் வந்து பாலூட்டுவர். இது வேறு பல பணிகளில் ஈடுபடுவதின் விளைவு; கவனத்தில் சோர்வு! சில தாய்மார்கள் குழந்தைகள் அழாமலே காலக் கணிப்புடன் குழந்தைக்குப் பசிக்கும் என்றெண்ணிப் பாலூட்டுவர். இந்த மண்ணில் இவர்களே தாய்மார்கள்—நல்ல தாய்மார்கள்! வணக்கத்திற்குரிய தாய் மார்கள்! வரலாற்றில் இடம் பெறும் தாய்மார்கள்!

மாணிக்கவாசகர் இந்த நற்றாயினும் சிறந்த தாயை அறிமுகப்படுத்துகிறார். நினைந்தூட்டும் தாய் குழந்தையை மறப்பதுண்டு. மறதியைத் தொடர்வதுதானே நினைப்பு.

மறத்தல் இல்லையெனில் நினைப்பும் இல்லை. மாணிக்க வாசகர் அறிமுகப்படுத்தும் தாய், குழந்தையை மறப்பது இல்லை! ஆதலால் நினைத்தல் வினை நிகழ்வு இல்லை. எப்போதும் இந்தத் தாய்க்குக் குழந்தையின் நினைவே; இந்தத் தாய் யார்? சிவசக்தியாகிய தாய்! இந்தத் தாய் ஆன்மாக் களை மறப்பதில்லை. அதனால் நினைவும் நிகழ்வதற்குரிய வாயில் இல்லை. சிவசக்தியாகிய தாய், குழந்தை மறுத்தாலும் மிகவும் பரிவுணர்வுடன் பாலூட்டுவாள். குழந்தை பாலின் தேவையை அறியாது. குழந்தையின் தேவை தாய்க்குத் தானே தெரியும். ஆதலால், குழந்தை மறுத்தாலும் இந்தத் தாய் விடுவதில்லை. மிகவும் பணிவுணர்வுடன் இழுத்துப் பிடித்துப் பாலூட்டுவாள்; பால் மட்டுமா? உணவினால் மட்டுமே வாழ்ந்து விடுவதில்லை; மருந்தும் தேவை! பாலுண்ணும் குழந்தை மருந்துண்ண மறுக்கும்! தாய் மருந்தும் தருவாள்! சிரிப்பினால் மருந்தும் கதையினால் கருத்தும் வழங்குபவள் தாய்!

தாய், தனது பிள்ளையின் தகுதி கருதி அன்பு காட்டுவதில்லை. தகுதியிருந்தால் மகிழ்வாள். தகுதி இல்லையானாலும் தன் பிள்ளையைச் சீராட்டவே எந்தத் தாயும் விரும்புவாள். ஆனாலும் தாயின் அறிவு, காரண காரியத்துடன் இயங்கும். தன் குழந்தை பாவச் செயல் செய்வதாயிருந்தால் எந்தத் தாயும் தாங்கிக் கொள்ள மாட்டாள்! எந்தத் தாயும் தன் மகவை “சான்றோன்” என்று கேட்கவே விரும்புகிறாள். அதேபோழ்து தன் குழந்தையைப் “பாவி” என்று தாய் வெறுத்து ஒதுக்கவும் மாட்டாள்! தாயின் அன்பு தன் குழந்தையின் அறியாச் செயல்களுக்கு—அவை அறியாச் செயல்கள் என்று அறிந்தாலும் உடன்படுவாள்! உடன் போவாள்! அன்பைப் பெருக்கி, நம்பிக்கையை வளர்த்து, பைய நன்னெறிக்கு அழைத்து வந்துவிடுவாள்! உடைப்பது எளிது; ஒறுப்பது எளிது; அழிப்பது எளிது; திருத்தம் காண்பது அரிய பணி! இதற்கு நிலத்திலும்

பொறுமை தேவை. நலம் நோக்கித் திருத்தும் பணியாதலால் "பைய" என்ற சொல், வழக்கிற்கு வருகிறது. "பையவே சென்று பாண்டியர்க்கு ஆகுக!" என்ற சேக்கிழார் வாக்கு. அனுபவத்தின் முதிர்ச்சியில் பிறந்தது. மாணிக்கவாசகரும் "பையத் தாழுருவி" என்பார். இத்தகு திருத்தப் பாட்டுப் பணியில் நிற்க, சராசரி மனிதரால் இயலாது, சான்றாண்மைக்கு ஆழி எனப்படுபவர்களாலேயே முடியும்!

மிகவும் பாவம் செய்வதற்குக் காரணம் அந்த மகவின் உடல்! உடல் வளர்ந்த அளவு ஆன்மா வளரவில்லை. ஆன்மாவை ஆட்டிப் படைக்கும் உடல் வலிமை தானே பாவம் செய்கிறது! ஆதலால், தாய் ஊன்பொதி உடலைத் திருத்துவாள். உடலின் ஆதிக்கம் ஆன்மாவின் மேலிருந்து பணி கொண்டால் பாவம் வளரும். உடலை, ஆன்மா பணிகொண்டால் புண்ணியச் செயல்கள் நிகழும். உடல், ஆன்மாவை வேலை வாங்கினால் உடலின் ஏவலை ஆன்மா செய்யும்; நிறைவேற்றும்! இதனால் மிகுதியான உணவைத் தின்றால் உடல் கொழுக்கும்; பருமனாகும்; முரட்டுத்தனம் மேவும்! இது உடல் நலத்திற்கு நல்லதல்ல; சமூகத்திற்கும் நல்லதல்ல; வன்முறையின் தாயே, ஆன்மாவை மறுத்த உடலின் ஆதிக்கம்! "ஊனினைப் பெருக்கி உயிரை இழந்தேன்" என்பார் சுந்தரர். ஆதலால், ஆன்மாவின் ஆளுமைக்குள் உடல் இருக்க வேண்டும். உடலின் எடை குறைதல், உடலுக்கும் நல்லது; ஆன்மாவுக்கும் நல்லது. உடலின் தேவைகள் குறைதல் வேண்டும். ஆன்மாவின் தேவைகள் பெருகி வளர வேண்டும். அதனால், சக்தியாகிய தாய் உடலை உருக்கி இளைக்க வைக்கிறாள். அதனைத் தொடர்ந்து ஆன்மாவின் ஞானஒளியைப் பொருத்துகிறாள். ஆம்! ஒளி, ஞானத்தின் சின்னம்! முகம்மது நபி, எல்லாம் வல்ல இறைவனிடம் "ஒளியை என் உடலில் நிரப்பு" என்று கேட்டுப் பிரார்த்தனை செய்கிறார். இத்தகு ஒளியால் உடலின் எடை குறைகிறது. உடல், ஆன்மாவின் கட்டுப்

பாட்டில் இருக்கிறது. ஆன்மா, ஞான ஒளியைப் பெற்றிருக் கிறது! இதனால் இன்பம் மேவுகிறது. சாதாரண இன்பமன்று அந்தம் ஒன்றில்லாத இன்பம்! ஆனந்தமாய இன்பம்! இடையீடில்லாத இன்பம்!

ஆன்மா ஆனந்தமயமான இன்பத்தின் அருமை தெரியாமல் அதனை இழந்துவிடலாம். அல்லவா? ஆன்மாவை ஆதியில் பற்றிய அறியாமை எதைத்தான் செய்யாது? இந்த உலக வரலாற்றின் பக்கங்களை நிரப்பி யிருப்பது அறியாமையின் நிகழ்வுகளே! ஏன்? அறியாமையே கூட அத்தாணி மண்டபமேறி அரசோச்சியிருக்கிறது! ஐயோ பாவம் அறிவு— ஒடுங்கி இருந்த காலமும் உண்டு. அறிவு பெற்ற ஒரே காரணத்தால் ஒறுக்கப்பட்டதும் உண்டு. அறியாமையால் ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பத்தைத் துறந்து, மண்ணின் மேல் 'நான்' 'எனது' என்றும் மாயை கடித்த வாயிலேயே நின்று நடித்திட ஆன்மா விரும்பினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அறியாமையின் கொடுமை எழுதும் தரத்தன்று. ஆன்மாவுக்கு அறியாமை கொடுத்துள்ள வினை குறைவா, என்ன? ஆதலால், சிவமாகிய சக்தி, ஆன்மாவைப் பின்தொடர்கிறது. ஆன்மா, செல்லுமிடமெல்லாம் ஆன்மாவின் பின்னே சிவமாகிய சக்தி தொடர்கிறது! ஏன்? ஆன்மா ஆனந்தமாகிய இன்பத்தை இழந்துவிடாமல் அனுபவிக்குமாறு செய்வது சிவசக்தியின் குறிக்கோள்!

வழிபாட்டுக்குரிய சிவசக்தி, புறம் புறம் திரிவானேன்? முன்பே போகக் கூடாதா? அது மரபு; மதிப்பு; மரியாதை! ஆனாலும் முழுதும் கடமையின் வழிப்பட்ட தாகாது. முன்னே போனால் வழிகாட்டலாம்; தவறில்லை. வழி தவறிப் போகாமல் நெறிவழிச் செலுத்திக் காப்பாற்றலாமே என்று வாதிடலாம். இதில் உண்மை இருக்கிறது; மறுப்பில்லை. ஆனால், கீழே விழுந்தால் உடன் தூக்க இயலாது. பின்னே வந்தால் இடறியவுடனே காக்கலாம்; வழியும் காட்ட

இயலும். உலகியலில் வழிகாட்டுவோர் பலர் இருந்தனர். இன்றும் பலர் உள்ளனர். ஆனால் பயன் என்ன? பொறுப் புணர்வுடனும் தயாவுடனும் எடுத்து வளர்ப்பதற்கு — ஆளாக்குவதற்கு முன்வருவோர் எவர்? உபதேசிப்போர் பலர் உள்ளனர். இடுக்கண் வருங்கால் காப்பாற்றுவோர் யார்? காப்பாற்றுவோர் தானே வேண்டும்! உபதேசத்தின் வழி உலகம் சென்றுவிடாது எடுத்தாண்டு இட்டுச் செல்வார் பின் உலகம் செல்லும்; உய்யும், காப்பாற்றுவோர் பின்னே வந்தால் தான் விழுந்தவுடன் தூக்கலாம்; எடுக்கலாம்.

திருப்பெருந்துறையுறை சிவன், மாணிக்கவாசகரை ஆட்கொண்டருளினன். அந்தம் ஒன்றில்லா இன்பத்தை வழங்கியருளினன். இந்த இன்பத்தை மாணிக்கவாசகர் இடையீடின்றி அனுபவிக்க, திருப்பெருந்துறையுறை சிவன் மாணிக்கவாசகரைப் பின் தொடர்கிறான்; திருஆலவாய் வரையில் பின் தொடர்கிறான்; மாணிக்கவாசகருக்காகக் குதிரைச் சேவகன் ஆகிறான். கொற்றாளாகி மண் சுமந்து பிரம்படி படுகிறான். எல்லாம் மாணிக்கவாசகரைக் காப்பாற்றத்தானே! காத்தாள்பவருக்குக் காத்தல் கடமை தானே! கடமை வாழ்வு எளிதன்று! காத்தாளும் கடமை எளிதன்று என்பதற்கு மாணிக்கவாசகர் வரலாற்றில் சிவ பெருமானுக்குற்ற அனுபவங்களே சான்று.

நமது திருக்கோயில் திருவிழாக்களில் சுவாமியின் முன்னே நாம் போவோம்! சுவாமி பின்னே வருவார்! "போ, முன்னே போ! முன்னேறிப் போ! நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்று அறிவித்தல்தானே இது! ஏன்? நமது உலகியலில் கூட அமைச்சர்களுக்குப் பாதுகாப்புக்கு வரும் காவலர்கள், அமைச்சர்களுக்குப் பின்னேதான் வருவார்கள்! காவல் செய்வோர், காத்து வருவர் பின்னே!

இறைவன் தாய்! நினைந்தூட்டும் தாயிலும் நனி நல்லன்! ஊனை இளைக்க வைத்து, உயிரை ஒளியூட்டி வளர்க்கிறான்! ஆனந்தமாய இன்பத்தைப் பொழிந்து

கருணை செய்கிறான்! பொழிந்த ஆனந்தமாய இன்பத்தை ஆன்மா இழந்துவிடாமல் தொடர்ந்து அனுபவிக்கப் பின் தொடர்கிறான். சிவசக்தி பிறப்பும் இறப்பும் நீங்கும் வரை தொடர்கிறாள். நரகொடு சொர்க்கம் எங்கு புகினும் தொடர்கின்றாள். இந்தக் கடமையை நிறைவேற்றுவதில் அம்மம்ம, சிவசக்திக்கு உள்ள மகிழ்ச்சி எழுதியும் பேசியும் விவரிக்க இயலாதது! சிவசக்திக்கல்லவா ஆன்மாவின் அருமை தெரியும்?

ஆன்மாவுக்கு அறிவு ஒளி ஏற்றுவர். அவர்தம் வாழ்க்கையின் தேவைகளை நிறைவு செய்வர். அவர்களின் பொறிபுலன்களுக்குப் பொருள் கற்பிப்பர். அதற்கு மேலும் ஆன்மாவை வளர்த்து ஞான நெறியை அறிமுகப்படுத்துவர். இங்ஙனம் செய்த பிறகும் மனம் நிறைவுபெறாது. பழக்க வாசனையில் பெற்றதை இழந்து விடக்கூடாதே என்ற கவலையில் தொடர்ந்து கண்காணிப்பார். எந்த ஒரு பணியிலும் நிர்வாகத்திலும் கண்காணித்தல் (Follow up) என்பது அவசியம் தேவை. நிர்வாக அறிவியலில் பின் தொடர்தல், கண்காணித்தல், கணக்கெடுத்தல், பயன்பாடு களைக் கணக்கிட்டு ஆய்வு செய்தல் என்ற செயல்முறைகள் வற்புறுத்தப்படுகின்றன.

இந்தப் பாடலில் 'நினைந்து' என்ற சொல்வழி தேவை களை ஆய்வு செய்து திட்டமிடலைக் குறிக்கிறது. திட்டமிட்ட பணியில் ஆர்வம் தலையெடுத்தல் வேண்டும் என்பதனை "தாயினும் சாலப் பரிந்து" என்ற வரி நினைவூட்டுகிறது. பணி செய்ய அறிவு தேவை என்பதனை "உள்ளொளி பெருக்கி" என்ற சொற்றொடர் உணர்த்துகிறது. "தேனினைச் சொரிந்து" என்ற சொற்றொடர் செயற்பாட்டையும் அதனால் விளைந்த பயனையும் பற்றிக் குறிப்பிடுகிறது. "புறம் புறம் திரிந்த" என்ற சொற்றொடர் பின்தொடர்தலையும் கண்காணித்தலையும் வலியுறுத்துகிறது. "செல்வமே" என்று ஆக்கத்தை உணர்த்து கிறது. சமூக இயல் பாங்கில் இங்ஙனம் பொருள்

கொள்ளலாம். ஆனால், திருவாசகம் உலகியல் கடந்த ஆன்ம அனுபவம்; திருவருள் அனுபவம்!

*பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப*
*பரிந்து நீ பாவியே னுடைய*
*ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி*
*உலப்பிலா ஆனந்த மாய*
*தேனினைச் சொரிந்த புறம்புறம் திரிந்த*
*செல்வமே! சிவபெரு மானே!*
*யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்*
*எங்கெழுந் தருளுவது இனியே!*

(திருவாசகம், பிடித்தபத்து–9)

## யார் சதுரர்?

வாழ்க்கையே ஒரு வாணிகம் தான்! வாணிகம் தவறல்ல. ஆனால், இலாபமே வேட்டையாக எண்ணி வாழ்தல் தீது. இருபாலும் பயனும் மகிழ்வும் உண்டாகும் வகையில் நடப்பதே நல்ல வாணிகம். ஆன்மிக வாழ்க்கையிலும் வ்ாணிக நடைமுறை உண்டு.

"கொண்டும் கொடுத்தும் ஈசர்க்கு ஆட்செய்தல்", என்று இசைப்பா கூறும். "மாரிமாட்டு என்னாற்றும் கொல்லோ உலகு" என்பார் திருவள்ளுவர். இஃது ஓர் உயர்வு நவிற்சி! மாரி, உயிரினங்களுக்குச் செய்யும் அளவு நாம் அதற்குக் கைம்மாறு செய்ய இயலாது என்பது உண்மை. ஆயினும் மழைக்குரிய சாதனங்களாகிய ஏரி, குளங்களைப் பராமரிப்பதும், புயலை நீர்த் திவலைகளாக மாற்றும் குளிர்ச்சியைத் தரக்கூடிய மரங்களை வளர்ப்பதும் நாம் மழைக்குச் செய்யும் கைம்மாறு! ஆனாலும் மழையின் உதவி அளவிலும் பயனிலும் கூடுதலானது. பொதுவாகவே மானிடரைத் தவிர மற்ற உயிரினங்கள் எல்லாமே நிறையக் கொடுக்கும்;

குறைவாகப் பெறும். மரங்கள் நம்மிடத்திலிருந்து பெறுவது குறைவு. ஆனால், நமக்குத் திருப்பித் தருவது அதிகம். பசு மாடுகள் நம்மிடம் பெறுவது குறைவு. ஆனால், நமக்குத் தருவது அதிகம். இதுதான் நாகரிக வாழ்க்கை; பண்பாட்டு வாழ்க்கை! மானிடரோ சமுதாயத்தினிடமிருந்தும் மற்ற உயிர்க் குலங்களிடமிருந்தும் நிறையப் பெறுகிறார்கள். ஆனால் மிகமிகக் குறைவாகவே திருப்பித் தருகிறார்கள். சிலர், திருப்பித் தருவதே இல்லை. அதனாலேயே மழை குறைகிறது; மண் வளம் கெடுகிறது; மாடுகள் இளைத்துச் சாகின்றன. இது இயற்கைக்குப் பொருந்தா வாழ்க்கை. நாம் எவ்வளவு பெறுகிறோமோ அவ்வளவு திருப்பித்தர வேண்டும். இதுவே மத அறநெறி; திருவாசக நெறி. 'தந்தது உன்றன்னை' என்றதால் திருப்பெருந்துறையுறை சிவனின் எளிவந்த கருணையும் மாணிக்கவாசகர் ஆன்மாவின் வளர்ச்சியும் புலப்படுகிறது.

மாணிக்கவாசகர் அமைச்சுப் பணியில் ஈடுபட்டு இருந்தார். அவர்தம் சிந்தையில் திருப்பெருந்துறையுறை சிவன் குடிகொண்டான். அதுமட்டுமா? எத்தனை எத்தனையோ திருக்கோயில்கள் இருக்க, திருப்பெருந்துறை யுறை சிவன் மாணிக்கவாசகரின் உடலையே இடமாக — திருக்கோயிலாகக் கொண்டு எழுந்தருளினான். இது என்ன வியப்பு! எண்ணற்ற கற்கோயில்கள் உள்ளன! இவ்வளவு திருக்கோயில்களையும் விட்டு விட்டு மாணிக்கவாசகரின் உடலைத் திருக்கோயிலாகக் கொள்வானேன்?

இறைவனுக்கு உவப்பானவை கற்கோயில்கள் அல்ல; உடற்கோயிலே; மனக்கோயிலே; இறைவன் கற்கோயில்களில் எழுந்தருள்வது முதல்நிலை! அங்குவரும் மனிதர்களைச் சந்தித்து உறவாடிப் பக்குவப்படுத்தி அவர்தம் உடற் கோயிலில் புகுந்து தங்கி அருள்வான்! காஞ்சிபுரத்து பல்லவ மன்னன் காடவர் கோமான் கட்டிய கற்றளியில் எழுந்தருள் வதைவிட, பூசலார் நாயனார் பொன்னுடலில் கட்டிய

மனக்கோயிலில் எழுந்தருள்வதை முன்னுரிமையாகக் கொண்டனன் என்ற வரலாறு உணர்த்தும் உண்மை என்ன? இறைவனுக்கு மனக்கோயிலே உவப்பானது என்பதுதானே.

திருப்பெருந்துறை இறைவன், மாணிக்கவாசகரின் உடலை இடமாகக் கொண்டு எழுந்தருளினன். இதனால் மாணிக்கவாசகர் புறம்போகாமல் பாதுகாப்புக் கிடைக்கிறது. இறைவனால் மாணிக்கவாசகரின் அன்பைத் தூண்டி அனுபவிக்க முடிகிறது. திருவாசக அமுதம் பருகக் கிடைக் கிறது. இருபாலும் நலஞ்சார்ந்த பண்டமாற்று! விண்ண வர்கள் தேடரிய, பழமறைகள் தேடரிய, முனிவர்கள் தேடரிய திருப்பெருந்துறையுறை சிவன், மாணிக்கவாசகரின் உடலையே திருக்கோயிலாகக் கொண்டனன்! இந்த அரிய அருட்செயலுக்குக் கைம்மாறு செய்ய இயலுமா? பொருள் பற்றிச் செய்யும் பூசனைகள் கைம்மாறு ஆகுமா? ஆகாது! ஆகாது! புன்புலால் யாக்கை! இதில் புண்ணியத்தின் புண்ணியம் சிவம் புகுந்து மூடியமர்ந்தருள் செய்தலுக்கு ஏது கைம்மாறு? இந்த உலகியலில் சாதாரணமான செயல் களுக்கே கைம்மாறு செய்ய இயல்வதில்லையே! முடிய வில்லையே! நமது நாட்டு விஞ்ஞானிகள்—குறிப்பாகக் காரைக்குடி மத்திய மின் வேதியியல் விஞ்ஞானிகள் வழங்கும் அறிவியல் கொடைக்கு எப்படிக் கைம்மாறு செய்ய இயலும்! 'நன்றி' என்று சொற்களால் கூறலாம்! அது எங்ஙனம் கைம்மாறு ஆகும்! பெற்றதற்கு ஏற்பக் கைம்மாறு கொடுத்தல் வேண்டும்! அதுதான் உண்மையில் கைம்மாறு! இன்று, நன்றி கூறுதல் ஒரு சடங்கு! இங்ஙனம் இருக்க இறைவனுக்கு என்ன கைம்மாறு செய்ய இயலும்? அப்பரடிகள் கூறியதைப் போல "உன்னை நினைத்தே என் ஆவி கழியும்" என்பதே கைம்மாறு. மாணிக்கவாசகரும் "நின்று ஆடிப்பாடி அலறவேண்டும்" என்கிறார். உடல் எல்லாம் நெஞ்சமாக, கண்ணாக அலறி அழவேண்டும் என்கிறார்.

திருப்பெருந்துறையுறை சிவன் மாணிக்கவாசகரை ஏற்றுக் கொண்டான்! மாணிக்கவாசகரும் விருப்புடன் ஆட்பட்டார். இறைவன்—திருப்பெருந்துறையுறை சிவன் தன்னை மாணிக்கவாசகருக்குத் தந்தனன். இங்கு எடுத்தது — தந்தது இரண்டும் இறைவன் செயலேயாம். மாணிக்க வாசகரின் விருப்பம் ஏதும் இல்லை! அதனாலேயே தனது விருப்பம் எல்லாம் இறைவன் தன் விருப்பமே என்று பாடுகின்றார். "வேண்டுவது உன்றன் விருப்பன்றே" என்பது திருவாசகம்.

இறைவன்—திருப்பெருந்துறையுறை சிவன், தன்னை மாணிக்கவாசகருக்குத் தந்ததால் மாணிக்கவாசகரின் உடலை இடமாகக் கொண்டதால் முடிவே இல்லாத இன்பத்தை மாணிக்கவாசகர் பெற்றார்; அனுபவித்தார். திருப்பெருந்துறையுறை சிவனின் அருளாரமுதத்தை அண்ணித்தும் தேனித்தும் துய்த்தும் இன்புறுகின்றார். ஆனால், திருப்பெருந்துறையுறை சிவன், மாணிக்கவாசகரை ஏற்றுக் கொண்டதால் என்ன பெற்றார்? ஆன்மாவிடமிருந்து ஆண்டவன் எதைப் பெறமுடியும்? ஒன்றுமில்லை என்றுதான் கூறுவர்.

கொள்வது — கொடுப்பதில் அல்லது எடுப்பது — தருவதில் இருபாலும் பயனில்லையானால் வாழத்தெரியாதவர், சாமர்த்தியமில்லாதவர் என்று பொருள்படும். இறைவன் சதுரப்பாடில்லாதவனா? இறைவனை விட மாணிக்கவாசகர் சதுரப்பாடுடையவரா? இல்லை! இல்லை! திருப்பெருந்துறை யுறை இறைவனே சதுரப் பாடுடையவன்! எப்படி? மாணிக்க வாசகர் என்ற ஓர் அன்பரை ஆட்கொள்ள இறைவன் எடுத்த முயற்சியின் அளவு என்ன? குதிரைச் சேவகனானான்! உதிர்ந்த பிட்டைத் தின்றான்! கொற்றாளாகி மண் சுமந்தான்! பிரம்படிபட்டான்! அம்மம்ம! எவ்வளவு இடர்ப்பாடுகள்! இத்தனை இடர்ப்பாடுகளையும் கடந்து மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையுறை சிவனிடம் பெற்ற

அந்தமில்லா இன்ப அனுபவத்தை, திருவாசகப் பாடல்களாகத் தந்தார். திருவாசகம் பாடல்கள் மட்டும் அல்ல; திருவருளனுபவம்! இறைவனின் திருவருளுக்கு மொழியால் வடிவம் தந்தவர் மாணிக்கவாசகர். இந்தப் பண் சுமந்த பாடல்களைப் பரிசாகப் பெற்றான் இறைவன். திருவாசகப் பாடல்களை அனுபவிக்கும் ஆரா வேட்கையில் தாமே அதனை எழுதிப் படியும் எடுத்து வைத்துக் கொண்டனன். இதனைச் சிவப்பிரகாசர் "கைகளோ முறிபடும் கைகள்" ஆயினும் திருவாசகத்தைப் படியெடுத்தான் என்பதனை,

> கைகளோ முறிபடுங் கைகள் காணின்
> கண்களோ ஒன்று காலையில் காணும்
> மாலையில் ஒன்று வயங்கித் தோன்றும்
> பழிப்பின் ஒன்று விழிப்பின் எரியும்
> ஆயினும் தன்னை நீ புகழ்ந் துரைத்த
> பழுதில் செய்யுள் எழுதினன்

என்று கூறி விளக்குகின்றார். மாணிக்கவாசகர் காலத்துக்குப் பிறகு, இறைவன் தம்மை வழிபடுதலினும் திருவாசகத்தினைப் பூசை செய்தல். ஓதுதல் முதலிய செயற்பாடுகளாலேயே தம்மை அடையமுடியும் என்ற நியதியை வகுத்தருளினன். ஒவ்வொரு ஆன்மாவையும் ஆட்கொள்ள எத்தனை தடவை மண் சுமப்பது? பிரம்படி படுவது? இந்தத் துன்பத்திலிருந்து திருப்பெருந்துறையுறை சிவன் தப்பித்துக் கொண்டனன். திருவாசகம் ஓதினாலேயே திருப்பெருந்துறையுறை சிவன் அருள் கிடைக்கும். ஆட்கொள்ளப் பெறுவர்; இது நியதி யாகவே யாயிற்று. இது திருப்பெருந்துறையுறை சிவனுக்கு மாணிக்கவாசகரிடமிருந்து கிடைத்த பாதுகாப்பு. மக்க ளுக்கும் எளிய வழியில் இறைவனை அடைய்ய முடிந்தது. அதுமட்டுமா? கடையூழிக் காலத்தில் இறைவனின் தனிமைத் துன்பத்தை மாற்றிக் கொள்வதற்காக—படிக்க மாணிக்க வாசகர் திருவாசகத்தைத் தந்தார். "கடையூழி வருந்தனிமை

கழிக்கவன்றோ அம்பலத்துள் உடையாருன் வாசகத்தில் ஒரு பிரதி கருதினதே" என்று இதனை மனோன்மணீயம் கூறி விளக்கும். இப்போது யார் சதுரர்? மாணிக்கவாசகர் பெற்றது அந்தமொன்றில்லா இன்பம்! ஆனால், திருப்பெருந்துறை யுறை சிவன், தேனமுதத் தமிழில் திருவருள் நலங்கொழிக்கும் திருவாசகப் பாடல்களை, பண் சுமந்த பாடல்களைப் பரிசாகப் பெற்றனன்! கடையூழிக் காலத்தில் இறைவன் தன் தனிமைத் துன்பத்தை நீக்கிக் கொள்ளத் திருவாசகத்தைப் பெற்றுக் கொண்டனன்! மேலும் வழிவழி வரும் தலைமுறைகளை ஆண்டு கொண்டருளக் கருவியாக விளங்கும் திருவாசகத்தைப் பெற்றனன்! மீண்டும் மீண்டும் மண் சுமத்தல், பிரம்படி படுதல் முதலிய துன்பங்களிலிருந்து திருப்பெருந்துறையுறை சிவன் விடுதலை பெற்றனன். திருவாசகம் பெற்றதால் திருப்பெருந்துறையுறை சிவன் அடைந்தவை பலப்பல. அவையும் நிலையானவை! ஆதலால், சதுரர் திருப்பெருந்துறையுறை சிவனே!

ஆயினும் பலர் மாணிக்கவாசகரே சதுரர் என்பர். மாணிக்கவாசகர் ஆன்மா; அறியாமை உடைய ஆன்மா! இத்தகைய மாணிக்கவாசகர் பாசம் நீங்கப் பெற்று அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றதே பேறு. ஆதலால், மாணிக்கவாசகர் சதுரர் என்பர். ஆயினும் ஆன்மாக்களை ஆட்கொண்டருளுதல் இறைவனின் கடமை. இப்பிறப்பில் இல்லையாயினும் எப்பிறப்பிலாவது ஆட்கொண்டருளப் பெறுதல் வேண்டும். திருவருள் நலம் பெற்றவர்கள் எல்லாரும் மாணிக்கவாசகரைப் போலத் திருவாசகம் தந்தனரா? இறைவனையே எழுத வைத்தார்களா? இல்லை! இல்லை! ஆதலால் திருப்பெருந்துறையுறை சிவனே சதுரர்!

தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன்று என்பால்

தி. தி. VIII. 8.

*சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்*
*திருப்பெருந் துறையுறை சிவனே*
*எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்*
*யானிதற் கிலன் ஓர் கைம் மாறே*

(கோயில் திருப்பதிகம்–10)

## சிவபதம் அளித்த செல்வம்!

மானிட வாழ்வு, காலத்தினால் இயக்கப்படுவது. காலம் என்ற நியதி மானிட வாழ்வுக்கு இயற்கையாய் அமைந்தது; தவிர்க்க முடியாததும் கூட! மாணிக்கவாசகர், வாழ்க்கையின் போக்கைப் 'பொய்யினைப் பெருக்கிப் பொழுதினைச் சுருக்கி' என்று குறிப்பிடுகின்றார். ஆன்ம வாழ்க்கையின் அருமைப்பாட்டை அறியும் அறிவும் அதனை உரிய காலத்தில் உரியவாறு பயன்படுத்துவது பற்றிய அறிவும் நமக்கு வரவேண்டுமானால் நாள்தோறும் கிழிக்கும் நாட் காட்டியை (calendar) வைத்துக்கொள்வது நல்லது. இந்த நாட்காட்டி ஜனவரி முதல் தேதி கனமாக, புதியதாக, பொலிவாக விளங்கும். நாள் ஆக, ஆக இளைத்து டிசம்பர் 31-ம் தேதி முற்றாக இதழ்கள் இல்லாமல் போய் வெறும் அட்டையே மிஞ்சியிருக்கும். எடை குறைந்து விட்டது; அழகு போய்விட்டது. அது போலத்தான் மனிதன் குழந்தையாகப் பிறக்கின்றான்; சிறுவனாக ஓடி விளையாடுகிறான்; இளை ஞனாகிறான்; முதியவன் ஆகிறான்; கிழவன் ஆகிறான்; கடைசியில் மூளையின் இயக்கம் ஓய்கிறது. மூச்சு நின்று போகிறது. இந்த நிலை ஒரு நாளில் எய்துவதில்லை. காலம் காட்டும் கருவி—கடிகாரம் டிக் டிக் என்ற சப்தத்துடன் நகர்கிறது. முள்ளா நகர்கிறது? மனிதனின் வாழ்வு நகர்கிறது. இறுதி நிலை நோக்கி நகர்கிறது.

காலத்தின் நில்லாமையை அப்பரடிகள் விளக்கும் முறை எளிதில் விளங்குவதாய் அமைந்துள்ளது. கைகள்

இரண்டையும் இணைத்து ஒரு தடவை உற்று நோக்குங்கள். விரல்களுக்கிடையில் ஓட்டைகள்! கைகள் இரண்டால் தண்ணீரை அள்ளி ஓட்டைப் பானையில் ஊற்றி குடத்தை மூடி தண்ணீரைக் காப்பாற்ற நினைத்த மனிதனின் மனப் பாங்கினை ஒத்தது மனிதன் காலத்தை அனுபவிக்கும் பாங்கு என்று விளக்குவார்.

> கோடி தீர்த்தம் கலந்து குறித்தவை
> ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்
> ஓடும் நீரினை ஓட்டைக் குடத்தட்டி
> மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே!

(அப்பரடிகள்—தேவாரம்)

> "நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
> வாளது உணர்வார்ப் பெறின்.

என்றது திருக்குறள்.

ஒரு மரம் ஒரே அறுவையில் விழுந்துவிடுவதில்லை! பல அறுவைகளால் நூல் நூல் அளவாக அறுபடுகிறது. அப்படித்தான் வாழ்க்கையும் ஒரு நாளில் முடிவதல்ல. பல நாட்கள் கழிந்த பின்னேயே முடிகிறது. 'காலம்' என்ற நியதி கடவுள் திருவுள்ளத்தின் வழி அமைந்தது. ஏன்? உயிர்களின் மேம்பாட்டை ஒரு வரையறுத்த காலத்துக்குள் முடிக்க வேண்டும் என்பது இறைவனின் திருவுள்ளம்! இல்லையெனில் உயிர்கள்—மனிதர்கள் "இன்று நன்று; நாளை நன்று" என்று பேசியே காலங் கடத்திவிடுவர். "நாள் பார்த்தல்" என்ற மரபு நாளைக் கணித்தல், நாளைப் பாதுகாத்தல் என்ற அமைவிலேயே தொடங்கியது. ஆனால் காலப்போக்கில் 'நல்ல நாள்' 'கெட்ட நாள்' என்ற சித்தாந்தம் தொடங்கி விட்டது. இதன் காரணமாக வாழ் நாள்கள் வீழ்நாள் களாகவே போகின்றன. காலம் வீணாவதைத் தவிர்க்கவே "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்" என்று ஒரு பழமொழி

ஏற்பட்டது. இது ஒரு அனுபவ ஞானமொழி. ஆனால், இன்றைய மானுடச் சந்தையில் இந்தப் பழமொழிக்கு வழங்கும் பொருள் வேறு. உடம்பில் உயிர் காற்று இயங்குவது வாழ்தலுக்கு அடையாளம்! அந்தக் காற்றோட்டம் தடைப்படும் முன் பாவத்தைத் தூற்றிவிட்டுப் புண்ணியத்தை எடுத்துக்கொள் என்பது தான் இந்தப் பழமொழியின் உண்மையான பொருள். வாழ்க்கைச் சந்தையில் "பொருள் சுருட்டுவதற்கு நேரம் வந்துழி சுருட்டிக்கொள். ஒரு தரம் கிடைத்த வாய்ப்பு மறுதரம் கிடைக்காது" என்பர். ஆனால் நாட்டிலோ வயது கழிவதை வளர்கிறது என்று குறிப்பிடு கின்றனர். ஆம்! உடல் வளர்கிறது! ஆனால் வாழ்க்கை நாள் குறைகிறது. வாழ்க்கையின் படிகளில் மனிதன் வெள்ளி விழா, பொன் விழா, மணிவிழா, முத்துவிழா என்றெல்லாம் கொண்டாடி மகிழ்கிறான்! அவன் எடுத்துக்கொண்ட விழா, வயதுக்கா? அல்லது பொன்னும் மணியும் போன்ற சாதனைகளுக்கா? வரலாறுதான் கூறவேண்டும்!

யாருடைய வாழ்க்கையில் பொய்ம்மை பெருகுகிறது? பொழுது சுருங்குகிறது, மூளைப் புலன்கள் இயங்கவில்லை! அறிவு இல்லை! ஆள்வினைத் திறம் இல்லை! இரத்த அணுக்கள் மட்டுமே நெளியும் தலை! அதிலும் வெள்ளை அணுக்கள் மிகுதியாக நெளியும் தலை! இந்நிலைக்கு மாற்று என்ன? மருந்து என்ன? அன்புதான் மாற்று! மருந்து! "அன்பலால் பொருளும் இல்லை ஐயன் ஐயாற்னார்க்கே!" என்பார் அப்பரடிகள். மானிட மூளையில் புலன்கள் பல உண்டு. இப்புலன்கள் அனைத்தும் முறையாகத் தூண்டி வளர்க்கப் பெறுதல் வேண்டும். அது நடைபெறுவதில்லை. இன்றைய கல்விமுறை நினைவுப் புலனையும், சமுதாயம் தேவைப் புலனையும் தொட்டுத் தூண்டி விடுகின்றன. ஆனால், சிந்தனை, படைப்பாற்றல், அன்பு முதலிய புலன்கள் தொடப்படுவது கூட இல்லை. அன்புப் புலன் தூண்டி வளர்க்கப் பெற்றால் வையகம் வளரும்; வாழும். இறைவனை

அடைவதற்கு அன்பே தேவை. அம்மையும் அப்பனுமாக ஆட்கொண்டருளும் ஈசன் கூட அன்பின் வலைக்குள்தான் அகப்படுகின்றார். சிவபோகம், பெருமானின் கருணை யினால் விளைவதன்று. ஆன்மாவின் அன்பினில்—ஆற்றல் மிக்க அன்பினில் விளைவதே சிவபோகம்! அம்மை சிவசக்தி ஆன்மாவுக்கு வாழ்க்கையில் விருப்பத்தை உண்டாக்கு கிறாள். ஆன்மாக்கள் வாழ்தல் வேண்டும்; நன்றாக வாழ்தல் வேண்டும். வாழ்வதற்குரிய பொன் வேண்டும் என்பதனா லேயே அன்னை பராசக்தி—சிவசக்தி, காமாட்சியாக விளங்கு கிறாள். அதனாலேயே அவள் காமாட்சி என்று அழைக்கப் படுகிறாள்! அன்னை காமாட்சியின் கையில் கரும்பு வில்! ஏன்? கரும்பு வில் காமத்தின் சின்னம்! சிவம்—பரமசிவம் துணையாக இருந்து துறப்பிப்பது! அப்பன் சிவம், ஒளி பெருக்கும் சிவம்! ஞான ஒளி! செம்மை! அனைத்து நலன்களும் சேர்ந்தது செம்மை! இம்மை, மறுமை நலன்களை வழங்கும் செல்வம்! 'செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே!' என்று திருஞானசம்பந்தரும் அருளிச் செய்தார்.

"செத்த பிறகு சிவலோகம்" என்பது பித்தர் கூறும் வார்த்தை! இங்கேயே இன்ப அன்பு கிடைக்கும்! இங்கேயே வாழலாம்! இம்மையே நன்மை தருவார்! இப்பிறப்பிலேயே இன்பம்! இந்த மண்ணிலேயே விண்ணகம்! இந்த மண்ணில் விண்ணரசு என்பதே மானிட வாழ்வின் இலக்கு! அதனாலன்றோ சிவன், இந்தப் புவிக்கோளத்தைச் சுற்றி வருகிறான்! மனிதன் பின்னே நடந்து வருகிறான். சிவம் ஆட்கொள்ளும் களம், இந்த பூமிதான்! திருக்குறள் கடவுள் வாழ்த்தில்.

> "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே உலகு"

என்கிறது. இதில் மரபு வழி காணும் பொருள் நிற்கப், புதிய கோணத்தில் பார்க்கலாமே! பழைய காலத்தில் 'அ' எழுத்து

பெரியதாக இருக்கும். 'அ' என்ற எழுத்தின் மேற் பகுதியில் ஒரு புள்ளியில் தொடங்குகிறது. அந்த வட்டமானது கோணல் இல்லாதது. கோணல் இல்லாத வட்டம் "குறைவிலா நிறைவை"க் குறிக்கும். அது பரம்பொருள் — சிவம்! அந்த வட்டத்திலிருந்து எழுத்து தொடங்கி கீழிறங்கு கிறது. இது, பரமசிவம் உயிர்களை நோக்கி இறங்கி வருவதைப் புலப்படுத்துகிறது. 'அ' எழுத்தின் கீழ்ப்பகுதி வளைவுள்ளது; நடுப்பகுதி தொந்தி போல வளைந்து தொங்கும். இந்தப் பகுதி உயிர் தன் முனைப்பில் வாழ்க்கையை நடத்தும் பாங்கைக் குறிப்பது. பின் எழுத்து வளைந்து மேல் நோக்குகிறது. மேல் நோக்கும் மையத்தில் எழுத்து தடித்து இருக்கிறது. மெல்லிய கோடு இந்த ஆணவம் அடங்குதலைக் காட்டுகிறது. குறிக்கோள் சார்ந்த வாழ்க்கை கூர்மைப்படுத்தப்படுகிறது. இதுவரையில் உயிருக்கே உரிய அறியாமையைத் தொடர்ந்து வந்து உயிருக்கு நுகர்வனவெல்லாம் அருளிப் பக்குவப்படுத்தி வந்த சிவம், இந்த இடத்தில் உயிரை முந்திச் சென்று வழிகாட்டுகிறது. அழைத்துச் செல்கிறது. 'அ' எழுத்தின் மேற்பகுதி நேர்கோடு. சிவம் உயிரை, பிறவியென்ற வளையத்திலிருந்து விடுதலை செய்து இன்ப அன்பில் திளைக்க வைக்கிறது. அதன் அடையாளம் 'அ' என்ற எழுத்து வளைவுகளைக் கடந்து நேர் கோட்டில் முடிகிறது. சிவம் உயிர்களை ஆட்கொண்டருளும் பாங்கினை எடுத்துக் காட்ட இது ஒரு எளிய விளக்கமாகும்.

மாணிக்கவாசகர் அமைச்சராகப் பணி செய்தார்! அவர் தம் அமைச்சுப் பணி சிறப்பாகவே அமைந்திருந்தது.

> "எக்கோலம் கொண்டால் என்ன
> ஏதவத்தைப் பட்டால் என்ன
> முத்தர் மனமிருக்கும் மோனத்தே"

என்றபடி மாணிக்கவாசகரின் மனம் அமைச்சுப் பணியில் இருந்தபொழுதும் இறை வாழ்க்கை நடத்தினார்; சிவச்

சிந்தனை மறவாமல் இருந்தார். அவர்தம் வாழ்க்கையே தவமாக விளங்கியது.

அரிமர்த்தன பாண்டியன், போருக்கு அரசுக்கு குதிரைகள் வாங்க எண்ணினான். கிழக்குக் கடற்கரையில், அரபு நாட்டுக் குதிரைகள் வந்திருப்பதாகவும் செய்திகள் கிடைத்தன. அரசன், அமைச்சர் வாதவூரரை அழைத்துக் குதிரைகள் வாங்கி வரும்படி பணித்தான். அறநெறியில் வளர்ந்து, சமுதாயச் சிந்தனையில் தழைத்து தவத்தில் முதிர்ந்திருந்த வாதவூரருக்குக் குதிரை வாங்குவதில் விருப்ப மில்லை. ஏன்? குதிரைகள் அழகுக்குப் பயன்படும். அல்லது போருக்குப் பயன்படும். போர், மனித உலகத்திற்குத் தீயது. எந்தச் சூழ்நிலையிலும் போரைத் தவிர்க்க வேண்டும். அரசுக்கு மக்கள் வரி செலுத்தவது ஆள்கிறவர்கள் ஆரவாரத் துடன், ஆடம்பரமாக வாழ்வதற்கு அல்ல, மக்கட் சமுதாயத் தின் தேவை பலப்பல! ஒவ்வொருவரும் ஒவ்வொரு குடும்பமும் தனித்தனியே அந்தத் தேவைகளை நிறைவு செய்துகொள்ள இயலாது. கல்வி, மருத்துவம், காவல், பாதுகாப்பு, உத்தரவாதம் போன்றவற்றை அரசுதான் செய்ய இயலும். ஏன்? அரசிடம் மட்டுமே தொகுப்பு நிதியம் இருக்க வாய்ப்பு இருக்கிறது; மேலாண்மையும் இருக்கிறது. அதனாலேயே "நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே" என்று புறநானூறு பேசுகிறது. ஆதலால், வாதவூரருக்குக் குதிரைகள் வாங்க தொடக்க நிலையில் முழு விருப்பம் இல்லை. ஆயினும் அரசின் ஆணையை மேற்கொண்டு கிழக்குக் கடற்கரையில் உள்ள திருப்பெருந்துறைக்கு வருகிறார். திருப்பெருந்துறையை அணுக, அணுக வாதவூரரின் சிந்தனை வளர்கிறது. குதிரைகள் வாங்க ஒருப்படவில்லை. இதற்கு முதற் காரணம் தவம் பயந்த நெஞ்சம்! குதிரைகள் வாங்குவதற்குப் பதிலாகத் திருக்கோயில் கட்டுகிறார். அரசின் பணம் அரசின் ஆணை

குதிரைகள் வாங்கவேண்டும் என்பது! ஆனால் வாதவூரர் திருக்கோயில் கட்டுகிறார்! இதற்கு முதற் காரணம் சிவம் ஆட்கொண்டருளியதால் ஏற்பட்ட மாற்றம் மட்டும் அல்ல. குதிரைகள் வாங்கினால் போருக்கு மட்டுமே பயன்படும். திருக்கோயில் கட்டினால் மக்கள் வழிபட்டு இன்புறுவர்; சிற்பம் வளரும்; ஓவியம் வளரும்; இசை வளரும்; வேலை வாய்ப்புப் பெருகும். ஆதலால், சமுதாயத்தின் மையமாக விளங்கும் திருக்கோயில் கட்டினார். அரசன் ஆணை என்னாவது? வாதவூரர் முதலமைச்சர்! அரசனால் மதிக்கப் பெற்ற முதலமைச்சர்! ஆதலால் வாதவூரரின் எண்ணம் அரசன் செய்யும் பணியின் நன்மை நோக்கி ஏற்பன் என்பது. ஆனால், அரசன் வாதவூரர் செயலை ஏற்றுக் கொண்டா னில்லை. வாதவூரர் தண்டனைக்கு ஆளாகிறார். வாதவூரருக் காக இறைவனும் தண்டனை—பிரம்படி பெறுகிறான்.

அருட்செல்வர் நாடிய மாணிக்கவாசகர் ஆட்சியில் பொருளும் பயனும் அன்பில் மாறாமல் இருந்ததால் இந்த மடை மாற்றம்; அவர்தம் அன்பினில் சிவம் விளைந்தது! அன்பும் சிவமும் கலந்த மாணிக்கவாசகரால் திருவாசகம் விளைந்தது! திருவாசகம் நம்மனோர் இதயத்தில் இருளகற்றி இன்பம் விளைவிக்கிறது.

*அம்மையே அப்பா ஒப்பிலா மணியே*
*அன்பினில் விளைந்த ஆரமுதே*
*பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்*
*புழுத்தலைப் புலையனேன் தனக்குச்*
*செம்மையே ஆய சிவபதம் அளித்த*
*செல்வமே சிவபெரு மானே*
*இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்*
*எங்கெழுந் தருளுவது இனியே!*

(பிடித்தபத்து–3)

# பிணக்கிலாப் பெருவாழ்வு

மனித வாழ்க்கையைத் துன்ப மயமாக்குவது பிணக்கு. நம்பிக்கையும்—நல்லெண்ணமும் பயிலாத நெஞ்சில் பிணக்குத் தோன்றுகிறது; அல்லது தோன்றும். வேறுபாடுகளை ஏற்றுக்கொண்டு—ஒப்புக்கொண்டு மேவிய அன்புடன் வாழும் திறம் இல்லையானாலும் பிணக்குத் தோன்றும். பிணக்கு பகைக்கு வித்திடும். பிணக்கு வாழ்க்கையில் அமைதியைச் சீர்குலைக்கும். கெட்ட போரிடும் உலகம் தோன்றுவதே பிணக்கினால்தான்.

பிணக்கு வீட்டிலும் தோன்றும்; சமூக அளவிலும் தோன்றும். பிணக்கின் வளர்ச்சியே வேந்தலைக்கும் கொல் குறும்பு! பிணக்குகளைத் தவிர்த்து வாழ்தலே சிறப்பு. 'நான்' 'எனது' என்ற செருக்குகளை அகற்றினால் பிணக்குகள் தோன்றா!

ஆற்று வெள்ளத்தில் 'சுழி' தோன்றும். இச்சுழியில் சிக்கியோர் எவரும் தப்புதல் அரிது. அதுபோலவே மனிதனும் சாதி, குலம் என்னும் சுழிகளில் சிக்கிக் கொள்ளுதல் அறியாமையேயாம். 'நான்', 'எனது' என்ற உணர்வு செத்தால் தான் ஆன்மா உய்திநிலையை எய்தும். இந்த உலகில் துன்பங்கள் பலவானாலும் அவற்றிற்குரிய காரணங்கள் இரண்டேயாம், ஒன்று உடல் சார்ந்த . 'நான்' என்ற அகங்காரம். மற்றொன்று உடைமை சார்ந்த 'எனது' என்ற மமகாரம். 'நான்', 'எனது' என்ற விருப்பங்களிலிருந்து விடுதலை பெறுதல் துன்பத்திலிருந்து விடுதலை பெறுதலுக் குரிய ஒரே வழி. தமக்கு வேண்டுவனவெல்லாம் மற்றவர்க்கும் வேண்டுவனவே என்ற எண்ணப்போக்கு வளரின் பிணக்கு களைத் தவிர்க்கலாம். தமது உரிமையை அழுத்தாமல் மற்றவர் உரிமைகளை மதித்தால்— வழங்கினால் பிணக்குகள் வரா. அழுக்காறு, புறங்கூறல் ஆகிய உறவுகளுக்கு எதிரான கேடுகளை அகற்றுதல் பிணக்கு வராமல் தடுப்பதற்குரிய

தலையாய வழி! மற்றவர்களுக்கு ஊறு விளைவிப்பதில்லை என்ற நோன்பு மேற்கொள்வதாலும் பிணக்கினைத் தவிர்த்துப் பெருவாழ்வு வாழலாம்.

பொதுவாகப் பிணக்குகளைத் தவிர்த்து வாழ்தல் மனிதம் சிறக்க வழி! பிணக்குகள், சிறியன சிந்தித்து, சிறியன செய்வோர் மாட்டே தோன்றும்! பெரியதாக நினைப்பது, விரிந்த பரந்த மனப்பான்மையைப் பெறுவது, நம்பிக்கையுடனும் நல்லெண்ணத்துடனும் பழகுவது, உறவுக்கு முதலிடம் கொடுப்பது, யார் மாட்டும் அடக்கமாக இருப்பது ஆகிய நற்பண்புகளை மேற்கொண்டொழுகுதல் பிணக்குகளைத் தவிர்க்க வழி! பிணக்கு தீய பண்பு. திருவருளுக்கு எதிரானது. ஒருமைக்குப் பகை பிணக்கு. பிணக்கு உடையோர் இம்மையிலும் வாழ்வாங்கு வாழ்தல் இயலாது; மறுமையிலும் பயன் எய்தார். ஆதலால் பிணக்கில்லாத பெருவாழ்வு வாழ முயல்வோமாக!

திருப்பெருந்துறை திருத்தலம்! நமது மலம் மூன்றும் கெட, சிவானந்த வெள்ளம் மேவிய, குதிரைச் சேவகனாய் எழுந்தருளிய பெருமான் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருப்பதால் திருப்பெருந்துறையை வாழ்த்து மின்! திருப்பெருந்துறையை வாழ்த்தின் பிறவிக் காட்டின் கருவும் கெடும்! திருப்பெருந்துறை பிணக்கிலாத பெருந்துறை, பிணக்கிலாமையால் பெருந்துறையாயிற்று. பெருந்துறை ஊர், தலம்! ஆங்குப் பிணக்கு இலாதார் வாழ்ந்தமையால் அது பெருந்துறையாயிற்று. பெருந்துறை!. திருப்பெருந்துறை! திரு நலஞ்செறிந்த திருப்பெருந்துறை! மக்களாகப் பிறந்தோர் அனைவரும் விரும்பும் பெருந்துறை! பெருந்துறை பெருந் துறை என்று பேசியே துன்பங் கெடுத்து வாழலாம். இருளகற்றி இன்பம் பெருக்கித் துன்பத்தின் தொடர்பு அறுத்து வாழ்தல் கூடும் திருப்பெருந்துறையைச் சார்ந்தால்! திருப்பெருந்துறைப் பெருமானே! ஆன்மாக்களிடத்தில் பிணக்கிலாத பெருமானே! உன்னை ஏசினும் ஏத்தினும்

பிணக்குக் கொள்ளாது அருள்பொழியும் பெருமானே! உன் நாமங்களையே பேசுவர்! இங்ஙனம் திருப்பெருந்துறைச் சிவபெருமான் திருநாமத்தையே பேசுபவர்களுக்கு எதிர் வரும் துன்பம் துடைக்கப்பெறும்.

நேற்றைய துன்பம் அறியாமையால் விளைந்தது! இன்று அதன் தொடர்ச்சி! ஏன்? எதிர்வரும் காலத்திலும் துன்பம்! அந்த எதிர்வரும் துன்பத்தையேனும் தடுத்த லாகாதா? தடுக்கலாம்! எப்படி? எப்போதும் பிணக்கிலாது வாழ்க! பிணக்கிலாத பெருந்துறையைச் சேருக! திருப் பெருந்துறையுறை பெருமானின் திருநாமங்களைப் பேசுக! எதிர்வரும் துன்பம் துடைக்கப்பெறும்! இணையில்லாத இன்பமும் வந்தடையும்! திருவருளின்பம் இச்சையினால் அடையக்கூடியதொன்றன்று! தவத்தால், சீலத்தால், நோன்பால் மட்டுமே எய்த முடியும்!

பிறவிக்கு—பிறவித் துன்பத்துக்கு வித்து ஆணவம்! ஆன்மாவை இயல்பாகவே பற்றியிருப்பது ஆணவம்! இந்த ஆணவம் என்றும் காயாமல் முளைக்கும் இயல்பினது! ஆணவத்தை அழித்தல் இயலாது. ஆணவத்தின் செயல் திறனை முடக்கலாம். ஆணவத்தின் ஆற்றலை அடக்கலாம். வினை செயல் உயிரின் இயல்பு. மனிதத்துக்கு வினையே உயிர்! வினைகள் என்றால் செயல்கள் என்று பொருள்! செய்யும் செயல்களே பயன் தந்து விடுவதில்லை; செயல் செய்வதன் நோக்கம் என்ன? உள்ளீடு என்ன? அதுவே கைகூடும்! கரும்பு பிடித்தவர் இறந்ததையும் இரும்பு பிடித்தவர் வாழ்ந்ததையும் எண்ணுக! ஆணவம் மேலும் மேலும் அடர்த்து 'நான்' 'எனது' என்னும் செருக்கினுள் சிக்கித் தலையால் நடந்து திரிந்து ஆகா வினைகள் மேலும் மேலும் செய்தல் வாழும் முறையன்று. ஆணவத்தின் ஆற்றல் மேலோங்கிப் பிறப்பிற்குரிய வித்து மேலும் விளையாமல் தடுத்துக் கொள்ள வேண்டும். அதற்குரிய உத்தி, முதலில் பகைப் புலமாக இருக்கிற ஆணவத்தை அனுகூலமாக்கிக்

கொள்ள வேண்டும். இதற்கு 'நான்' 'எனது' என்னும் செருக்கினை அடக்கி ஆண்டு தாழ்வெனும் தன்மை உடையதாக மகவெனப் பல்லுயிரையும் ஒக்க நோக்கி நல்லனவே எண்ணி, நல்லனவே செய்து இடையறாத திருவருள் சிந்தனையுடன் வாழ்ந்தால் மனம் பக்குவமாகி நல் வாழ்க்கைக்குத் துணையாக அமையும். ஆணவத்தின் ஆற்றல் அடங்கிய நிலையில் இறைவனின் திருவருட் சத்தி ஆன்மாவிடத்தில் கருணை பொழியும். இந்தப் பரிபக்குவ நிலையிலும் உயிர்கள்—ஆன்மாக்கள் ஓயாது தொழிற்படும். ஆயினும் பயன் கருதா நிலையில் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற அனுபூதி வாழ்க்கையை எய்தும்.

தாம் அடையும் நல்லனவற்றிற்கு மகிழ்தல், அல்லன வற்றிற்குத் துயருறுதல் நெறியுமன்று; முறையுமன்று. வெற்றியும் தோல்வியும் ஒரு முடிவுக்குக் கொண்டு வருபவை யல்ல. தொடர்கதைதான். வெற்றி — தோல்வி என்ற மனப்போக்கு சச்சரவுக்குக் காரணமாக அமையும். ஒருவனுடைய வெற்றி, தோற்றவனுடைய உள்ளத்தில் அவமானமாக உறுத்தி அவன் மீண்டும் தன் தோல்வியை வெற்றியாக்க முயல்வான். மீண்டும் போர்! ஆதலால், வெற்றியை வெற்றியாகக் கொள்ளாது தோற்றவர்கள் வெற்றி பெற்றதைப் போல மகிழ்தலுக்குரியன செய்து உயர்த்துக! வாழ்த்துக!

> நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
> அல்லற் படுவ தெவன் (379)

என்று வள்ளுவம் கூறும். தீதும் நன்றும் கண்டு நோதலும் தணிதலும் வேண்டா என்று புறநானூறு கூறும். ஆன்மிகத்தில் வளர்ந்த மாமனிதர்கள் துன்பங்களில் உழலும் பொழுதும் தம் நிலையில் பிறழார்; திரியார். கரை தவறி விழுவதால் கடல் கலங்கி விடுமா என்ன? ஒருபொழுதும் கடல் கலங்காது. சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவோர்

துன்பங்களினால் நிலை கலங்கார். அவர்கள் இன்பம் விழைதல் இல்லை! துன்பம் இயற்கை என்று எண்ணுவர். இத்தகு வாழ்வியலையே இருவினை ஒத்தல் என்று சமயவியல் கூறும்.

துன்பங்களுக்காகத் துக்கப்படுதல் விலங்கியல்பு ஆகும். துன்பம் நல்லுணர்வு கொளுத்துவதற்காகவே கிடைத்த சாதனம் என்று சான்றோர் கருதுவர். நல்லதாக நடந்த ஒரு காரியத்திற்குப் பலர் தம்மைக் காரணமாக்கி மகிழ்வர்; பெருமைப்படுவர். அதே போழ்து ஒன்று தீமையாகிவிட்டால்— துன்பமாகிவிட்டால் பழியைப் பலர் மீது தூக்கிப் போடுவர்; விதியை நொந்து கொள்வர். ஏன் இந்த இரட்டை நிலை? நன்மையும் தீமையும் ஏன் ஆன்மாவைப் பாதிக்க வேண்டும்? பானை சுடலாம்! பாலை நேரே சுட வைக்க இயலுமா?

நன்மையையும் தீமையையும் அனுபவிக்கும்பொழுது சமநிலையாகப் பாவித்தல், விருப்பு — வெறுப்புக்கள், காய்தல்— உவத்தல் ஆகியவற்றிலிருந்து விடுதலை பெறுதல்— இருவினை ஒத்தலாகும்.

மாணிக்கவாசகர் முதலமைச்சராக இருந்தபொழுதும் அரச தண்டனைக்கு ஆளாகிய நிலையிலும் சம நிலையில் இருந்தார். அதனாலேயே "நன்றே செய்வாய்; பிழை செய்வாய்! நானோ இதற்கு நாயகமே!" என்றார். மாணிக்க வாசகர் அவர்தம் வாழ்நிலையில் அடைந்த துன்பங்கள் பலப்பல! ஆனால் ஒருபோதும் மாணிக்கவாசகர் அஞ்சியது இல்லை. அதனால் மாணிக்கவாசகருக்கு இறைவன் கணக்கில் காட்சிகளைக் காட்டியருளியுள்ளான். திருப்பெருந் துறையில் குருந்த மரத்தடியில் ஞானாசிரியன்; மதுரையில் குதிரைச் சேவகன், வைகையாற்றங்கரையில் கொற்றாள்! இங்ஙனம் எத்தனை எத்தனை காட்சிகள்! எனவே, "கணக்கிலாத் திருக்கோலம் காட்டினாய்!" என்றார் மாணிக்கவாசகர்.

மாணிக்கவாசகரின் திருவுள்ளம் பிணக்குகளினின்று விடுதலை பெற்றது. இறைவன் தன் விருப்பம் தன் விருப்ப மாகக் கொண்டவரானார்! "வேண்டுவதும் உன் தன் விருப்பன்றே!" என்பது மணிமொழி. அறிவால் சிவனே யாய நிலை மாணிக்க வாசகருக்குக் கிடைத்ததது.

*பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு*
*மான்! உன் நாமங்கள் பேசுவார்க்(கு)*
*இணக்கி லாததோர் இன்ப மேவருந்*
*துன்ப மேதுடைத் தெம்பிரான்*
*உணக்கி லாததோர் வித்து மேல்விளை*
*யாமல் என்வினை ஒத்தபின்*
*கணக்கி லாத்திருக் கோலம் நீ வந்து*
*காட்டி னாய்கழுக் குன்றிலே*

(திருக்கழுக்குன்றப் பதிகம்–1)

## தனித்துணை

இந்தப் பிறப்பு, துன்ப நீக்கத்திற்காகவே! துன்பத்தின் காரணமாய அறியாமை நீக்கத்திற்காகவே! ஆயினும் உடலுறு வாழ்க்கையில் உயிர் உறும் துன்பம் தாங்கொணாதது; உள்ளவாறு உணரின் தாங்கவே இயலாதது. இத்துயர் அனுபவத்தின் விளைவே— தாக்கமே திருவருட் சிந்தனை!

இறைவன்—சிவபெருமான் உயிருக்கு வாய்த்த தனித்துணை! 'தனி' என்ற அடைசொல் சிறப்புப் பற்றியது. உயிருக்கு ஈடும் எடுப்பும் இல்லாத துணையாதலின் 'தனித்துணை' என்றார். உயிர் சந்திக்கும் துணைகள் பலப்பல உண்டு. தாயினும் சிறந்த துணை ஏது? ஆயினும் தாய் காலத்தினால் பிரிக்கப்பட்டு விடுகிறாள். இடம், தொலைவு நட்புத் துணையினைப் பிரித்து விடுகிறது. நண்பரெனக் கொள்பவர்களில் பலர் கொடுத்தல் குறைபடும் பொழுது பிரிவர். ஆனால், இறைவன்— சிவன் பிரிவதில்லை.

இறைவனுக்கும் உயிருக்குமுள்ள உறவு குறியெதிர்ப்பு இயலானது தன்னலமற்றது. உயிரின் ஆக்கத்திற்காக இறைவன் தொடர்பு. கடவுள்—உயிர் இரண்டுமே காலங் கடந்தவை. ஆதலால், காலத்தால் பிரிவு நிகழ வாய்ப்பு இல்லை. இறைவன் உயிர்க்குயிரதாக இருப்பதால் இடத்தால் பிரிவும் இல்லை. அதுமட்டுமல்ல. "நரகொடு சொர்க்கம் நானிலம் புகினும்" இறைவன் பிரிவதில்லை. இறைவன் சொர்க்கத்தில் வெளிப்பட்டும் நரகத்தில் மறைந்திருந்தும் அருள் செய்வான். தாய், மருத்துவத்திற்கு ஆளாகின்ற குழந்தைக்கு மறைந்தே இருப்பாள். பிரியாதது மட்டுமே தனித்துணைக்கு உரிய சிறப்பன்று. உற்றுழி உதவுதலில் இறைவன் தனித் துணையேயாம். நோய்க்கு மட்டுமல்ல; நோயின் மூலத்திற்கும் மருத்துவம் செய்து காப்பாற்றுபவன் இறைவன். பொன்னும் பொருளும் போகமும் தந்தருளி மேலும், திருவையும் சேர்த்து வைப்பவன். ஆதலால் அவன் உயிர்க்குத் தனித்துணை ஆயினன்.

தனித்துணையாகிய இறைவன் ஆட்கொண்டருள, வான்பழித்து இம்மண்ணிற்கு வந்தருள்கின்றான்! இல்லை, இல்லங்கள் தோறும் தேடி எங்கே என்று வந்தருளி நிற்கின்றான். இறைவன் வந்ததைக் கண்டும் காணாமலும் பணியில் ஈடுபட்டிருப்பதாகப் பாவனை காட்டினேன்! நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை! ஆன்மா இருக்கிறது! இறைவன் நிற்கிறான். திருவடி நோக நின்றருள் செய்கின்றனன். நாழிகைகள் ஓடுகின்றன. நாட்கள் ஓடிக் கழிகின்றன. ஆயினும், இறைவனை நிமிர்ந்து பார்க்கும் உளப்பாங்கு வரவில்லை. 'வருக'— என்று வணங்கி அழைக்கவும் மனம் ஒருப்படவில்லை. முகமன் கூற, உபசரிப்பு செய்ய எழுச்சி கொள்ளவில்லை. இறைவன் சும்மா இருப்பானா? இறைவன் தான் வந்திருப்பதை அறிவிக்கத் தன் திருவடிகளை நிலத்தில் தோயச் செய்து தாளந்தப்பாது தூக்கி எடுத்து வைக்கின்றான். அடக்கமாகக் காலை மாற்றுகிறான். ஆயினும் ஒலி கேட்கிறது. அந்தக் சூழ்நிலையிலும் நான் கண்டு கொள்ளவில்லை.

இறைவன் செருமல் ஒலி செய்கிறான். அப்போதும் நான், "நான்" தான்! அசைந்து கொடுக்கவில்லை. நான் என்ன சாமான்யனா? தலை நிறைய மூளை இருக்கிறது; அறிவு இருக்கிறது. பெற்றிருப்பது அறிவா? அறியாமையா? அது போகப் போகத் தெரியும்! சாயம், வெளுத்துப் போகக் கூடியதுதான். ஆயினும் ஆணவம் ஆட்டிப் படைக்கிறது! தலையால் நடந்தேன்! அம்மையார் நடந்த நடையல்ல! அது தலைக்குச் செய்த நடை! அம்மையார் நடை தவம் செய்த தவம்! ஆனால், நான் நடந்ததோ தருக்கி நடந்த நடை! எனக்குத் துணை எது? வினைதான் துணை! வினை பெருக்கி வினையால் அழியும் அவலத்திற்கு ஏது மருந்து? முற்றாகத் தற்கொலைக்குச் சமம்!

வினை செய்தல் உயிரியற்கை! மனம், உடல், வாக்கால் இடையறாது வினை செய்தலே உயிரியற்கை. வினை செய்தலும் வேண்டும். வினை செய்தலைத் தவிர்த்தலும் இயலாது; கூடாது. உயிரியற்றும் வினை உயிர்க்கு மருந்தாக அமைதல் வேண்டும். தண்ணீரால் உடலைக் கழுவுதலும் அவசியம். ஆயினும் உடன் துடைத்தலும் அவசியம். அதுபோல வினை செய்தலே உயிர் வாழ்க்கை; வினை செய்தலே துன்ப நீக்கத்திற்கு மருந்து. எப்போது வினை செய்தல் துன்பமாகிறது? எப்போது மருந்தாகிறது? வினை செய்தலைத் தவமாகக் கொண்டால் துன்பம் இல்லை; துயரில்லை. வினை செய்தலை வாணிகமாக்கக் கூடாது. அற விலை வாணிகமும் தீதே! வினை செய்தல் வழி, செருக்குக் கொள்ளுதல் ஆகாது. புகழ் வேட்டலும் கூடாது. "பொன் வேண்டேன்; புகழ் வேண்டேன்" என்பது மாணிக்கவாசகர் வாக்கு. "வீடும் வேண்டா விரலின் விளங்கினார்" என்பது சேக்கிழார் வாக்கு. திருவாசகம் முழுதும் பாழ்த்த பிறப்பறுத் தலை நோக்கமாகவுடையது! அதுவும் வீடுபேறு கருதியல்ல! கூத்துடையானைப் பாடிக் களிப்புறுதலுக்கேயாம். என்றும் இறைவனுக்கு அடிமைத் தொண்டு செய்தலுக்கேயாம்.

உயிர், வினை செய்தலை நோன்பாகக் கருத வேண்டும். தனக்கென முயல்வது நோன்பல்ல. பிறருக்கென முயல்வதே நோன்பு. உயிர்கள் செய்யும் பணிகள் பெருந்தன்மைக்குச் சான்று அன்று. அவை கடமை. இந்தப் பரந்த உலகில் வாழ்தலுக்குரிய குடிக்கூலியே தொண்டு, சேவை. வினை செய்க! வையகம் பயனுறச் செய்க!

இறைவன் புறத்தே காணும் துணையல்ல. அகநிலைத் துணை; உயிர்க்குயிரதாக நிற்கும் துணை மனத்திற்கே துணை. உயிர், மனம் வழியேதான் எண்ணுகிறது; இயங்குகிறது. வாழ்க்கையின் முதலும் முடிவுமாகிய கருத்தை உருவாக்கு வதே மனம். 'மனத்துள் நின்ற கருத்தானை' என்பது தேவாரம். மனமே உலகை நோக்குகிறது; செய்திகளைச் சேகரிக்கிறது; தேவைகளை நிர்ணயிக்கிறது; நிர்ணயித்த தேவைகளை அடைய முயற்சி செய்கிறது. உயிர்க்கு மனத்தொடு புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அகநிலைக் கருவிகளும் உண்டு. ஆயினும் மனமே முதல் வாயில்; மனமே முதற்கருவி. மனம் விரும்பினால் புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கருவி களையும் பயன்படுத்தலாம். மனம் தனித்து இயங்காது. புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கருவிகளைப் பயன்படுத்திச் செய்பவை சிறப்பாக அமையும். மனம் மட்டுமே இயங்கி னால் செயற்பாட்டில் உணர்ச்சியும் எழுச்சியுமே மிஞ்சும். மனம் மட்டுமே செயல்படும் நிலையில் உள்ள மனிதன் பரபரப்புடையவனாக இருப்பான்; உணர்ச்சி வசப்படுவான்; ஆத்திரப்படுவான்; தீமை செய்து கொள்வான். மனம் வாழ்நிலையின் தொடக்ககமாதலால் அந்த மன நிலை யிலேயே இறைவன் துணையாக அமைந்து வழிகாட்டுகிறான்; வழி நடத்துகிறான். ஆனால், பலர் அந்த மனத்தின் அறிவுறுத்தலை, மனச் சாட்சியின் குரலை மதிப்பதில்லை, எடுத்துக்கொள்வதில்லை. மனச்சாட்சியின் குரல், ஆன்மாவின் ஆணவ எடுப்பில் எடுபடாமல் போகிறது. பின் காலம் செல்லச் செல்லப் பட்டறிவின் வழியில்தான்

மனச்சாட்சி அங்கீகரிக்கப்பெறுகிறது. அவ்வழி நடக்கும் வாழ்க்கையும் தொடங்குகிறது. இதுவே சமய வாழ்க்கையின் தொடக்கம்.

இந்த நிலைக்கு உயிர்கள் வரும் வரையில் இறைவன் உயிர்களைக் கைவிடமாட்டான்! உயிர் செய்யும் துரிசுகளுக்கு உடந்தையாக இருந்து உடன்போய் பிழைகளைப் பொறுத்தாளாவான். பின் பிழைகளைத் தவிர்க்கவும் கற்றுத்தந்து, பிழைகளைத் தவிர்த்து வாழும் வாழ்நிலையை அருள்வான். ஆணவத்துடன் இரண்டறக் கலந்து முனைப்புடன் வாழும் உயிர்களை- பிழை காணாது பால் கறக்கும் சிலர் பிழுக்கையை ஒதுக்கிப் பாலினை கொள்வதைப் போல ஆட்கொண்டருள்வான். சிறியோர் செய்த பிழையெல்லாம் பொறுக்கும் பெரியோன் இறைவன்.

உயிர்க்கு வாழ்க்கைக்குரிய முதல் எது? முதல்- தொடக்கம் என்றும் பொருள் கொள்ளலாம். மேலும், உயிர் வாழ்க்கைக்குரிய ஆக்கங்கள் அனைத்தையும் வழங்கிய முதல் என்றும் பொருள் கொள்ளலாம். ஆம்! உயிர் என்றுமுளது; உயிர் இயல்பிலேயே ஆணவத்துடன் அத்துவிதமாக முடங்கிக் கிடக்கிறது; அறிவியக்கத்திற்குரிய வாயில்கள் இருந்தும் ஆணவத்தின் கூட்டால் செயலடங்கி முடங்கி மூலையில் கிடக்கிறது. அப்போது இறைவனின் திருவருள் நோக்கம் உயிரின்பால் வீழ்கிறது. அதுவே வாழ்க்கையின் முதல் தொடக்கம்! உயிர்க்கு மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அறிவுக் கருவிகள் அடங்கிய நுண்ணுடல் கிடைக்கிறது. நுண்ணுடல் கிடைத்தவுடன் உயிர்க்கு வாழ்க்கை தொடங்குகிறது.; தொடர்கிறது. இந்தத் தொடக்கத்திற்குப் பின் உயிர் செய் கருவிகளடங்கிய பரு உடலைப் பெற்றோர்வழி பெற்று மண்ணில் பிறப்பினைப் பெறுகிறது. இந்தப் பிறப்பில்தான் உயிர் பலமுறை சுற்றி வருகிறது. செயற்பாட்டுக்குரிய உடல் மாறும். அறிகருவிகள் அடங்கிய நுண்ணுடம்பு கடைசி வரையில்-முத்தி நிலை

வரையில் தொடரும். இங்ஙனம் உயிர்க்கு வாழ்நிலை முதலாகவும், மனத் துணையாகவும் இருந்து வாழ்க்கையை இயக்கியருள்கிறது திருவருள்!

இந்த உயிர் வாழ்க்கை, வினைச்செயல், பயன் துய்த்தல், சாதல், பிற என்று தொடர்ந்து வருகிறது. கறங்குபோல் சுற்றிச் சுற்றி வருகிறது. இதனைத் துய்த்துவரும் பொழுதுதான் வாழ்க்கை துன்பமடைகிறது. வாழ்க்கையை இன்பமாக்கி னாலும் இன்பத்தின் நிழலாகத் துன்பமே தொடர்கிறது! உயிர் உற்று அனுபவிக்கும் இன்பம், துன்பம் இரண்டுமே வினைக்கு முதல். துன்பத்திற்குக் காரணம்; பிறவிக்கு வித்து. மனம் எளிதில் நிறைவு பெறாது. அவா- ஆசை, கடல் அலைபோல் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வரும் இயல்பினது. ஒரோவழி ஆவல் நிறைவெய்தி மனம் நிறைவு கொண்டாலும் இந்த மன நிறைவு நிலையானது அல்ல. இந்த மன நிறைவும் குறைந்த காலத்திற்கே இருக்கும்; மயக்கம் பொருந்தியதாகவும் இருக்கும். மனவெழுச்சி விரிவடையும் தன்மையுடையது, ஆசை வெட்கமறியாது. மனம் தனது ஆசையை நிறைவேற்ற மட்டும் உரத்த கூச்சலிடும். மனம், தன் வயப்பட்டுக் கிடக்கும். மனிதர்களை ஆட்டிப்படைக்கும்; அடிமைப்படுத்தும்; சுதந்திரத்தைப் பறிக்கும். இதனால், உயிர் ஓயாது வினை இயற்றியும் இன்ப துன்பச் சுழற்சியில் சிக்கியும் அனுபவித்தும் அனுபவியாமலும், இந்த உலகில் ஏற்படும் அநாகரிகத் தன்மையுடையோர்களால் தாக்குண்டும் பாதிப்புக்குள்ளாகும். உயிர் செத்தும் பிறந்தும் சுற்றிச் சுற்றி வந்ததால் உடலுறு உளைச்சல், மன உளைச்சல்களுக்கு இரையாகி எய்த்துப் போகிறது; களைத்துப் போகிறது. எய்ப்பிலும் களைப்பிலும் வைப்புப் பொருள் போல் இறைவன் துணை செய்கிறான்; 'அஞ்சல்' என்று அருள் செய்கிறான். மந்திரமும் மருந்தும் ஆகி நின்றருள் செய்கிறான். ஆதலால், துன்பத்தின் முடிவில் எய்ப்பினில் வைப்பாக விளங்கும் இறைவனின் திருவடிகளைப் பற்றுதல் வேண்டும்.

இத்தருணத்தில் பற்றவேண்டியது அவன் திருவடிகளையே! இந்த நிலையிலேயே மாணிக்கவாசகர் பிறந்து வளர்ந்து, கற்று, முதலமைச்சராகி, அரசுப் பணிகள் செய்து எய்த்துக் களைத்த நிலையிலேயே திருப்பெருந்துறை இறைவனைச் சரண் அடைகின்றார். "எய்ப்பினில் வைப்பு" என்று எண்ணி அடைக்கலம் புகுகின்றார். திருப்பெருந்துறைச் சிவனும் ஆட்கொண்டருள்கின்றான். உயிர்களை இறைவன் ஆட்கொண்டருளிய பிறகு, உயிர்கள் இறைவனின் அடைக்கலப் பொருள்களாகின்றன. பாதுகாப்பது இறை வனின் பொறுப்பு. இங்ஙனம் அடைக்கலப் பொருள்களாகிய உயிர்களைக் காக்கவே திருவிளையாடல்கள்! மாணிக்க வாசகர் ஆட்கொள்ளப்பட்ட பிறகு, மாணிக்கவாசகரின் பணிகள் இறைவனின் பணிகளாயின. மாணிக்கவாச கருக்காக இறைவன் குதிரைச் சேவகனாகிறான்! கொற்றாளா கிறான். இது நியதி.

பிறவி, நோய் நீக்கத்திற்குரிய மருந்தே யாம்! ஆயினும், தெளிவும் தெளிவினுட் சிவமும் தோன்றும் வரை பிறவி ஒரு வலைதான்! துன்பந்தான்! இந்தப் பிறவி வலையை அறுத்தெறிய முயலுவதே வாழ்க்கையின் நோக்கம்; பயன்! மாணிக்கவாசகர் பழுத்த மனத்தராகிறார். புளியம்பழம் போலத்தான் மாணிக்கவாசகர் தம் வாழ்வியல் அமைந் திருந்தது. ஆதலால், வாழ்க்கை உவர்ப்பாகிறது. இறைவன் திருவடிகளையே பேசுதல் தவமாகிறது; வாழ்வாகிறது.

பிறந்து வினை பல செய்து நுகருமாறு நுகர்ந்து எய்த்துக் களைத்துப்போய் எய்ப்பினில் வைப்பாக என்றும் தனித் துணையாக விளங்கக்கூடிய இறைவன் திருவடிகளைப் பற்றுதலே வாழ்க்கை; வாழ்க்கையின் பயன்!

*தனித்துணை நீ நிற்க யான்தருக்*
*கித்தலை யால் நடந்த*
*வினைத்துணை யேனை விடுதிகண்*
*டாய் வினை யேனுடைய*

*மனத்துணை யே!என்தன் வாழ்முத*
*லேஎனக் கெய்ப்பில் வைப்பே!*
*தினைத்துணை யேனும் பொறேன்*
*துயராக்கையின் திண்வ லையே!*

(நீத்தல் விண்ணப்பம்–39)

## அறியாது கெட்டேன்!

நோய்! புதிய நோய்கள்! உடல் நோய்! ஆன்மாவின் நோய்! ஏன் நோய்? எதனால் நோய்? காரணங்களைத் தேடின் மூச்சு வாங்கும்! ஓர் உண்மை புலனாகிறது! நோய்க்குரிய காரணங்களில் பழையன மட்டுமல்ல! புதியனவும் உண்டு! பழைய காலத்தில் அழுக்காறு என்ற நோய்க்குக் காரணம் உடைமைச் சார்புடையதாகவே அமைந்திருந்தது. இன்றோ புகழும் காரணமாக அமைந்திருக்கிறது! நோய் இயற்கையன்று! நோய்க்குப் பழ வினைகள் காரணமல்ல. நோய் செயற்கை, நோய் வரவேற்றுக்கொள்வது! நோய்க்கும் இவன் புதியவனே! சுவை நாடி உண்டமை, உழைப்பில்லாத வாழ்க்கை, தூய்மையற்ற உடல், தூய்மையற்ற மனம், கெட்ட புத்தி, அறியாமையின் இரும்புப் பிடியில் சிக்கிய ஆன்மா இவையெல்லாம் நோய்க்குக் காரணங்கள்!

உலகம் முன்னேறுவது, நொடிகள் தோறும் முன்னேறுவது. ஒரு நொடிப் பொழுது அயர்ந்தாலும் உலகம் நெடுந் தொலைவு போய்விடும்! நாம் பின்தங்கி விடக்கூடாது! துறை தோறும் முன்னேற்ற நிலை பராமரிக்கப்பெறுதல் வேண்டும். அறிவில் பிற்பட்டிருந்தால்– அறிவிருந்தாலும் உலக அறிவை நோக்க அறியாமையாகவே கொள்ளப்பெறும்! அறிவு வளர்வது; இடையீடின்றித் தொடர்ந்து வளர்வது! 'அறி தோறும், அறியாமை' என்று திருக்குறள் பேசும்! இன்றைய அறிவே அறிவு; வாழ்க்கைக்குக் கைகொடுக்கும் அறிவு; உழைப்பு. உழைப்புத் திறன் வளரும் இயல்பினது. உடலியக்கத்

திற்குரிய உணவு, உழைப்பின் வழியேதான் படைக்கப் படுகிறது! உழைத்து உண்பது அறம்! உழைத்து உண்பது ஒழுக்கம்! அறிவின் ஆக்கத்தில் பின்னடைவு; உழைப்பில் பின்னடைவு! இங்ஙனம் துறைதோறும் பின்னடைவுகள் தோன்றின் நோய்க்கு ஆளாவது இயற்கை!

நோய்வாய்ப்பட்ட பிறகு நெஞ்சில் கவலை பிறக்கும்; துன்பமும் துயரமும் வருத்தும்; அமைதி விடைபெறும்; இன்பம் விலைப்பொருளாகிவிடும்; வாழ்க்கை கசக்கும். ஆதலின் பிற்படா நிலையில் நொடிகள் தோறும் துறை தோறும் முன்னேற்றத்தைப் பராமரிக்க வேண்டும். மாணிக்க வாசகர் நோய்க்கு எளிதில் இரையாகக்கூடிய அமைச்சுப் பதவியில் இருந்தார். அமைச்சுப் பதவி "கடின"மான பதவி. ஆன்ம நலன்களைக் கெடுக்கும். அதிகாரம் அமைச்சுப் பதவிக்கு உண்டு! இருக்கும் இடம் உயரமானது! பெரிய இடத்தில் சின்னப் புத்தி தலைகாட்டும். ஆனால், உடலும் ஆன்மாவும் எளிதில் நோய்வாய்ப்படும் நிலை, ஆன்ம நலன்களில் பிற்பட்ட நிலை!

பிற்பட்ட நிலை மாற்றப்படுதல் வேண்டும். முன்னேற்றம் தேவை. முன்னேற்றம் கருதிய வாழ்க்கைக்கு முதலில் உரிய சுற்றம் அமைய வேண்டும்! நல்ல பழக்கங்கள் வேண்டும்; வழக்கங்கள் வேண்டும். ஒருவருக்குக் கெட்ட பழக்கங்கள் எளிதில் விலை இல்லாமலே கூடக் கடை வீதியில் கிடைக்கும்! ஆனால் நல்ல பழக்கங்கள் எளிதில் கிடைக்கா. வழக்கங்கள் சொல்லவே வேண்டாம்! நல்ல பழக்கங்கள்தான் நல்ல வழக்கங்களாக மாறுகின்றன. ஆன்மா சிறந்த நலன்களைப் பெற்று முன்னேற வேண்டுமாயின் நல்லோர் கூட்டு வேண்டும். நல்லோர் இணக்கம் வேண்டும். நல்லோருடன் பழகவேண்டும். அங்ஙனம் தேர்ந்தெடுத்துப் பழகும் நல்லோரும்கூட வழி வழி நல்ல மரபினராயிருந்தால் காலம், தேசம், வர்த்தமானம் அவர்களை மாற்றா. அவர்களே பழ அடியார்கள்; என்றும் நல்லவர்கள்! தற்காலிகமாக

இன்று பிழைப்புக் கருதி அடியார்களானவர்கள் பிச்சைக்காரர்கள்! இவர்களில் நடிப்பவர்களும் இருக்கலாம். பழைய அடியாரொடுப் பழுத்த மனத்தடியாரொடும் கூட்டு இருந்தால் அவர்கள் நம்மை வளர்ப்பார்கள். நம்மைப் பாதுகாப்பார்கள். காலைக் கதிரவன் ஒளியில் தோயும் இமயம் பொன்னொளி பெற்று விளங்கும். அப்போது அந்த இமயத்தைச் சார்ந்த காக்கையும் பொன்னொளி பெற்று விளங்கும். இமயம் சார்ந்த காக்கை பொன்னிறம் பெறும் என்பார் விபுலானந்தர். பழைய அடியாரொடும் கூடி வாழாமல் அரசன், அமைச்சர்கள் படைத்த தளபதிகள் ஆகியோருடன் கூடி வாழ்ந்து கழிந்த காலத்தை மாணிக்க வாசகர் எண்ணி வருந்துகிறார். பழைய அடியாருடன் கூடி வாழ்ந்தால் நோய் வராது. பிறப்படுத்தலுக்குரிய சூழலும் தோன்றாது. ஆதலால், மாணிக்கவாசகர் பழைய அடியாருடன் கூடி வாழ்தலை விரும்புகின்றார்.

பழைய அடியாருடன் கூடி வாழ்தல் எப்போது கிடைக்கும்? பழைய அடியார்கள் பழுத்த அடியார்கள்! புளியம்பழம் போல் வாழ்கிறவர்கள்! அவர்கள் கூட்டத்தில் சேர்வது கடினம்! அவர்களுடன் கூடி வாழ்வது கடினம்! நெய், வேப்பெண்ணெய் என்று வேறுபாடு கருதாது சுவை யுணர்வு கெட்டு உண்ணும் பழக்கம் வேண்டும். 'நான்' 'எனது' என்ற செருக்கறுதல் வேண்டும். காய் கதிர்ச்செல்வனின் கதிரொளிக் கற்றைகளும் மழை வழங்கும் புனலும் மரத்தின் வேர்களும் தாழ்ந்து தாழ்ந்து செல்லுதல் போலத் தாழ் வெனும் தன்மையுடன் வாழ்தல் வேண்டும். இறைவனிடம் பிறந்து மொழி பயின்ற நாள் தொடங்கி இடையீடின்றித் தொடர்ந்து பத்திமை செலுத்த வேண்டும். பெருமிதமும் வீரமும் செறிந்த அடிமைப் பண்பு வேண்டும்! அன்பிலும் அன்பின் திட்பத்திலும் அன்பின் ஆற்றலிலும் நம்பிக்கை வேண்டும். அச்சத்தைத் தவிர்க்கவேண்டும். "அஞ்சுவது யாதொன்றும் இல்லை, அஞ்ச வருவதும் இல்லை" என்று

வாழ்தல் வேண்டும். அச்சம் அன்புக்குப் பகை; உறவுக்கு எதிரி. அச்சம் பத்திமைக்கு எதிரிடையானது. அச்சம் தவிர்த்தவர்களே அடியார்கள்! பழ அடியார்கள்! மாணிக்கவாசகருக்கு அச்சமில்லை! "எங்கு எழில் என் ஞாயிறு" என்றார். ஞாயிறு திரியும் திசை மாறினால் துன்பம் வரும். அத்துன்பமும் தன்னைத் தீண்டாது! இது மாணிக்கவாசகரின் திட்டம்! உறுதி! மாணிக்கவாசகர் அச்சமின்றி வாழ்ந்தார். மாணிக்கவாசகர் "அச்சம் தவிர்த் தாண்ட" சேவனாகிய திருப்பெருந்துறையுறை சிவனுக்கு உடைமையானார். உலகியல் வாழ்க்கையில் உடைமை மிகுதியும் பேணப்படுகிறது. உடைமைக்கு உள்ள மதிப்பு மனிதனுக்குக்கூட இல்லை. காரணம் உடைமை வாழ்க் கைக்குப் பயன்படுகிறது. அருளியல் வாழ்க்கையிலும் ஆன்மிக வாழ்க்கையிலும் உடைமையாதலுக்கு மதிப்பு உண்டு. பங்கமில்லாத உரிமைக்கு உடைமையாதல் அவசியம். அதாவது நம்முடைய தோழனுக்கு நாம் உடைமையாதல், நட்பியல் வாழ்க்கையில் உடைமையான வழி உறவுகள் வளரும்; உரிமைகள் அமையும். நல்ல பாதுகாப்புக் கிடைக்கும்; இருபாலும் கிடைக்கும். ஆன்மிக வாழ்க்கையில் இறைவனுக்கு நாம் உடைமையாகிவிட்டால் அவன் நம்மை வளர்ப்பான்; காப்பான்! நாம் கவலையின்றி வாழலாம்! நாம் உலக உடைமைகளுக்கும் உரிமைக்காரராக விளங்கும் வரையில் இறைவனுக்கு உடமைக்காரராதல் அரிது. கடவுளுக்கும் சைத்தானுக்கும் ஒரே நேரத்தில் தொண்டு செய்ய முடியாது. இரண்டு எஜமானருக்கு ஒரே நேரத்தில் சேவை செய்தல் ஒல்லுமோ? மாணிக்கவாசகர் அமைச்சுப் பதவியில் இருந்தவரை அவர், அரசருக்கு உடைமையாக இருந்தார். அமைச்சுப் பதவியை உடைமையாகப் பெற்றிருந்தார். அதுவும்கூட உடைமையாக அல்ல. உடைமையாகப் பெற்றிருந்தால் குதிரைகள் வாங்காததை, திருக்கோயில் கட்டியதைப் பாண்டியன் ஏற்றுக்

கொண்டிருப்பான். வரலாறே திசை திரும்பியிருக்கும். பாண்டியனுக்கு மாணிக்கவாசகர் உடைமைக்காரராகவும் இல்லை. அடிமைக்காரராகவே இருந்தார்.

மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையை அடைகின்றார். அறிவு நிலை மாறுகிறது; உணர்வு நிலை மாறுகிறது. திருப்பெருந்துறையுறை சிவனுக்குத் தாம் உடைமைப் பொருள் என்பதை உணர்கின்றார். திருப்பெருந்துறைச் சிவனுக்கு உடைமையாய்- அடிமையாய் வாழ விரும்புகின்றார். திருப்பெருந்துறைச் சிவனைக் கூவி அழைக்கின்றார். திருப்பெருந்துறைச் சிவனுக்கு உடைமைக்காரராய் வாழாது கழித்த நாளை நினைந்து இரங்குகின்றார். இதனால், திருப்பெருந்துறைச் சிவன் தன்னைத் தன் உடைமைக்காரன் என்று ஏற்பானா? அங்கீகரிப்பானா? புறத்தே தள்ளி விடுவானோ எண்ணி அழுதரற்றிப் பாடிடும் பாடல்கள் என்பையும் உருக்குந்தகையன. பழைய அடியார் நின்பால் வந்தார், நானும் நோயும் புறமே போந்தோம் என்று பாடுகின்றார். இறைவனை, திருப்பெருந்துறைச் சிவனைக் காண நாணி நிற்பதாகப் பாடுகின்றார். "இறைவனுக்கு உடைமைப் பொருளாகிவிட்டால் அவன் வாழ்விப்பான்! பாரம், தோள் மாறும்!" "என்ன குறையும் இலோம்" என்று வாழலாம். மாணிக்கவாசகரின் துன்பம் நீக்க, திருப்பெருந்துறைச் சிவன் குதிரைச் சேவகனாக, கொற்றாளாக வந்தருளிய பாங்கினை அறிக.

இறைவன் உறவே பழைய உறவு! இருள் மலத்துள் மூலையில் முடங்கிக் கிடந்த ஆன்மாவைக் கருவி, கரணங்களுடன் இணைத்துப் பிறப்பில் ஈடுபடுத்தி அறிவொளிக் கதவைத் திறந்ததே இறைவன்தானே. இறைவன் நமக்கு நன்றே செய்தான்! யாதொரு பிழையும் செய்தானில்லை! இறைவன் ஆன்மாவுக்கு மானுடம் என்ற மதிப்புயர் வாழ்க்கையைத் தந்தருளினான். மானுடம் என்ற நிலை, வரலாறு படைப்பது. மானுடம் ஆற்றல் மிக்கது; படைப்பாற்றலுடையது. அறிவுப்

புலன்கள்! படைப்பாற்றல் உடையது உடல்! படைப்பாற்றலுக்குரிய உலகம்! அன்பு சுரக்கும் இதயம்! அம்மம்ம! இந்த மானுடப் பிறவியின் ஆற்றலை வியந்து எழுத ஏது சொற்கள்! அற்புதமானது! அற்புதமானது! மானுடமாகிய வாழ்நிலையை ஆன்மாவுக்கு இறைவன் தந்தருளினன். இறைவனால் யாதொரு குறையும் இல்லை! நமக்குத்தான் இறைவன் அளித்த மானுடப் பிறப்பின் அருமை புரியவில்லை! உலகம் பற்றிய அறிவு இல்லை! பொறிபுலன்களை ஆட்சி செய்யத் தெரியவில்லை. வண்டிக்காரன் மாடு இழுத்த வழிக்கு வண்டியை விட்டு விடுவது போல, நமது வாழ்க்கையை மனம் என்ற குதிரை இழுத்த வழி விட்டுவிட்டுத் துன்பத்தை விலை கொடுத்து வாங்கிக்கொண்டு அழுகின்றோம்; புலம்புகின்றோம்! இந்த உலகம் துன்பமானது என்று முகாரி ராகம் பாடுகின்றோம். வாழ்க்கையைக் கசப்பாக்கிக் கொண்டு ஒன்று கொலை செய்கின்றோம். அல்லது தற்கொலை செய்து கொள் கின்றோம்! ஏன் இந்த அவலம்?

இன்பமாக வாழ இறைவன் மானுடம் என்ற பதத்தை அருளினன். இறைவன்பால் குறையில்லை! என்றும் இன்ப மாக வாழலாம். ஆனால் நாம் மானுடத்தின் இயல்பு அறியாது கெடுத்தோம்! கெட்டுப்போனோம்! இம்மை யையும் இழந்தோம்! மறுமையையும் இழந்தோம்! இறைவனுக்கு உடைமைக்காரனாகாமல் பொறிகளுக்கே உடைமையானோம். நம்மை உடைமையாகப் பெற்ற பொறி களும் புலன்களும் இச்சைக்கு ஆளாக்கி அடிமையாக்கி இந்த வாழ்க்கையை சொத்தையாக்கி விட்டன. நன்னெறிப் படுத்தும் பழைய அடியாரொடும் கூடுவதில்லை. மாறாக நகர் திரிதரு நம்பியருடன் கூட்டு! வறுமொழியாளரொடு கூட்டு! வம்பப் பரத்தரொடு கூட்டு! இதனால் வாழ்நிலை பின் தங்கிவிட்டது! என்னை ஒத்தார் எங்கோ சென்று உயர்ந்து விட்டனர். நமது நிலை பின் தங்கிய நிலை. வாழ்வு பின் தங்கியது மட்டுமா? நோய்க்கு விருந்தானோம்!

இதிலிருந்து தப்ப என்ன வழி! மானுடம் என்ற பதந்தந்த வாழ்முதலை, இறைவனை நினைந்து நினைந்து அவனுக்கு உடைமைப் பொருளாக எண்ணி அருள் பாலிக்கும் பணிகளைச் செய்து வாழ்தலே வழி! இந்த வழியில் செல்வதற்குத் திருவாசகம் துணை!

என்னால் அறியாப் பதந்தந்தாய்
யான தறியா தேகெட்டேன்
உன்னால் ஒன்றும் குறைவில்லை
உடையாய் அடிமைக் காரென்பேன்
பன்னாள உன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடியா ரொடுங் கூடாது
என் நாயகமே பிற்பட்டிங்கு
இருந்தேன்! நோய்க்கு விருந்தாயே!

(ஆனந்தமாலை–2)

## அடியாரில் கூட்டிய அதிசயம்!

ஆ, அதிசயம்! நினைப்பிற்கு எட்டாததாக நடப்பது அதிசயம்! எதிர்பார்ப்பு இல்லாமல் நடப்பது அதிசயம்! அதிசயம் வியப்பில் ஆழ்த்துவது! அனுபவிப்பவனை அதிர்ச்சிக்குள்ளாக்குவது அதிசயம்! புரவலன்போலத் தோற்றமுடையோன் இரவலன் போல நடந்து கொள்ளுதல் இயல்பாக நிகழாத ஒன்று! ஆதலால், அதிசயம்! ஏன் பணமும் பதவியும் மனிதனைப் போதைக்கு இரையாக்கித் தலைகீழாகவே நடக்கச் செய்யும்! மாறுபட்ட ஒன்று அதிசயம்! இன்றோ மனிதன் மனிதனாக நடந்து கொள்ளுதலே அதிசயக் காட்சியாகி விடுகிறது!

மாணிக்கவாசகர் வரலாற்றில் அதிசயங்கள் பல நடந்தன. நரிகள் பரிகளானது அதிசயம்தானே! தேவர்கோ அறியாத தேவன் கொற்றாளாய் வந்து மண் சுமந்தது அதிசயம்தானே! யாவரும் விரும்பும் அமைச்சுப் பதவியை

மாணிக்கவாசகர் நச்சாது அருளாளரானது அதிசயம் தானே! வான்பழித்து இம் மண் புகுந்து இறைவனால் மாணிக்கவாசகர் ஆட்கொள்ளப் பெற்றதும் அதிசயம் தானே! இனிய தமிழ், இன்பத் தமிழ் தேனூறும் திருவாசகமாக என்புருக்கும் பாடல்களாக அமைந்தமையும் அதிசயம் தானே! இறைவனின் கருணையை இனந்தெரியாத உணர்வில் மாணிக்கவாசகர் அனுபவித்ததின் விளைவு அதிசயப்பத்து.

'நீதி' என்றால் என்ன? மகவெனப் பல்லுயிரும் ஒக்கப் பார்த்து ஒழுகுதல் நீதி! விருப்பு- வெறுப்புக்களைக் கடந்து யார்மாட்டும் ஒத்த நிலையில் பழகுதல் நீதி! அவரவர்க்குரியன கிடைக்குமாறு செய்தல் நீதி! கொள் வனவும் கொடுப்பனவும் மிகைபடாமலும் குறைவுபடாமலும் நிகழ்வது நீதி! அகனமர்ந்த ஒழுகுமுறை நீதி! இன்பம்-துன்பம் இவற்றினால் பாதிக்கப்படாமல் ஒரு நிலையாய் நிற்றல் - ஒழுகுதல் நீதி! நீதி-குணம் நீதிக்குணம் மேவிச் செயலில் பொதுமை பொதுளல் நீதி சார்ந்த வாழ்க்கை. நீதியே உலகத்தின் நியதிகளை, முறைமைகளைத் தோற்றுவிக்கின்றது. இயற்கையாய் அமைந்த நீதியிலிருந்தே அரச நீதிகள் பிறந்தன. ஆனால் இயற்கையாய் அமைந்துள்ள நீதியை அரச நீதிகள் பிறழ்ந்த வரலாறுகள் உண்டு. இயற்கையாய் அமைந்த நீதி யாண்டும் மாறியதில்லை!

மனித குலம் தொடக்கத்தில் நீதியைச் சார்ந்து வாழ்ந்திருக்கவேண்டும். அப்போது கூட்டு வாழ்க்கையும் கூட்டு உழைப்பும் இருந்தன; ஆக்கிரமிப்புக்கள் இல்லை; சுரண்டல் இல்லை. ஆதலால் ஆதிகாலத்தில் மனித வாழ்க்கையில் நீதி இருந்தது. மனிதனின் உடல் வலிமை வளர, வளர, புத்திக் கூர்மை வளர வளர நீதி கெட்டது. பாபக் கழுவாய் முறைகள் தோன்றியதன் விளைவாக பாபங்கள் பெருகி வளர்ந்தன. கடவுளுடன் பேரம் பேசலாம் என்ற நிலை, நீதியை தாழ்த்திவிட்டது! இன்று மனிதன்

நீதியைப் பற்றிச் சிந்திப்பதில்லை. தனது வாழ்க்கைக்கு இசைந்தது எதுவோ அதுவே போதும் என்ற நிலை ஏற்பட்டுள்ளது. இயற்கை நியதிகளுக்கும் நீதிகளுக்கும் சட்டங்கள் மாறுபடுகின்றன. ஏன்? மனிதனின் பலவீனத்தி லிருந்தே சட்டங்கள் தோன்றின. அந்தச் சட்டங்களையும் மனிதன் இன்று மதிக்கத் தவறுகின்றான்.

இன்று எது நீதி? அவரவரும் நினைத்துக் கொண்டி ருப்பதே 'நீதி' என்று கருதுகின்றனர். இன்று எங்கு நோக்கி னாலும் நீதிக்கும் இயற்கை நியதிக்கும் முரண்பட்டவையே நீதியாகக் கருதப்படுகின்றன. பண்டு உலகத்தை இயக்கியது "வல்லாண்மை"யேயாம்! வல்லாண்மையுடையது வாழும். இது நியதி; நீதி! ஆனால், இயற்கையாய் அமைந்த சமயஞ் சார்ந்த நீதி, வல்லார்க்கு மட்டுமல்ல வாழ்வு, வல்லாண்மை இல்லாதாருக்கும் வாழ்வுண்டு, உரிமையுண்டு என்பதே. நீதிக்கு வேற்றுமை இல்லை; எல்லை இல்லை! காய்தல் இல்லை- உவத்தல் இல்லை! நீதி சார்ந்த வாழ்க்கைமுறை இன்பந்தரும். இந்த வையகத்திற்கு இன்றையத் தேவை நீதி சார்ந்த வாழ்க்கை முறையே!

சிவநெறி- சைவ நெறி தொன்மையானது. ஆதலால், சிவநெறி போற்றும் சிவன், நீதியாய் நிற்பவன்! இன்று பணம் பத்தும் செய்கிறது! இன்று பணத்தினால் விலைக்கு வாங்க முடியாதது ஒன்றில்லை! பணமும் அறிவுக் கூர்மையும் இன்று உலகத்தையே ஆட்டிப்படைக்கின்றன. பணமும் அரம்போல் கூர்மையான அறிவும் உடையவர்கள் இன்று நீதியையே விலை பேசுகின்றனர். ஆனால், சிவநெறி இயல்பு இதற்கு முரணானது.

சிவபெருமான் நீதியே வடிவமானவன்! சிவபெரு மானை பணபலமுடைய திருமால் தேடியும் காண முடியவில்லை; நான்கு வேதங்களின் தலைவனாக அறிவின் சின்னமாக விளங்கும் நான்முகனாலும் தேடிக்காண

இயலவில்லை! ஆனால், திருவாரூரில் பரவையார் வீட்டு வாயிற்படிகளில் சிவபெருமான் திருவடிகள் தோய்ந்தன. ஆதலால் கடவுள் ஆற்றல்மிக்க அன்புவலையில் படுவோன்; பக்தி வலையில் படுவோன்! இதனைத் திருவாசகம்,

> "பங்கயத்து அயனும் மால் அறியா
> நீதியே"

என்பதால் அறியலாம்.

சிவபெருமானின் திருவுருவம் நீதி, சிவனவன் திருநாமம் நீதி என்று உறுதியாகிறது. சிவனைச் சார்ந்த சமயநெறி சிவநெறி. சைவம்– சைவ சமயம் நீதியேயாம்! சைவ நெறியில் கடவுளும் கூடத் தாம் விரும்பியபடி செய்ய இயலாது. ஆன்மாக்களின் தகுதிப்பாடே சிவனின் அருளிப் பாட்டுக்குக் காரணம். ஆன்மாக்களைப் பக்குவப்படுத்தும் முயற்சியை, கருணையை இறைவன் காட்டலாம். ஆயினும் தகுதியுடையதே வளரும்; வாழும். சிவன் அருளைப் பெறும்! திருவாரூர் இறைவனைத் தோழமையாக நம்பியாரூரர் பெற்றது உண்மை! ஆயினும் வாய்மை பிறழ்ந்தபொழுது, சொல் பிறழ்ந்த நிலையில் கண்ணொளியைப் பறித்த வரலாற்றை ஓர்க! உன்னுக!

காரைக்காலம்மையார் தவம் செய்த தவம்! இறைவ னாலேயே 'அம்மை' என்று அழைக்கப்பெற்ற புண்ணியவதி! ஆயினும் அம்மையின் விருப்பம் பிறப்பறுக்க வேண்டும் என்பது. பிறவி நீக்கத்திற்குரிய தகுதி இல்லையெனில் என்ன செய்வது? இறைவன்தான் என்ன செய்ய இயலும்? ஆதலா்ல்,

> "பிறவாமை வேண்டும் மீண்டும்
> பிறப்புண்டேல் உன்னை என்றும்
> மறவாமை வேண்டும்"

என்று அம்மையார் அருளிய குறிப்பினை உணர்தல் அவசியம்! சேக்கிழார்,

*"செய்வானும் செய்வினையும்*
*அதன் பயனும் கொடுப்பானும்*
*உய்வகையால் நான்காகும்*
*விதித்த பொருள்"* (சாக்கியர். புரா. 5)

என்றருளியதும் இக்கருத்தினையே அரண் செய்கிறது. ஆதலால் எல்லாருக்கும்- கடவுளுக்கும் கூட நீதிமுறை உண்டு என்பது சிவநெறியின் தனித்தன்மை. இறைவன் உயிர்களை ஆட்கொள்வதற்குப் பணிகளை வழங்குவது நீதிக் குணமேயாகும்.

மாணிக்கவாசகர் அமைச்சுப் பதவியில் இருந்தார். அரசாணையை நிறைவேற்றுதலே அமைச்சருக்குரிய பொறுப்பு; கடமை! இதில் நீதி சார்ந்தவைகளும் இருக்கலாம். நீதி சாராதவைகளும் இருந்திருக்கலாம். வரிப் பணத்தில் குதிரைகள் வாங்கப் போனது நீதிக்கு முரண்தானே! பணியாளர் - அமைச்சர் என்ற பொறுப்பின் வழி மன்னன் ஆணையை நிறைவேற்ற வேண்டியது அமைச்சரின் பணி. மாணிக்கவாசகரின் பணி, இந்தப் பணியை விலக்கிக் கொண்டது அரசியல் ரீதியில் நீதியாகாது; அறநெறி அடிப் படையில் நீதியாகும். குதிரை வரும் என்று சொன்னதும் நீதிக்கு முரணேயாகும். ஏன்? பரிகள் நரிகளாகியதும் நீதிக்கு முரண்தானே! இந்த நிகழ்வினை மாணிக்கவாசகர் சிந்தித்துப் பார்க்கிறார்? அதனால்,

*"நீதி யாவன யாவையும் நினைக்கிலேன்"*

என்று கூறுகின்றார். மாந்தரில் சிலர் இயல்பாகவே நன்னெறி நிற்பர். நீதியைச் சார்ந்து ஒழுகும் சான்றோரின் உறவு கிடைத்தால் அவர் தம்முடன் உள்ள கூட்டத்தின் தாக்கமாக நன்னெறி நிற்கும்- நீதியைச் சார்ந்தொழுகும் பெற்றிமையும் கிடைக்கும். மாணிக்கவாசகர் இயல்பாக நீதியை நினைக்க வில்லையாம்! நீதியை நினைப்பவருடன் கூடாமல் அரசு அதிகாரத்தைச் சார்ந்தவருடன் கூட்டு ஏற்பட்டு

விட்டமையைக் குறிப்பிடுகின்றார். நீதி சார்ந்த வாழ்க்கை வாழாத வரையில் பிறவி நீங்காது; பிறந்து இறந்து உழலுதலும் தவிர்க்க முடியாதது என்பது திருவாசக உண்மை.

நீதியைச் சார்ந்து நீதிமானாக வாழ்ந்தாலே பிறவி நீங்கும். நீதியொடு தொடர்பிலாத இரங்கத்தக்க வாழ்க்கை வாழும்பொழுது கடவுளின் கருணை கிடைக்காது. மன்னித்து மதிப்பளிக்கத் தாயின் கருணை தேவை! எனவே, "பாதி மாதொடுங்கூடிய பரம்பரன்" ஆட்கொள்கின்றான்.

இறைவன் நிரந்தரம்; நீதி நிரந்தரம். 'நிரந்தரமாய் நின்ற ஆதி' என்ற தொடர் ஆழ்ந்த சிந்தனைக்குரியது. ஆம்! நாளும் உலகில் மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. பண்டு இருந்த பல நாடுகள் இப்போது இல்லை. ஆறுகள் இல்லை. மலை, கடலாகி இருக்கிறது. கடல், மலையாகி இருக்கிறது. சில உயிரினங்கள் அழிந்து போயின. வல்லாண்மை வாழும் போராட்டத்தை நடத்திக் கொண்டே இருக்கிறது. இதற் கிடையிலும் இந்த உலகம் நிலைபெற்று இருக்கிறது என்றால் எப்படி? எதனால்?

சிறுமைகளைக் கடந்த பொருள் பொதிந்த புகழுக்குரியவர்கள் செய்த தியாகங்களின் பயனாக உலக வரலாறு இயங்கிக் கொண்டே இருக்கிறது. இப் புவிக் கோளத்தில் மனித குலம் அழிந்துவிடவில்லை. ஏன்? எதனால்? நீதி உணர்வு நிலை பெற்றிருப்பது ஒரு காரணம் அதுமட்டுமல்ல. நீதி என்றும் நிலையானது.

"மனிதனை நேசி!" "மனிதத்தைப் போற்று!" "பிறர் பங்கைத் திருடாதே!" "பிறர்க்கென முயலும் நோன்பினைக் கொள்க!" "பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புக!" "எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணுக!" – இன்னோரன்ன நீதி சார்ந்த வாழ்க்கை நெறிகள் என்றும் எப்பொழுதும் நிலைத்திருக்கக் கூடியன. இவையே நீதி, எந்த யுகத்திற்கும் இந்த நீதி தேவைப்படும். ஆதலால், நீதி நிலையானது. நீதி, கடவுளின்

மறு உருவம். நீதியே கடவுள்; கடவுளே நீதி. கடவுள் பிறப்பதும் இல்லை; இறப்பதும் இல்லை. கடவுள் என்றும் பேராற்றல் உடையவன். வரம்பில் இன்பம் உடையவன். என்றும் அவன் எண்குணத்தான்; இறைவன் தன்வயத்த னானவன். ஆதலால் இறைவனுக்கு மாற்றம் இல்லை. இறைவன் நிரந்தரமாய் நின்றருள்கின்றான்.

இறைவன் காலங் கடந்தவன்; அநாதி. உயிர்கள் கால தத்துவத்திற்குட்பட்டவை. ஆதலால் ஆதி! ஆதியாக வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கிய ஆன்மாக்களுக்கு ஆதி யாகவும் நின்றருள் செய்கின்றான் இறைவன்! ஆம், இறைவன் அநாதி! ஆதி! அந்தம்! ஆனாலும் எந்த நிலையிலும் இறைவன் பாதிக்கப்படுவதில்லை! பிறவி தோறும் ஆன் மாக்கள் பந்தங்களுக்கு ஆளாகின்றன; அதனால் பாதிக்கப் படவும் செய்கின்றன! ஆனால், இறைவன் பாதிக்கப்படவும் செய்கின்றன! ஆனால், இறைவன் எந்தச் சூழ்நிலையிலும் பந்தமற்றவன்; பாதிக்கப்படாதவன். கடையூழிக் காலத்தில் உலகம் இல்லை. ஆயினும் கடவுள் – இறைவன் உள்ளான்! இறைவன் நிரந்தரமாக இருப்பதால்தான் உயிர்க் குலத்திற்கு ஆதியாக விளங்க முடிகிறது. கடையூழிக் காலத்திலும் இறைவன் உலகை மீண்டும் தோற்றுவித்து உயிர்களுக்குப் புத்துயிர்ப்பை வழங்குகின்றான். இறைவன் நிரந்தரமாக இருந்தால்தான் இந்த உலக இயக்கத்தை, உயிர்க்குல இயக்கத்தை நிரந்தரமாக இயக்கமுடியும். இறைவன்– கடவுள் **அநாதி**, காலதத்துவத்தைக் கடந்தவன். இறைவன்– கடவுள் **உயிர்களை** நோக்க ஆதி! உயிர்களுக்கு வாழ்வளிப்பவன்! **இந்த உலகம்** இடையீடின்றி இயங்க ஐந்தொழில் நிகழ்த்துபவன். ஆதலால் இறைவன் நிரந்தரம்; ஆதி!

நிரந்தரமான ஆதியைச் சாரும் உயிரினங்கள் செத்துப் பிறக்கும் தொழிலுக்கு இரையாகா, நிரந்தரமாக இறைவன் திருவடி நிழலில் இன்ப அன்பில் வற்றாத முற்றாத ஆனந்தப் பெருவெள்ளத்தில் திளைத்திருக்கும். ஆம்! இறைவன்

கு.தி.VIII.10.

நிரந்தரம்! ஆதி! உயிர் நிரந்தரம்! ஏன்? ஆணவம் கூட, தன் கொட்டமடங்கிக் கிடக்கும். அதற்கும் கூட அழிவில்லை! அழிவில்லாத நிரந்தரமான கடவுள் சந்நிதியில் அழிவு ஏது? மாற்றங்களே நிகழும்! இறைவனையும் நீதியையும் சார்ந்து வாழும் உயிர்களும் நிலையாக இன்ப அன்பில் தங்கி இன்புறும்.

*நீதி யாவன யாவையும் நினைக்கிலேன்*
*நினைப்பவ ரொடுங் கூடேன்*
*ஏதமே பிறந்திறந் துழல்வேன் தனை*
*என்னடி யான் என்று*
*பாதி மாதொடுங் கூடிய பரம்பரன்*
*நிரந்தர மாய் நின்ற*
*ஆதி யாண்டுதன் அடியரிற் கூட்டிய*
*அதிசயம் கண்டோமே!*

(அதிசயப்பத்து–2)

## திருவாசகத் தேன்

செய்து முடிக்க வேண்டிய பணிகளுக்கு ஏற்பத் திறம் வேண்டும். பணிகளின் பாங்கிற்கேற்பத் திறமை இருந்தாலே தலைமை, நிலை நிற்கும். மாணிக்கவாசகர் சிவன் எம்பிரானைப் போற்றிப் புகழ்ந்து பாடுகின்றார். நீத்தல் விண்ணப்பத்தில் ஒரு பாடலில் தன் குறையை இரண்டு வரிகளிலும் இறைவன் புகழை நான்கு வரிகளிலும் பாடுகின்றார். ஏன்?

பிறவிக் கடலை நீந்த வேண்டுமே! நீந்திக் கரையேற வேண்டுமே! அதுவும் சாதாரணக் கடலா? பெருங்கடல்! அந்தக் கடலில் மலங்கள் ஐந்தின் சுழல்! அதில் சிக்கிக் கொண்டு மத்திடை அகப்பட்ட தயிர்போல் சுழலும் தன்னை இறைவன் கைவிடாமல் எடுத்தாள வேண்டுமே என்ற கவலையில் பாட்டுப் பிறக்கிறது.

சிவன் எம்பிரான், மேரு மலையையே வில்லாகக் கொண்டு போர் செய்தவன். அத்தகு பெரியோனுக்குத் தன்னை ஆளுதல் மிக மிக எளிமையான ஒன்று. அது மட்டுமா? இறைவன் கொன்றை மாலை அணிந்திருக் கின்றான். சிவபெருமான் அணிந்துள்ள கொன்றை மாலை அவனே உலகிற்கு முதல்வன்- தலைவன் என்பதனை உணர்த்துகின்றது. தலைவனாக விளங்குபவன் தன்னைச் சார்ந்தாரை எடுத்தாளாமல் கைவிடுதல் அழகன்று என்று உணர்த்தும் பாங்கறிக. கொன்றை மாலை ஓங்கார பிரணவ வடிவமாயுள்ளது. ஓங்காரம் வேதம் முதல் அனைத்துக் கலைகளுக்கும் முதலாகும். ஓங்காரத்தின் பொருள் சொல்லத் தெரியாமல் நான்முகன் வாங்கிய குட்டை, நினைவில் கொள்வது நல்லது. இந்த உலகத்தின் முதல் ஒலி 'ஓம்'! இந்த உலகத்தின் முதல் எழுத்து 'ஓம்'! இறைவனே ஓங்கார வடிவினன். சிவலிங்கத் திருமேனியில் பீடம் (ஆவுடை) விந்து, இலிங்கம் நாதம் என்று சாத்திரம் கூறும். நாம் ஏதாவது எழுதத் தொடங்கினால் பிள்ளையார் சுழி போடுகிறோம். அதுவும் ஓங்காரம்தான். விந்து பக்கத்தில் நாதவடிகை இட்டு எழுதுதல் பிள்ளையார் சுழி. அ+உ+ம்=ஓம் ஆயிற்று. இறைவா, சிவனே! ஆன்மாக்களின் வாழ்க்கைப் பயணத்திற்குப் பிள்ளையார் சுழி போட்டவனே நீதானே! பிள்ளையார் சுழி போட்டு வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கி வைத்த இறைவன் அந்த பயணத்தை இனிதே முடித்து வைக்க வேண்டாமா? காத்தருள வேண்டாமா? 'ஓம்' என்றால் காப்பவன் என்பது பொருள் அல்லவா? என்றெல்லாம் வினாக்கள் எழுகின்றன. இறைவனுடைய கொன்றை மாலையைச் சிந்திக்கும் பொழுது!

இறைவன் தனக்குவமை இல்லாதவன். தமிழ் மறையும் 'தனக்குவமை இல்லாதான்' என்று கடவுளைப் போற்றுகிறது. அப்பரடிகள் "உவமன் இலி" என்றார். நபிகள் நாயகமும் "கடவுளுக்கு உவமையாக- ஈடாக எதையும் கூறக்கூடாது"

என்றார். ஆம், கடவுளே தனக்குவமை யில்லாதவன். கடவுளுக்குத்தான் பிறப்பில்லை; இறப்பில்லை; வேண்டுதல் இல்லை; வேண்டாமை இல்லை; எல்லைகள் இல்லை. ஆதலால், கடவுள் தனக்குவமை இல்லாதவன். தனக்குவமை இல்லாதவனாக இருப்பதனால் என்னை எடுத்தாளுதல் எளிது. சிவன் எம்பிரான் தனக்குவமையில்லாதவனானாலும் மேருவை வில்லாகக் கொண்டவன். ஆயினும் எனக்கு எளியவன்; தண்ணளியிற் சிறந்தவன். தாமரைக்காடு அனைய திருமேனியுடையவன். இவ்வளவு சிறப்புக்களும் உடைய இறைவன் என்னை எடுத்தாளாமல் விடக்கூடாது!

நான் ஐந்து மலங்களின் சுழலில் கிடந்து உழல் கின்றேன்; கரையேறுவது தெரியாமல் தத்தளிக்கிறேன். ஆணவம் என்னைக் குருடாக்குகிறது; இருட்டறையில் கிடத்தியிருக்கிறது; மூலையில் முடக்கிப் போட்டுவிட்டது.

ஆன்மாவுக்கு ஆணவம் ஓர் அழுக்கு. அதனாலேயே ஆணவமலம் என்ற வழக்கு வந்தது போலும்! ஆன்மாவுக்கு ஆணவத்துடன் உள்ள சம்பந்தம் அநாதியானது. ஆணவ மலம் ஆன்மாவைச் சிற்றறிவு உடையதாக்குகிறது. சிறு தொழில் உடையதாகச் செய்கிறது. ஆன்மாவைச் சிறுமைத் தனம் பொருந்திய நிலையதாக்குவது ஆணவத்தின் இயல்பு. ஆன்மாக்கள் தோறும் ஆணவத்தின் பந்தம் கூடும்; குறையும். இயல்பாக ஆன்மாவுக்கு அறிவு உண்டு; தொழில் உண்டு. ஆயினும் ஆன்மா ஆணவத்துடன் கலந்திருந்ததாலே ஆணவம் அறிவை மறைத்து விட்டது. தொழிலையும் மறைத்துவிட்டது. இருளிடைப்பட்ட கண், ஒன்றையும் காணாது. அதுபோல இருள் மலமாகிய ஆணவத்தின் வயப் பட்ட ஆன்மாவின் நிலையும் ஆனது; அதனால் ஆன்மா தன்னையும் காண இயலவில்லை; தன்னுடைய தலை வனையும் உணர இயலவில்லை. இது ஆணவத்தின் மூல நிலை. ஆன்மா திருவருட் துணையால் பிறவி எடுத்து வினைகள் இயற்றும் போது ஆன்மாவின் ஆணவம் கேடே

செய்கிறது. ஆன்மா வினைகள் இயற்றும்போதும் இன்ப துன்பங்களை நுகரும்போதும் "நான் செய்கிறேன்," "நான் நுகர்கிறேன்" என்று எண்ணி செருக்கடையச் செய்கிறது. இதுவே, ஆணவத்தினைச் சார்ந்த ஆன்மாவின் நிலை. ஆணவம், ஆன்மாவை இயல்பாக எப்போதுமே பற்றி யிருப்பதால் இதை "மூல நோய்" என்று திருமுறைகள் கூறும். ஆணவம் இருளினும் கொடியது. காரணம் இருள், தன்னைக் காட்டும்; காணக்கூடிய பொருளை மறைக்கும். ஆணவம், தன்னையும் காட்டாது; தன் செயலையும் காட்டாது. ஆணவச் சார்பினால் ஆன்மாவுக்கு அறிவு இல்லாமல் போகிறது; விருப்பமும் இல்லை; செயலும் இல்லை.

ஆன்மா, இனங்கண்டு கொள்ள இயலாமல் ஒடுங்கிக் கிடக்கும்; முடங்கிக் கிடக்கும். ஆன்மாவுக்கு இது கேவலம். அதனால் ஆணவத்துடன் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாவின் நிலைமையை கேவலாவத்தை என்று மெய்கண்ட நூல்கள் கூறும்.

இந்த நிலையில் சிவன் எம்பிரான் கருணையால் ஆன்மா, மாயையிலிருந்து உடலையும் உலகையும் பெற்று வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்குகிறது. ஆணவத்தின் ஆதிக்கத்திலிருந்து ஆன்மாவை மீட்க சிவன்- பரம்பொருள் மாயை, கன்மம் என்று இரண்டு கூடுதல் மலங்களைச் சேர்க்கிறான். அதாவது அழுக்குத் துணியை வெளுக்க உவர் மண்ணைச் சேர்ப்பதைப்போல்! மாயை கன்மங்கள் உபசார வழக்காலேயே மலம் என்று கூறப்படுகிறது. மாயை, கன்மம் என்ற மலங்களுடன் சேர்க்கை கிடைத்தவுடன் ஆன்மாவுக்கு விருப்பம். ஞானம், செயல் ஆகிய மூன்றும் அமையும். இந்த நிலைகள் மாறிமாறி வந்து பொருந்தும். இந்த நிலையில் ஆன்மா, அறிவும் தெளிவும் இல்லாமல் நிலையில்லாதவற்றை நிலையாயின போலவும் நிலையானவற்றை நிலையில்லாதன போலவும் எண்ணும். நல்லன தீயனவாகும். தீயன நல்லனவாகும். இது மயக்க நிலை. ஒரு மலமாகிய ஆணவத்

துடன் கூட்டுநிலை இருள்மல நிலை. மாயை, கன்மம், ஆணவம் ஆகிய மும்மலத்துடன் கூட்டு நிலை மருள் நிலை. இந்த நிலைமைகளிலிருந்து ஆன்மா பூரண அறிவுப் பொலிவுடன் விடுதலை அடைய வேண்டும். அதாவது இறவாத இன்ப அன்பு நிலையை அடைதல் வேண்டும். இந்த நிலை அருள்நிலை.

கருமம்- வினைத் தொடர்பு ஆன்மாக்களுக்குக் கிடைத்த பிறகே ஆன்மாக்கள் பிறவி எடுக்கின்றன. அவரவர் செயலுக்கு ஏற்ற பயனைத் துய்க்குமாறு செய்தல் நியதி. துய்த்தலினால் ஆன்மாவின் மலங்கள் கரையும்; மலங்கள் செயலிழக்கும். ஆனால் துய்க்கும் பொழுதும் 'நான்', 'எனது' என்ற உணர்வுடன் துய்த்தால் பற்றின் காரணமாக மலங்களின் பிடி இருக்கும். இதனால் செத்துப் பிறத்தல் தொடரும். செய்யும் வினைகள் மட்டுமே பிறப்பிற்கு வித்தாகா! செய்யும் செயல்களின் நோக்கமே காரணமாக அமையும். இங்ஙனம் மும்மலம் என்று பேசுவது பெரு வழக்கு. மாணிக்கவாசகர் "ஐம்மலங்களிற் கிடந்துழல்வேன்" என்கிறார்.

மாயை, சுத்த மாயை என்றும், அசுத்த மாயை என்றும் இருவகைப்படும். அசுத்த மாயையின் காரியம் மாமேயம் எனப்படும். மாமேயம், கால தத்துவம் முதல் நிலம் ஈறாக உள்ள தத்துவங்களும் உலகங்களும் உலகத்துப் பொருள்களும் இவற்றால் வரும் போகமும் ஆகும். திரோதானம் ஐந்தாவது மலம். சிவசக்தியே திரோதான சக்தியாகத் தொழிற் படுகிறது. திரோதான சக்தியே (மறைக்கும் ஆற்றல்) ஆன்மாவுக்கு மலங்களின் செயற்பாட்டைப் பக்குவப்படுத்தி உய்திச் சாதனைகள் (மலபரிபாகம்) ஏற்படத் துணை செய்கிறது. இதுவும் மலம் என்று உபசாரமாகக் கூறப்பெறும். இவ்வைந்து மலங்களும் உயிர்களை- ஆன்மாக்களைப் பொருந்தி இயக்குகின்றன. இந்த நிலையில் ஆசைகள், விருப்பு

வெறுப்புக்கள், இன்பங்கள் துன்பங்கள் ஆகியவற்றில் உழலும் நிலையை "ஐந்து மலங்களில் கிடந்து உழல்வேன்" என்றார்.

மாணிக்கவாசகரின் அனுபவம் மலங்களின் ஆற்றல் அடங்கிய நிலை; ஒடுங்கிய நிலை; உய்யும் நெறியில் செல்லும் நிலை. ஆன்மாவில் வந்து பொருந்தும் குலம் களையப் பெற்று விட்டது; குற்றங்களும் களையப்பட்டுவிட்டன. இவை யிரண்டும் அற்ற நிலையே நன்னிலைதான்! ஆயினும், நிறைநலம் சார்ந்த பக்குவம் அல்ல. அதனால் மாணிக்க வாசகர் தன்னைக் கைவிடாது அருள்பாலிக்கும்படி வேண்டு கின்றார். என் மலங்களின் ஆற்றல் வலியது. ஒரு சிறு இடுக்கில் கூட நுழைந்துவிடும். பழக்கவாசனை பொல்லாதது. அதனாலேயே பழக்கம் தவிரப் பழகுமின் என்றார்கள்.

இறைவனே! சிவனே! அனைத்துயிர்களுக்கும் மங்கலம் செய்பவனே! ஆணவத்திலிருந்து என்னை மீட்டு எடுப்பாயாக! என்னை ஆணவம் இயல்பாகப் பற்றியது! அதாதியிலேயே பற்றியது! நானும் ஆணவத்துடன் இரண்டறக் கிடந்துழல்கின்றேன்! இறைவா நீ, என்னை ஆணவத்திலிருந்து மீட்க மாயையை விளக்காகக் கொண்டு அந்த ஒளியில் கரையேறுமாறு பணித்தனை! ஆனால், நானோ மாயையில் கட்டுண்டு அதுவே சொர்க்கம் என்று கிடந்துழல்கின்றேன். சாதனத்தைச் சாத்தியம் என்று எண்ணி மயங்கிக் கிடக்கின்றேன். எந்த ஒரு தீமையும் நன்மையின் வழியிலேயே மறையும்; மறைய வேண்டும். இது நியதி. அதனால் நீ எனக்கு நல்வினைகள் செய்தலுக்குரிய அறியும் கருவிகள்- செய் கருவிகளைத் தந்தருளினை. ஆனால் நானோ தீவினையே பெருக்கி வாழ்கின்றேன்! இறைவா உன்னுடைய திருவருட் சக்தியே என் பொருட்டுத் திரோதான சக்தியாக உருக்கொண்டு மறத்தல் செய்யினும் நான் நினைவுப் புலனை மேலும் ஆழமாக இயக்கி மறக்க வேண்டியவற்றை மறக் காமல் வன்கண்மை கொண்டு வல்வினை செய்து வாழ்

கின்றேன். ஆக, நான் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் ஆகிய ஐந்து மலங்களின் சார்பில் சிக்குண்டு உழல்கின்றேன். மத்திடை அகப்பட்ட தயிர்போல உழல் கின்றேன்! தயிர்- ஆன்மா! மத்து- ஐம்புலன்கள்! இறைவா, கன்மத்தின் வழி வினைவழி வந்த மிகப் பெரிய பொல்லாங் காகிய குலத்திலிருந்து என்னை மீட்டாய்! குலம், பிறப்பு- இஃது ஒரு தீச்சுற்று! இதிலிருந்து என்னை மீட்ட பெருமானே என்னைக் குற்றங்களிலிருந்தும் மீட்டாய்! என்று பேசுகிறார். குற்றம், ஆன்மாவின் புலன்களால் செய்யப்படுவது. அகக் கருவிகளைச் சார்ந்தது குற்றம். குறைகள் பொறிகள் வயப்பட்டவை. இறைவன் மாணிக்கவாசகரைக் குற்றங் களின்றும் மீட்டெடுத்து விட்டான்! குற்றங்கள் இல்லையேல் குறைகள் இரா! குறைகள் இல்லா நிலையில் குற்றங்கள் இல்லாமல் போகலாம். ஆனால் உறுதியாகக் கூறமுடியாது. அதனால்தான் மாணிக்கவாசகர்,

"களைந்தாய் என்னைக் குற்றம்"

என்று பாடுகின்றார்.

சிவனே! எம்பிரானே! என்னைக் குலத்திலிருந்து விடுபடச் செய்தனை! என் குற்றங்களைக் களைந்தாய்! இந்த நிலையில் என்னை முற்றாக எடுத்தாளுவாய்! மேருவை வில்லாக வளைத்த உனக்கு இது கடுமையான பணியல்லவே! உலகத்திற்குத் தலைவனாக விளங்கும் நீ, என்னை- அடைக் கலம் புகுந்த என்னைக் கைவிடலாமா? தனக்குவமை இல்லாத தலைவனே! ஐந்து மலங்கிடந்து உழலும் என்னை எடுத்தாண்டு கொள்க! என்று நெக்குருகப் பாடுகின்றார்.

**குலங் களைந் தாய்; களைந் தாய் என்னைக்**
**குற்றம், கொற் றச் சிலையாம்**
**விலங்கல் எந் தாய் விட் டிடுதிகண்**
**டாய்! பொன்னின் மின்னு கொன்றை**

*அலங்கல் அந் தாமரை மேனியப்*
*பா! ஒப்பி லாதவனே!*
*மலங்கள் ஐந் தாற் சுழல் வன்தயி*
*ரில்பொரு மத்துறவே!* (நீத்தல் விண்ணப்பம்–29)

## தொழும்பாய்ப் பணி செய்வோம்!

இறைவன் காலங்கடந்தவன்; கால தத்துவங்களைக் கடந்தவன்; காலாதீதன், காலகாலன். அங்ஙனம் இருக்க இறைவனுக்குப் பழைமை ஏது? புதுமை ஏது? ஆம்! உண்மைதான்! ஆயினும் இறைவன், ஆன்மாக்களை ஆட்கொள்ள வினை முதல். காரணப் பொருளாக அறிமுகம் ஆகும் காலந்தொட்டு இறைவனுக்குக் காலக் கணக்கிடுதல் தவறன்று. கடவுளைப் பழையோன் என்று அழைத்தல் பழைய மரபு. பழைமை– பழைமையினும் கால எல்லைக் கடந்த பழைமை என்பதை "முன்னைப் பழம் பொருள்" என்றார் மாணிக்கவாசகர். உலகியலில் காலப் பேரெல்லை ஊழி! பல்லூழிக் காலங் கண்டவனும் ஊழி முதல்வனும் ஊழிப் பெருங்கூத்து ஆடுபவனும் இறைவன்– கடவுள்! 'இடுகாட்டு எரி ஆடலாய் அமர்ந்தவன்' என்ற வழக்கும் உண்டு. இடுகாடு என்பது கால தத்துவத்திற்குட்பட்ட மனிதரை எரிக்கும் சுடுகாடு அல்ல; இறைவன் ஆடலமர்ந் தருளும் இடுகாடு! ஊழிப் பெருங்காலம்! ஊழியொருவனின் கூத்து! கடையூழிக் காலம் என்றும் கூறுவர்.

கடையூழிக் காலம் என்று கூறினும் மாயா காரய உலகினுக்கும் தேவர்களுக்குமே கடையூழி! இறைவன் கடையூழியைக் கடந்தவன். கடையூழியைச் சருவ சங்கார காலம் என்று புராணங்கள் கூறும். கடையூழியில் எல்லாம் அழிகின்றன. எல்லாம் கடந்த நிலையில் இறைவன் ஆடுதலை 'ஈமத்தாடி' என்றும் கூறுவர். ஈமம், இடுகாடு என்பது இடம் பற்றிய குறிப்பு அல்ல. காலம் பற்றிய சிந்தனை. அந்தக்

கடையூழிக் காலத்து இறைவன் இறைவியுடன் ஆடும் பொழுது எழும் தூசியே திருநீறு. திருஞானசம்பந்தர் "சுடலைப் பொடி பூசி" என்றார். இறைவன் கடையூழிக் காலத்தில் ஆடுவது- நுண்மை நிலையில் ஐந்தொழில் நிகழ்த்துவதற்காகவேயாம்! கடையூழி ஒடுக்கத்தில் ஆன்மாக்கள் இளைப்பாறிய நிலையில் மீண்டும் புத்துயிர்ப்புப் பெறுகின்றன; புதுப்பிறப்பு எடுக்கின்றன. ஆதலால் கடவுள் காலம் கடந்தவன்! ஏன்? ஞாலமும் விசும்பும் இவை வந்து போகும் காலமாகவே இருப்பவன்!

காலம் கடந்தது எல்லாம் பழைமை! காலங்கடந்து நின்றால் மட்டும் போதாது. காலத்தை வென்று விளங்க வேண்டும். ஆம்! காலத்தினால் ஆய நியதிகளைக் கடத்தல் வேண்டும்; பிறப்பை இறப்பைக் கடத்தல் வேண்டும். "பிறவாயாக்கைப் பெரியோன்" என்று இறைவனைச் சிலம்பு போற்றும்! "முன்னே முனைந்தான்" என்று தேவாரம் பரவும். "நீலமணி மிடற்றொருவன்" என்று புறநானூறு போற்றும்! "விண்ணோர் அமுதுண்டு சாவ ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்பவன்" என்று இளங்கோவடிகள் நெகிழ்ந்து போற்றுவார். பெருமான் அணிந்துள்ள எலும்பு மாலையில் உள்ள மண்டை ஓடுகள் கடையூழிக் கணக்கைக் காட்டுவன. அழிந்தவற்றின் கணக்கும் அதுவே! ஆதலால் கடவுள்- சிவபெருமான் பழம்பொருள். முன்னைப் பழை மைக்கும் பழைய பொருள். 'முன்னை' என்ற சொல் கால எல்லையைக் கடந்தது என்பதைக் குறிப்பது.

அது சரி! கடவுள்- சிவபெருமான் பழம்பொருள்! பழையோன்! ஆன்மாக்களோ புதுப்புதுப் பிறவி எடுப்பன! அதனால், ஆன்மாக்களுக்கு- உயிர்களுக்குப் பழைமை பிடிக்குமா? ஆன்மாக்கள் - உயிர்கள் புதுமையை விரும்புவன. அது மட்டுமல்ல. ஆன்மாக்கள் புதுமையை விரும்பினாலே உலகம் இயங்கும்; வளரும்; வாழும். ஆதலால் ஆன்மாக்களை- உயிர்களை ஆட்கொள்ளும் விளை

யாட்டினைக் கருதி இறைவன் புதுமையாகவும் விளங்கு கிறான். காலத்தினால் விளையும் மூப்பு, முதுமை, கிழட்டுத் தனம் இல்லாமல் என்றும் இளையோனாக, கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பாக விளங்கி அருள்கின்றான்.

காலம் மிகமிகக் கொடுமையானது; கண்டிப்பானது. காலத்தொடு பட்டவையெல்லாம் மூப்படையும்; கிழட்டுத் தன்மையடையும்; பயனற்றுப் போகும். காலப்போக்கில் 'அழியும்' காலத்தத்துவம் நிகழ்காலம் எதிர்காலம் என்பதை விட விரைந்து இறந்த காலமாதல்தான் இயல்பு. திருக்குறள்,

> "நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
> பெருமை யுடைத்திவ் வுலகு"

என்று கூறும். ஆனால், இறைவன்- சிவபெருமான் காலா தீதனாய் இருப்பதால் அவன் புதுமை தாங்கியவனாகப் புதுமைப் புனைவுடன் விளங்க முடிகிறது. ஆன்மாக்களின்- உயிர்களின் விருப்பம் புதுமை வேட்டல். ஆன்மாக்கள்- உயிர்கள் விரும்பும் புதுமை, புத்தொளி கிடைக்காது போனாலும் அவை எய்த்துக் களைத்துப்போகும். ஆதலால் ஆன்மாக்களின்- உயிர்களின் வளர்ச்சி கருதி, நலம் கருதி, இறைவன்- சிவன் நாழிகைதோறும் புதுமைப் புனைவாளனாக விளங்குகிறான். ஊழிதோறும் இறைவனுடைய திருமேனிகள் மாறுகின்றன; பெயர்கள் மாறுகின்றன. ஏன்? அவன் நிகழ்த்தும் திருவிளையாடல்கள் கூட மாறுபடுகின்றன! எனவே, இறைவன் பழைமைக்குப் பழைமையானவன்? ஆம்! அது உண்மை! ஆயினும் பின்னைப் புதுமைக்கும் பற்றுக் கோடாக விளங்கி அருளுகின்றான்! புதிய புதிய கணக்கிலாத கோலங்காட்டித் திருவிளையாடல் நிகழ்த்துகின்றான்; ஆட்கொண்டருள் செய்கின்றான். இன்றையப் புதுமை மட்டுமல்ல. இனி எதிர் வருங்காலத்தும் புதுமையாகவும் இறைவன்- சிவன் விளங்குவான். இது உண்மை! எது நாளும் புதுமை நலம் பெறுகிறதோ அது அழிவற்றது; ஆக்கம் தருவது.

இறைவன்- சிவன் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்புதுமையாகவே விளங்குகின்றான்.

கடவுள் நம்பிக்கை மனித குலத்தில் கால்கொண்டு கிடக்கிறது. ஆனால் கடவுள் இலக்கணங்களில் எண்ணற்ற வேறுபாடுகள்! நாம்- ஆன்மாக்கள் கடவுளைத் தேடுவது ஏன்? வழிபடுவது ஏன்? காணாதனவற்றைக் காணவேண்டும். கேளாதனவற்றைக் கேட்கவேண்டும். என்றும் மாறாத் துணையாக அடையவேண்டும். நரகொடு . சொர்க்கம் நானிலம் புகினும் பிரியாத தலைவனாக இருத்தல்வேண்டும். பிழையெலாம் தவிரப் பணித்து ஆட்கொள்ள வேண்டும். என்றும் இன்பம் பெருகும் இயல்பினை வழங்கியருளுதல் வேண்டும். இத்தகு நலன்களைப் பெறுவதற்குப் பரம் பொருளைத் தலைவனாகப் பெறுதல் தகுதி மிகுதியும் உடையது. தலைவரைத் தேர்ந்தெடுத்தல் மிக்க சிக்கலான பணி! நாற்காலி ஆசை தேவர்களுக்கும் உண்டு! வேள்வியில் சொரியும் அவிப்பொருளை உரிமையில்லாத நிலையிலும் தேடித் தின்பவர்கள் தேவர்கள். இந்தத் தேவர்களுக்கு அம்மம்ம, எத்தனை எத்தனை ஆசாபாசங்கள்! தேவர்களுக்கு நெறியும் இல்லை! முறையும் இல்லை! அவரவர் மனம் கொண்டதே மாளிகை. அதனால் திருக்குறள் “தேவரனையர் கயவர்” என்று திட்டித் தீர்த்துவிடுகிறது. கயவர்கள் இலக்கணம் என்ன? அவர் அவர் நலத்திற்கு அவரவர் விருப்பத்திற்கேற்ப வாழ்வர். நிர்வாணமான சுயநலவாதிகள். இவர்கள் கொலையிற் கொடியர்.

இறைவன்- சிவன் அப்படியல்ல. இறைவன்- சிவபெருமான் தனக்கென ஒன்றும் வேண்டாதவன். குறி யொன்றும் இல்லாத கூத்தன்! இறைவன் திருநீறு பூசி விளங்குவதுகூடத் தம்மை வழிபடும் அடியார்களின் வினை நீங்குவதற்குத்தான்! குழந்தைகளின் நோய்க்குத் தாயே மருந்துண்பாள்; பத்தியம் பிடிப்பாள்! அதுபோல இறைவன்- சிவபெருமான் ஆன்மாக்களின் நலனுக்காகவே ஐந்தொழில்

நிகழ்த்துபவன். ஆன்மாக்களின் கருத்தறிந்து முடிப்பவன்; வேண்ட முழுதும் தருபவன்; உய்வார்கள் உய்யும் வகையில் ஆட்கொண்டருளிச் செய்பவன்; பொன்னும் மெய்ப் பொருளும் தருபவன்; துய்ப்பனவெல்லாம் தந்தருள்பவன்; உய்யும் நெறியில் உய்ப்பன தந்தருளித் தாயிற் சிறந்த தயாவுடன் தொடர்ந்து நின்று காத்தருள்பவன். அதனால் சிவனே தலைவன்; தனித்துணை! சிவபெருமானைத் தலைவனாகப் பெறுதல் தவத்தின் ஆக்கம்; பயன்! அதனால் அடியார்கள் சிவபிரானை "உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீரடியோம்" என்று பெருமிதத்துடன் கூறுகின்றனர். சிவபெருமானைப் பிரானாக- தலைவனாகப் பெறுவதைவிட ஆன்மாக்களுக்கு வேறு பேறு ஏது? அதனாலன்றோ "எங்கெழில் என் ஞாயிறு?" என்றும், "வானம் துளங்கிலென்? மண் கம்பமாகிலென்?" என்றும் பாடுகின்றனர். அப்பரடிகள், "இறுமாந்திருப்பதென்று கொலோ?" என்றே பாடுவார்.

சிவநெறியின் சிறப்பு, சிவபெருமானுக்குப் புகழ் சேர்ப்பது மட்டுமல்ல. சிவனடியார்களுக்குப் புகழ் சேர்ப்பதே இறைவன்- சிவபெருமானின் திருவுள்ளம்! சிவனடியார் களைச் சிவன் எனவே தெளிந்துணர்ந்து வழிபாடு செய்யு மாறு சாத்திர நூல்கள் அறிமுகப்படுத்துகின்றன. ஆதலால் சிவபிரானைத் தேடுவதற்குப் பதில் சிவனடியாரைத் தேட லாம். இது எளிதும் கூட.

தமிழ்நாட்டுப் பெண்கள் களவுவழிக் கற்புக்குச் செல்பவர்கள். ஆம்! 'களவும் கற்றுமற' என்று ஒரு பழமொழி உண்டு. தலைவியைக் காதலித்த காதலன் களவில் கூடும் காலத்தை நீட்டித்துக் கொண்டே சென்றான். களவுக் காலம் கூடுதல் அலர் தோன்றுவதற்கு வாய்ப்பினை உண்டாக்கும் என்றுணர்ந்த தோழி, தலைமகளை நோக்கிக் களவை மறந்து விடுக! திருமணம் செய்துகொண்டு கற்பியலைத் தொடங்குக என்றுணர்த்திய பழமொழி இது. பழந்தமிழகத்தில் காதல்

திருமணமே நடைபெற்றது. சுந்தரர் வரலாறு இதற்குச் சான்று.

இன்று திருமணங்களில் வழக்கத்தில் இருக்கும் கொடுமையாகிய வரதட்சணை ஒழிய வேண்டுமானால் காதல் திருமணங்கள் நடைபெற வேண்டும். பழங்காலத்தில் மனிதப் பண்பாட்டு அடிப்படையிலான சமுதாய அமைப்பு இருந்தது. அதனால் குலம் பார்ப்பார்கள்; குணம் பார்ப் பார்கள்; சீலம் பற்றிச் சிந்தனை செய்வார்கள்! இன்றோ பண மதிப்பீட்டுச் சமுதாயம்! எங்கும் எதிலும் பணத்தின் ஆதிக்கம்! மாணிக்கவாசகரின் திருவெம்பாவைப் பாடல்களில் வரும் பெண்கள், மரபுவழி வந்தவர்கள். ஆதலால், அவர்கள் தங்களுக்கு வாழ்க்கைத் துணைவராக வருபவர்கள் சிவனடி யார்களாக இருக்கவேண்டும் என்று விரும்புகின்றனர். அதனால் சிவனடியாரை கணவராகக் கொண்டு அந்தக் கணவரின் தாள்களைப் பணிவோம் என்கின்றனர். ஆம்! தலைமகளைத் தாங்கும் தாள்கள் தலைமகனுடைய தாளாண்மைமிக்குடைய தாள்கள்தானே! இங்குத் தாள் பணிவோம் என்பது பெண்ணடிமைத் தனத்தின் விளை வல்ல. தாள்-தலைபோல விரும்பித் தொழுதல்.

அடுத்து, சிவனடியார்களுக்கே பாங்காவோம் என்கின்றனர். பாங்காதல் என்பது அயரா அன்புடன், பரி வுடன் பணிவிடை செய்தல் என்பதாகும். இத்தகு சிவனடி யாரையே மணப்போம், கணவராக ஏற்போம் என்று கூறுகின்றனர். ஆம்! சிவனடியார்கள்- நாங்கள் மணக்கப் போகும் சிவனடியார்கள் உவப்பப் பணி செய்வோம்! தொண்டு செய்வோம்! தற்சார்பின்றிக் கணவன்மார்களின் நலனையே நலனாகக் கொண்டு வாழ்வோம் என்கின்றனர்.

இறைவா! சிவபெருமானே! இந்தப்படி சிவனடியாரை மணக்க, தொண்டு செய்து வாழ்ந்திடத் திருவுள்ளம் பற்றுக! சிவனடியார் தாள் பணிவோம்! இங்ஙனம் சிவனடியாருக்குப்

பணிசெய்யும் வ...ப்பை வழங்கியருள்க! இந்தப் பேறு கிடைக்கச் செய்தருள்க! சிவனடியார்களைக் கணவராகப் பெற்றுப் பணி செய்யும் வாய்ப்புக் கிடைப்பின் எங்களுக்கு ஒரு குறையும் இல்லை!

முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே! நாங்கள் ஆரத் துய்த்து மகிழ்வதற்கேற்பப் பின்னைப் புதுமை நலன்களையுடையவனே! சிவனடியார் எம் கணவராதல் பெரும்பேறு! அவர்தம் குறிப்பறிந்து தொழும்பாய்ப் பணி செய்தால் யாதொரு குறையும் இல்லை என்றெல்லாம் போற்றுகின்றனர்.

இந்தப் பாடலின் கருத்து வாழ்வாக மலர்ந்தால் வீடுகள் சிறக்கும்! இல்லறம் வளரும்! சிவநெறி மலரும்! மழை பொழியும்! மண் வளம் கொழிக்கும்!

*முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே!*
*பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே!*
*உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்*
*உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே*
*பாங்காவோம்!*
*அன்னவரே எங்கணவர் ஆவார் அவருகந்து*
*சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்!*
*இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல்*
*என்ன குறையும் இலோம் ஏலோர் எம்பாவாய்!*

(திருவெம்பாவை—9)

## புண் சுமந்த பொன்மேனி!

விளையாட்டு, விளையாட்டாக மட்டும் இருத்தலில் பயன் இல்லை. விளையாட்டின் போக்கிலேயே அறிவியல். அருளியல் கருத்துகளைக் கற்றுத் தரவேண்டும். அம்மானை என்பது பெண்கள் விளையாடும் ஒருவகை விளையாட்டு!

அம்மானை விளையாடும் பெண்கள் பாடுவதாக அமைந்த பாடல்கள் உள்ள பகுதி திருவம்மானை என்று அழைக்கப் பெற்றது. திருவம்மானையில் இருபது பாடல்கள் உள்ளன. இந்த இருபது பாடல்களும் தத்துவச் செறிவுடைய பாடல்கள்! எளிய மொழி நடையில் அமைந்தவையும் கூட! இதுபோலவே பூவல்லி, பொற்சுண்ணம் என்பவையும் அமைந்துள்ளமையையும் அறிக.

அம்மானைப் பாடல்கள் வரிப்பாட்டு வடிவத்தில் அமைவன. திருவெம்பாவையைப் போலவே இந்த விளை யாட்டும் கன்னிப் பெண்களால் நல்ல கணவனை நாடிப் பிரார்த்தனையுடன் விளையாடப் பெறுகிறது. இந்த அம்மானை விளையாட்டு, தமிழகத்தில் தொன்மைக் காலத் திலேயே விளையாடப்பெற்ற விளையாட்டு. திருவம்மானை பற்றிய விளையாட்டுக் குறிப்புக்கள் கலித்தொகையிலும் சிலப்பதிகாரத்திலும் காணப்படுகின்றன. அதுபோலவே திரு முறைகளிலும் திருவம்மானை விளையாட்டு பற்றிய குறிப்புக்கள் காணக்கிடக்கின்றன.

சிவன் திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ளவன். எல்லா உயிர்களையும் கணக்கின்றி எல்லை கடந்து ஆட் கொண்டருளும் தண்ணளியுடையவன்; பெரியோன்; தனக் குவமை இல்லாதவன்.

திருப்பெருந்துறை சிவனுக்கு விண்ணும் மண்ணும் தழுவிய புகழ் உண்டு. புகழ்ப்படுவது புகழ். இறைவன் புகழ்ச்சியைக் கடந்தவன். புகழ்ச்சியைக் கடத்த போகம் என்று போற்றுவார் மாணிக்கவாசகர்.

இந்த உலகத்தில் வாழும் மக்கள் புகழுக்கு ஆசைப் படுபவர்கள். பதவிகளுக்கும் பெருமைகளுக்கும் ஆசைப் படுபவர்கள்! ஆனால் புகழ் என்ற சொல் காலத்தினால் பொருளற்றதாக- விளம்பரமாக மாறி வருகிறது. மனிதர் களிடையில் மட்டும் தானா? தேவர்களிடத்திலும் கூட

இந்தப் பதவி, புகழ் ஆசை உண்டு. தேவர்களின் பதவி ஆசைதானே தக்கன் வேள்வி! வேள்வியில் சொரியப் பெறும் அவி, சிவபெருமானுக்கே உரியது. ஆனால் மற்றைத் தேவர்களும் அவிப்பொருளுக்கு ஆசைப்பட்டனர். தக்கனைக் கொண்டு வேள்வி இயற்றினர் தேவர்கள். உயர் பீடத்தில் அமர்ந்தனர்; அவிப் பொருளைப் பெற்றனர்; இல்லை, இல்லை! மாணிக்கவாசகர் வாக்குப்படி 'தின்றனர்'. தகுதியில்லாத ஒன்றினைப் பெருமை கருதியும் சுவை கருதியும் உண்டனர் என்பது 'தின்றனர்' என்று இழிவாகப் பேசப்படுகிறது. இங்ஙனம் பெருமை கருதி வேள்வியில் சொரிந்த அவிப்பொருளைத் தின்ற தேவர்கள்- கடலில் எழுந்த அமுதையும் உண்டனர். நஞ்சு கடலில் எழுந்தபோது தேவர்கள் என்ன செய்தார்கள்? ஆபத்தில் காப்பதன்றோ தலைமையின் இலக்கணம். ஆபத்தில் காக்கும் தலைமையே புகழுக்குரியது. நஞ்சைக் கண்ட தேவர்கள் தலைதெறிக்க ஓடினர். சிவபெருமானை நோக்கிக் காப்பாற்றும்படி அழுதனர்; அரற்றினர். சிவபெருமானும் நஞ்சினை உண்டு அமரர்களுக்கு அருள் செய்தனன். இதுவே புகழுதற்குரிய சாதனை.

> "விண்ணோர்கள் அமுதுண்டும் சாவ ஒருவரும்
> உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்த"தால்

சிவன் புகழ் விண்ணையும் மண்ணையும் தழீஇய புகழாயிற்று. நீலகண்டம் பெற்றமையின் எவ்வுயிர்க்கும் தலைவன் ஆனான்; ஈசன் ஆனான்.

இறைவனுக்கு- சிவபெருமானுக்கு மூன்று கண்கள். அவை முறையே ஞாயிறு, திங்கள், தீ. இந்த மூன்று கண்களில் தீ ஒரோவழி கட்புலனுக்கு வருவது. ஆயினும் பயன்பாடு மிகுதியுடையது. தீ, நெற்றிக்கண் அறிவுக்கண். தீ, தூய்மை யற்றவனவற்றையெல்லாம் அழிக்கும். ஆனால் தீ ஒரு

பொழுதும் அழுக்காவது இல்லை. அறிவு அறியாமையை அகற்றும்.

சிவம் – சக்தி பொருளும் ஆற்றலும் போல, நெருப்பும் சூடும் போலப் பிரிக்க ஒண்ணாதது. உலகுயிர்களுக்கு உள்ளே வேட்கை, துய்த்தாலொழிய நீங்காது. வேட்கை நீங்கினாலே விடுதலை. துய்த்தலுக்குரிய விருப்ப உணர்வைத் தருபவள் அன்னை பராசக்திதான். அதனாலேயே அன்னை பராசக்தி தன் கையில் கரும்பை ஏந்தியிருக்கிறாள். அன்னை பராசக்திக்குக் காமாட்சி என்ற திருநாமமும் வந்தது. இறைவன் சிவன்– உலகுயிர்கள் எல்லாம் போகம் துய்த்து அவ்வழி நிறைநலம் எய்துதல் வேண்டும் என்ற திருவுள்ளக் குறிப்பினாலேயே அம்மையப்பனாக- போகத் திருமேனி யுடையவனாக இருக்கின்றான். இப்புவியில் வாழும் மாந்தரும் விலங்கு முதலிய சிற்றுயிர்களும் ஆண்- பெண் என்று காதலில் கூடி இன்புற்று வாழ்கின்றனர். இவ்வின்ப வாழ்க்கைக்குத் தூண்டுவதே சிவபெருமானின் திருவுள்ளம்! அன்னையாகிய சிவையின்பால் நோக்குதலே மணம்!

உயிர்க்குலம் பரிணாம வளர்ச்சியில் வளரவும் பலருக்குப் பயன்படவும் உய்தி பெறவும் காதலிருவர் கூடி வாழ்தல் திருமணம் என்று கூறப்பெறுகிறது. ஆதலால் சைவத் தமிழ் மரபில் இறைவனை அம்மையப்பனாக வழிபடும் மரபு தோன்றி வளரலாயிற்று. "பெண் சுமந்த பாகத்தன்" என்றதால் சிவன் தனக்காகப் பெண்ணைச் சுமக்கவில்லை. உயிர் குலத்தின் நன்மை கருதியே சுமத்தலால் 'சுமந்த' என்றருளி யுள்ள நயமும் உணர்க.

எனவே, தமிழ் மக்கள் சிவனை மங்கை பங்கின னாகவே வழிபட்டு வந்துள்ளனர். தமிழகத்தின் தொன்மை வாய்ந்த வழிபாட்டுத் திருமேனி மங்கை பங்கினன் என்பதற்கு நிறையச் சான்றுகள் உள்ளன. மாணிக்கவாசகர்,

*தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்*
*பால் வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ*

என்று பாடுகின்றார். அம்மையப்பர் திருக்கோலம் தொன்மைக் கோலம் என்று பாடுகின்றார். பழைமை வாய்ந்த சாத்திர நூலாகிய திருக்களிற்றுப்படியார்,

*"அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்"*

என்று போற்றுகிறது. சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய ஐங்குறு நூற்றுக் கடவுள் வாழ்த்து,

*நீல மேனி வாலிழை பாகத்து*
*ஒருவன் இருதாள் நிழற்கீழ்*
*மூவகை உலகும் முகிழ்த்தன முறையே!*

என்று போற்றுகிறது. திருமுறைகள் முழுதும் "பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்த கோலமே" போற்றிப் புகழ்ந்து பேசப்படுகிறது.

*அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு*

என்ற திருக்குறளில் ஆதி என்பது சக்தியைக் குறிக்கும் சொல். சக்தியைப் பாகத்தில் உடையது பரம்பொருள் என்று இதற்கு ஒரு சைவ மரபு உரை உண்டு. சிவபெருமானை அம்மை யப்பனாகவே சிந்தனை செய்தல் வேண்டும். வழிபடுதல் வேண்டும் என்ற மரபு வழி வழி பின்பற்றப்படுகிறது. சிவபெருமானும் அருளிச் செயல் நிகழும் போதெல்லாம் பெண் சுமந்த பாகத்தனாகவே எழுந்தருளி அருள்பாலித் துள்ளான். "பெண் சுமந்த பாகத்தன்" என்று போற்றுவது உலகியல்; தமிழ் மரபு.

தமிழகத்தில் பழங்காலத்திலிருந்தே நாட்டின் பொது நலப் பணிகளை அரசன் ஏவும் வழியில் வீட்டுக்கொருவர் வீதம் பொறுப்பேற்றுச் செய்து நிறைவேற்றுவது பழக்கம். மாணிக்கவாசகருக்கு அரசு இழைத்த துன்பங்கள் கண்டு பொறுக்காமையால் வையையாறு சினம் கொண்டு பெருவெள்ளமாகப் பாய்ந்தோடி வந்தது. மதுரை மாநகரில் வையை யாற்றங்கரையில் உடைப்புக்கள். இந்த உடைப்பு களை அடைக்க வீட்டுக்கு ஓர் ஆள் வரும்படி பாண்டியனின் ஆணை பிறந்தது. மதுரையில் பிட்டு விற்றுப் பிழைத்து வந்த வந்திக் கிழவிக்குக் கணவனும் இல்லை; மகனும் இல்லை. என்ன செய்வாள்? ஏழைப் பிட்டு வாணிச்சியின் இதய உணர்வுகளை ஆலவாயண்ணல் அறிந்துகொண்டு அவனே தட்டும் மண் வெட்டியும் தாங்கிக் கொற்றாளாக வந்தான். நாணயமான தொழிலாளியாகவும் நடந்து கொண்டான். கூடுதல் கூலி கேட்கவில்லை. உண்பதற்குப் பிட்டு வாங்கித் தின்றுவிட்டு வேலை செய்யப் போனான். பசிக்கு உணவு உடலுக்கு வேலை. இது தத்துவம்; கொள்கை; கோட்பாடு.

சிவன், பெண் சுமந்த பாகத்தன். அதனால் அருளுதல் இயல்பாக உடையவன். ஏழைப் பிட்டு வாணிச்சியின் துயர் நீக்க உதிர்ந்த பிட்டையே கூலியாகக் கொண்டு மதுரை வைகையாற்று உடைப்பை அடைக்க மண் சுமந்தான். மன்னனின் கோலால் மொத்துண்டான்; திருமேனியில் வடுத்தாங்கினான்; புண்பட்டான்.

ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் பண் சுமந்த பாடல் களைப் பெற்றுள்ள பெருமை தமிழுக்கு உண்டு. இனிமை பயக்கும் இசையையே தமிழிலக்கியங்கள் பண் என்று பாராட்டுகின்றன. தமிழ் மக்கள் பண்களைக் கண்ட தோடன்றி அப்பண்களைப் பாடும் பருவ காலங்களையும் வரையறுத்திருந்தனர். பரிபாடல், சிலப்பதிகாரம் முதலியன மூலம் சங்க காலத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட பண்கள் இருந்தனவாகத் தெரிகிறது. ஆனால் பெரும் பண் நான்கு என்பது மரபு வழி வந்த கருத்து. அவை பாலை, குறிஞ்சி,

மருதம், செவ்வழி (நெய்தல்) என்பன. தேவாரத் திருமுறைகள் பண்ணமைவு முறையில் அமைந்தவை. தேவாரத் திருமுறைகளில் இருபத்து மூன்று பண்கள் மட்டுமே அமைந் துள்ளன. திருவாசகம் இயற்றமிழ் போல யாப்பமைவில் தோன்றினாலும் திருவாசகத் திருவம்மானையைச் சீகாமரத்தில் பாடலாம். சீகாமரப்பண் காலைப் பொழுதில் பாட வேண்டிய பண். அதனாலேயே மாணிக்கவாசகர் 'பண் சுமந்த பாடல்' என்று பாடுகின்றார்.

சிவன் தமிழோடு இசைப் பாடல்கள் கேட்பதில் இச்சை மிகுதியும் உடையவன். நாள்தோறும் காசுகள் தந்து தமிழோடிசை கேட்டின்புறும் இயல்பினன். மாணிக்க வாசகரின் திருவாசகப் பாடல்கள் பண் சுமந்த பாடல்கள். மாணிக்கவாசகரை இழந்து விட்டால் பண் சுமந்த பாடற் பரிசு கிடைக்காது.

மாணிக்கவாசகரின் பண் சுமந்த பாடல்களைப் பரிசாகப் பெறுவதற்காகச் சிவபெருமான் வான்பழித்து இம்மண் புகுந்தனன். புவனியில் சேவடி தீண்டினன். குதிரைச் சேவகன் ஆயினன். மண் சுமக்கும் கூலிக்காரனாகி மண் சுமந்தான்; அடிபட்டான். புண் சுமந்தான். எண்ணரிய திருவிளையாடல்களை நிகழ்த்தினான். எல்லாம் மாணிக்க வாசகரைக் காப்பதற்கேயாம். மாணிக்கவாசகரிடம் பரிசாகப் பெற்ற பண் சுமந்த பாடல்களைத் தாமே தம் கைகளினால் படியெடுத்துக் கொண்டான். கடையூழியிலும் திருவாசகத்தை நினைந்து தன் தனிமையைக் கழிப்பதற்காக. இக்கருத்தை யெல்லாம் உணர்த்தும் பாடல் இது.

பண் சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண் சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண் சுமந்த கீர்த்தி வியமண்ட லத்தீசன்
கண் சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண் சுமந்து கூலி கொண்டு அக்கோவால் மொத்துண்டு
புண் சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்

(திருவம்மானை–8)

# இறைவா, என்னைப் பணிகொள்வாய்!

கடவுள் மறுப்புக் கொள்கை ஒன்றும் புதியதல்ல. பழைய கொள்கை. சமய நூல்களில் கடவுள் மறுப்புக் கொள்கை உலகாயதம் என்ற பெயரில் மறுக்கப்பட்டு வந்திருக்கிறது. கடவுளை மறுத்தல் எளிது. கடவுளை நம்புதல் கடினமான கொள்கை. கடவுளை நம்பவேண்டும். நம்பிக்கையில் உறுதி வேண்டும். கடவுள் நெறியில் நடத்தலுக்குரிய திண்மை வேண்டும். இடர்ப்பாடுகளைக் கடந்தும் கடவுளை நம்புதல் வேண்டும். ஆதலால் கடவுளை நம்பும் கொள்கை. அக்கொள்கை வழி வாழ்தல் அருமைப்பாடுடைய முயற்சியின் பாற்பட்டது.

அதுபோலவே கடவுள் நெறியில் நின்று வாழ்தலே வழிபாடு. வழிபாடு என்பது உயர் கொள்கை. வழிப்படுதல் என்ற சொல்லே வழிபாடு ஆயிற்று. இறைநிலை இயக்கம்; ஓயாத இயக்கம்; இடையீடின்றி இயங்கும் இயக்கம். இயக்க நிலையில் ஐந்தொழில்கள் நடக்கின்றன. படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்கள் நடத்தும் முதல்தரத் தொழிலாளி- உழைப்பாளி இறைவன். இறைநெறியில் நிற்போருக்குப் படைப்பாற்றல் வேண்டும் இறைவனிடம் உள்ள படைப்பாற்றலை வளர்த்துக் கொள்ள வேண்டும். தாவரங்களின் ஒளிச்சேர்க்கை போன்றதே இறைவனிடம் ஆன்மா நடத்தும் ஞானச்சேர்க்கை. இறைவன் தந்த உலகைக் காக்கவேண்டும். நாளும் தீமைகளுடன் போராடி நல்லவற்றை நிலைநிறுத்த வேண்டும். நன்றல்லாதவற்றை மறக்க வேண்டும். எல்லா உயிர்களிடத்தும் அருளாக்கம் கண்டு வாழ்வித்து வாழ்தல் வேண்டும். இதுவே சமய வாழ்க்கை. கடவுள் எல்லாம் செய்வார் என்று வாளா கிடத்தல் இறைநெறி சார்ந்த வாழ்க்கையன்று.

கடவுளையும் கடவுளின் அருளையும் மறுத்து வாழ்தல் என்பது அறிவுடைமையன்று. கடவுள் இல்லை என்பது எளிதான விவாதம். ஆனால், இந்தப் பரந்த உலகியலில் ஓர் ஒழுங்கு (Order) இருக்கிறது. முறைபிறழாத நிகழ்ச்சிகள் (Consistency) இருக்கின்றன. இவை எப்படி? எதனால்? நியதி என்று சமய நூல் கூறும். இப்படியன், இந்நிறத்தன், இவ் வண்ணத்தன் என்ற வரையறை ஏதும் கடவுளுக்கு இல்லை. திருவள்ளுவர், "வாலறிவன்" என்றார். "மூரி முழங்கொலி நீர்" என்றும் "வாசமலர்" என்றும் திருமுறை கூறும். ஆதலால், சமயவாதிகள் பலபடக் கூறும். கடவுள் உருவமும், தன்மைகளைப் பற்றி அலட்டிக் கொள்ள வேண்டியதில்லை! கடவுள் உயர்வற உயர்ந்த பேரறிவு! பேராற்றல்! வரம்பில் இன்பம்!

மாணிக்கவாசகரும் தொடக்க காலத்தில் கடவுளின் அருளை மறுத்து வாழ்ந்திருப்பார் போலும்! "மறுத்தனன் யான் உன் அருளை" என்று கூறுகின்றார். அங்ஙனம் மறுத்தது அறியாமையின் விளைவு என்று ஒத்துக் கொள்கின்றார். அறியாமை என்பது தெரியாமையன்று. முறை பிறழ உணர்தல் அறியாமை. மறுத்து வாழ இயலாத கடவுள் அருளை, மறுத்து வாழலாம் என்பது முறை பிறழ்ந்த செயல்தானே! இறைவா! யானுன் அருளை மறுத்ததால் வெறுத்து ஒதுக்கிவிடாதே! மணி, அதன் மதிப்பினை உணர்ந்தார்க்கும் உணராதருக்கும் ஒளி தரும். நீ, மணி, மணிகளுக்கெல்லாம் சிறந்த மணி. ஆதலால் என்னை வெறுத்து ஒதுக்காதே! நான் உன்னை வெறுத்ததற்குக் காரணம் நான் அல்ல. என்னுடைய வினைத் தொகுதி ஆட்டி வைத்தது. ஆதலால் என்னை ஒதுக்காமல் என் வினைத் தொகுதியை ஒறுத்திடு. எனக்குக் கேடு செய்யும் வினைகளிலிருந்து என்னை மீட்டு எடு! ஆண்டுகொள்! இறைவா, நான் சிறியவன்! வினைத் தொகுதி வசப்பட்டவன். ஐவரொடு போராடி வெற்றிபெற முடியாமல் தவிப்பவன்.

நீயோ, பெரியோன்! பிறவா யாக்கைப் பெரியோன்! நீ என் வினைகளைப் பொறுத்தாட் கொள்ளுதல் கடமை! நானாக ஒன்றும் செய்யவில்லை! என் வினைகள் என்னைப் பொய் நெறியில் இழுத்துச் சென்றன! ஆனாலும் நான் நாய்! சிறு நாய்! நீ ஆட்கொண்டருளினால் உன்னை நினைந்தே வாழ்வேன்! மறவேன்! பெரியோனாகிய நீ என் பிழை பொறுத்து என் வினைத் தொகுதியை ஒறுத்து என்னை மீட்டு எடுத்து ஆண்டுகொள்! என்று உருகுகிறார் மாணிக்கவாசகர்.

இறைவா, முன்பே ஒருதரம் ஆட்கொண்டாய்! குருந்த மரத்தடியில் ஆட்கொண்டருளினை! அப்போது நான் என் உயிரையே உனக்கு அர்ப்பணிப்புச் செய்தேன்! உரிமைப் படுத்தினேன்! என்னுடைய உடலையும் உனக்கே உரிமைப் படுத்தி உன்னுடைய அடிமையானேன்! அடிமைக்கு ஆர் என்று கூக்குரலிட்டேன். அடிமைக்கு உடைமைகள் ஏது? ஏன்? எதற்கு? ஆதலால் என்னுடைய உடைமைகளையும் உன்னிடமே ஒப்படைத்தேன்! நீ அவற்றையெல்லாம் ஆட்கொண்டபோது கொள்ளவில்லையோ? நீயே என் தலைவன்! நீயே என் ஆண்டான்! நான் அடிமை! இன்று எனக்கு ஓர் இடையூறு உண்டா? இடையூறு வரலாமா? ஆனால், இடையூறு வந்திருக்கிறது; வந்து கொண்டிருக்கிறது. தமக்கு அன்பு பட்டவர் பாரம் சுமப்பதற்கென்றே எட்டுத் தோள்களை-வலிமை மிக்க தோள்களைக் கொண்ட பெருமானே! உனக்கு என்னுடைய அல்லல்கள் தெரிய வில்லையா? தெரிந்தும் பாராமுகமாக இருக்கிறாயே! என்று நெக்குருகப் பாடுகிறார் மாணிக்கவாசகர்.

அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ

*இன்றோர் இடையூறு எனக்குண்டோ?*
*எண்டோள் முக்கண் எம்மானே*
*நன்றே செய்வாய் பிழை செய்வாய்*
*நானோ இதற்கு நாயகமே!* (குழைத்தபத்து–7)

இறைவா, நாட்டவர் சொல்லக் கேள்வி! அழுக்கொடு சேர்ந்தால் நிலம் அழுக்காகும். அழுக்கொடு சேர்ந்தால் தண்ணீர் அழுக்காகும். ஆனால், நெருப்பு! அழுக்கொடு சேர்ந்தால் நெருப்பு அழுக்காகாது. அது மட்டுமல்ல, அழுக்கும் தூய்மையாகும் என்பர். திருப்பெருந்துறைப் பெருமானே! உனது கண்களில் ஒன்று அக்கினி; தீ! ஏன் என் ஆணவத்தைச் சுட்டுப் பொசுக்கக் கூடாது? என்னுடைய வினை வளத்தை நீறாக்கக் கூடாது? முழு நீறு சண்ணித்த திருமேனியை உடைய சிவனே! உயிர்கள் செய்த வினைகள் நீறாவதற்காக நீறணிந்து நிற்கின்றாய்! வினைகள் நீங்கி நிற்கின்றாய்! விளங்கும் முதல்வனாகி நின்றருள் செய்கின்றாய்! ஊழி முதல்ல! ஒருவ! நீ, நன்றே செய்வாய் என்று நம்பி ஆட்பட்டேன் இறைவா, நீ நன்றுடையாய்! எத்தகைய நன்று? தீமையே கலப்பில்லாத நன்று! திருவருள் நன்று! ஆனால், நீ செய்த நன்றை நன்றெனக் கருதாமல் பிழையென எண்ணினேன்! உன்னுடைய அருளிப்பாட்டில் பிழையே இருக்காது. பிழை இருக்க வழியே இல்லை! ஆயின் என்னுடைய அறியாமையால் பிழையென்று கருதினேன்! நின்னருளைத் துணிந்து மறுத்தேன்.

'சிவாயநம' என்று சொல்லும் பேற்றினை அருளிச் செய்தனை! அன்றே எனது அல்லல்கள் அகன்றன என்று எண்ணியிருந்தேன். ஆனால், அல்லல்கள் அகன்ற பாடில்லை. மீண்டும் மலவாசனை தாக்குகிறது. பாசி படர்ந்த குளத்தில் பாசி அகன்றும் முழுதும் அகலாமல் உடன் படர்தல் போல என்னை ஆணவம் அடர்த்துகிறது. நெய்க்குடத்தைச் சுற்றிலும் எறும்புகள் மொய்ப்பதைப் போல

வினைகள் என்னை மொய்க்கின்றன. அவா, வெள்ளம் போல் வந்து தாக்குகிறது! இறைவா, இதற்கெல்லாம் என்ன காரணம்? ஆட்கொண்டருளிய நீ, துன்பத்திற்குக் காரண மாகிய உடலை அகற்றாமல் வைத்து வாழவைத்து விட்டாய்! உடல் உள்ள அளவும் மலவாசனை இருக்கத்தானே செய்யும்! வினைகளும் நீங்கா இறைவா! என்னை ஆட்கொண்டருளிய நீ என் உடலை நீக்காதது ஏன்?

இறைவா, இன்று என் பிழைகளை எண்ணி வெட்கப் படுகின்றேன்; வருத்தமுறுகின்றேன் ஆட்கொண்டருளிய உன்னையும் பிரிந்துவிட்டேன்! திருப்பெருந்துறை சிவனே! நான் பொய்ம்மையுடையேன். ஆயினும் பெரியோனாகிய நீ கருணையினால் என் உடல் புகுந்து இடம் பிடித்து ஆட் கொண்டருளினை! ஆயினும் நின் கருணைப் பெரு வெள்ளத்தை நினைந்து நினைந்து அழுகின்றேனில்லை. இரும்பின் பாவையனைய நான் ஆண்டருளிய நின்னைப் பிரிந்தேன்! அல்லல்களுக்கு ஆளானேன்! ஆயினும் செத்துப் போனேன் இல்லை! மண்ணில் வாழ்கின்றேன்! விழித்துக் கொண்டிருப்பதாக எண்ணினேன்! பாவித்தேன்! என் உள்ளக் கருத்தை மனத்துள் நின்ற கருத்தை இழந்தேன்! விழித்திருந்தும் இறந்த மூடர்களை இந்த உலகில் கண்ட துண்டா? என்ன செய்வது என்று அறியாமல் திகைத்து நிற்கின்றேன்! இறைவா! இனியும் பொறுக்க இயலாது! விடைப்பாகா! உழுத பயனை ஊரவர் உண்டு மகிழ, வைக்கோலைத் தின்று உயிர் வாழும் கிடையை வாகனமாக உடையவனே! உன்னைப் பிரிந்து இனிது இருக்க ஒருப் படேன்! அதனால், இறக்கவும் மாட்டேன்

இறக்காமையால் தானே மீண்டும் மீண்டும் அல்லல்! இறைவா, உடலை நீங்காது வாழ்ந்திடத் திருவுள்ளம் பற்றினை! அப்புறம் ஏன் துன்பங்களைத் தந்து ஒறுத்திடு கின்றாய்! இறைவா நீ, என் உடலை ஒறுத்திடுதல் நன்றோ! நான் உய்வதற்கு என்னை ஒறுத்திடுதல் மட்டும் போதுமா?

ஒறுத்தலினால் விளைவது துன்பமே! ஆதலால் இறைவா! என்னை ஒறுத்தது போதும்! இனிமேலும் ஒறுத்து வருத்தந் தரவேண்டாம்! என்னைப் பணிகொள்! உடல் பணிகளில் ஈடுபட்டால் வினை நீங்கும். துன்பங்கள் தொடரா! இறைவா, நீ எனக்கு உடல் தந்தருளியதே, பணி செய்யத்தானே! கண்கள் இயல்பாகப் பிறரையே பார்க்க உதவுகின்றன. இதன் அமைப்பு விதி என்ன? பிறர் நலம் காண முயலுக, பிறரொடு உறவு கொள்க என்பதுதானே! உடற்பொறிகள் அனைத்தின் அமைப்பும் பிறர் நலம் கருதியதாகத்தான் அமைந்துள்ளன. ஆதலால், என்னைப் பணிகொள்! பணி செய்தால் பொறி புலன்கள் அன்பில் தோயும்! எல்லோரிடமும் பணிந்து பணி செய்வதால் தாழ்வெனும் தகைமை வந்து பொருந்துகிறது.

ஆன்மாக்களின் உய்தியையே குறிக்கோளாகக் கொண்ட தலைவனே! தனக்குவமை இல்லாத தலைவனே! நான் என்ன செய்வேன்? இறைவா, நீயே பணித்தருள்! 'இது செய்க!' என்று பணித்தருள்! உன் விருப்பமே என் விருப்பம்! பணித்த வண்ணம் செய்வேன். காலந்தாழ்த்தாது அருள் செய்க! காலம் தாழ்த்திடின் செத்துப் போவேன்! நான் செத்துப் போனால் எல்லோரும் சிரிப்பர்! வேண்டாம் ஐயனே அருள் செய்க!

இறைவா! அனுபவித்த அல்லல்கள் போதும்! இனி மேலும் அல்லல்களைத் தராதே! ஒறுத்திடாதே! பணி கொண்டு அருள்செய்! ஒரோவழி நான் பணி செய்ய மறுத்தால் என்னைப் பலரறியக் கூவியழைத்துப் பணி கொள்! பலரறியப் பணி கொள்! பணி செய்தலே வினை நீக்கத்திற்கு வழி! இறைவா, திருப்பெருந்துறை இறைவா அருள் செய்! என்று பாடுகிறார் மாணிக்கவாசகர். அத் திருப்பாடல் இது.

*அடியேன் அல்லல் எல்லாமுன்*
*அகல ஆண்டாய் என்றிருந்தேன்*
*கொடியே ரிடையாள் கூறா!எம்*
*கோவே! ஆ, வா என்றருளிச்*

*செடிசேர் உடலைச் சிதையாத(து)*
*எத்துக்கு எங்கள் சிவலோகா?*
*உடையாய் கூவிப் பணி கொள்ளாது*
*ஒறுத்தால் ஒன்றும் போதுமே!* (குழைத்தபத்து–2)

## 'வா' என்ற வான்கருணை

மாணிக்கவாசகர் அன்பு ஒன்றினையே வேண்டி நின்றார். "உனக்கு நிரந்தரமாய் அன்பு எனக் கருளாய்" என்று வேண்டினார். அன்பினால் ஊனும் உயிரும் உருகும் வகையில் அழுது அழுது அடி அடைந்தவர் மாணிக்க வாசகர். அதனால், அவர்தம் திருப்பாடல்கள் ஊனினை உருக்குகின்றன; உள்ளொளியைத் தருகின்றன. "பாம்பறியும் பாம்பின் கால்" – இது பழமொழி. கற்றாரை கற்றாரே காமுறுவர். அடியார்கள், அடியார்களுடன் இணங்கி அவர்தம் நடுவுள் இருப்பதையே விரும்புவர். அடியார் கூட்டத்தில் தம்மை அங்கீகரித்துப் பேசுவாரை விரும்புவர். மாணிக்கவாசகர் இந்த இயல்புகளுக்கு விதிவிலக்கானவ ரல்லர்.

மாணிக்கவாசகருக்குக் கண்ணப்பரிடம் பக்தி. கண்ணப்பர் தம் தூய அன்பை, அவர் இயற்றிய வழி பாட்டை, வழிபாட்டின் சிறப்பை வியந்து வியந்து உள்ள மெலாம் உவப்பப் பாராட்டுகின்றார்; பாராட்டி மகிழ் கின்றார்.

திருவுருவ வழிபாடு செய்தல் எளிதன்று. அது மிகவும் கடினமானது. திருவுருவத்தைக் கடவுளாகப் பாவிக்க வேண்டும். "திருக்கோயில் உள்ளிருக்கும் சிவன் தன்னைக் கண்டவர்க்குச் சிவனெனவே உறைவன் ஆங்கே!" என்பது சித்தியார். "திருக்கோயில் எழுந்தருளியிருப்பது திருவுருவ மல்ல; கடவுளே" என்ற நம்பிக்கையுடன் வழிபட்டால் வழிபாடு இறைவனுக்குச் செய்தது ஆம்! அங்ஙனமின்றி

திருவுருவம் என்று வழிபட்டால் வழிபாடு இறைவனுக் காகாது. இதனை மாணிக்கவாசகர்,

*அதுபழச் சுவையென அமுதென அறிதற்கு*
*அரிதென எளிதென அமரரும் அறியார்*
*இதுஅவன் திருவுரு இவனவன் எனவே,*
*எங்களை ஆண்டு கொண் டிங்கெழுந் தருளும்*
*மதுவளர் பொழில் திருவுத்தர கோச*
*மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா*
*எதுஎமைப் பணிகொளு மாறு அது கேட்போம்*
*எம்பெருமான் பள்ளி எழுந்தரு ளாயே!*

(திருப்பள்ளியெழுச்சி–7)

என்று பாடுவதறிக. "இது அவன் திருவுரு; இவன் அவன் என்று வழிபடுதலே முறையான திருவுருவ வழிபாடு. திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனைப் பூசை செய்ய வேதம் கற்றிருக்க வேண்டும்; ஆகமங்கள் தெரிந் திருக்கவேண்டும். பூசைக்குப் பல்வேறு பொருள்கள் வேண்டும். இங்ஙனம் பல்வேறு பொருளைச் சாதனமாகக் கொண்டும் மந்திரங்களை உச்சரித்தும் வழிபாடு செய்ய வேண்டும்.

சிவகோசரியார் மரபுவழி- விதிமுறைப்படி பொருள் பற்றிப் பூசை செய்தவர். நாள்தோறும் பொன்முகலியாற்றில் நீராடி விதிமுறைப்படி பூசை செய்தல் சிவகோசரியாரின் வழக்கம். திண்ணனாருக்கு - கண்ணப்பருக்குப் பூசனை, பழக்கத்தில் இல்லாத ஒன்று. கண்ணப்பர் வேடுவர் குலத்தைச் சார்ந்தவர். குல மரபுப்படி வேட்டையாடும் தொழிலைக் கற்றவர். அவர் இயற்பெயர் திண்ணனார். அவர், தோழன் வாயிலாக "மலை உச்சியில் குடுமித்தேவர் இருப்பார்; கும்பிடலாம்" என்று கூறக்கேட்டார். குடுமித் தேவரைக்காணும் ஆர்வம் திண்ணனாருக்குப் பொங்கி வழிந்தது. திண்ணனார் மலை ஏறுகிறார். உடற் சுமை

குறைகிறது; ஆன்மா, தூய்மையுறுகிறது. திண்ணனாருக்கும் அவர்தம் அன்புக்குமிடையே போட்டி. திண்ணனாரின் அன்பு முன் செல்கிறது. திண்ணனார் குடுமித் தேவரைக் கண்டார். நிலமிசை வீழ்ந்து வணங்கினார்; எழுந்தார்; மீண்டும் வீழ்ந்து வணங்கினார்; காளத்தி அண்ணலை நோக்கினார் திண்ணனார் "காளத்தி அண்ணல் சாலப் பசித்திருக்கிறார்" என்று உணர்கிறார். "பொறுத்திரு! சடுதியில் சென்று உணவு கொண்டு வருகிறேன்" என்றார்; ஓடினார்; ஓடினார்; வேட்டையாடினார். பன்றி அறுத்து இறைச்சியாக்கினார். அனலில் சுட்டார்; வாயில் போட்டுச் சுவை பார்த்தார். ஆனால் சுவையை அனுபவிக்கவில்லை. பக்குவப்படுத்திய இறைச்சியைத் தேக்கிலையில் எடுத்துக் கொண்டார். "என் அப்பன் காளத்தி அப்பன் குளித்திருக்க மாட்டானே!" என்று எண்ணினார். குளிப்பாட்டத் தன் வாய் நிறையத் தண்ணீரை எடுத்துக் கொண்டார். பூக்களைத் தலையில் எடுத்துக் கொண்டார்; விரைந்து காளத்தியப்பன் சந்நிதிக்கு வந்தார். திண்ணனார் வாயில் கொண்டுவந்த தண்ணீரைக் காளத்தியப்பர் மீது சொரிந்து திருமஞ்சன மாட்டினார்; தலையில் இருந்த பூக்களை எடுத்துச் சூட்டி னார். பின் கையில் தேக்கிலையில் கொண்டுவந்த ஊனை இறைவன் முன் படைத்து உண்ணுமாறு வேண்டினார். "நான் சுவைத்துப் பார்த்தேன் நன்றாக இருக்கிறது; உண்ணுக!" என்று இறைவனை வேண்டினார். மாலைப்பொழுது வந்தது; இருள் சூழ்ந்தது. "அப்பனே இருட்டில் தனியாக இருக்கி றாயே! துணை வேண்டாமா?" என்றெல்லாம் நீள நினைந்தார். இரவெல்லாம் விழித்து நின்று காத்தார்.

இந்தப் பூசை ஆகம வழிப் பூசையல்ல. புனல், பூ, தூபம், தீபம், மணியோசை முதலியன இல்லை. திண்ணனாரின் இந்தப் பூசையை இறைவன் விரும்பினார்; திண்ணனார் மெய் தீண்டும் பொழுதெல்லாம் மெய் குளிர்ந்தான். இதனால் வேடர் திண்ணனாரின் அன்பு, அன்பின் ஆற்றல் தெரிந்தது.

முடிவு என்ன? பொருட்பற்றிச் செய்கின்ற பூசைகள் இறைவன் விரும்புவன அல்ல. அருச்சனை என்னும் வெறும் வயல் மட்டுமே பரந்து கிடந்தால் பயனுண்டோ? அந்த அர்ச்சனை வயலுள் அன்பை விதைக்க வேண்டாமா? இறைவன் மலைத்தான்! ஆனால், அன்பெனும் பிடியுள் அவன் சிக்குவான்! சிவகோசரியார் செய்த பூசை பொருளைப் பற்றிச் செய்த பூசை. திண்ணனார் செய்த பூசை அன்பு பற்றிச் செய்த பூசை. அதனாலன்றோ சிவகோசரியாருக்குக் கண்ணிடந்து அப்பும் பேறு கிடைக்கவில்லை. திண்ண னாருக்கே அந்தப் பேறு கிடைத்தது. ஏன் கண்ணிடந்து அப்ப வேண்டிய நிலை? காளத்தியப்பருக்குக் கண்ணில் உதிரங் கொட்டல் நோய், வரவழைத்துக் கொண்ட நோய். திண்ணனாரின் அன்பை- அன்பின் பெருக்கை அளந்து காட்ட வேண்டும், சிவகோசரியாருக்கும் அவரைச் சார்ந்தவர்களுக்கும்! அன்பைப் புலப்படுத்துவன, அன்பின் அளவைப் புலப்படுத்துவன கண்கள்தாம். திண்ணனாரின் அன்பை யாருடைய கண்கொண்டு அளப்பது? அளந்தறிவது? எவருடைய கண்களும்- காளத்தியண்ணல் கண்களும்கூட, திண்ணனாரின் அன்பை அளந்து காணும் ஆற்றலுடையன அல்ல. எனவே, திண்ணனாரின் அன்பின் பெருக்கத்தைத் திண்ணனார் கண்களைக் கொண்டேதான் பார்க்க வேண்டும்; பார்த்து அனுபவிக்க வேண்டும் என்ற கோட்பாட்டின் அடிப்படையில்தான் காளத்தியப்பருக்குக் கண்ணில் உதிரப் பெருக்கு ஏற்பட்டது! பொருட்பற்றிப் பூசனை செய்த சிவகோசரியார் செயலற்றவராகிறார். திண்ணனார் விரைந்து செயற்படுகிறார்; தமது கண்ணை இடந்து அப்புகிறார். திண்ணனார் கண்ணப்பராகிறார்! அன்பு கண்ணப்பராகிறது! கண்ணப்பர் அன்பின் பிழம்பாய்த் தெரிகின்றார். கண்ணப்பரை ஆட்கொண் டருளிய இறைவன் தன்னையும் ஆட்கொண்டருளியதை வியந்து பாடுகின்றார், மாணிக்கவாசகர்.

*பொருட் பற்றிச் செய்கின்ற*
*பூசனைகள் போல் விளங்கச்*
*செருப்புற்ற சீரடி*
*வாய்க்கலசம் ஊனமுதம்*
*விருப்புற்று வேடனார்*
*சேடறிய மெய்குளிர்ந்தங்கு*
*அருட்பெற்று நின்றவா*
*தோணோக்கம் ஆடாமோ!* (திருத்தோணோக்கம்–3)

*கண்ணப்பன் ஒப்பதோர்*
*அன்பின்மை கண்டபின்*
*என்னப்பன் என்னொப்பில்*
*என்னையும் ஆட் கொண்டருளி*
*வண்ணப் பணித்தென்னை*
*வாவென்ற வான்கருணைச்*
*சுண்ணப்பொன் நீற்றற்கே*
*சென்றூத தாய் கோத்தும்பீ!* (திருக்கோத்தும்பீ–4)

இன்றைய திருக்கோயில் வழிபாட்டு நிலையில் பொருட்பற்றிச் செய்கின்ற பூசைகளே பெருகி வளர்ந்து வருகின்றன. பொருட்பற்றிய பூசையிலும் கூடத் 'தான்' கெடாமல் செய்யும் பூசைகளே மிகுதி. தான் கெடாதது மட்டுமன்றித் தன்னுடைய தேவைகளை, இல்லை, இல்லை அவாக்களை அடுக்கி வைத்து அருள்பாலிக்கும்படி வேண்டிச் செய்யும் வணிகத் தன்மை வாய்ந்த பூசைகளே மிகுதி! "வேண்டத்தக்கது அறிவோய்" என்றும் "வேண்டு வதும் உந்தன் விருப்பன்றே!" என்றும் தொழுது அழும் பக்தர்கள் தேடினாலும் கிடைப்பதில்லை. இன்று எங்கும் அன்பு வழிபாடு அருகி, ஆசையினால் இயற்றும் வழிபாடே மலிந்து விட்டது. திருக்கோயில் சூழலும் 'சிவகோசரி யார்'களைத் தோற்றுவிப்பதாகவே உள்ளது. 'கண்ணப்பர்கள்' உருவாகும் சூழல் அறவே இல்லை. பழங்காலத்தில்

சிவாச்சாரியார்கள் திருவுருவங்களில் இறைவனை (ஆவாகனம் செய்து) எழுந்தருளச் செய்து வைத்தனர். அவ்வாறு எழுந்தருளச் செய்தபின் பக்தர்கள் நேரிடையாக மூர்த்தியின் திருமேனி தீண்டிப் புனலும் பூவும் சொரிந்து வழிபடவும், அணைத்து உச்சிமோந்து வழிபாடியற்றவும் உரிமைகள் இருந்தன. தானே வழிபாடியற்றுதல்தான்– செய்வதுதான் நல்ல வழிபாட்டுப் பயிற்சி முறை. இந்த வழிபாட்டு முறையில்தான், 'கண்ணப்பர்கள்' தோன்ற முடியும். நாடு முழுதும் உள்ள திருக்கோயில்களின் வரலாறு களைப் படித்தால் இந்த உண்மை புலனாகும். திரு முறைகளில், பக்தர்கள் திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனியைத் தீண்டி வழிபாடியற்றினர் என்பதற்கு நிறையச் சான்றுகள் உள்ளன. அப்பரடிகள் பாடிய திருவை யாற்றுப் பதிகத்தில் வரும்,

> "போதொடு நீர் சுமந் தேத்திப்
> புகுவார் அவர் பின் புகுவேன்"

என்ற அடியை நினைவு கூர்க.

பக்தர்கள் அனைவரும் திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனியைத் தீண்டி வழிபடும் உரிமை இன்றும் வடபுலத்தில்– காசி முதலிய திருத்தலங்களில் நடைமுறையில் உள்ளது. இதனால் என்ன குறை வந்துவிட்டது? சம்பிரதாயம் என்ற பெயரில் பொருட்பற்றிச் செய்யும் பூசையை மட்டுமே வளர்த்து அன்பையும் அன்பைப் பற்றாகக் கொண்டு செய்யும் வழிபாட்டையும் புறத்தே தள்ளி, இறைவனிட மிருந்து பக்தர்களை அந்நியமாக்கினால் என்ன செய்வது? காலப் போக்கில் மக்கள் திருக்கோயில்களிலிருந்து விலகுவர். இதனைத் திருமுறை ஆர்வலர்கள் சிந்தனை செய்க!

கு. இ. VIII. 12.

# குறிக்கோள் சார்ந்த வாழ்வு

தஞ்சை மாவட்டத்தில் மண்ணியாற்றங்கரையில் திருச்சேய்ஞலூர் என்ற ஒரு சிற்றூர் உள்ளது. இயற்கை வளங்கொழிக்கும் ஊர் அது. வேத ஆகம சாத்திரங்கள் பயின்ற அந்தணர்கள்- நித்திய வேள்வி இயற்றும் சீலமுடைய அந்தணர்கள் பலர் வாழ்ந்த ஊர். திருச்சேய்ஞலூர்க் கிராமத்தில் வேள்வி குண்டப் புகை அணைந்ததே இல்லை.

இந்த ஊரில் எச்சதத்தர்- பவித்திரை என்ற தம்பதியருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. பிள்ளையின் திருநாமம் விசாரசருமர். அவர் இளமையிலேயே வேதங் களில் ஆறங்கங்களில், சைவாகமங்களில் வியக்கத்தக்க அறிவு பெற்றிருந்தார். விசாரசருமருக்கு முறைப்படி முப்புரி நூல் அணிவித்தல், வேதங்களில் பயிற்சி தொடங்குதல் முதலிய சடங்குகள் நடைபெற்றன. விசாரசருமர் வாழ்க்கையின் இயல்பையும் குறிக்கோளையும் உணர்ந்தார். சிவத்தைப் பூசிக்க வேண்டும் என்று தெளிந்தார்; அறிந்து கொண்டார்.

ஒருநாள் மண்ணியாற்றங்கரையில் தன்னையொத்த பிள்ளைகளுடனும் பசுக் கூட்டத்தினுடனும் சென்ற பொழுது ஒரு பசு தன்னை மேய்ப்பானை முட்டப் போயிற்று. மேய்ப்பான் தற்காப்பு அடிப்படையில் அந்தப் பசுவைக் கண்டபடி அடித்துவிட்டான். இது கண்ட விசாரசருமர் மிகுந்த வேதனையுற்று மேய்ப்பானிடமிருந்து அடிபட்ட பசுவை மீட்டார். “பசுவை அடிக்கலாமா? நாளும் பால் சொரிந்து உயிர்க் குலத்தையும் பூசை முறைகளையும் வளர்க்கும் பசுவல்லவா? பசுவின் உடம்பே புண்ணியத்தின் புதையல்” என்றெல்லாம் அறிவுரை கூறினார், அதுமட்டு மின்றி, “இனி நீ பசுக்களை மேய்க்க வேண்டாம், நானே மேய்த்துக் கொள்கிறேன்” என்று கூறி அந்த அந்தணச் சிறுவர் பசு மேய்க்கும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார். செய்யும் தொழிலுக்குச் சாதிகள் தடையில்லை என்பது பழைய மரபு.

அன்று முதல் பசுக்களை மேய்க்கும் பொறுப்பை விசாரசருமர் சிறந்த முறையில் செய்தார். பசுக்கள் மகிழ்ச்சி யாக இருந்தன. நிறைய பாலும் கொடுத்தன. விசாரசருமர் பசுக்களை மிக நன்றாக வளர்த்தமையால் பசுக்கள் தாம் ஈன்ற கன்றுகளைப் பிரிய நேரிட்ட பொழுதும் வருந்த வில்லை; ஆனால் விசாரசருமரை ஒரு நொடிப் பொழுதும் பிரிய ஒருப்படவில்லை. விசாரசருமரை நினைத்தாலே பால் பொழியும் அளவுக்குப் பசுக்களின் நிலை வந்துவிட்டது. தாமே பசுக்கள் பொழியும் பாலைச் சிவபெருமானுக்கு முழுக்காட்ட விசாரசருமர் எண்ணினார். ஆதலால் மண்ணி யாற்றின் மணலில் ஒரு சிவலிங்கத் திருமேனியை எழுந் தருளச் செய்து அந்த மூர்த்திக்கு, பசுக்கள் தாமே பொழிந்த பாலைத் திருமுழுக்காட்டினார். இது நாள்தோறும் நடை பெறும் பழக்கமாயிற்று. இங்ஙனம் பால் சுரந்தமையால் வீட்டிலும் பசுக்கள் தந்த பால் குறையவில்லை. இருப்பினும் ஊர் சும்மா இருக்குமா? ஒருவன் விசாரசருமர் சிவத்தினை எழுந்தருளச் செய்து பால் முழுக்காட்டுவதைப் பசுக்களுக் குரிய அந்தணர்களிடம் கூறிவிட்டான். அந்தணர்களுக்கு யாதொரு இழப்பும் இல்லை. அவர்களுக்குக் கறந்த பாலில், யாதொரு குறைவும் இல்லை. அப்படியிருந்தும் சபையில் விசாரசருமரின் தந்தையை அழைத்து, விசாரசருமரின் அடாத செயல் பற்றிக் கூறினர். விசாரசருமரின் தந்தை எச்சதத்தர் தவறு நிகழ்ந்திருக்காது என்றும் அப்படி நிகழ்ந் திருந்தால் அதற்குத் தாமே பொறுப்பேற்பதாகவும் உறுதி கூறினார்.

மறுநாள் விசாரசருமர் வழக்கம்போல் பூசையில் அமர்ந்தார்; பூசை செய்தார். தம்முன் எழுந்தருளியிருந்த இறைவனுக்குப் பால் முழுக்காட்டினார். இச்செயலை ஒளிந்திருந்து பார்த்துக் கொண்டிருந்த எச்சதத்தர்– விசார சருமரின் தந்தை வெகுண்டு தடித்த கோலினால் விசார சருமரை அடித்தார். விசாரசருமரின் சிவயோகம் கலைய

வில்லை. எச்சதத்தர் தீராத வெகுளியால் பால் முழுக் காட்டுக்கு என்று வைத்திருந்த பாற்குடத்தைத் தனது காலால் இடறி விடுகிறார். விசாரசருமரின் சிவயோகம் கலைகிறது. சிவ பூசைக்கு உற்ற இடர்ப்பாட்டைச் சடுதியில் உணர்கிறார். பாற்குடத்தை உதைத்த கால்களை வெட்டி விடுகிறார். எச்சதத்தர் கால்களை இழந்து வீழ்ந்தார். சிவபெருமான் அம்மையப்பராக எழுந்தருளிக் காட்சி தந்தருளி தாம் உண்பனவும் உடுப்பனவும் பெறும் சண்டேசுவரர் என்றும் பதந்தந்தருளினார்.

இந்த வரலாறு தரும் படிப்பினைகள் பலப்பல. முரண் பாடுகளும் உடைய வரலாறு இது.

பசுக்கள் பாதுகாக்கப்பட வேண்டியவை என்ற பாடம் மிக மிக முக்கியம். பசு இந்த நாட்டின் செல்வம். பசுக்களை முறையாக வளர்க்க வேண்டும். பசும்புல் மேயவிடுதல், நறுநீர் குடிக்கத் தருதல், குளிர் நிழலில் படுத்து இளைப்பாறச் செய்தல் ஆகியன பசுப் பாதுகாப்புக்கு முக்கியம். இத்தகைய ஏற்பாடுகள் இன்று நமது நாட்டில் இல்லை. நாம் பசுக்களை வணங்கக் கற்றுக் கொண்டிருக்கிறோமே தவிர, வளர்க்கக் கற்றுக் கொள்ளவில்லை. குடம் குடமாகப் பால் கறக்கும் இந்தியப் பசுக்கள் இன்று உழக்குகள் அளவிலேயே கறக்கின்றன. பசுக்களில் அயல் நாட்டின் மோகத்தால் உள் நாட்டினம் அருகிப் போய் கொண்டிருக்கிறது. பசுக்களில் நமது மரபு வழி வந்த இனப் பசுக்களையே முறையாக வளர்க்க வேண்டும். எனவே, கிராமம் தோறும் முறையாக அமைந்த மேய்ச்சல் தரைகள் தேவை.

மனிதக் கூட்டம், தமக்கு இழப்பில்லையானாலும் மற்றவர்கள் ஒன்றை அனுபவிக்கவிட மாட்டாது. அதனாலேயே அடிமைத் தனத்தின் துர்க்குணமாகிய பொறாமை மனித குலத்தைவிட்டு அகலவில்லை. இன்று உலகம் முழுதும் வாழும் மக்கள் உண்டு மகிழப் போதிய

உணவு உண்டு. ஆனாலும் பஞ்சம் இருக்கிறது. தனி மனிதனின் பேராசையே பஞ்சத்திற்குக் காரணம். விசாரசருமர் இறைவனுக்குப் பால் முழுக்காட்டியதில் பசுக்களின் சொந்தக்காரர்களுக்கு யாதோர் இழப்பும் இல்லை. அவர்களுக்குக் கிடைத்த பாலில் குறைவும் ஏற்பட வில்லை. ஆயினும் விசாரசருமரின் வழிபாட்டிற்கு இடையூறு செய்கின்றனர். இதுதான் மனிதனின் விபரீத புத்தி.

சண்டேசுவரர் சிவயோகத்தில் அமர்ந்தருளிப் பூசை செய்கிறார். தந்தை எச்சதத்தர், தன் மகன் விசாரசருமரை அடிக்கிறார். ஆயினும் விசாரசருமரின் சிவயோகம் கலைய வில்லை; பூசை நிற்கவில்லை. தன்னை மறந்து தலைவன்தாள் நினைந்த நிலை. தற்சார்பு முழுதும் அற்ற நிலை. ஆதலால், தந்தை அடித்த அடிகள் யாதொரு பயனையும் தரவில்லை. தந்தை எச்சதத்தர் பாற்குடத்தை இடறிய நிலையில் விசார சருமருக்கு விழிப்பு வந்துவிட்டது. ஏன்? குறிக்கோளுக்கு அல்லவா இடையூறு வந்துவிட்டது. குறிக்கோளை இழந்து வாழ்வதால் பயன் என்ன? விசாரசருமரின் குறிக்கோளாகிய சிவத்திற்குத் திருமுழுக்காட்டல் என்ற குறிக்கோளுக்கு இடையூறு செய்தவரின் கால்கள் வெட்டி வீழ்த்தப் படுகின்றன.

தற்சார்பற்றுக் குறிக்கோள் சார்ந்து வாழ்ந்த் நிலை, விசாரசருமரின் நிலை. இன்று நமது மக்கள் கூட்டத்திற்குக் குறிக்கோள் இல்லை. ஒரோவழி இருந்தாலும் குறிக்கோளுக் காகப் போராடுவதில்லை; வாழ்வதில்லை. எங்கும் தற்சார்பு வாழ்க்கை நிலையே மேலோங்கி நிற்கிறது. இது நமது மரபு இகந்து வாழும் முறையாம். குறிக்கோள் இலாது வாழும் வாழ்க்கை, கெட்ட வாழ்க்கை.

குறிக்கோள் அவரவர் நிலையில் அவரவர் தகுதி, விருப்பங்களுக்கேற்ப எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஆதலால், குறிக்கோள் என்பது ஓர் ஒழுங்கமைவுடன் அமையாது;

அமையமுடியாது; அமையக்கூடாது. தான் கருதும் குறிக் கோள்களின் காரணமாக ஒருவன் செய்யும் அறமல்லாத செயல்கள் அறமாகக் கருதப்பெறும். இஃது உலக வழக்கில் சிறப்புடையது. ஒரு நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கச் செய்யப்படும் கொலைகள், கொலைகளாகக் கருதப்படுவ தில்லை. இது வரலாறு புகழும் வீரம்; தியாகம்! அதுபோலத் தான் வழிவழியாக நடைபெற்று வரும் மாந்தரினத்தின் குறிக்கோளாகிய வழிபாட்டிற்கு இடையூறு செய்யக்கூடாது. வழிபாடு குறிக்கோள். குறிக்கோளுக்கு இடையூறு செய்தது குற்றம். குற்றத்திற்குத் தண்டனை கால்களை இழத்தல். அன்பின் மிகுதியால் பிறர் நன்மையுற- பலர் நன்மை யடையச் செய்யப்பெறும் காரியங்கள் காட்சியளவில் கொடுமை போலவும் பாபம் போலவும் தோன்றினாலும் அவை கொடுமையும் அல்ல, பாபமும் அல்ல. காரணம் அன்பு; குறிக்கோள் வெற்றிபெறுதல். அங்ஙனமின்றி- அன்பு இல்லாமல் வரலாற்றுக்கும் மாந்தர் கூட்டத்துக்கும் பயன் இல்லாமல் செய்யப்படும் சில பணிகள் அறம்போலத் தோன்றினாலும் அவை அறம் அல்ல; குறியெதிர்ப்பு உடையன.

இந்த விசாரசருமர் பற்றி- சண்டேசுவரர் பற்றி மாணிக்கவாசகர் பாடிய திருப்பாடல் சிந்தனைக்குரியது.

மாணிக்கவாசகர் 'தீதில்லை மாணி' என்று தொடங்கு கின்றார். ஆம்! விசாரசருமர் இளம் வயதினர். அவருக்குத் தீய பயிற்சி இல்லை! தீய பழக்கங்களும் இல்லை! தூய்மையான வாழ்க்கையுடன் வளரும் இளைஞர் விசாரசருமர். தந்தையின் தாளைத் தடிந்த கொலைகாரர் என்ற எண்ணம் வந்துவிடக்கூடாதே என்ற முற்காப்புணர்வுடன் 'தீதில்லை மாணி' என்றார். 'தீதில்லை' என்று மட்டும் பொருள் கொண்டால் தன் தந்தையின்- எச்சதத்தரின் காலை விசாரசருமர் தடிந்தது குற்றமும் இல்லை; தீமையும் இல்லை என்பதாகும். ஏன்? வழிவழி வளர்ந்து வந்துள்ள மரபுகளைக்

காக்கும் கடமை பூண்ட ஒருவர் அந்த மரபுகளையே அழிப்பதை எங்ஙனம் ஏற்கமுடியும்? மரபுகளை அழித்த வர்கள்- அழித்துக் கொண்டிருப்பவர்கள் வாழ்ந்தால் என்ன? இறந்தால் என்ன? அடுத்தடுத்து வரும் தலைமுறைகளுக்கு உள்ள கடமை, வரலாற்றைத் தூக்கிப் பிடிப்பதுதான். அதைச் செய்யாதவர்கள் இருப்பது எற்றுக்கு? என்று உணர வைக்கிறார் மாணிக்கவாசகர்.

எச்சதத்தர், விசாரசருமக்கு என்ன தீங்கு செய் திருந்தாலும் மன்னிக்கப்பட்டிருப்பார். ஆனால் எச்சதத்தர் செய்ததோ திருமுழுக்குக்கு வைத்திருந்த பாற்குடத்தை இடறிவிட்டதாகும். எனவே, செழுந்தமிழ் வழக்குக்கும் தமது குறிக்கோள்களுக்கும் இடையூறு விளைவித்தமையால் தாதை தாள் தடியப்பட்டது. எந்த உறுப்பு தவறு செய்ததோ அந்த உறுப்புக்குத்தான் தண்டனை தரப்பட்ட்து. ஆயிரம்தான் சொன்னாலும் எச்சதத்தர் தந்தை. எச்சதத்தரும் வழிபடும் திருமேனிக்கு இடையூறு செய்யவில்லை. இடறிவிட்டது பாற்குடத்தையே! இந்தக் குற்றத்திற்குக் காலையே வாங்கு வதா? இது பாதகம் இல்லையா? என்று உலகவர் பேசுவதும் உண்மைதானே! உலகவர் பாதகம் என்று நினைந்து கூறினாலும் சோறும் பெற்றார். உடல் வளர, வாழச் சோறு தேவை. 'சோறு' என்ற சொல்லுக்குப் பயன் அல்லது வீடுபேறு என்றும் விளக்கம் கூறலாம். இளையான்குடிமாறர் வரலாற்றில் 'சோறிட்டுச் சோறு பெற்றார்' என்பார் சேக்கிழார் பெருமான். இங்கு விசாரசருமர், சண்டேசுவரர் எனும் பதம் பெற்றார் என்பதனை உணர்த்த "பாதகமே சோறு பற்றினவா" என்றார் மாணிக்கவாசகர்.

திருசேய்ஞலூர் விசாரசருமர் குறிக்கோள் பேணினார். சண்டேசுவரர் எனும் பதம் பெற்றார்.

இன்று குறிக்கோள் சார்ந்த வாழ்வு மலர்தல் தேவை. இன்றைய உலகம் அவாவி நிற்பது குறிக்கோளுடைய

மக்களையே! குறிக்கோளுக்காகப் போராடும் மக்களை யேயாம்.

*தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்*
*சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்*
*சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர் தொழப்*
*பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்*

(திருத்தோணோக்கம்–7)

## பணிவேண்டிப் பணிவோம்!

தமிழில் உவமை, சிறப்புடைய ஒன்று. ஒன்றை எளிதில் விளக்குவதற்கு உவமையைப் போல் உதவி செய்வது பிறிதொன்றில்லை. மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகத்தில் உள்ள உவமைகள் பலப்பல. அவையுள் எளிதில் விளங்கும் உவமைகள் மிகுதி. "ஊர் ஆ" "ஊர் நாய்" போன்ற உவமைகள் மிகமிகப் பொருட் செறிவுடைய உவமைகள் மட்டுமல்ல, அன்றாட வாழ்வில் கண்டு அனுபவிப்பவைகளே உவமைகளாகியுள்ளன.

இறைவன்-சிவன் அம்மையப்பன், நெருப்பும் சூடும் போன்றது. அம்மையப்பன் தத்துவம்; பொருளும் ஆற்றலும் (Matter and Energy) போன்றது. பரசிவம் இயங்குநிலையில்– தொழிற்படு நிலையில் சக்தியாகப் பரிணமிக்கிறது. நெருப்பையும் சூட்டையும் பிரிக்க இயலாதது போல அம்மையையும் அப்பனையும் பிரிக்க இயலாது. அதனாலேயே மங்கைபாகம் என்ற திருவுருவத்தில்– திருநாமத்தில் வழிபடும் வழக்கம் தோன்றியது; தோன்றி வளர்ந்தது. இறைவன்- சிவன் பெண்பால் உகந்தமையை வினாவாக்கி விடையளிக்கிறது திருவாசகம். திருச்சாழலில்,

*தென்பா லுகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்*
*பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ*
*பெண்பா லுகந்திலனேற் பேதாய்இரு நிலத்தோர்*
*விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ*

(திருச்சாழல்–9)

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். இறைவன் அம்மையப்பராக இருத்தலினாலேயே இந்த உலகம் இயங்குகிறது. உயிர்க்குலம் வளர்கிறது.

*மாயிருஞ்சகம் ஆணொடு பெண்ணாய்*
*வயக்க முற்றன அகிலநா யகியும்*
*பாயும் வெள் விடைப் பாகரை*
*மணந்து"*

(காஞ்சிப். தழுபக்குழைந்த படலம் 14)

என்று காஞ்சிப் புராணம் கூறும். சிவத்தை அம்மையப்ப ராகவே வழிபடவேண்டும். சிவம், அருளுவதெல்லாம் அம்மையப்பர் திருக்கோலத்திலேயாம். சிவத்தின் ஒரு கூறே அருள் செய்யும் அம்மை! என்றாலும் பெரிய புராணத்தில் வரும் அடியார் பெருமக்களுக்கு அருள் வழங்கிய பொழு தெல்லாம் அம்மையப்பன் திருக்கோலத்திலேயே நிகழ்ந்தது. அதனாலேயே அருள்பாலித்த திருத்தலங்களில் எல்லாம் கருவறையில் சிவலிங்கத்திற்கு முன் அம்மையப்பர் திருமேனியும் விளங்கிக் காட்சியளிக்கிறது. ஆற்றல் இளமையோடிருக்க வேண்டும். ஆற்றலை நாளும் இளமை நலத்துடன் பேண வேண்டும். ஆற்றலை இழப்பின் அனைத்தும் போகும். ஆற்றல் வளரும் தன்மையது; என்றும் இளமையோடிருக்கும் இயல்பினது; படைப்பாற்றலுடையது. அதனால் அம்மையைக் கூறும் பொழுதெல்லாம் இளமை நலம் பொருளைக் குறிப்பிடுவர்; போற்றுவர்.

*"மையிலங்கு நற்கண்ணி பங்கன்"*

கண்ணிற்கு மை, இளம் பெண்கள் தான் இட்டுக் கொள்வர். ஆதலால், உமாதேவியை "மையிலங்கு நற்கண்ணி" என்றார். "மையிலங்கு" என்ற சொற்றொடருடன் "நற்கண்ணி" என்றது அம்மையின் மையிட்ட கண் காமக் கவர்ச்சியுடையதல்ல என்றும் அது நலம் பயப்பது, இன்பம் தந்தருளி இறவாத அன்பு நெறியில் உய்த்துச் செலுத்துவது என்றும் பொருள் படும்.

கருணை- உதவுதல் என்பது கேட்டுச் செய்வதல்ல. தாமே எளிவந்து செய்வது. மாணிக்கவாசகர், இறைவன்– சிவன் தானே வந்தாட்கொண்டதாகவே பாடுகின்றார். அந்த எளிவந்த கருணையை நினைந்து நினைந்து மகிழ்கின்றார்; போற்றுகின்றார்.

"வான் பழித்து இம்மண் புகுந்து
மனிதரை ஆட்கொள்ளும் வள்ளல்"

என்று போற்றுவார்; போற்றிப் புகழ்வார். சிவன் திருப் பெருந்துறைக் குருந்த மரத்தடிக்கு எழுந்தருளி வந்து ஆட்கொண்டார்; ஆட்கொள்ளுதல் என்றால் பொன்னும் பொருளும் போகமும் எடுத்த எடுப்பில் அருளுவதல்ல. ஞானிகள், நல்லவர்கள் பொன் முதலியவற்றை முதலில் விரும்ப மாட்டார்கள். அவர்கள் இறைவன் பணி கொள்ளு தலையே விரும்புவார்கள். பணி கொள்ளுதலே, அருளிச் செய்தது போலத்தான்!

"எது எமைப் பணிகொளுமாறது கேட்போம்!"

என்பதூஉம் திருவாசகம். பணியில் செலுத்திய தாய் தந்தையை–

"நல்ல தாய் தந்தை ஏவ
நானிது செய்யப் பெற்றேன்"

என்று கூறும் சேக்கிழார் வாக்கு சிந்தனைக்குரியது. நமது வாழ்விலும் முயற்சிக்கு- உழைப்புக்குப் பணம் தூண்டுதல்

சக்தியாக இல்லாமல் பணி செய்தலே தூண்டுதல் சக்தியாக இயங்கினால் நாம் வளர்வோம்! நமது நாடு வளரும். பணி செய்வதில் ஆர்வம் வேண்டும்' விருப்பம் வேண்டும். அர்ப்பணிப்பு உணர்வுடன் பணி செய்தல் வேண்டும்.

"என் கடன் பணி செய்து கிடப்பதே"

என்றார் அப்பரடிகளும். பணியைப் பணிக்காகவே விருப் பார்வத்துடன் செய்தல் வேண்டும். பணியின் விளைவுகள், எதிர் விளைவுகளைப் பற்றிக் கவலைப்படக் கூடாது. ஏன்? பணியின் பயனைக்கூட எதிர்பார்க்கக் கூடாது. "கிடத்தல்" என்பது அஃறிணை நிலை. அஃறிணைப் பொருள்கள் காலத்தொடு இசைந்து நின்று பணி செய்யும் பாங்கினை அறிக. பூத்துக் காய்த்துப் பயன் தரும் மரங்களை நோக்குக. அம்மரங்கள் வரவேற்புரையையும் எதிர்ப்பார்ப்பதில்லை; நன்றி கூறலையும் எதிர்ப்பார்ப்பதில்லை. ஒரோவழிச் செய்தாலும் விருப்பார்வத்துடன் செய்வதில்லை. வேண்டா வெறுப்பாகச் செய்கிறான். கூலியையே குறியெதிர்ப்பாக உடைய உழைப்பு, பூரண பலன் தராது. ஆதலால், நமக்கு உற்றார் உறவினர் நண்பர்கள் நமக்கு முதலில் வேலை தரட்டும்; பணிகள் வழங்கட்டும். எவரொருவர் பணிகளை வழங்கித் திறமையையும் அனுபவத்தையும் பெற உதவி செய்கிறார்களோ அவர்களே நமக்கு மிகவும் வேண்டி யவர்கள்; நல்லது செய்பவர்கள். பணிகளை வழங்காது சோறும் துணியும் வழங்கினால் அது உதவியாகாது; வாழ் விப்பதாகாது; அதனாலேயே சேக்கிழார், "கைத்திருத் தொண் டினை"ப் போற்றிப் புகழ்கிறார். இன்றோ வேலையைக் கண்டால் அஞ்சி ஓடுவது, வேலையை ஒத்திப் போடுவது, தட்டிக் கழிப்பது, அல்லது வேலை செய்வதற்கு சோம்பற் பட்டுக்கொண்டு விடுப்புகள் எடுப்பது போன்ற தீய பழக்கங்கள் இந்தியர்களை ஆட்கொண்டிருப்பதனாலேயே இந்தியா விடுதலை பெற்று ஐம்பது ஆண்டுகள் ஆகியும்

முன்னேறவில்லை; வறுமையும் ஏழ்மையும் அகலவில்லை. என்று, இந்தியாவின் ஒவ்வொரு குடிமகனும் தனது பணியை- வேலையை ஊக்கத்துடனும் விருப்பத்துடனும் ஆர்வக் கிளர்ச்சியுடனும் அர்ப்பணிப்பு உணர்வுடனும் செய்கின்றானோ அன்றே இந்தியா வளரும்; தமிழ்நாடு வளம் கொழிக்கும்.

சிவன், வலியவந்து வாழ்தலுக்கும் உய்தலுக்கும் உரிய பணிகளை வழங்கி ஆட்கொண்டருளிய அருமையை மாணிக்கவாசகர் உணரவில்லை. வளரும் குழந்தை! பொருள் களின் தராதரம் அறியாப் பருவம்! தங்கக் கிண்ணத்திற்கும் தகரக் குவளைக்கும் இடையில் மதிப்பீட்டு வேற்றுமைகளை அறிந்துகொள்ள இயலாத பருவம்! பொற் கிண்ணத்திற்கும் பொட்டுக் கடலைக்கும் மதிப்பீடு பிரித்தறியா நிலை! தின்னும் பொருளாதலால் பொட்டுக் கடலையிலேயே ஆர்வம் தலைகாட்டும். அந்தச் சூழ்நிலையில் வளரும் குழந்தைக்குப் பொற் கிண்ணத்தின் மதிப்பீடு தெரியாமல் பொட்டுக்கடலையை வாங்கிக் கொண்டு பொற்கிண்ணத்தைத் தருதல் வியப்பில்லை. அதுபோல, இறைவனின் திருவருள் சார்ந்த வாழ்க்கை வழங்கப்படுகிறது; உலகியற் கவர்ச்சியால் இழுக்கப்படுகிறது. ஆன்மா- உலகியற் கவர்ச்சியிலேயே சுழல்கிறது. திருவருளை- வலிய வந்தாட்கொண்ட பெருமானின் எளிவந்த கருணையை அருமை என்று அறிந்து போற்றுவதில்லை. நெடுந்தவம் புரிந்தும் காண முடியாத இறைவன் தாமே வந்து தலையளித்து ஆட்கொண்டருளிய கருணையின் அருமை அறியாத பேதைமையை "மழக்கை யிலங்கு பொற்கிண்ணம்" என்றருளிச் செய்யும் நுட்பம் சிந்தனைக்குரியது; உணர்தலுக்குரியது.

இறைவன்- சிவன் வெண்ணீறு சண்ணித்த திரு மேனியையுடையவன். திருவெண்ணீறு சிவநெறியின் புனிதச் சின்னம். கடையூழிக் கூத்தில் எழுந்த பொடியின் சின்னமே

திருநீறு. சிவநெறியைச் சார்ந்தலுக்குத் திருநீறணிதலே முதற் சாதனம்.

> என்னை ஆண்டிட்டு என்னையும் தன்
> கண்ண வெண்ணீ றணிவித்துத்
> தூயநெறியே சேரும் வண்ணம்

என்ற திருவாசக வரிகளையும் எண்ணிக் கொள்க. திருநாவுக் கரசருக்கு, திலகவதியார் "திருவாளன் திருநீறு" வழங்கித்தான் சைவத்தில் சேர்த்தார். ஆன்மாக்கள் திருநீறு அணிந்தால் அவற்றின் வினை நீங்கும்; பாவமும் அகலும்; அமர நிலையும் அருளது நிலையும் எய்தலாம்! ஆனால் இறைவன் திருமேனி யில் திருநீறு ஏன்? தாய்ப்பாலுண்ணும் குழந்தைக்குத் தாய் மருந்து கொடுப்பதில்லை. குழந்தைக்குப் பத்தியமும் இல்லை. குழந்தையின் நோய்க்குத் தாயே மருந்துண்கிறாள்; பத்தியம் பிடிக்கிறாள். அதுபோல இறைவன் தன்னைத் தொழுது எழும் பக்தர்களுடைய வினை வளம் கெடத் திருநீறு அணிகின்றான் என்று திருக்கோவையார் கூறும்.

"மெய்ம்மை அன்பருன் மெய்ம்மை மேவினார்" என்றார் அடிகள். பொய், கொடுமையினும் கொடுமை யானது. அதனாலன்றோ தமிழ்மறை.

> "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
> செய்யாமை செய்யாமை நன்று"
> (297)

என்று கூறியது! பொய்- இல்லாதது. புனைவுகளை ஒட்டிக் கொண்டு பொய் வரும். மாணிக்கவாசகர்,

> "யானும் பொய் என் நெஞ்சும் பொய்
> என் அன்பும் பொய்
> ஆனால் வினையேன் அழுதால் உன்னைப்
> பெறலாமே!"

என்று அருளிச் செய்துள்ளமையை அறிக. பொய்ம்மையற்ற மெய்ம்மை வாழ்வு தேவையென்றால் பொய்யைப் பொய் என்று அறியும் அறிவு வேண்டும். பொய்ம்மையைப் பெருக்கிப் பொய்யில் கிடந்துழலும் பொய்யாய மாய வாழ்க்கையை நினைந்து அழக் கற்றுக்கொண்டால்தான் பொய்ம்மை அகலும்; மெய்ம்மை மேவும்.

மெய்ம்மை, உண்மையானது; நிலையானது; மெய்ப் பொருள் சார்பு நிறைந்தது. மெய்ப்பொருளைச் சார்ந்து வாழும் அன்பர்கள் மெய்ம்மை அன்பர்கள். மெய்ம்மை அன்பர்கள் தாம் மெய்ப்பொருளாகிய இறைவனைச் சார்தல் இயலும்; கூடும். மெய்ம்மை மேவாதாருக்கு இவ்வுலகும் இல்லை; அவ்வுலகும் இல்லை.

இறைவா, நான் பொய்யன் தான்! நான் அப்படியே பொய்யனாகவே வாழ்ந்து செத்துப் போனால் மற்றவர்கள் சிரிக்க மாட்டார்களா? காத்தாளக்கூடிய கங்காளன் காக்கத் தவறிவிட்டானே என்று இகழ்ந்து பேசமாட்டார்களா? பழிக்க மாட்டார்களா? இறைவா, நானும் பொய்யும் நின் கருணை கிடைக்காமையால் புறமே வந்துவிட்டோம்! என்னை எவ்வாறேனும் ஆகுக என்று வாளாவிட்டு விட்டுப் போய்விட்டாய்! இது நின் கருணைக்கு இசைந்த அறமா? பிறைசூடிய பெருமானே! பொய் நீக்கி என்னை ஆளாமை நினக்குப் பெருமைதானா? நல்லவும் தீயவும் அல்லாத எருக்கம் பூவினும் நான் கடைகெட்டவனா? இறைவா, பொய்மையை நீக்கு! மெய்ம்மையை அருள் செய்க! என் பொய்யெலாம் நீயே ஏற்றருள் செய்க! நான் உன்னை அரியை என்று கருதாதது பிழைதான்! நீ எளிவந்தாட் கொண்ட அருளைப் போற்றிக் கொள்ளாதது குற்றம்தான்! தேவர்களே இந்தத் தவற்றினைச் செய்திருக்கிறார்கள். அகந்தையினால்- பதவிப் பித்தால் தேவர்கள் செய்த பிழையெலாம் பொறுத்தருள் செய்தாய்.

இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் என்று கண்டு அறிய இயலாத சிவத்தினைக் காண முயன்றனர். அது, 'பழச்சுவை' என்றனர்; 'அமுது' என்றனர்; "அறிதலுக்கு அறிது" என்றனர். "அறிதலுக்கு எளிது" என்றனர். இங்ஙனம் அமரர்கள் தம்முள் முரண்பட்டு நின்று பேசினர்; விளக்கினர். ஆயினும் சிவம் உயிர்க்குலமெல்லாம் உய்தல் வேண்டி சிலைகளில் எழுந்தருளினன். இது அவன் திருவுரு. இறைவன் எழுந்தருளியுள்ள திருவுருவம், உருவமன்று. இலங்கியங்களில் அகரம் முதலிய நெடுங் கணக்கு இருப்பினும் பயன்படு மாற்றால் இலக்கியம் என்றே போற்றுகின்றோம். இரும்பி னால் செய்யப்பட்ட கருவிகளை, இரும்பு என்று கூறுவ தில்லை. பயன்படு நிலை கருதி 'ஒலி பெருக்கி', 'மண்வெட்டி' என்று கூறுவதே மரபு. அதுபோல இறைவன் எழுந்தருளி யுள்ள திருவுருவம் சிலையாக இருக்கலாம். ஆயினும் பயன்பாடு வழிபாடு ஆதலால் அது திருவுருவம் அல்ல. இறைவனேதான்!

"திருக்கோயில் உள்ளிருக்கும் சிவன் தன்னைச் சிவன் எனவே கண்டவர்க்கு சிவன் உறைவன் ஆங்கே!" - இது சாத்திரம் காட்டும் உண்மை. இறைவன் எண்ணற்ற ஆன் மாக்களை ஆட்கொள்ளும் பணிக்காகவே திருவுருவத்தில் எழுந்தருளுகின்றான். திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் முன்னிலையில் பணிகேட்டு விண்ணப்பித்தலே மரபு. அண்மைக் காலமாக இந்த மரபு அறவே மாறி நுகர் பொருள்களை இரந்து கேட்கும் பழக்கம் தோன்றிவிட்டது. இன்று நமது சமயப் பிரார்த்தனைகளில் பணி செய்ய விரும்பும் விண்ணப்பம் அறவே இல்லை. மாணிக்கவாசகர் திருப்பெருந்துறை மன்னனிடம் "எது எமைப் பணிகொளு மாறது கேட்போம்" என்றே வேண்டுகிறார். பணி செய்தலே உய்யும் நெறி. "கொண்டலால் உயிர்க்கு ஊதியம் இல்லை" என்று திருமுறை கூறும். இந்நெறியை உணர்த்தும் மாணிக்க வாசகர் பாடலை நினைத்து இறைவனை வேண்டுவோம்.

*அது பழச் சுவையென அமுதென அறிதற்கு*
*அரிதென எளிதென அமரரும் அறியார்*
*இது அவன் திருவுரு இவன் அவன் எனவே*
*எங்களை ஆண்டு கொண்டு இங்கெழுந்*
*தருளும்*
*மதுவளர் பொழில் திரு வுத்தர கோச*
*மங்கையுள் ளாய் திருப் பெருந்துறை மன்னா*
*எது எமைப் பணிகொளும் ஆறது கேட்போம்*
*எம் பெருமான் பள்ளி எழுந்தருளாயே*

(திருப்பள்ளியெழுச்சி–7)

## நல்லவர் பேச வேண்டும்!
## அல்லவர் ஏச வேண்டும்!

மாணிக்கவாசகர் பல்வேறு அனுபவங்களைச் சந்தித்தவர் மகிழ்ச்சிக்குரிய அனுபவங்கள் மாணிக்கவாசகர் வாழ்க்கையில் அருமையிலும் அருமை. அமைச்சுப் பொறுப்பிலிருந்த போதும் அந்தப் பொறுப்பை– பதவியைக் கடமை யாகவும் பாரமாகவும் கருதினாரேயன்றி மகிழ்ச்சியாகக் கருதவில்லை.

ஆட்சிப் பொறுப்பு எளிதன்று; பொறுப்பு மிகுதியும் உடையது! மழை பெய்யவில்லையா? ஆட்சிக் காவலின் பிழையே என்பர் சான்றோர். பசி பட்டினியால் சாவா? இரந்து பிழைத்தலா? அனைத்துக்கும் காரணம் ஆட்சியே என்று கூறுவது மரபு. இளங்கோவடிகள் சேரன் செங்குட்டுவன் வாயிலாக ஆட்சி துன்பம் தரும் தகையது என்று கூறுவார்.

*"மன்பதைக் காக்கும் நன்குடிப் பிறத்தல்*
*துன்ப மல்லது தொழுதக வில்"*

என்பது சிலப்பதிகாரம்.

இன்று ஆட்சி சுகத்திற்குரியதாக விளங்குகிறது. இன்று அரசியல், ஆட்சி அனைத்தும் ஈட்டத்திற்குரியனவாகும். சுகானுபவத்திற்குரியனவாகவும் விளங்குகின்றன. இன்று Power Corrupt என்பது பழமொழியாகவே விளங்குகிறது.

ஆட்சிக்குரியவர்கள் எப்படி விளங்க வேண்டும் என்பதற்குக் கம்பனில் ஓர் உதாரணம் கிடைக்கிறது. இராமன் வசிட்டனது இல்லத்திற்குச் சென்று படித்துவிட்டு வருகிறான். அன்று மாணவர்கள் ஆசிரியரைத் தேடிப்போன காலம்! இன்றோ ஆசிரியர்கள் மாணவர்களைத் தேடிப் போகிறார்கள்! இராமன் வசிட்ட முனிவர் இல்லத்திலிருந்து வருகிறான். சாலையில் இரு மருங்கிலும் மக்களைப் பார்த்த இராமன் இரதத்திலிருந்து இறங்கி அவர்களை நோக்கிப் போய்,

"எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா
எதுவினை? இடர்இலை? இனிது நும் மனையும்
மதிதரு குமரரும் வலியர் கொல்?"

என்று வினவியறிகிறான். ஆக, என்ன தெரிகிறது? இல்லங்கள் தோறும் நலமமைந்த வாழ்க்கை தேவை; இன்றியமையாத் தேவை. அதற்கு அரசு உறுதுணையாக அமைதல் வேண்டும். உங்கள் பிள்ளைகள் வலிமையுடன் வாழ்கின்றார்களா? என்ன வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்? என்றெல்லாம் இராமன் கேட்கிறான். இன்றோ ஆட்சியாளர்களை அணுக முடியாத நிலையில் வேலி! ஆட்சியாளர்களை அணுக முடியாத நிலையில் குண்டு துளைக்காத கார்கள்! காவலர்களின் அணிவகுப்பு! ஆனால், அன்று நடப்பது முடியாட்சி; இன்று நடப்பது குடியாட்சி! மக்களுக்கும் ஆட்சியாளருக்குமிடையே இடைவெளி குறையும்போதே நல்லாட்சி அமைய இயலும்.

கு.இ-VIII-13.

உண்மையில் சமூகம் என்ற அமைப்பு உருவாகவில்லை. மனிதர்கள் கூட்டமாக வாழ்கின்றனர். கூட்டமாக வாழ்தல் வேறு. கூட்டமாக கூடுதல் கூடப் பயம், தேவை ஆகிய அடிப்படையிலேயே நிகழ்கிறது. ஒன்றாகக் கூடி வாழ்தல் வேண்டும். ஒன்றாகக்கூடி உழைத்தல் வேண்டும். இங்ஙனம் உணர்வால் ஒத்ததறிந்து வாழும் மக்கள் தொகுதியே சமூக அமைப்பு. உயர்ந்த சமூக அமைப்பில் தாழ்த்தப்பட்டோர், மிகவும் பிற்படுத்தப்பட்டோர், பிற்படுத்தப்பட்டோர், மேட்டுக்குடியினர் என்ற பாகுபாடு தோன்றாது; தோன்ற வழியில்லை. "ஒருவர் எல்லாருக்காகவும் எல்லோரும் ஒருவருக்காகவும்" என்று வாழ்வர். இயற்கை அமைவின் காரணமாகத் தகுதி, திறமையில் வேறுபாடுகள் இருந்தாலும் அல்லது காணப்பெற்றாலும் அவற்றை பொருட்படுத்துவ தில்லை. பெரியோரை வியத்தல் தமிழ் மரபன்று. அதுமட்டு மல்ல. சிறியோரை இகழ்தல் அதனினும் இல்லை. தகுதி, திறமைகள் அழுக்காற்றைத் தூண்டி வளர்த்தல் உயர்ந்த சமுதாய அமைப்பில் காண இயலாது. 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' எங்கு உள்ளதோ அங்கேதான் சமூகம் இருக்கிறது.

சமுதாயம் என்ற அமைப்பு, மனிதகுல வரலாற்றின் தொடக்க காலத்தில் இருந்தது. ஒருவரை ஒருவர் சார்ந்தே வாழ்ந்தனர். அன்று மனித குலத்தை அரித்து அழிக்கும் அழுக்காறு, அவா, வெகுளி ஆகிய தீமைகள் இல்லை. தனி உடைமைக் கோட்பாடும் வாழ்க்கை முறையும் தோன்றிய பிறகே சமுதாயம் உருக்குலைய ஆரம்பித்தது. பண்டங்களைப் பணமாக்கிப் புழங்கும் சமுதாயம் தோன்றிய பிறகே 'மனிதம்' மறைந்தது. பண மதிப்பீட்டுக் கொள்கை கோலோச்சத் தொடங்கியது என்றோ, அன்றே சமூகம் என்ற அமைப்பு நொறுங்கி உருத்தெரியாமல் போய்விட்டது. களவும் காவலும் தோன்றின. இரப்போரும் ஈவோரும் தோன்றினர். ஆட்சிக்கு அதிகாரங்கள் பெருகி வளர்ந்தன; சிறைச் சாலைகள் வளர்ந்தன. மக்கள் அடிமைகளானார்கள். அரசன் கடவுளானான். இது சமூகம் தோன்றி மறைந்த வரலாறு.

மாணிக்கவாசகர் காலத்தில் சமூக அமைப்பு கெட்டிருந்ததை அவரே குறிப்பிடுகிறார். இதனை,

*"சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்*
*ஆதமிலி நாயேனை"*

என்று பாடுவதால் அறியலாம். சாதி குலப்பிரிவினைகள் நிலப் பிரபுத்துவம் பெற்றெடுத்த குழந்தைகள்! வளர்த் தெடுத்த செவிலித் தாய். தனி உடைமைச் சமுதாயம். திரு வாசகம் "அயலவர்" என்று குறிப்பிடுகிறது. ஆக, மாணிக்க வாசகர் காலத்திலேயே "நம்மவர்" "அயலவர்" என்ற வழக்குகள் தோன்றிவிட்டன. "பொய்யர்தம் மெய்" என்பார் மாணிக்கவாசகர். கடவுள் நம்பிக்கையை வலியுறுத்திய மதப் புரோகிதர், ஆதிக்க சக்தியின் பால் சேர்ந்துவிட்டனர்; சுரண்டும் கூட்டத்தில் சேர்ந்து கொண்டு "செல்வச் செழிப்பு, கடவுள் கருணை, புண்ணியத்தின் பயன்" என்று கூறியவுடன் சுரண்டப்பட்ட- வாழ்விழந்த மக்களிடம் கடவுள் மறுப்புக் கொள்கை தோன்றலாயிற்று. அவர்கள் ஆப்தமான உறவினராக இருந்து "அயலார்" ஆயினர். நாத்திகம் பேசினர். மனிதகுல நாகரிகத்திற்கு- பாதுகாப்பிற்குக் கடவுள் நம்பிக்கை தேவை. நாத்திகம் நஞ்சு. அதே போழ்து கடவுள் நம்பிக்கை மனித நேயத்திற்கு மாறாக இருப்பின் அது நாத்திகத்தினும் கொடிது.

மாணிக்கவாசகர் காலத்தில் சமூகம் உருக்கொள்ள வில்லை. மாணிக்கவாசகர் காலத்தில் சமூகம் சீர்குலைந்து இருந்தது. அவரவர் மனப்போக்குப்படி பேசினர்; அவரவர் விரும்பியவாறு ஒழுகினர்.

*"ஊரவர் தத்தம் மனத்தன*
*பேச எஞ் ஞான்று கொல் சாவதுவே!"*

என்று மாணிக்கவாசகரே அழுது புலம்புகிறார்.

சமூகம்- சமுதாயம் என்ற அமைப்புத் தோன்றியது. ஒருவரையொருவர் தாங்குவதற்காக, வாழ்விப்பதற்காகவேயாம்.

இந்த உலக அமைவை- இயற்கை நோக்கின் ஒப்புரவு நெறி பேணத்தக்கதாகவே அமைந்துள்ளது. ஒன்றின்றி ஒன்றில்லை என்பதை நியதியாக விளக்குகிறது. ஆனால் மனிதன் உயிரியல் இயற்கை- மனித இயல்பைப் பெரிதும் முயன்று அழிக்கிறான். அதன் விளைவே கெட்ட போரிடும் உலகத்தின் தோற்றம்! ஏன் இந்த உலகத்தில் பஞ்சம்? பாரதி காரணம் சொல்கின்றான்.

*நேராக மானுடர் தாம் பிறரைக் கொல்ல*
*நினையாமல் வாழ்ந்திட்டால் உழுதல்*
*வேண்டா,*
*காரான நிலத்தைப் போய்த் திருத்த வேண்டா;*
*கால்வாய்கள் பாய்ச்சுவதில் கலகம் வேண்டா;*
*சீரான மழை பெய்யும் தெய்வமுண்டு;*
*சிவன் செத்தா லன்றி, மண்மேல் செழுமை*
*உண்டு*

(பாரதி அறுபத்தாறு- 61)

என்று பாடினான். இன்று என்ன நிலை? மண்மேல் செழுமையைக் காணோம். "சிவன் செத்து" விட்டானா? நஞ்சுண்டும் சாகாத சிவன் எப்படிச் சாகமுடியும்? சாவாதவன் மூவாதன் சிவன். சிவன், மனிதகுலம் நெறிமுறை தவறித் தறிகெட்டுப் போவதைக் கண்டு திகைத்துச் சிலையாக நிற்கிறான்? அவ்வளவுதான்!

இன்றோ சமூகம் இடறி விழுகிறது; ஒருவன் முன்னேறுவதற்கு இடையூறுகள் செய்கிறது. இடறி விழுந்து விட்டால் எடுத்துத் தூக்க மறுக்கிறது. உண்மையில் சமூகம் நம்மீது சவாரி செய்கிறது. ஏசுகிறது; பேசுகிறது; இழிவு செய்கிறது. மானம், மரியாதை என்ற பெயரில் கலகம்

செய்கிறது. அழுக்காற்றின் வழிப்பட்டு அல்லற்படுகிறது; அல்லற்படுத்துகிறது. ஆதலால், சமூகம் என்ற அமைப்பு வலிமையான அமைப்பாக உருக்கொள்ளவில்லை.

மனிதன் ஒரு சமூகப் பிராணி. ஆனாலும் அவனால் சமூகத்தில் ஓர் உறுப்பினனாக வாழ முடியவில்லை; வாழ இயலவில்லை. ஆதலால், சமூகத்தின் அங்கீகாரத்தை மனிதன் பெற முயற்சி செய்வதில் அர்த்தமில்லை; பொருளு மில்லை. சமூகம் "நல்லது", "உண்மை" என்ற அடிப்படையில் மதிப்பீடு செய்யாது. தகுதி, திறமைகளுக்கும் கூட சமூகம் மதிப்புக் கொடுப்பதில்லை. ஆதலால், நாம் வளர வேண்டுமானால் இரண்டு நிகழ்வுகள் கட்டாயமாக நிகழ்ந்தாக வேண்டும். அதாவது,

"பேசப்பட்டேன் நின்னடியாரில்" பூதலரால்
"நின் அடியான் என்று ஏசப்பட்டேன்"

என்ற மாணிக்கவாசகரின் அனுபவம் நமக்கும் பொருந்தும்; வேண்டும்.

நல்லவர்கள் கூடியிருக்கிற அவையில் நாம் ஒரு பொருளாக மதிக்கப் பெற்றுப் பேசப்படுதல் வேண்டும். கெட்டவர்கள் கூடியுள்ள கூட்டத்தில் நாம் ஏசப்படுதல் வேண்டும். இவை இரண்டும் நிகழ்ந்தால் நாம் நல்லவர்களாக வாழ்கிறோம் என்பது பொருள்.

மாணிக்கவாசகருக்குத் தம்மை இந்த உலகம் 'பேய்' என்று கூறிப் பரிகாசத்துடன் சிரிக்க வேண்டுமாம். ஆம்! இன்று இந்த உலகம் பேயாகத்தான் திரிகிறது! பணப்பேய் பிடித்தாட்டுகிறது. தலைவராதல் வேண்டும் என்ற பேய்க் குணம் பிடித்தாட்டுகிறது. நல்லதைக் கேட்பதும் இல்லை; சிந்திப்பதும் இல்லை. ஆதலால், இந்த உலகம் என்னை அங்கீகரிப்பது என்பது ஒருபோதும் ஆகாது. அப்படியே அங்கீகரித்தாலும் பயன் ஒன்றும் இல்லை. பயன் இல்லாதது மட்டும் அல்ல– தீமையும் விளையும்.

திருக்குறள் 'புகழ்' என்று ஓர் அதிகாரம் ஓதுகிறது. "புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்" என்பது புறநானூறு.

புகழ் என்பது என்ன? இன்று நாம் கேட்பது, காண்பது புகழல்ல! இன்று விளம்பரத்தைப் புகழ் என்று கருது கிறார்கள். விளம்பரம் வேறு. புகழ் வேறு. சமுதாயத்தில் பயன்பட வாழ்ந்தோர் இருப்பை- தேவையைச் சமூகம் உணர்வதே புகழ். புகழ் வேண்டிப் பெறுவதல்ல. தாமே வரலாற்றுப் போக்கில் வந்தடைவது புகழ்.

இங்ஙனம் பலபட வாழ்க்கைக்குப் புகழ் தேவை என்று கூறினும் புகழை விரும்பாத சான்றோர்களும் இருந்துள்ளனர்; இருக்கின்றனர். அவர்கள் தம் புகழ் கேட்கின் நாணுவர். ஏன்? மாணிக்கவாசகரும்,

"வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம்
வேண்டேன் மண்ணும் விண்ணும்"

என்றார். ஈசனின் புகழே பொருளுடைய புகழ் என்றார்.

புகழ் கேட்டு மகிழ்தல், பழி கேட்டு மனம் கோணுதல் மனிதர் இயல்பன்று. புகழ்படும்போது மகிழ்ந்து கேட்கலாம், பழியை மட்டும் கேட்கக் கூடாதா? மற்றவர் பழித்தலை மனம் கோணாது கேட்கவேண்டும். "யாம் வல்லேம்" என்று மமதை கொள்ளுதல் தகாது. மமதை இழக்கப்படுதல் வேண்டும். "நான்" கெட்டுப் போகவேண்டும். தாழ்வெனும் தன்மை வேண்டும். அறிவுடையோம் என்னும் செருக்கும் மயக்கமும் ஆகாது. செருக்கு, அறிவு வளர்ச்சியின் ஊற்றுக்களைத் தூர்க்கும்; மூடனாக்கும்; முட்டாளாக்கும்; பேதையாக்கும்; மூர்க்கனாக்கும். எவ்வகையாலும் செருக்கு ஆகாது; கூடாது.

இத்தகு தீய வாயில்களை அடைத்து நன்னெறி வாயிலைச் சார்தல் வேண்டும். 'கடவுள் ஒன்று' என்ற துணிவு

வேண்டும். "இவர் தேவர், அவர் தேவர்" என்று ஆசைகளால் உந்தப்பட்டு அலை மோதல் கூடாது. ஈசனை- இறைவனை நினைந்து நினைந்து கன்று ஈன்ற ஆவின் மனம் போலக் கசிந்துருகி அழக் கற்றுக் கொள்ளுதல் வேண்டும். இதுவே ஆன்மிக வாழ்க்கை; சமய வாழ்க்கை.

நெறிமுறை பிறழ்ந்த சமூகத்தின் மதிப்பீட்டை எதிர் பார்க்கக் கூடாது; புகழை விரும்பி அலையக்கூடாது. பழிச் சொற்களை விரும்பி ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். கடவுள் உண்டென்றும் ஒன்றென்றும் துணிதல் வேண்டும். அக்கடவுளை ஆவின் மனம் போல நினைந்து நினைந்து கசிந்துருகி வழிபடல் வேண்டும்.

*சகம் பேய் என்று தம்மைச் சிரிப்ப*
*நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை*
*பூணது வாகக் கோணுத லின்றிச்*
*சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்*
*கதியது பரம அதிசய மாகக்*
*கற்றா மனமெனக் கதறியும் பதறியும்*
*மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது*

(போற்றித் திருவகவல் 68–74)

## அக்காரம் தீற்றிய அதிசயம்

வாழ்வு சிறக்க சுய விமர்சனம் தேவை. விமர்சனம் என்பதைத் தூய்மை செய்தல் என்று கொள்ளலாம். ஒரு நாளில் எத்தனை தடவை கண்ணாடி முன் நின்று முகம் பார்த்துத் துடைத்துத் திருத்தம் செய்து கொள்கின்றோம்! அழகு செய்து கொள்கின்றோம்! அதுபோல நம் ஆன்மாவை- நாம் இயற்றிய செயல்களின் பயன்பாடு முதலியனவற்றை ஆய்வு செய்துகொண்டு பயனற்றவைகளைத் தவிர்த்துக் கொண்டு பயன்பாடுடைய பணிகளைச் செய்வது சுய விமர்சனம், எங்கே சுய விமர்சனம் புறக்கணிக்கப்படுகிறதோ

அல்லது தரமாக அமையவில்லையோ அங்கே பிறர் விமர்சனம் வரும். ஆனால், விமர்சனம் விமர்சனம்தான்! விமர்சனம் ஆக்கத்தின்பாற்பட்டதே! குற்றங் கண்டுரைத் தால் ஆக்கம் இல்லை; இருக்காது. விமர்சனம், எரியும் விளக்கில் சுடர் தட்டி விட்டு, எரிய விடுதல் போன்றது! அல்லது சுய விமர்சனம் பரிபூரண ஆக்கம்!

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தில் பெரும் பான்மையானவை சுய விமர்சனப் பாடல்கள். தன்னைத் தானே ஆய்ந்து தமது குற்றங்களை உணர்ந்து திருத்தம் காணும் வேட்கையில் பாடுகின்றார்! அழுது அழுது பாடுகின்றார்! அதனாலேயே திருவாசகத்தை ஓதினால் உருக்கம் ஏற்படுகிறது. “நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து” என்றும்,

*யானே பொய், என் நெஞ்சும்*
*பொய்; என் அன்பும் பொய்*
*ஆனால் வினையேன் அழுதால்*
*உன்னைப் பெறலாமே*
*தேனே அமுதே கரும்பின்*
*தெளிவே தித்திக்கும்*
*மானே அருளாய் அடியேன்*
*உனை வந்துறு மாறே!* (திருச்சதகம்–90)

என்றும் பாடுகின்றார்.

*அறிவ னே! அமு தே!அடி நாயினேன்*
*அறிவ னாகக் கொண் டோ, எனை ஆண்டது*
*அறிவி லாமையன் றேகண்டது ஆண்ட நாள்*
*அறிவ னோ வல்ல னோ அரு ளீசனே!*

(திருச்சதகம்–50)

என்றும் அருளிச் செய்துள்ளார்.

மாணிக்கவாசகர் அறிவால் சிவமே என்று போற்றப் பெறும் அளவுக்கு உயர்ந்ததற்குக் காரணம் தம்மை உணர்ந்து தமது பழக்கங்களைத் தவிர்த்துப் பழகி சிவன் கழலே சார்பென்று உணர்ந்து சிவத்தினைச் சார்ந்து ஒழுகியதேயாம். மாணிக்கவாசகரிடம் 'நான்' கெட்டுப் போய்விட்டது; சிவமாம் தன்மை மேலிட்டது. ஆதலால், உலகியல் முன்னேற்றமானாலும் சரி, ஆன்மிக முன்னேற்றமானாலும் சரி சுய விமர்சனம் தேவை. சுய விமர்சனம் செய்து கொள்ள வில்லையெனில் வளர்ச்சியில்லை; பிறர் விமர்சனத்தைத் தாங்கி மாற்றிக் கொள்பவர்கள் உயர்வார்கள்!

மாயம்! உண்மையைப் போல் தோற்றுவது மாயம்! இந்த மாயம் நச்சுத் தன்மையுடையது! இது கடித்தவுடன் மனிதன் "நான்" ஆகின்றான். 'நான்' என்பது அகந்தையின் பரிணாமம். பற்றற்ற துறவி ஒருவர் பலகாலும் உண்ணாது, உறங்காது யாதொரு தீங்கும் செய்யாது நோன்பிருந்தார். அவர் இறந்து போன பிறகு சொர்க்கத்தில் இடம் கிடைக்க வில்லை! மீண்டும் பிறக்க ஆணையிட்டான் இறைவன். துறவி, "ஏன்?" "எதற்காக?" என்று இறைவனிடம் கேட்க "நான்" என்பது இழக்கப் பெறவில்லை என்றான் இறைவன். கொங்கண முனிவர் கதை நாடறிந்த ஒன்றுதானே! 'நான்' என்பது செருக்கினைத் தரும். செருக்கு, அன்பிற்குப் பகை; அருளுக்குப் பகை; மனித உறவுகளுக்குப் பகை; ஏன் அறிவுக்கும் ஞானத்திற்கும் கூடப் பகை. இந்த 'நான்-ஐ' ஒழித்தல் தவத்தில் சிறந்த தவம்.

> "நான் கெட்ட வாபாடித் தெள்ளேணம்
> கொட்டமோ?"

> "..........................................நாம் ஒழிந்து
> சிவமான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ?"

என்றும் மாணிக்கவாசகர் பேசுவார். இந்த "நான்" கெடு தலைக் குமரகுருபரர் "பின்னும் ஓர் மாத்திரை குறுகினன்"

என்பார். அதாவது சீவன் சிவனாயிற்று. "நான்" பரந்த வெளியில் ஒற்றை மரம்! 'நாம்' அடர்ந்த தோப்புக்குள் ஒரு மரம்! பரந்த வெளியில் உள்ள ஒற்றை மரத்திற்குச் சூறைக் காற்றடிக்கும் போது பாதுகாப்பில்லை. தோப்புக்குள் உள்ள மரத்துக்குப் பாதுகாப்பு உண்டு. "நான்" மனித குலத்தின் தீமைகளுக்கெல்லாம் மூலகாரணம். இதுதான் அப்பரடிகள் கூறிய மூலநோய் போலும்! "நான்" உடன் பிறந்தது.

"எனது" என்பது தீமை, "என்னுடையது" என்ற தீமையே அழுக்காற்றின் தாய்! வீட்டுக்கும் வீட்டுக்கும் இடையேயுள்ள சுவர்களும் வேலிகளும் தோன்றியது. "எனது" என்பதிலிருந்து தான்! வளம்- வறுமை, களவு- காவல் பிறந்து வளர்ந்ததும் 'எனது' என்ற செருக்கினால் தான். பகை மைக்கும் கூடக் காரணம் 'எனது' தான். இந்த 'எனது' நீக்குதல் 'நான்' அகற்றுதலைவிடக் கடினம். எனது சொத்து என்பது பற்றிப் பிடித்துக்கொண்டு வளர்கிறது. 'எனது'க்குத் தலைசிறந்த பரிவாரம் அரசு. "என"தின் ஏவல் கேட்போர் ஆட்சியாளர்; காவல்துறையினர்; பதிவாளர் துறையினர். எனது என்ற தீமை ஆட்சிக் கட்டிலிலேயே ஏறிவிட்டது. 'நான்' 'எனது' என்பதை செருக்கு என்றது வள்ளுவம். 'நான்' 'எனது' என்ற மாயம் மனிதனைக் கெடுத்துவிடுகிறது. ஏன்? மனிதனாக வாழ அவை அனுமதிப்பதில்லை.

'நான் என்னும் செருக்குடையவன் தன்னைக் காப் பாற்றிக் கொள்ள முயற்சி செய்வான்; தான் செய்யாததைச் செய்ததாகக் கூறுவான்; பெருமையைத் தேடுவான். உரிய விலையின்றிச் செல்வத்தைத் தேடுவான். காரண காரியமின்றி 'நான்' மட்டுமே கருவியாகக் கொண்டு மிரட்டி, பயமுறுத்திப் பணம் கேட்பான். "நான் ஆணையிட்டால்!" என்பான். இந்த 'நான்' காரணமாகப் பொய் கூறுவான். 'எனது' என்பது, பொய் என்ற உரத்திலேயே வளரும். பொய்யும் வளரும் தன்மையது. விளையாட்டாக அல்லது அவசியத் தேவையாக ஒரு பொய் வாழ்க்கையில் தோன்றிவிட்டால் பொய் நாளும்

வளரும். 'எனது' உரிமைச் செல்வம் அடுக்கிய பலவாக ஆக வேண்டுமானால் பொய் தேவைப்படும். ஒரு சில நல்லவர்கள் 'பொய்யை'ப் பாதுகாப்புக்கு மட்டும் பயன்படுத்துகின்றனர். சிறுமதியினர் பொய்யையே கருவியாகப் பயன்படுத்துவர். அடுத்தவர் செல்வத்தைப் பறிப்பர். 'எனது' உடன்பிறப்புக் களைக் கூடப் பிரிக்கும். கைகேயியின் மனத்தைத் திரித்தது கூட "எனது" தானே! மழலைக் குழந்தையாக இருக்கும் பொழுது 'நான்' இல்லை; 'எனது' இல்லை; 'எனது' என்ற உணர்வு வந்தவுடன் பொய்யும் உடன் வந்து விடுகிறது. விளையாட்டுப் பொம்மையில் தொடங்கும் 'எனது', சொத்து வரையில் வளர்கிறது. பகையை மூட்டுகிறது. கலகத்தை வளர்க்கிறது; மனிதரைப் பிரிக்கிறது. நட்பு, காதல் உறவு எல்லாம் 'நான்' 'எனது'க்கு முன் நிற்க முடியாமல் தோற்றுப்போயின. 'எனது' அற்றால் 'நான்' அறும். 'நான்' 'எனது' அற்றால் பொய் அகலும்; 'பொய்யினைப் பல செய்து' என்கிறார் மாணிக்கவாசகர். "பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்" என்பார் பிறிதொரு பாடலில். உண்மையல்லாதன வெல்லாம் பொய்! உரியதல்லாதது– செல்வமாயினும், புகழாயினும் அது பொய்தான்! இன்றைய சமுதாயம் இவர் அவர் என்றில்லாமல் அவரவர் தகுதிக்கு ஏற்றாற்போலப் பொய்யிலே பிறந்து, பொய்யிலே வளர்ந்து, பொய்யிலே புரள்கிறது. பொய் கலந்த மெய்கூட இல்லை. உண்மையைச் சொன்னால் இந்தச் சமுதாயத்தில்– ஆட்சி யமைப்பில் வாழ இயலாத நிலை இன்று! இன்று உண்மையைச் சொல்லி வாழ விரும்புபவர்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டியதுதான்!

பொய், 'நான்' என்னும் செருக்கு, 'எனது' என்னும் செருக்கு ஆகியவை மனிதனை ஆட்கொண்ட பிறகு அவன் வாழ ஆசைப்படுகிறான்! 'நான்', 'எனது', 'பொய்' ஆகியன வாழ்வதற்குரிய இயல்புகள் அல்ல! ஆயினும் வாழும் ஆசை யாரை விட்டது? ஆதலால், நடிப்பர்! நடிப்பு பலவகை!

வாழும் களங்கள் தோறும் நடிப்பு மாறும்! வீட்டில் நடிக்கும் நடிப்பு வேறு! நாட்டில் நடிக்கும் நடிப்பு வேறு! சமூக நடிப்பு வேறு! நாட்டிற்குரிய நடிப்பு வேறு! வேலையிலும் நடிப்பு உண்டு! சமூக சேவையில் தொண்டும் உண்டு; நடிப்பும் உண்டு! நடிப்பை எளிதில் கண்டுணர முடியாது. நம்பிக்கை களை வளர்த்து அதன் பிறகுதான் நடிப்பு தோன்றும்! கடின உழைப்பாளி போல நடிப்பர். ஆனால், அவர் செய்யும் வேலைகள் ஊர்ந்து செல்லுமே தவிர, நகர்ந்துகூடச் செல்லா. அன்பிலும் விசுவாசத்திலும் முதிர்ந்தவர் போலக் கண்ணீர் சிந்துவார். ஆயினும் அன்பு என்பது மருந்துக்குக்கூட கிடைக்காது. நடிகர்கள் நாடகம் முடிந்தவுடன் நாடக மேடையைவிட்டு இறங்கி விடுவது போல, நடிக்கும் நண்பர்கள் அவரவர் காரியம் முடிந்தவுடன் அகன்றுவிடுவர்; அந்நியராகி விடுவர். பின் அழைத்துத்தான் ஆகவேண்டும்! வாங்கினதை மறந்தே விடுவர். மனித குலத்தில் மட்டும் நட்பும் உறவும் சீராக அமைந்துவிட்டால் வறுமை ஏது? ஏழ்மை ஏது? பகை ஏது? கலகம் ஏது? எல்லா நடிப்பிலும் "தலைமை" நடிப்பு அலாதியானது; சுவை மிக்கது. இன்று தலைவராக ஆசைகொண்டு திரிவோருக்குத் தகுதியே இல்லை! ஆனால், எல்லோருக்கும் தலைவராக வேண்டும் என்று ஆசை.

வேள்வியில் இடம்பெறும் அவியுணவு சிவனுக்கே உரியது. அவனே சாகாதவன்! மூவாதவன்! பிறவா யாக்கைப் பெரியோன்! ஆனால், மற்றைத் தேவர்களுக்குத் தாங்களும் தலைவர்களாக ஆசை! தக்கன் வேள்வியில் தலைவர்கள் ஆனார்கள்! அவியுணவை உண்டார்கள்! பின் பாற்கடல் கடைந்தபொழுது முதலில் ஆலகால நஞ்சு எழுந்தது! தேவர்கள் அலறி ஓடினார்கள்! எம்பெருமான் நஞ்சை உண்டு அமரர்களைக் காப்பாற்றினான்! தேவர்களுக்கு அமுதைக் கொடுத்தான்!

"விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்வான்!"

என்பார் இளங்கோவடிகள். தலைமை என்றால் மற்றவர்களைத் துன்பத்திலிருந்து காப்பாற்ற வேண்டும். மற்றவர்களைத் துன்பத்திலிருந்து காப்பாற்றாதவர்கள்- காப்பாற்ற முடியாதவர்கள் எங்ஙனம் தலைவராக முடியும்? ஆனால் இன்று தலைவருக்குரிய இலக்கணங்கள் மாறி வருகின்றன. துண்டுகள், (பொருளற்ற- பயனற்ற) பேச்சுத் திறன் இருந்தால் தலைவராகி விடலாம். இந்த இலக்கணங்கள் 'தலைமை'த் தகுதியாக எண்ணி நடித்தல்! "மண்ணிடை நடித்து" என்பார் மாணிக்கவாசகர். மண்ணிடை நடித்தல் ஏன்? சில நாள்களாவது உண்மை வாழ்வு வாழக் கூடாதா? இதற்கெல்லாம் காரணம் கேட்டால் "முன் வினையின்" மீது பழிபோட்டுத் திரிவது இயற்கையாகி விட்டது. உலா வருதல், பயணம் செல்லுதல் என்பன வேறு. இவற்றிற்கு நோக்கம் உண்டு. 'திரிதல்'- பயனற்றது; உழைப்பில்லாமல் யாதொரு பயனுமின்றி ஊரைச் சுற்றுவர்; பிழைப்புக்கு இலவசத் தேநீர்- சோறு எதிர்பார்ப்பர்; காரணம் கேட்டால் "வினைப்பயன்" என்பர். "கெட்ட காலம்" என்பர். "நல்லகாலம் பிறக்கவில்லை" என்பர். "ஆறுமாத காலம் கழியவேண்டும்" என்பர். முன் வினையின்மீது பழிபோட்டுவிட்டுச் செயலற்றிருப்பவர்களின்- தூர்த்தர்களாக நடப்பவர்களின் நடிப்பு பயன்தராது. நீண்ட நாள்களுக்குச் செலாவணியாகாது.

"நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து
நான் நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும்
விரைகின்றேன்"

என்றும் திருவாசகம் பேசுகிறது. நடிப்பும் விரைவும் இணைந்தவை போலும்! "உள்ளது போகாது" என்று அமைதியாக நடக்கும்; செய்யும் மண்ணிடையில்தான் நடிக்க

இயலும். ஏனெனில் ஏமாறுபவர்கள் மண்ணில்தான் அதிகம். பொருள் செய்தல், அரசியல், மதம், மந்திர தந்திரங்கள் முதலிய அனைத்துத் துறைகளிலும் இன்று நடிப்பு புகுந்து விளையாடுகிறது. இன்று நமது நாட்டில் சோஷலிசம் என்பதே நடிப்பாளர்களின் மந்திர மொழிபோல் விளங்கு கிறது. நடிப்பு, போலியானது; பொய்ம்மையானது. நிர்வாண மான சுயநலத் தன்மையுடையது. நடிப்பின் விளைவு துன்பம்; துயரம்; எதிர் விளைவு சமுதாயச் சீரழிவு. குற்றங்கள், குறைகள் உடையதாக இருப்பது பாபமல்ல. இவற்றை நடித்து மறைப்பதுதான் குற்றம். நியாயப்படுத்துவதுதான் குற்றம். தவறுகள் செய்துவிடுவது பாபம் அல்ல. ஆனால் தவறுகளே செய்யவில்லை என்று நடிப்பது- உண்மைக்குப் புறம்பாக பேசுவது- நடப்பது இவைதான் பெருந் தீங்கு செய்யும். ஆதலால், மண்மீது பொய்யினை மறைத்துக் கொள்ளும் நடிப்பு வேண்டாம். ஆனால், மாணிக்கவாசகர் "நடிக்கவும் வேண்டும்" என்கிறார். பொய்யை மறைக்கும் நடிப்பு அல்ல. உண்மையை அடைய ஆர்வம் கொள்ளும் பத்திமை நடிப்புத் தேவை. "நடிக்கின்றிலை" என்பார்.

இங்ஙனம் மண்ணிடை நடித்தும்; வினை விளைவின் பயன் என்றும் திரிகின்ற ஆன்மாவை என்ன செய்வது? ஒரு ஆன்மா பைத்தியம்போலத் திரிந்தால் தாயிற் சிறந்த தயாவுடைய சிவத்துக்கு இழுக்கல்லவா? சிவத்தின் படைப்பில் ஆன்மாக்கள் இப்படித் திரிந்தால் உலகம் பழி தூற்றாதா? சந்தி சிரிக்க வைக்காதா? ஆதலால், சிவம் திரியும் ஆன்மாவைப் பிடிக்கிறான், பிடித்து நிறுத்துகிறான். திரியும் ஆன்மாவைத் தடுத்து நிறுத்துகிறான். தன்னுடன் பிணைத்துக் கொள்கிறான். சிவத்துக்கு 'நடுதறி' என்று ஒரு பெயர் உண்டு. அப்பரடிகள் திருத்தாண்டகத்தில் "கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" என்றார். ஆன்மாவைச் சிவத்துடன் இணைத்துப் பிரியாமல் கட்டிப்போடுவது கட்டுத் தறி! பாரதம், சகாதேவன் கண்ணனைக் கட்டினான் என்று கூறுவதை ஓர்க.

நிலை தடுமாறி திரியும் ஆன்மாவை, நம் தலைவன் சிவம் தாமே எளிமையாகப் புகுந்து நிறுத்தி ஆட்கொள் கிறான். நாளும் சின்னஞ்சிறு செயல்கள் செய்தும் வினைகள் பல செய்தும் திரியும் ஆன்மாவை, நான்மறை நாயகன் நயந்து வந்து ஆட்கொண்டருள்கிறான். நான்முகனும் திருமாலும் தேடியும் காணப்பெறாத சிவம், நான்மறைகள் ஐயனே என்று தேடியும் காணப்பெறாத விழுப்பொருள் வலியவந்து ஆட் கொண்டருளிய போதும் அருமை உணர்ந்தபாடில்லை; திருவருள் நாட்டம் வரவில்லை; ஆணவத்தின் சேட்டை இம்மியும் குறையவில்லை. வேப்ப இலை தின்னும் புழுவைக் கரும்பில் இட்ட கதையாகவே அமைகிறது. ஆயினும் தென்னன் பெருந்துறையுறை சிவன் வள்ளல், ஆன்மாவை விடமாட்டான்! சில பொருள்கள் ஒரு கொதியிலேயே பக்குவமாகிவிடும்; பதப்படும். சில பொருள்களுக்குப் பல கொதி தேவைப்படும். நல்லான்மாக்கள் ஒரு சொல்லில் பெருமானுக்கு ஆட்படும்! முத்தி நெறியில் நிற்கும்! புறத்தே போகா! பெருமானே பார்த்துத் துடைத்தெறிய முற்பட்டாலும் போகா! இறுக்கி வளாறினால் அடித்தாலும் போகாது! பக்குவம் குறைந்த ஆன்மாக்களைப் பலதடவை அடித்து அடித்துத் தான் அற்புதம் செய்கிறான் சிவம்! ஆனாலும் ஓர் ஆன்மா வினையினின்று விடுதலை பெற்றுத் திருவருளின்பத்தில் திளைக்கச் செய்யும் வரையில் சிவம் ஓயாது, அவன்தன் ஐந்தொழிலும் நிற்காது! வேண்டியது நமது விழிப்புணர்வே!

*நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பல செய்து*
*நானெனது எனு மாயக்*
*கடித்த வாயிலே நின்று முன் வினைமிகக்*
*கழறியே திரிவேனைப்*
*பிடித்து முன்னின்ற பெருமறை தேடிய*
*அருட் பொருள் அடியேனை*
*அடித்த டித்துவக் காரமுன் தீற்றிய*
*அற்புதம் அறியேனே!*

(அற்புதப் பத்து–3)

# பொய்யும் யானும் புறமே போந்தோம்!

இறைவன் உயர்த்தியுள்ள கொடி இடபக் கொடி. இடபம் அறத்தின் சின்னம். எருது கடுமையாக உழைக்கவும் உழைப்பின் பயனை மற்றவர்க்குக் கொடுக்கவும் செய்கிறது. அதுபோல மனிதன் கடுமையாக உழைப்பதையே ஒழுக்கமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். பிறருக்காக உழைப்பது நோன்பு, தவம் என்று புறநானூறு கூறும்.

அறம்– தற்சார்பில்லாதது. அதனால் அறம் விலைப் பொருள் அல்ல. அறத்தை விலைப் பொருளாகவும் ஆக்கக் கூடாது. "அறவிலை வாணிகன் ஆய் அலன்" என்று புறநானூறு கூறும். அறம் ஆன்மாவைச் சார்ந்தது. அறம், அகநிலைப் பண்பு, அறம், இம்மையின்பத்தையும் தரும்; மறுமை இன்பத்தையும் தரும். மாணிக்கவாசகர் "பொய்யும் யானும் புறமே போந்தோம்" என்றருளிச் செய்துள்ளார். திருவாசகப் பாடலில் வரும் புறம், அறத்திற்கு எதிரிடையான புறம். இறைவனுடைய திருவடி இன்பத்திற்குப் புறமாய புறம். புறம், உத்தரவாதமும் பாதுகாப்பும் இல்லாத நிலை. அற நெறிக்கு, அன்பு நெறிக்கு எதிரிடையானதெல்லாம் புறம். புறம், பயனற்றவை ஒன்று சேரும் இடம்; அல்லது போடப் படும் இடம். புறம் என்பது 'வெளியே' என்ற பொருளும் தரும். "புறஞ்சுவர் கோலம் செய்வான்" என்று பாரதம் கூறும். புறத்தே வந்தபிறகு ஆன்மாவின் நிலை என்ன? தீயவை எல்லாம் புறம். தீயவை எழு பிறப்பும் தீண்டும், தீயைவிடத் தீமை கொடிது. பொருள் கூடத் தீதின்றி வந்தால்தான் பொருள் எனப்படும். அப்பொருள்தான் இன்பந்தரும். நெருப்பு புகையால் மூடப்பட்டுள்ளது. முகம் பார்க்கும் கண்ணாடியும் கூடப் புழுதியால் மூடப்படுகிறது. அதுபோல்

தன்னலத்தால் மூடப்பெற்ற ஆன்மாக்கள் சமூகத்திற்குப் புறம்பாம்; அறநெறிக்குப் புறம்பாம்.

இன்ப நெறிக்கு இடையூறு காமமும் சினமும் பொய்யும்! இவை மனிதனை, மனிதக் கூட்டத்திலிருந்து பிரித்துப் புறத்தே தள்ளுகின்றன. புறம், சன்மார்க்கத்திற்கு இசைந்தது அல்ல. ஆன்மா, புறத்தே தூக்கியெறியப்படா திருக்க வேண்டுமானால் நன்னெறிகளை வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். அவையாவன: ஒப்புரவறிதல், அடக்கம், பொறுமை, சினம் காத்தல் முதலியன. சத்தியத்தையும் நடுவு நிலையையும் பேணுக. புறத்தே தள்ளப்படாமல் சொர்க்கத்திற்குச் செல்ல வேண்டுமா? சொர்க்கத்தின் கதவு திறக்க வேண்டுமா? நீ, அறநெறி பற்றிப் பேசுவதை நிறுத்து; அறநெறியில் நட! நீ, அறநெறியில் நடக்க முயன்று வெற்றி பெற்றுவிட்டால் புறமே இல்லை. நீ வாழும் இடமே சொர்க்கம்.

மர்ணிக்கவாசகர் "புறமே போந்தோம் பொய்யும் யானும்" என்கிறார். ஆம், உண்மை! பொய், சொர்க்கத் திற்குள் புகமுடியாது. அது மட்டுமல்ல. இப்புவிக் கோளத்தில் பொய் வெற்றி பெறாது; நிலை நிற்காது. மனிதன் தவிர்த்துக் கொள்ள வேண்டியவைகளில் பொய் ஒன்று என்பது மாணிக்கவாசகரின் கருத்து. அதனால் "பொய் தான் தவிர்த்து" என்றார். பொய் என்றால் என்ன? வள்ளுவத்தின் அடிப்படையில் விரிந்த அடிப்படையில் பொய்க்குப் பொருள் கொண்டால் குற்றம் அல்லது நலம் பயப்பனவாக இல்லாதன எல்லாம் பொய் என்று கொள்ளலாம் போலத் தோன்றுகிறது. ஆதலால், பொய் என்பது, மெய் அல்லது உண்மைக்கு எதிரிடையானது என்று பொருள் கொள்ள இயலாது. தீமை செய்யாது நன்மை செய்தல் இவற்றுடன் பொய்யாமையை உடன் வைத்து எண்ணுகிறது. பகவத்கீதை. "பாவம் இயங்க அதன் கைப்பிடியாகப் பயன்படுவது பொய்" என்றான் ஜேம்ஸ்.

தி. தி. VIII. 14.

பொய், நஞ்சு; இல்லை! பொய் நஞ்சினும் கொடியது. மனித நாகரிகம் தொடங்கிய காலந்தொட்டுப் பொய்யை மறுத்தே வந்துள்ளனர் உலக சிந்தனையாளர்கள். சில நாடுகளில் பொய்க்கு எதிரான சட்டமே இயற்றியிருக்கிறார்கள். துருக்கி நாட்டுச் சட்டத்தில் பொய் சொன்னதாக நிரூபிக்கப் பட்டுவிட்டால் பொய் சொன்னவர்களின் நெற்றியில் நெருப்பில் பழுத்த இரும்புக் கம்பியால் சூடு போடுகிறார் களாம். நமது நாட்டில் சொல்வன்மையால் பொய்யை மெய் யாக்கிவிடுகிறார்கள். மனிதன் வளர, வளர அவனுடைய பொய்யும் வளருகிறது என்பது மாணிக்கவாசகரின் கருத்து. "பொய்மையே பெருக்கி" என்கிறார். பிறந்தவுடன் குழந்தைகள் பொய் கூறுவதில்லை. கூறவும் தெரியாது. ஆனால் வயது வளர, வளர வீடுகளும் வீதிகளும் குழந்தைகளுக்குப் பொய்யைக் கற்றுத் தந்துவிடுகின்றன. அதனால், திருக்குறள் "வாய்மை" என்று ஓர் அதிகாரமே இயற்றியது.

> "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
> செய்யாமை செய்யாமை நன்று" (297)

என்பது திருக்குறள்.

பொய்யைத் தவிர்க்க என்ன வழி? நாட்டில் செங்கோல் தழுவிய ஆட்சி இருக்க வேண்டும். இன்றைய ஆட்சிமுறையில் பொய்க் கணக்கு, இரண்டாம் கணக்கு என்றெல்லாம் பகிரங்கமாகவே பேசப்படுகின்றன. கருப்புப் பணம் இருப்பது எல்லாருக்கும் தெரியும். ஆனால், எங்கும் பொய் அரங்கேறுகிறது. கொடுங்கோல் அரசு அகற்றப் படவேண்டும். பொருள் ஈட்டவும், வைத்துக்கொள்ளவும் சுதந்திரம் வேண்டும். கொடுங்கோன்மை அகன்றால் மட்டும் போதாது. ஆற்றல் வளர வேண்டும். ஆற்றல் பெற்றவர்கள் தற்காப்புக்குப் பொய்யைக் கருவியாகப் பயன்படுத்துவது இயற்கை. சத்தியம் சாகாது.

பொய்யைக்கூட ஓரளவு சமாளிக்கலாம். மெய் போலப் பொய் கூறுபவரை சமாளிப்பது அரிது. இங்ஙனம் மெய்போலப் பொய் கூறுபவர்களைப் பற்றிதான் "பொய்யர் தம் மெய்யும் அஞ்சேன்" என்று மாணிக்கவாசகர் கூறினார். ஆதலால், பொய்களைத் தவிர்த்து வாழாதவர்கள் சொர்க் கத்தை அடைய முடியாது. பொய்யால் புறமேயாகும் தன்மை பெறுவர். பொய்க்குத் துணை 'யான்' என்பது. யானும் பொய்யும் புறமே போந்தோம் என்றார். பொய்க்கு யான் துணை; யானுக்குப் பொய் துணை.

மனிதன் சொர்க்கம் அடையவேண்டுமா? அவன் 'யான், 'எனது' என்ற செருக்கு உடையவனாக இருத்தல் கூடாது என்றார் திருவள்ளுவர். இவற்றுள் யான் மிகவும் மோசமானது. 'யான்' உறவுப் பகை. நட்புக்குப் பகை; காதலுக்குப் பகை; சமுதாயத்துக்குப் பகை; ஆதலால், 'யான்' என்ற செருக்கு அறவே ஆகாது. 'யான், 'எனது' என்ற அகந்தை எள்ளளவும் மாறவில்லை" என்பது தாயுமானவர் வாக்கு. 'யான்' என்ற செருக்கில் விளைந்த மோதல்களும் கலகங்களும் பலப்பல. 'எனது' என்பதால் எழுப்பப்பெற்ற சுவர்களும், போடப்பட்ட வேலிகளும் எண்ணிலடங்கா. பூட்டு வியாபாரிகளின் நம்பிக்கைக்குரிய மூலதனமே "எனது" என்பதுதான்! ஒரு முனிவர்- தூய துறவி- நல்லவராயினும் அவருக்கு வீடு பேறு கிடைக்கவில்லை. அவர் வாயிற் காவலராகிய நந்தீசரிடம் 'நான்' வந்திருக்கிறேன் என்று சொன்னதால் இறைவனின் ஆணை 'நான்' இழந்தபின் வரட்டும் என்பதாயிற்று! ஆதலால் 'பொய்யும் யானும்' சொர்க்கத்தில் புகா. பொய்யும் 'யான்' எனும் செருக்கும் உடையவர் சொர்க்கம் புகமுடியாது. புறத்தே தள்ளப்படுதல் உறுதி.

புறத்தேயிருந்து சொர்க்கத்திற்குள் புக அன்பு வேண்டும். அந்த அன்பு மெய்யன்பாக இருக்கவேண்டும். மெய்யன்பு என்று கூறியதால் அன்பிலும் போலி- பாசாங்கு

இருப்பது உண்மையாகிறது. மெய்யன்பு என்பது காரண காரியங்களைக் கடந்த அன்பு. தூண்டுதல் தேவைப்படாத அன்பு. அன்பு, அன்புக்காகவே! இந்த அன்பு நெறி நின்று வாழ்வதில் துன்பம் வரினும் அன்பு குறையக்கூடாது. அன்பு வளர வேண்டும்.

*இடர்க ளையா தேனும் எமக்கிரங்கா ரேனும்*
*படரும் நெறிபணியா ரேனும்– சுடர் உருவில்*
*என்பறாக் கோலத் தெரியாடும் எம்மானார்க்(கு)*
*அன்பறா தென்னெஞ் சவர்க்கு.* (அற்புதத் திருவந்தாதி–2)

என்று அம்மையார் பாடினார்.

இந்த அன்பு நிரந்தரமானதாக இருக்கவேண்டும் என்பது மாணிக்கவாசகரின் பிரார்த்தனை.

*பரந்து பல் வாய மலரிட்டு முட்*
*டாதடி யே இறைஞ்சி*
*இரந்தெல் லாம் எமக் கேபெற*
*லாம் என்னும் அன்பருள்ளம்*
*கரந்து நில் லாக்கள் வனே நின்றன்*
*வார்கழற்(கு) அன்(பு) எனக்(கு)*
*நிரந்தர மாய்அரு ளாய் நின்னை*
*ஏந்த முழுவதுமே!* (திருச்சதகம்–6)

அன்பு நிரந்தரமானதாக இருக்க வேண்டும். அந்த அன்பும் ஆற்றுப் புனல்போல் கரைகளை– சம்பிரதாயங்களை உடைத்துக்கொண்டு ஓடவேண்டும். அன்பெனும் ஆறு கரை புரள நின்றுயர்ந்தவர்கள் மாணிக்கவாசகரும் கண்ணப்பரு மாவர். அச்சமிலாத மாணிக்கவாசகர் அன்பிலாதவரைக் கண்டால் அஞ்சுகிறார். அன்பிலாதவர் உறவு, நட்பு பனை மரத்து நிழலனையது; கானல் நீர் போன்றது. பனைமரத்து நிழலில் வெய்யிலுக்கு ஒதுங்க இயலாது; முடியாது. கானல் நீர் தாகம் தீர்க்காது. அன்பிலாதவருடன் பழகி அவர்களைச்

சுமப்பது பைத்தியக்காரத்தனம். அதனால் மாணிக்கவாசகர் "அன்பிலாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே!" என்று பாடுகிறார். ஆம்! அன்பிலாதவர் உறவு அஞ்சத்தக்கது. அன்பிலாதவர்கள் ஒழுக்கமுடையவர்களாகவும் இருக்கமாட்டார்கள்; வஞ்சனை, ஏமாற்று, சூது முதலியனவும் கொண்டிருப்பார்கள். ஆதலால், ஒழுக்கமுடையவராக இருக்க விரும்பினால் அன்புடையராக வாழ்தல் வேண்டும். மனிதன் தன்னுடன் தொடர்புடையார் மாட்டும், தொடர்பிலாதார் மாட்டும், கடவுள் மாட்டும் அன்பு செலுத்தும் வரை ஒழுக்கமுடையவனாக இருப்பான். பரிபூரண அன்புடையோராவதற்கு அறிந்தோ, அறியாமலோ போராடுவதுதான் வாழ்க்கை! அன்பு வளர, அன்பை அனுபவிக்க, அன்பு காட்ட "யான்" என்ற உணர்ச்சியைத் துறந்தேயாக வேண்டும். நாமனைவரும் பின்பற்ற வேண்டிய பண்புகள் அன்பு, அறிவு, பணிவு ஆகியன. அன்பு குறையாமல் வளர வேண்டுமாயின் பணிவு வேண்டும், விரும்பி அன்பு செய்யப் பழகுதல் வேண்டும். அன்பும் நுண்ணறிவும் ஒருசேரப் பெற்றால் எதையும் சாதிக்கலாம். வாணிகப் போக்கில்- வாணிகக் கண்ணோட்டத்தில் பார்த்தாலும் அன்பு ஒன்றுக்குப் பத்து மடங்காகப் பயன் தரக்கூடியது. அன்பு தன்னையே கொடுக்கும். உண்மை, அறிவுக்குப் புலனாகாது. அன்புக்கே உண்மை புலனாகும். வாழ்க்கை என்ற கோட்டையை வலிமைப்படுத்த வேண்டுமாயின் அது நட்புறவால்தான் இயலும். அன்பு கொள்வதும், அன்பு பெறுதலும் மனித வாழ்க்கையின் தலையாய கடமை. உலகத்தில் மற்றெல்லாவற்றிற்கும் அழிவுண்டு. ஆனால் அன்புக்கு அழிவில்லை. அன்பிலும்கூடப் பிரிவு வருதல் உண்டு. பிரிவு, சிறிது காலமாக இருந்தால் அன்பு வளரும். பிரிவு நீடித்தால் துன்பந்தரும்; வதைக்கும்.

மாணிக்கவாசகர் தமக்கும், இறைவனுக்கும் இடையில் ஏற்பட்ட பிரிவை நீடிக்க விரும்பாமல் அழுது புலம்பிய புலம்பல்தானே திருவாசகம்! தீங்கிழைத்தவரிடத்திலும்

அன்பு காட்டுவதுதான் உண்மையான அன்பு. இங்ஙனம் தீங்கிழைத்தாரிடத்திலும் அன்பு காட்ட மனிதனால்தான் முடியும். அறியாமையாலேயே தீங்கிழைக்கிறான் என்று எண்ண வேண்டும். "அறியாமல் செய்கிறார்கள், மன்னித்து விடுக" என்று இயேசுபெருமான் செய்த பிரார்த்தனையை நினைவிற் கொள்க.

பிறந்தவர்கள் அனைவரும் இறப்பது உறுதி, அதற்குள் ஏன் அன்பில் வறட்சி என்று எண்ணி அன்பு காட்ட வேண்டும். கடவுள் மனிதனுக்கு மட்டும் கொடுத்துள்ள ஒரே ஒரு கொடை அன்புதான்! அன்பு அரும்பொருள். அதனை இழந்தால் திரும்பப் பெறுவது கடினம். அன்பு, உள்ளத்தை உயிருடனும் உயிரை உடலுடனும் பிணைக்கும் ஒரு தளை. "அறிவு இறைவனைத் தேடுகிறது. அன்புதான் இறைவன் உறைவிடம் என்பதை அறிந்து கொண்டாரில்லை. அன்பு தான் வாழ்க்கைச் சட்டம்! அன்புடன் ஒன்றுவதுதான் விடுதலையும் முத்தியும்" என்றார் இராமதீர்த்தர்.

அன்புடையார் ஆன்மாவைத் தவிர மற்றொன்று அறியார். 'மற்றொன்று அறியார்' என்பது கடவுள் பக்தி முதல் சமூக வாழ்க்கை வரை பொருந்தும்.

மெய்யன்பு காட்டும் வல்லமை பெறவேண்டும். அதற்குத் தொண்டு செய்யவேண்டும். அன்புக்கு அரண் தொண்டு.

பொய்யைத் தவிர்த்தல், "யான்" இழத்தல், மெய்யன்பு காட்டுதல், சிவமும் அன்பும் தவிர மற்றொன்று அறியா திருத்தல், தொண்டு செய்தல் ஆகியன மேற்கொண்டு ஒழுகி னால் திருவருள் சித்திக்கும். மாணிக்கவாசகர் "யானும் பொய்யும் புறமே போந்தோம்" என்றும், "புறம் போக லொட்டேன்" என்றும் பாடுகின்றார். ஆம்! புறம் போதலுக்கா பிறந்தோம்! மனித குலத்திலிருந்து புறம் போகமாட்டோம் என்று உறுதி கொள்வோம். அன்பால்

நட்புச்செய்தோரிடமிருந்தும் அன்பு காட்டப் பெற்றவரிட மிருந்தும் பிரியமாட்டோம்! புறம் போக மாட்டோம்! நிச்சயமாகக் கடவுளிடத்திலிருந்து விலக மாட்டோம் என்று உறுதி கொள்வோம்.

*புறமே போந்தோம் பொய்யும்*
*யானும் மெய்யன்பு*
*பெறவே வல்லேன் அல்லா*
*வண்ணம் பெற்றேன் யான்*
*அறவே நின்னைச் சேர்ந்த அடியார்*
*மற்றொன் றறியாதார்*
*சிறவே செய்து வழி வந்து சிவனே*
*நின்தாள் சேர்ந்தாரே!* (திருச்சதகம்–86)

## பிரிவிலாத இன்னருள்!

*அறிவி லாத எனைப் புகுந்து ஆண்டுகொண்டு*
*அறிவதை அருளிமேல்*
*நெறியெ லாம் புல மாக்கிய எந்தையைப்*
*பந்தனை அறுப்பானைப்*
*பிறவி லாத இன் னருள்கள் பெற் றிருந்துமா*
*றாடுதி பிண நெஞ்சே!*
*கிறியே லாம் மிகக் கீழ்ப்படுத் தாய் கெடுத்*
*தாய் என்னைக் கெடுமாறே!* (திருச்சதகம்–36)

"மாணிக்கவாசகர் அறிவால் சிவமேயானவர்" என்று கூறுவது மரபு. ஆயினும் மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகப் பாடல்களில் தம்மை "அறியாதவன்" என்றும் "அன்பில்லாதவன்" என்றும் திரும்பத் திரும்பக் கூறுகின்றார். நல்ல நன்செய்யில் மருதாம்புப் பயிரே பயிர்போல் இருக்கும். மாணிக்கவாசகரின் பழுத்த மனத்தில் பிறந்து வெளிவந்த திருவாசகப் பாடல்களின் சொற்கள் அன்பில் நனைந்தவை;

கல்லைப் பிசைந்து கனியாக்கும் தன்மையவை. மாணிக்க வாசகரின் உடலில்- இதயத்தில் பெருமான் எழுந்தருளினார். "என்றன் உடலிடன் கொண்டாய் நான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே!" என்று அருளியிருப்பது உணர்க.

பிறவி-துன்பமா? இன்பமா? பிறவி துன்பமாவதும் இன்பமாவதும் பிறவியைப் பயன்படுத்துவாரைப் பொருத்தது. பொதுவாக மனிதன், வாழ்வாங்கு வாழ்ந்தால் பிறவியை இன்பமாக்கலாம்; இன்பமாக அனுபவிக்கலாம். அதனாலன்றோ "மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்றார் அப்பரடிகள். "என்னை நன்றாக இறைவன் படைத்தனன். தன்னை நன்றாகத் தமிழ் செய்யு மாறே!" என்றருளினார் திருமூலர். ஆனால், இன்பம் விழை வதும் இடும்பையை ஏற்க ஒருப்படாமையும் வாழ்வியல் அல்ல. நன்றும் தீதும் ஒப்பக் கருதும் பாங்குதான் வாழ்வின் சிறப்பு. இத்தகு வாழ்வில் இன்பம் அமையும்; பிறவி இன்பமாகக் கழியும். ஆனால், அந்த இன்பத்தில் மூழ்கிப் போகாமல் வாழ்ந்தால் பிறவி துன்பமாகாது; பிறவி சுமையாகவும் இருக்காது. ஆனால் எத்தனை பேர் இங்ஙனம் வாழ்பவர்கள்? கோடியில் ஒருவர்கூட இல்லை. 'நான்', 'எனது' என்ற செருக்கற்ற நிலை வாய்த்து வாழ்வோரைக் காண இயலவில்லை.

இன்று செருக்குடையோரே மிகுதி. தஞ்சாவூர்ப் பொம்மையைப் போல ஆட்டம் போடுகின்றனர்; பாழ் படுத்துகின்றனர். "பாழ்த்த பிறவி" என்றார் மாணிக்கவாசகர். காரணங்கள் சீராக அமையின் காரியங்களும் சீராக அமையும். இன்று பலர் காரணங்களைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. காரணமின்றியே வெறுக்கின்றனர்; பகை வளர்க்கின்றனர். உழாத நிலத்தில் களை மண்டுதல் போல அன்பால் உழாத நெஞ்சுடையராதலால் தீமையே நினைக்கின்றனர், தீமையே செய்கின்றனர். தம்முடைய செயல்கள் துன்பமாக விளையும்; பிறவியைத் துன்பமாக்கும்

என்பதை அறிவதில்லை. மூர்க்கராதலால் சான்றோர் சொல்லும் வார்த்தையைச் செவிகொடுத்துக் கேட்பதில்லை.

பிறவிக்குரிய காரணங்கள் கெட்டால் பிறவியும் கெடும். சித்த விகாரங்கள் சுட்டெரிக்கப்பட்டால் பிறவிக் காடும் அழியும். சின்னத்தனமான காரியங்கள் செய்தல், வெறுப்பனவே செய்தல் கூடாது. சிறுமையும் வெறுமையும் பிறவிக்குக் காரணங்கள். வெறுப்பனவே செய்யும் பிறவி 'சீமைக் கருவை'யைப் போல வெட்ட வெட்ட தளிர்க்கும். இழி செயல் செய்வோரின் பிறவி தொடரும். அந்த ஆன்மாக்களின் இச்சையின்றியே தொடரும். பிறவி தொடர முயற்சிகள் வேண்டாம் இறைவனிடத்தில்கூட விண்ணப் பிக்க வேண்டாம். தாமே தொடரும்.

பிறவி நன்றாக அமையவும் இன்பமாக வந்து பொருந்தவும் ஆன்மா, இறைவனிடம் கேட்டுத்தான் அவனுடைய அருளிப்பாட்டுடன்தான் பிறக்க இயலும். ஆதலால், கெட்ட பிறவியை வேரும் வேரடி மண்ணுமாகக் களையவேண்டும், சீமைக் கருவையைத் தோண்டுவது போல! "பிறவியை வேரறுப்பவன் இறைவன்" என்று திருவாசகம் கூறும்.

பிறவிக்குக் காரணம் பாசம்; அவா. "அவா தவாஅப் பிறப்பினும் வித்து" என்றது வள்ளுவம். இளையான்குடி மாறனார் கீரை பிடுங்கிய காட்சியைப் 'பாசப் பழிமுதல் பறிப்பார் போல' என்று சேக்கிழார் கூறினார். பிறவி ஓட வேண்டுமாயின் அல்லது பிறவி இன்பமுடையதாக அமைய வேண்டுமாயின் ஆசைகளை அகற்றுதல்வேண்டும். பாசத்தை விடுதல் வேண்டும். வாழ்க்கையை ஆட்டிப் படைத்து அவலப்படுத்துவன, ஆசாபாசங்கள். இந்த ஆசைக்கும் பாசத் துக்கும் காரணம் அறியாமை. அறியாமை என்பது பலர் கூறுவதுபோல ஒன்றும் தெரியாமை அல்ல. நல்லதைக்

கெட்டதாகவும் கெட்டதை நல்லதாகவும் முறைபிறழ அறிந்து கொள்ளுதலே அறியாமை.

இருள், பொருளைக் காட்டாது. ஒரோவழி காட்டினாலும் உள்ளவாறு காட்டாது. இதுபோல அறியாமை ஆன்மாவைப் பற்றிய இருள். இது ஆன்மாவுக்கு நல்லன காண, நல்லன கேட்க வாய்ப்பளிக்காது; வாய்ப்பளிக்காதது மட்டுமல்ல- தடுக்கும். இந்த அளவில் அந்த இருள்- அறியாமை நின்றால் பரவாயில்லை. தீச்செயல்களைச் செய்யத் தூண்டும்; துணை போகும். அத்தீச் செயல்கள் பிறவிக்கு வித்தாக அமைந்துவிடும். பிறவியின் நோக்கம் செயல். ஆனால் அச்செயல்- வினை இருள்சேர் இருவினையாக அமையாமல் ஒளி சேர் வினையாக, வாசனையாக அமையாத செயலாக- வினையாக அமைதல் வேண்டும்.

பிறவியின் நோக்கம் இருளை அகற்றுதல். இருள்சேர் இருவினையிலிருந்து விடுதலை பெறுதல்; குறைவிலிருந்து நீங்கி நிறைவைப் பெறுதல்; குற்றங்களின்றும் விடுதலை பெறுதல்; குற்றங்களை நீக்கிக் குணங்களைக் கொள்ளல்; சிந்தையிலும் செயலுறுப்புக்களிலும் பூட்டப் பெற்றுள்ள விலங்குகளை உடைத்து விடுதலை பெறுதல்; பரிபூரணனுக்கு அடிமையாதல் முதலியனவாகும். இப்படிப் பிறவியின் நோக்கம் நிறைவேற, முதலில் அறியாமையிலிருந்து விடுதலை பெறுதல் வேண்டும். அறியாமை அகலுதலைத் 'தெளிதல்' என்று தேவாரம் கூறும்.

"சிந்தையுள் தெளிவுமாகித் தெளிவினும் சிவமுமாகி" என்று அப்பரடிகளும், "தெய்வத் தெளிவின் தெளிந்தோரப் பேணுமின்!" என்று இளங்கோவடிகளும் அருளியுள்ளமை உணரத்தக்கன. துன்பங்களிலிருந்தும் துன்பத் தொடக்குகளிலிருந்தும் அறவே விலக வேண்டுமானால் இறைவனின் திருவருள் தேவை.

அறியாமையில் கட்டுண்டு கிடக்கும் ஆன்மா, இறைவனைத் தேடாது. தேடினாலும் அவன் அகப்படுவ தில்லை. ஆதலால் கருணையுடைய இறைவன் உயிர்க் குயிராகப் புகுந்து நின்றருளி ஆட்கொள்கின்றவன். இறைவன் ஆன்மாவினுள் உயிர்க்குயிரதாக எழுந்தருள்வது, இருள் கடிந்து எழுகின்ற ஞாயிறு போன்றது. அறியாமையின் பாற்பட்டு சாக்கை நனைத்துத் தூக்குமாப் போலே வினைகள், செயல்கள் பலவற்றைச் செய்து கொண்டும் அவ் வினைகள், செயல்களின் ஈட்டல்கள்- இழப்புக்கள், இன்பம்- துன்பம் ஆகிய உணர்வுகளில் சிக்கிக் கொண்டும் மத்துறு தயிர்போலச் சுழன்று வினையாகவே ஆகிக் கிடக்கும் பொழுது- ஆன்மபோதத்தில் திளைக்கும்போது இறைவன் ஆன்மாவின் விருப்பம் அறியாமல் அவனே புகுந்து ஆட்கொள்ளுதல் இயல்பு- கருணை.

அறியாதார் மாட்டு அறிவுடையோர் வெறுப்புக் கொள்ளலாகாது. அன்போடு பழகி, அறிவு தருதல் வேண்டும். மாணிக்கவாசகர் தம்மை அறிவிலாதவர் என்று கூறிக் கொள்ளும் இடங்கள் பலப்பல. அறிய வேண்டுவனவற்றை அறிதலே அறிவுடைமை. பலருக்கு உலகம் தெரியும். ஆனால், அவர்களைப் பற்றி அவர்களுக்குத் தெரியாது. இத்தகையோருக்குத் தெரிந்ததெல்லாம் சுயநலம் தான். அதுவும் நிர்வாணமான சுயநலம். வெறுப்பனவே செய்யும் வாழ்க்கைப் போக்கு. இத்தகைய வாழ்க்கைப் போக்கு மாறவேண்டுமாயின் அறியவேண்டியதை அறிதல் வேண்டும். ஆன்மாக்கள் அறிய வேண்டியதை அறியுமாறு செய்து அருள்பாலிக்கவே இறைவன் சிவன் எம்பிரான் ஆலமர். செல்வனாக எழுந்தருளி அறிவித்து உணர்த்து கின்றான்.

விடுதலை பெறுதல் வீடு. வீட்டினை "வானோர்க்கு உயர்ந்த உலகம்" என்று திருக்குறள் கூறும். வானுலகம் பதவிகள் உலகம். பதவிகளும் மனிதனை மயக்குவனவேயாம். பதவிகள் மனிதர்களைப் பைத்தியமாக்கிவிடும். வீடு பற்றிய

அறிவினை உணர்த்தினான் திருப்பெருந்துறை சிவன். மாணிக்கவாசகருக்கு இறைவன் "மேல் நெறியெலாம் புலமாக்கிய" பண்பினை வியந்து பாடுகின்றார்; பரவு கின்றார். வெட்ப தட்பம், பயம் முதலியனவற்றிலிருந்து விடுதலை தந்து; பாதுகாப்புத் தருவது மண்ணகத்து வீடு. அதுபோல ஆன்மா, ஆணவ வெப்பத்திலிருந்து விடுதலை பெற்று மாசில் வீணையாக, மாலை மதியமாக, வீசு தென்றலாக, இளவேனிலாக விளங்கும் இறைவன் திருவடி களில் தங்கிப் பாதுகாப்புப் பெறுதல் வீடு. இந்த வீடு பற்றிய அறிவினை, உணர்வினை, அனுபவத்தினை மாணிக்க வாசகருக்குத் திருப்பெருந்துறையுறை சிவன் அருளிச் செய்தனன். இறைவனைத் தாயிற் சிறந்த தயாவுடையான் என்று போற்றும் மாணிக்கவாசகர், அறிவு தந்து ஆட்கொண்டு அருளிய இறைவனை- சிவனை 'எந்தை' என்று போற்றுகின்றார். அறிவு தரும் பொறுப்பும் கடமையும் தந்தைக்கே உண்டு என்பதால் இங்ஙனம் கூறினார்.

அறியாமை அகன்று விட்டது. இருள்சேர் இரு வினையும் இல்லை. என்றும் பிரிவிலா அருளும் கிடைத்துவிட்டது. ஆயினும் வேம்பு தின்ற புழுப்போல, எலும்பு கடித்த நாய்போல மீண்டும் ஆன்மாவின் நெஞ்சு கீழ்மை நோக்கியே அழைத்துச் செல்ல விரும்புகிறது. நெஞ்சு போராடுகிறது. ஆன்மாவின் நலத்துடன் ஆன்மாவின் விருப்பத்திற்கு மாறாக நெஞ்சு மாறுபடுகின்றது. தன்னுடன் மாறுபட்டு நின்று போராடும் நெஞ்சை, திருஞானசம்பந்தர் சரிக்கட்டித் தன் வழிக்கு அழைக்க முயற்சி செய்து வெற்றி பெற்றார்.

> "நீ நாளும் நினைவாய் நன் நெஞ்சே
> சா நாளும் வாழ் நாளும் யாரறி வார்"

என்றருளியுள்ளமையைக் கற்றறிக.

நெஞ்சைத் தன் வசம் வைத்துக்கொள்வது அவசியம். நெஞ்சு எங்கும் செல்லும்; எதையும் சொல்லும்; எதையும் செய்யும். பதைந்துருகும் பாழ் நெஞ்சம். "வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே!" என்று ஏசுவார் மாணிக்கவாசகர். இன்று மிகமிக மோசமான மனிதர்கள்கூட, உமி குற்றிக் கை ஓய்வாதல்போல வாழ்கிறவர்கள்கூட, பயனற்ற வாழ்க் கையைச் சுமந்து திரிபவர்கள்கூடத் தாம் தாம் வாழ் வதாகத்தான் எண்ணுகின்றனர். ஆனால், அவர்கள் வாழ்வது உண்மையல்ல. அவர்கள் நடத்துவது வாழாத வாழ்க்கையே யாம். பயனற்றனவெல்லாம் இருந்தும் பயனில்லை, இறந் தாலும் பயனில்லை என்பது திரண்ட கருத்து.

மாணிக்கவாசகர் தமது நெஞ்சத்துக்கு ஆசைகளைக் காட்டித் தம்பால் அணைத்துக்கொள்ள முயன்று வெற்றி பெற்றுவிட்டார் என்பதைத் திருவாசகம் உணர்த்துகிறது. இறைவன்- சிவன் வலியவந்து இம்மண் புகுந்து குருந்த மரத்தடியில் காத்திருந்து ஆட்கொண்டான். நெஞ்சமே! அவனுடைய திருவடிகளைச் சிந்தனை செய்! திருவருட் சிந்தனையுடன் திருப்பெருந்துறையுறை சிவனிடம் உனக்கு வேண்டியதை இரந்து கேள்! திருப்பெருந்துறை சிவன் நீ கேட்கும் எல்லாவற்றையும் தருவான். திருப்பெருந்துறையுறை சிவன் பெருங் கருணையுடையவன் என்று தமது நெஞ்சை திருப்பெருந்துறையுறை சிவனிடம் ஆற்றுப்படுத்துகின்றார். தமது நெஞ்சத்தினை இரந்து கேட்கின்றார் மாணிக்கவாசகர். ஆணவத்துடன் தொடக்குண்டு ஆன்ம போத நிலையில் விளங்கிய ஆன்மாவின் பொறி, புலன்களைச் சிவத் தன்மையுடையதாக்கிய திருப்பெருந்துறை இறைவனை- என்றும் பிரியாதிருந்தருள் செய்வானை வாயாரப் பேசு என்று கேட்டுக் கொள்கின்றார்.

"ஏ, நெஞ்சே! வேதங்கள்- பழமறைகள் ஐயா! ஐயா! என்று தேடியும் சிவம் என்னும் செய்பொருளை கண்ட

பாடில்லை! அந்த வேதங்களுக்கெல்லாம் நாயகனாகவும் வேதங்களையெல்லாம் கற்றறிந்தவனாகவும் விளங்கும் நான்முகனும் கண்டதில்லை. செல்வத்தின் தலைவன் திரு மாலும் கண்டதில்லை. இறைவனை அறிவினாலும் பணத்தினாலும் காண இயலாது. இங்ஙனம் நான்மறை களாலும் நான்முகனாலும் திருமாலாலும் காண இயலாத இறைவன் எளியேனை ஆண்டு கொண்டருளினர். ஆண்டு கொண்டருளியதுடன் தொண்டனாகவும் கொண்டருளிய அருளிப்பாட்டை என்னென்பது? அன்பு காட்டினால் போதாது; அருள் செய்தால் போதாது. வேலை- தொண்டு செய்யப் பணித்தால்தான் உறவு ஆழம்படும்; உறுதிப்படும் என்று பேசுகிறார். 'கூவிப் பணி கொள்' என்றும், "எது எமைப் பணி கொள்ளுமாறு அது கேட்போம்" என்றும் அருளி யுள்ளமையைக் கற்றுத் தெளிக.

தொண்டு செய்ய ஒருப்படுமின்! தொண்டராக விளங்குமின்! இறைவன், திருப்பெருந்துறையுறை சிவன் ஆட் கொண்டருளியதுடன் தொண்டனாகவும் கொண்டருளிய தற்கு ஏது கைம்மாறு? இல்லை, இல்லை! அதனால் கைம் மாறு உண்டோ என்று நெஞ்சை நோக்கிக் கேட்கின்றார். நெஞ்சு, "இல்லை இதற்கு ஓர் கைம்மாறு" என்று கூறுகிறது.

கீழ்மையே செய்து கெடுக்கும் நெஞ்சத்தினை மாணிக்க வாசகர் தன் வசப்படுத்திக் கொண்டு திருப்பெருந்துறையுறை சிவன் புகழ் பாடும்படி செய்தது புகழ்மிக்க செயல்.

திருவாசகம் ஓதுதல் மூலம் நாளும் நமது நெஞ்சத்தைத் திருத்துவோம்! நம் வசப்படுத்துவோம்! இறைவன் புகழ் பாடிப் பரவுவோம். தொண்டு செய்வோம்! நம்மைச் சிவமாக்கி ஆட்கொண்டருளும் மாணிக்கவாசகர் திருவடித் தாமரைகள் போற்றி! அறிவு தந்து ஆட்கொண்டருளிய அற்புதத்தைப் போற்றுவோம்.

# போற்றி! அருளுக!

கடவுளை, தமிழில் 'போற்றி! போற்றி!' என்று வாழ்த்துதல் மரபு. போற்றி- என்ற சொல்லிற்கு, 'போற்று' என்றும் பொருள் கொள்ள இயலும். போற்றி என்ற சொல்லில் உள்ள இகர ஈற்றை வியங்கோள் எனக் கொண்டால் 'போற்று' என்றாகும். 'போற்றுக' என்ற சொல்லுக்குக் 'காப்பாயாக' என்பது பொருள். இடம் நோக்கிப் பொருள் கொள்ளவேண்டும்.

"போற்றி யருளுக நின் ஆதியாம் பாதமலர்" என்ற தொடரில் "போற்றி" வினையெச்சம். இறைவன் எப் பொருளுக்கும் முதலாக விளங்குபவன். "வாழ் முதலே!" என்றும் அருள்வது காண்க! இந்த உலகத்தின்- உலகப் பொருள்களின் ஆதியே! நின் திருவடிகளை அருளுக! அதாவது திருவடி ஞானத்தை அருள்க! திருவடி இன்பத்தை அருள்க! எம்மைக் காத்தருள் செய்க! முத்தி நெறியறியாத மூர்க்கரொடு கூடாமலும் எறும்புகளால் அரிக்கப்படும் புழுக்களைப் போல், புலன்களால் அரித்து அழிக்கப் பெறாமலும் "நான்" "எனது" என்ற செருக்கால் தலையால் நடக்காமலும் சிந்தையுள் சிவம் வைத்து வாழ்ந்திட அண்ணித்தருள் செய்க! எமக்கு வாழ்நிலையின் முடிவான பேறாகிய நின் செந்தளிர் போன்ற திருவடிகளைத் தந்தருள்க. செம்மை சேர்ப்பதால் செந்தளிர்கள்! 'செம்மலர்' என்று சிவஞான போதமும் கூறும்! சிவம் ஆதியாக நிற்றல்போல அந்தமாகவும் நிற்கிறது. உலகம் அனைத்தும் ஒடுங்கும் கடையூழிக் காலத்திலும் உள்ளவன் சிவன். அவனே உயிர்கள் களைப்பாறிப் புத்துயிர்ப்புப் பெறுவதற்குக் கடையூழியில் உலகத்தை ஒடுக்கிப் பின் புதுப்பித்தருளுகின்றான். ஆதலால், சிவனே அந்தம், ஆதி, முதலும் நடுவும் ஈறும் அவனே!

எல்லா உயிர்களின் தோற்றத்திற்கும் காரணம் இறைவனே! எல்லா உயிர்களும் இறைவனிடத்தில் தோற்றம் என்பது படைப்பு என்று பொருள் தராது. தோற்றம் = தோன்றுதல்; புலப்படுதல், "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற திருக்குறளுக்குத் "தோன்றின்" என்ற சொல்லுக்குப் பொருள் கொள்ளும் பாங்கே இங்கேயும் கொள்ள வேண்டும். அதாவது பலரறிய மக்கள் மன்றத்தில் தோன்றும் பொழுது புகழொடு தோன்றுக. அங்ஙனம் புகழ்பட வாழும் தகுதி பெறாவிடின் தோன்றாதே என்பதுதான் அந்தக் குறளுக்குரிய உண்மைப் பொருள் என்றும் உள்ள உயிர் ஆணவத்தால் கட்டுண்டு செயலற்றுக் கிடந்த நிலை, தோன்றா நிலை. இறைவன் கருணையால் செயற் கருவிகளுடன் கூடிய உடலையும் அறிவுக் கருவி கருவிகளாகிய (காரணங்களை) புலன்களையும் கொண்டு அறிவு விளக்கமுறும் நிலையில் தோன்றியதே தோற்றம்.

எல்லா உயிர்களும் பொன்னும் பொருளும் பெற்று வாழும் வாழ்வளிப்பதால் "பொற்பாதம்" என்றார்.

> "பொன்னும் மெய்ப் பொருளும் தருவானைப்
> போகமும் திருவும் புணர்ப்பானை"

என்னும் நம்பியாரூரர் வாக்கும் அறிக. பொன் வேறு; பொருள் வேறு. பொன்- தங்கம். இன்று பணம் முதலியன வற்றையும் சேர்த்துக் கொள்ளலாம். பொருள்- நுகர் பொருள்கள். உடலோடியைந்த உயிர்களுக்கு உயிர் வாழ உணவு தேவை; மருந்து தேவை. உடை தேவை. களிப்புக்கும் மகிழ்ச்சிக்கும் உரியன தேவை. இவையெல்லாம் நுகர் பொருள்கள். திருவள்ளுவரும்

> "பொருளில்லார்க்கு இவ்வுலகு இல்லை"

என்றார். இங்குப் பொருள் என்பது உயிர் வாழ்தலுக்குத் தேவையான உணவையே குறிக்கும்.

களைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் சைத்தான் என்றே பேசுவார்கள். மற்றவர்களைப் பற்றி அறியாத செய்திகளை பேசுகிறோமே என்றும் கவலைப்பட மாட்டார்கள். அவர்கள் வருந்துவார்களே என்றும் கவலைப்பட மாட்டார்கள். அவர்கள் பேசுவதைக் கேட்டால் செத்துப் போகலாம் என்ற அளவு துயரத்தின் கொடுமுடிக்கு மாணிக்கவாசகர் செல்கிறார். ஆம்! அவருடைய வாழ்க்கையில் அரசை நன்னெறியில் நிறுத்துவதற்காகச் செய்த பணிகள் அன்று நீதிக்கு முரணானவை என்று எடுத்துக் கொள்ளப் பெற்றன. அன்றும் மாணிக்கவாசகர் என்ன நோக்கத்தில், ஏன் செய்தார்? என்று கேட்காமலேயே அரசும் அரசைச் சார்ந்த மக்களும் அவரைத் துன்புறுத்தினர். இன்றும் பகுத்தறிவு வாதிகள் அங்ஙனமே குற்றம் சுமத்துகின்றனர். ஒரு நாட்டின் அரசு போருக்கும் களியாட்டத்திற்கும் பயன்படும் குதிரைகளை வாங்குவதைவிட மக்களிடையே கலையை வளர்த்து, அருளியல் வழி இன்ப அமைதி தழுவிய வாழ்க்கையைப் படைத்தல் நன்று என்ற நோக்கத்தோடு மாணிக்கவாசகர் செய்தார். அவர் மனத்திலிருந்ததை அன்று புரிந்து கொண்டார் யார்? இன்றும் நாத்திகம் பேசினாலும், அவர்கள் நமக்கு அயலார்கள் அல்லர்; நம்மோடு கூடப்பிறந்த வாழும் ஆப்தமானவர்கள்; அவர்களோடு முரணி நிற்றல் அறநெறியுமன்று; அருள் நெறியுமன்று; கருத்து வழிப்பரிமாற்றங்கள் மன அழுத்தங்களைக் குறைக்கும்; பகையைத் தவிர்க்கும் என்ற அடிப்படையில் மேற்கொள்ளப் பெறும் செயல் முறைகளை, அச்செயல்முறையின் நோக்கங்களை அறிந்து பாராட்டுவோர் எத்தனை பேர்? பழி தூற்றுவோரே மிகுதி என்ற நடைமுறை அனுபவம் திருவாசகத்திற்கு ஒத்ததாக இருக்கிறது.

> *உத்தமன அத்தன் உடையான் அடியே நினைந்துருகி*
> *மத்த மனத்தொடு மாலிவுன் என்ன மனநினைவில்*

*ஒத்தன ஒத்தன சொல்லிட ஊரூர் திரிந்தெவரும்*
*தத்தம் மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாதுவே!*

என்பது மணிமொழி. நம் மனங்கொண்டதே மாளிகை என்று பேசுவது கூடாது; வழக்கிடுதல் தகாது. மற்றவர் மனமறிந்து பேசக் கற்றுக் கொள்ள வேண்டும். அதுவே மாணிக்கவாசகர் காட்டிய வாழ்க்கை நெறி.

மாணிக்கவாசகர் கடவுளையே மண்ணில் நடமாட வைத்தவர். மாணிக்கவாசகருடைய தூய அன்பை, அவர்தம் அன்பில் நனைந்து தோன்றிய மணி வார்த்தைகளைக் கேட்டு மகிழ, பெருமான் மண்ணில் நடந்தான்; கொற்றாளாக மண் சுமந்தான்; புண்ணும் சுமந்தான். இந்த வரலாற்று நிகழ்வு நம் இதயத்தைத் தொடுகிறது. கடவுள் வாழ்த்துப் பொருளல்ல; வாழ்வும் பொருள் என்பது திருவாசகத் தத்துவம். 'வாழ்முதல்' என்பார் மாணிக்கவாசகர். பெருமான் இல்லங்கள் தோறும் எழுந்தருளுவான், ஆண்டவனாக அல்ல, சேவகனாக! என்னே விந்தை! ஆண்டவனையே சேவகனாக இல்லங்கள் தோறும் எழுந்தருளுச் செய்த மாணிக்கவாசகர் சமுதாயத் தொண்டு நெறியை நினைவூட்டுகிறார். இல்லங்கள் தோறும் சென்று துன்பம் துடைத்துச் சமுதாயத்தை வாழ்வித்தல் இறை நெறி என்று மாணிக்கவாசகர் பாடுகின்றார். இன்று நம் சமுதாயம் இல்லங்களை நோக்கி வரும் சமயத்தைப் பெறமுடியாமல் அலமருகின்றது. ஏன் கோயிலை நாடி வந்தாலும் இன்று அணைப்பாரைக் காணோம்! மாணிக்கவாசகர் நெறி இல்லங்கள் தோறும் சென்று துன்பம் துடைக்கும் தூய தொண்டு நெறியேயாகும். இந்நெறி நிற்பதே மாணிக்கவாசகர் வழிபாடு!

## 5

# ஞானப்பனுவல்

தமிழில் தோன்றியுள்ள திருவாசகம் போல் உயிர்த் துடிப்புள்ள ஒரு நூல் உலகில் வேறு எம்மொழியிலும் தோன்றியதில்லை. உயிர்த் துடிப்புக்கு வார்த்தை கொடுத்த ஒரு நூல் உண்டென்றால் அது திருவாசகம்தான். மனிதனின் உள் உணர்வுகளைத் தூண்டிவிட்டு அவனைத் திருவருள் இன்பத்திற்கு அழைத்துச் செல்லுகிறது அது. திருவருளிடத்து நம்மை அழைத்துச் செல்வதனாலேயே அதற்குத் திருவாசகம் என்று பெயர் ஏற்பட்டிருக்குமோ என்றுகூட எண்ணத் தோன்றுகிறது. கோயம்புத்தூருக்கு அழைத்துச் செல்லும் பாதையை நாம் கோயம்புத்தூர்ச் சாலை என்று குறிப்பிடுவது போல! உறுதிப்பாடு நிறைந்த உள்ளத்தில் எழுந்த ஒப்பற்ற ஞானப் பனுவல் திருவாசகம்.

தேன், வசதியும் வாய்ப்பும் உடையவர்கள் வீட்டில் உணவாகவும், சாதாரண மக்கள் வாழ்வில் மருந்தாகவும் பயன்படும் ஓர் அற்புதப் பொருள். அதிலும், ஒரு பூத்தேன் எத்துணை உயர்ந்தது! எவ்வளவு சிறந்தது என்பது நமக்கெல்லாம் நன்கு தெரியும். மாணிக்கவாசகர் ஒரு தேனீ போல, சிவபெருமானின் 'திருவடி மலர்' தவிர வேறு எம்மலரினும் உட்காராத—நுகராத—தேன் சேகரிக்காத ஓர்

அதிசயத் தேனீ, இப்படிச் சிவபெருமானின் 'திருவடி மலரையே நாடிச் சென்றது. இன்பத்தை — இறவாத இன்பத்தை நுகரத்தானே தவிர வெறும் பெருமையோ சிறப்போ கருதியன்று. அத் திருவடி மலரில் அவர் பெற்ற அனுபவத்தின் எச்சமே திருவாசகம். இவ்வாறு எச்சமும் மிச்சமுமான திருவாசகமே இத்துணை இனிமை பயக்கிறது என்றால், முழு இன்பத்தையும் பெற்ற மாணிக்கவாசகரின் அனுபவம் முழுவதையுமே நாம் பெற்றால் எவ்வளவு இன்பமாக இருக்கும்!

நாடு திசைமாறிப் போய்க் கொண்டிருந்த நிலையில், மக்களை அவர்களின் முயற்சியின் வழியாகவே திருவருள் இன்பத்தையடையச் செய்யும் பணியில் ஈடுபட்டார் மாணிக்கவாசகர். பருவத்திற்கும் தொழிலுக்கும் ஏற்ப அவர் களை அவர்கள் தம் வழியிலேயே செலுத்தி இறையருள் இன்பத்தை எய்துவிக்க அம்மானை, பொற் சுண்ணம், ஊசல் முதலிய பல்வேறு பாக்கள் பாடினார். மக்கள் மீதுள்ள கருணைப் பெருக்காலேயே அவர் இவ்வாறு செய்திருப்பார் என்று கருதுவதும் தவறாகாது.

"சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை?" என் கிறார் மாணிக்கவாசகர். இன்று, போட்டி போட்டுக் கொண்டு புற அழகைப் பெருக்குதற்கான ஆர்வமும் சாதனை களும் அளவு கடந்து பெருகியுள்ளன. புற அழகு மட்டும் போதாது—அக அழகும் வேண்டும் என்று வலியுறுத்தினார் மாணிக்கவாசகர்.

பால் பானையை உட்புறத்தே கழுவாமல் வெளியே மட்டும் தேய்த்துக் கழுவிவிட்டுப் பாலை ஊற்றிக் காய்ச்சி னால் அந்தப் பால் எப்படியிருக்குமோ அப்படித் தான் இருப்பார்கள் சித்தம் அழகில்லாதவர்கள். பசுவை உடல் முழுதும் நன்றாகத் தேய்த்துக் கழுவிக் குளிப்பாட்டி விட்டுப் பால் கறக்கும் மடியை மட்டும் கழுவாமல் விட்டு விட்டால்

அந்தப் பால் எப்படி இருக்குமே அப்படித்தான் இருப் பார்கள் சித்தம் அழகில்லாதவர்கள்.

மனித வாழ்வின் ஊற்றுக்கண் சித்தம். சிந்தனை, எண்ணம், செயற்பாடு அனைத்தும் சித்தத்திலிருந்தே பிறக் கின்றன. சித்தம் அழகில்லையானால் நல்ல சிந்தனை தோன்றாது — நல்ல எண்ணங்கள் தோன்ற மாட்டா — நல்ல எண்ணங்கள் இல்லையானால் நல்ல செயற்பாடு தோன்றாது.

இரத்தம் கெட்டால் நோய் ஏற்படுவது போல, சித்தம் கெட்டால் சீரழிவுகளே ஏற்படும்.

சித்தம் அடித்துக் கொண்ட பிறகேதான் கைகள் அடித்துக் கொள்ளும்.

நீண்ட நெடு நாட்களுக்கு முன்பே நம் நாட்டில் சித்தத்தை அழகுபடுத்தும் முயற்சி தோன்றிவிட்டது. சித்தத்தின் அழகுபற்றிப் பேசப்பட்டு வருகிறது— ஓரளவு காப்பாற்றப்பட்டும் வருகிறது. இன்று பலர் சித்தம் அழகுடையராக இல்லாமையாலேயே உலகில் போரும் புயலும் ஏற்படுகின்றன.

மனத்தில் மாசின்றி இலட்சியத்தில் பெரு விருப்பு டையவர்களாக நாம் விளங்க வேண்டும். கடமையைக் கடமையாகச் செய்ய வேண்டும். அதுவே அறம் எனப் படுவது. சமுதாய நிர்ப்பந்தத்திற்காகச் செய்வோம் என்று செய்வது அறத்தின்பாற்பட்டதன்று. சுயமாகச் சிந்தித்து—நிர்பந்தத்திற்குக் கட்டுப்படாமல் செயல்படுவதே சிறந்த அறம். இந்த அறச்செயல் உணர்வு பெருக வேண்டும். பொதுவாக, இன்பத்தையும் துன்பத்தையும் ஒரே தட்டில் ஒரு சேர வைத்து உண்ணுகின்ற நிலை பெற வேண்டும். வாழ்க்கைப் பயணத்தில் இன்பமும் ஏற்படலாம்—துன்பமும் ஏற்படலாம். இரண்டையும் ஒரு சேர மதிக்கும் பக்குவ நிலைபெற வேண்டும். சிலர் தமக்கு ஆதாயம் இருக்கும்

போது—தமது புகழுக்கும் மரியாதைக்கும் இழுக்கு நேராத போது அன்புடையவர்களாக இருப்பார்கள். அதில் ஒன்றும் சிறப்பில்லை. ஆதாயத்திற்கும் புகழுக்கும் மரியாதைக்கும் இடையூறு நேர்ந்தபோதும், அவற்றையெல்லாம் பொறுத்துக் கொண்டு அன்புடையவராக வாழ்தலே சிறப்பாகும். அதுதான் சமய வாழ்வு. புகழையும், பயனையும் எதிர் பார்த்துச் செயற்படுவது சமய வாழ்வு ஆகாது.

திருவாசகத்தை ஓதுகின்றவர்கள் உள்ளத்தில் அது ஓர் ஒலியை உண்டாக்குகிறது. அந்த ஒலி ஒரு பெரும் புரட்சியை உண்டாக்குகிறது. அது நம்மைப் பற்றிச் சிந்திக்க செய்கிறது. நம்மிடத்தே இருக்கும் குறைகளையும் நிறைகளையும் அது காட்டுகிறது. பொதுவாக, சராசரி மனிதனும் குறையைச் சுட்டிக் காட்டுவான். குறைகளைச் சுட்டிக்காட்டி, அக்குறை களைக் களையும் வழிகாட்டி, நிறையையும் காட்டு பவன்தான் சிறப்புடையவன், நோயாளியைக் கேட்டால் அவனே கூறி விடுவான் தனக்கு இன்ன நோய் என்று. நோயைக் கூறுவதோடு நோய் நீக்கும் மருந்தையும் கூறுகிறவன் 'மருத்துவன்' எனப்படுவான். இதனாலேயே மாணிக்கவாசகர், 'குறைவிலா நிறைவே கோதிலா அமுதே!' என்று இறைவனைப் பாராட்டுகிறார். மாணிக்கவாசகர், ஆன்மாவைப் பிடித்தாட்டும் நோய்காட்டி, அந்நோய் அகன் றொழிய மருந்தும் காட்டினார்.

திருவாசகத்தில் நமது ஆன்மா தோயத் தோயச் சில இரசாயன மாறுதல்கள் ஏற்படும். திருவாசகத்தில் நமது சித்தத்தை ஊறப் போட்டால், ஊறிய பிறகு, ஒரு சிறந்த அற்புதம் நிகழ்கிறது.

ஊறுகாயை நாம் அறிவோம். ஊறுகாய்க்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. காய் நன்றாக ஊறிய பிறகுதான் அது ஊறுகாய் என்று பெயர் பெறுகிறது. ஊறுகாய், நாம் உண்ட பெருந்தீனியை—கடினமான உணவைச் செரிக்க வைக்கும். எனினும், தன் மணம் சிறிதும் குன்றாமல் கமழ்ந்து

கொண்டிருக்கும். அது போலவே, நமது உள்ளத்தை — ஆன்மாவை திருவாசகத்தில் ஊறச் செய்துவிட்டால் நம் தீய வினைகள் அனைத்தும் செரிக்கும்—திருவாசகத்தின் செம் மணம் கமழும்!

சித்தத்தில் நாள் தோறும் அன்பு மலர வேண்டும். சிவபெருமானின் திருவருளைப் பெற்றுத் தரும் சாதனம் அன்புதான். அந்த அன்பை நெகிழச் செய்வதற்குரிய சாதனம்தான் வழிபாடு. வழிபாடு நிகழ்ந்து அகத்தே அன்பு நெகிழவில்லையானால் அந்த வழிபாட்டால் எத்தகைய பயனும் இல்லை. இறைவனிடத்து அன்பு செலுத்த-அவன் நாமத்தை உச்சரித்து, அவன் திருவடிப் போதுக்கு நறுமண மலர் சூட்டித் திருவடிக் கமலங்களில் நீர் ஊற்றுதல் போதும். **யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை'** என்றார் திருமூலர். பூவும், இலையும், நீரும் தூய்மையானவை. இன்று திருக் கோயில்களில் பூவும் இலையும், நீரும் வாணிகப் பொருள் களாகிவிட்டன. பூவையும், இலையையும் காசு கொடுத்து வாங்காமல் அவற்றை நாமே உற்பத்தி செய்ய வேண்டும். புண்ணியப் பொருள்களான பூவும் நீரும் இறைவனுக்கு நிறையக் கிடைக்கக்கூடிய சூழலைத் தமிழகக் கோயில்களில் உருவாக்க வேண்டும். மாசில்லாத எண்ணத்தோடு, சீல முடைய-மிக்குயர்ந்த நம் நெறியை மக்களிடத்துப் பரப்ப முற்பட வேண்டும். இதனால் வருகிற இன்ப துன்பங்களைப் பற்றிக் கவலை கொள்ளக்கூடாது. மெய்யடியார்கள் வினையைப் பற்றியும் அவ்வினைவழி வரும் துன்பங்கள் பற்றியும் கவலைப்பட மாட்டார்கள். 'முத்தர் மனமிருக்கும் மோனத்தே' என்பதுபோல அவர்கள் இறைவன் திருவடி நீழலையே எப்போதும் சிந்தித்திருப்பர். தம்மினின்றும் மாறுபட்டவர்களிடத்தும் அவர்கள் அன்பாகவே நடந்து கொள்வார்கள். அவர்களைப் போல நாமும் நம்மினின்றும் மாறுபட்டவர்களிடத்து தூய அன்பு காட்ட வேண்டும். அவர்களுக்காக நாம் ஆத்மார்த்தீகமாகப் பிரார்த்தனை

செய்து அவர்களையும் நம் வழிக்குத் திருப்பிக் கொணர்தல் வேண்டும். நம்மை நோக்கி வருகிற துன்பங்களைக் கண்டு நாம் சோர்ந்துவிடக் கூடாது. பற்றை விட்டால் துன்பமில்லை என்பார்கள். 'பற்று விடுதல்' என்றால் 'பற்றை ஒழித்துவிடுதல்' என்பது பொருளல்ல. பற்றை வேறு திசையில் திருப்பிவிட வேண்டும். இதற்கு மடை மாற்றுதல் என்று பெயர். நமது தேவைகள் பிறருக்கும் உண்டு என்று கருதித் திசை மாற்றிவிட வேண்டும்.

அகங்கனிந்த அன்போடு திருவாசகத்தை ஓதுகிற பண்பு ஏற்பட்டால், நாம் உயர்வும் உய்தியும் பெறுவோம். திருவாசகத்தை ஓதியுணர்ந்து அழ வேண்டும். அவ்வாறு அழுதால் இல்லங்கள் தோறும் எழுந்தருளிப் பொற்பாதம் காட்டும் இறைவனை-குறித்த காரியத்தைக் குறித்த நேரத்தில் செய்து முடிக்க வல்லானை நாம் நமது சேவகனாகப் பெறலாம். ஆம். இறைவன் ஏவல் செய்வான். அவன் நமக்கு ஞானம் தருவான்-சீலம் தருவான்-எல்லா நலன்களும் தருவான். அவனை நாம் பெற. அவன்பால் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க வேண்டும்.

# 6

# பாட்டும் பொருளும்

'பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும்...' என்பது குமரகுருபரர் வாக்கு. "பாட்டின் பொருள்" என்றால் குறிப்புரை. பதவுரை, பொழிப்புரை, தெளிவுரை என்றே பெருவழக்காகப் பொருள் கொள்ளப் பெறுகிறது. பொருள் என்ற சொல் வேறு பொருள் நோக்கிலும் வழங்கப் பெற்று வருகிறது.

"தம்பொருள் என்பதம் மக்கள்" என்று திருக்குறளில் வருவதும்..."யாம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமும் அல்ல..." என்று பரிபாடலில் வருவதும் நினைவிற் குரியன. தமிழ் இலக்கியங்கள் பெரும்பான்மையும் கணிதை வடிவத்திலேயே அமைந்தவை. இந்த இலக்கியங்களுக்குப் பதவுரை, பொழிப்புரை, கருத்துரை தெளிவுரை ஆகியன காணும் முயற்சியில் தமிழகம் வெற்றி பெற்றுள்ளது. பொது மறையாகிய திருக்குறளுக்குப் பற்பல உரைகள் வெளிவந் துள்ளன. ஆயினும் திருக்குறளின் நோக்கமாகிய மெய்ப் பொருள் உரைத்தல் நடைபெறவில்லை. செம்பொருள் காணும் அறிவும் கண்டோமில்லை. அருள் நூல்களாகிய திரு முறைகளுக்கு உரையெழுதுவது மரபன்று என்ற காரணத்தால் எழுதப் பெறவில்லை.

மகா வித்துவான் தியாகராாசச் செட்டியார் அவர்களை, திருவாசகத்திற்கு உரை எழுதக் கேட்டு வற்புறுத்தியிருக்கிறார்கள். அவர் “திருவாசகத்திற்கு உரை எழுத இயலாது, திருவாசகம் ஒரு ஞானபனுவல், ஞானானுபவ நூல், ஞானானுபவ பூதி நூலுக்கு உரை காண்பது கடினம், கூடாது. மேலும் எழுத வற்புறுத்தினால் “காவிரியில் விழுந்து உயிர் நீத்து விடுவேன்” என்று கூறினார். ஆனாலும் பிற்காலத்தில் திருமுறைகளுக்கும் உரைகள் சிலர் எழுதியுள்ளனர். வெளிவந்துள்ளன.

“தில்லை பாதி—திருவாசகம்பாதி என்பது ஆன்மீகப் பழமொழி. தில்லை, திருவாசகத்திற்கு உரிய இடம், ஆடல் வல்லான்—நடராசப் பெருமான் விரும்பிக் கேட்ட, விரும்பி எழுதிய பாடல்கள் திருவாசகப் பாடல்கள், இதனைச் சிவப்பிரகாச சுவாமிகள்...

“.........................

*திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்*
*ஒருகலை யேனும் உணரான் அஃதான்று*
*கைகளோ முறிபடுங் கைகள் காணில்*
*கண்களோ ஒன்று காலையிற் காணும்*
*மாலையில் ஒன்று வயங்கித் தோன்றும்*
*பழிப்பின் ஒன்று விழிப்பின் எரியும்*
*ஆயினும் தன்னை நீ புகழ்ந் துரைத்த*
*பழுதில் செய்யுள் எழுதினன் அதனால்*
*புகழ்ச்சி விரும்பினன் போலும்*
*இகழ்ச்சி யறியா என்பணிவானே”*

என்று நயம்படக் கூறி விளக்குகிறார். திருவாசகத்தைப் பிரதி எடுத்தவன் ஆடல் வல்லானேயாம். “ஏன், பிரதி எடுத்தான்? கடையூழிக் காலம் வரும் அல்லவா? அதாவது புலனங்கள் அனைத்தும் ஒடுங்கும் காலம்— யுகாந்தரம் என்று சொல்லப் பெறும் கடையூழி. அந்தக் கடையூழிக் காலத்தில் ஒன்றும்,

இருக்காது. இறைவன் மட்டுமே தனித்து நிற்பான், அப்போது ஒரு தனிமை இருக்கும். அந்தத் தனிமைத் துன்பத்தை மறப்பதற்காகப் படித்துக் கொண்டிருக்கவே திருவாசகத்தைப் பிரதி எடுத்துக் கொண்டான் என்று மனோன்மணீயம் கூறும்.

*"கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்*
*உடையார் உன் வாசகத்தில் ஒரு பிரதி கருதியதே"*

என்பது மனோன்மணீயம்.

திருவாசகம் ஞானப் பனுவல்; பிறவிப் பிணி நீக்கும் அரிய பனுவல்; அல்லல் தீர்க்கும் அருமருந்து; ஆனந்தத்தை வழங்கும் இன்பத் தமிழமுது; அருளமுது; இன்ப அன்பினை அளிக்கும் அருளமுது. இத்தகு திருவாசகத்தின் பாடல்களை "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து" சொல்ல வேண்டும் என்று மாணிக்கவாசகர் கூறுகிறார்.

"பாட்டின் பொருள் உணர்ந்து" என்றால் என்ன? எழுத்து, சொல், பொருள் என்று "ரிகார்டு" அடிப்படையில் தெரிதலா? இல்லை. இங்ஙனம் எழுத்தும் சொல்லும் பொருளும் மட்டுமே நாடியதால் நம்மனோர் வாழ்க்கையில் இன்று, வாழ்க்கையின் மிகப் பெரிய பேறாகிய ஞானத்தைக் காணோம்! பக்தி இருக்கிறது! பூசனைகள் நடைபெறு கின்றன! ஆயினும், இவற்றின் பயனாகிய ஞானத்தைக் காணோம்! "ஞானத்தால் அன்றி வீடு பேறு இல்லை" என்பது மெய்கண்ட சிவம் தேறித் தெளிந்த உண்மை. பாட்டின் பொருளாவது சிவமேயாம்! மாணிக்கவாசகர் அருளிச் செய்துள்ள திருவாசகத்திற்குப் பொருள் யாதெனை உணர்த்துமாறு தில்லை வாழ்மக்கள் அவரைக் கேட்ட பொழுது, பொன்னம்பலத்தில் ஆடும் ஆடல் வல்லானே பொருள் எனக் காட்டினார் என்பது திருவாதவூரடிகள் புராணம்.

*"நின்றபுகழ்ப் பூலியூரர் நேயமுடன் புடைசூழச்*
*சென்றருளுக் கிடமான செம்பொனின் அம்பலம் எய்தி*
*ஒன்றிய இத் தமிழ்மாலைப் பொருள் இவர் என்று உரை செய்து*
*மன்றத்தினிற் கடிதேகி மறைந்தனர்; அங்கு அவர் காண"*

என்பது திருவாதவூரடிகள் புராணம். சிற்சபையின் பெருமையைப் போற்றும் பொழுதும்...

*"தற்பரமாய்ப் பரபதமாய்த் தாவில் 'அனுபூதியதாய்*
*அற்புதமாய் ஆரமுதாய் ஆனந்த நிலைய ஒளிப்*
*பொற்பினதாய் அறிவறிதாய்ப் பொருளாகி அருளாகும்*
*சிற்பரம் ஆம் அம்பரம் ஆம் திருச்சிற்றம்பலம் போற்ற..."*

என்று போற்றுவர். இப்பாடலில் "பொருளாகி அருளாகும்" என்று வரும் சொற்றொடர் அளவு நோக்குக.

கல்வியின் பயன் இறைவனின் திருவடிகள்! இறைவனின் திருவடிகளை அறிதலே ஞானம். இறைவனின் திருவடிகளைப் பற்றெனப் பற்றுதலே திருவடி ஞானம்! திருவடிப் பேற்றினை அடைதலே வீடு பேறு. பாட்டின் பொருளாக நாம் அடைவது திருவடி ஞானம்! திருவாசகத்தின் பொருள் திருச்சிற்றம்பலத்தில் நட்டமாடும் எப்பெருமானின் திருவடிகளே! அந்தத் தூக்கிய திருவடியே நமது சாதனம்; பொருள்! திருவாசகம் ஓதுவோம் இருள்மலம் கரைத்திடுவோம்! 'யான்' 'எனது' என்னும் செருக்கினை அகற்றிடுவோம்! ஆடல் வல்லானின் எடுத்த திருவடியே வாழ்க்கையின் பொருள். பாட்டின் பொருள் என்று போற்றி வாழ்வோம்! இன்ப அன்பினை எய்துவோம்.

7

# வாழும் நெறி

வாழ்வாங்கு வாழ்தல் ஒரு கலை. அதிலும் இறைநெறி நின்று வாழ்தல் என்பது பெரும்பேறு. ஓர் ஆன்மா எப்படி வாழ்ந்தால் அந்த வாழ்வு பயனுடையதாக அமையும் என்று இறைவனே உணர்த்தியுள்ளார். தான் மட்டும் வாழ்தல், வாழ்க்கையே அல்ல. சிலர் இதனை விலங்கியல் வாழ்க்கை என்பர். இது தவறு. விலங்குகளும் தாவர இனங்களும் மற்ற உயிரினங்களுக்குப் பயன்படும் வாழ்க்கையை நடத்துகின்றன. ஆதலால், ஒன்றுக்கும் ஆகா வாழ்க்கையை விலங்கியல் வாழ்க்கை என்று கூறுவது தவறு. அப்படியானால் யாதொரு பயனுமிலாது வாழ்வோர் வாழ்க்கையை என்னென்பது? என்னவாக வேண்டுமானாலும் சொல்லட்டும். அதுபற்றி அலட்டிக் கொள்வதில் என்ன பயன்? இறைவன் மாணிக்க வாசகரை ஆண்டருளிய முறை நம்மனோர் வாழ்தலுக்குரிய நெறிமுறையாக அமைந்துள்ளது.

இறைவன்-திருப்பெருந்துறையுறை சிவன் மாணிக்க வாசகரை வாழ்விக்க எண்ணுகிறான். ஒரு தாய் காட்டும் பரிவைவிடத் தகுதி மிகுதியுமுடைய பரிவுடன் எண்ணு கின்றான். தாயின் பரிவே பரிவு. தாய் காட்டும் அன்பே இத்தரணியில் தலையாயது என்பர். ஆயினும் எல்லாத்

தாய்மாரும் ஒன்றுப் போலத் தம் குழந்தைகளிடம் அன்பு காட்டுவதில்லை. அன்பிலும் தரம் இருக்கிறது. தாய்மார் தம் குழந்தைக்களிடம் காட்டும் அன்பினில் தரப்பாகுபாடு இருக்கிறது. ஒரு சில தாய்மார் குழந்தை அழுதாலும் கவனிப்பதில்லை. அலட்சியப் போக்குடன் இருப்பர். இவர்கள் தாய்மாரே அல்லர். ஒருசில தாய்மார் குழந்தை அழுதவுடன் பாலூட்டுவார்கள் இவர்கள் பரவாயில்லை! ஒரு சில தாய்மார் குழந்தைக்குப் பசிக்குமே என்று நினைந்து அழத் தொடங்கு முன்பே உரிய காலத்தில் பாலூட்டி விடுவார்கள். இவர்கள் நற்றாய்மார். ஆனால் இறைவனாகிய தாய், நினைந்து ஊட்டுவதில்லை, மறப்பு என்ற ஒன்றினைத் தொடர்ந்து வருவது நினைப்பு. இறைவன் உயிர்களை மறப்பதே இல்லை. அதனால் இறைவனாகிய தாய் நினைந்து ஊட்டும் தாயினும் சிறந்து விளங்குகின்றான்.

ஒரு தாய் தன்னுடைய மக்களை நல்லவர்கள் கெட்டவர்கள் என்று மதிப்பிட்டு அன்பு காட்டமாட்டாள். தாயன்பு, குற்றங் குறைகள் உடைய பிள்ளைகளுக்கும் கிடைக்கும்; கட்டாயமாகக் கிடைக்கும். இந்தத் தாயின் மனத்தில் மகவு என்ற பொதுநிலை அங்கீகாரப் பண்பே ஆட்சி செய்கிறது. இறைவனும் அப்படித்தான். இன்னும் சொல்லப் போனால் இறைவனின் கருணை பாவிகள் மேல் விழுவதைப் போல், வேறு யார் மீதும் விழுவது இல்லை. இறைவன் பாவிகளையும் பரிவுடன் ஆட்கொள்கின்றான். அன்பின் ஆற்றல் முன்னே பாவம் ஏது?

பாவியை இறைவன் ஆட்சிகொண்டருளினாலும் பாவத்தை ஏற்பதில்லை; மன்னிப்பதில்லை. பாவச் செயல் களுக்குக் காரணமாக அமைந்துள்ள புலால் ஆற்றலுக்குத் துணைபோகும் ஊனினை உருக்கிப் பதப்படுத்துவான். ஊன் உருகினால் உயிர் உருகும். உயிர் நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகினால் உயிர் உருகும். உயிர் நலம் சிறக்கும்! உள்ளொளி பெருகும். உள்ளொளி பெருகினால் இன்பம் போதரும். அந்த

இன்பம் ஆரா இன்பம்! அந்த உலப்பிலாத முற்றுப்பெறாத இன்பத்தை இறைவன் வழங்கி அருள்கின்றான். வழங்கப் பெற்ற இந்த இன்ப அனுபவத்தை உயிர்கள் ஆர்ந்து அனுபவிக்கின்றனவா? என்று கண்டறிய வேண்டும். இதற்காக இறைவன் ஆன்மாக்கள் பின்னே சுற்றிக்கொண்டே இருக்கிறான். எந்த ஒரு பணியும், அறமும் தொடர்ச்சியாகப் பின் தொடர்நிலையில் கண்காணிக்கப் பெறாது போனால் அந்த அறம் வளராது. வளராதது மட்டுமல்ல, கெட்டும்விடும். ஆதலால் அறம் செய்தலைவிட அறத்தினைப் பாதுகாத்தல் நீங்காக் கடன். உயிர்களும், நன்னெறியைச் சிக்கெனப் பற்றிக் கொள்ள வேண்டும். இஃது ஓர் அருளியல் நிகழ்வு; இந்த நிகழ்வினை,

> *"பால் நினைந் தூட்டும் தாயினும் சாலப்*
> *பரிந்து நீ பாவியே னுடைய*
> *ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி*
> *உலப்பிலா ஆனந்த மாய*
> *தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த*
> *செல்வமே! சிவபெருமானே!*
> *யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்*
> *எங்கெழுந் தருள்வது இனியே!"*

என்ற திருவாசகப் பாடல் விளக்கிக் காட்டுகிறது.

ஆன்மாக்கள் உய்தி பெறுதற்குரிய சிறந்த நெறி தொண்டு நெறியேயாகும். ஏழை மக்கள் தங்களுக்கு எது நல்லது என்று தேர்ந்தறிய மாட்டார்கள். அவர்களால் இயலாது. ஆதலால் படித்தவர்கள்—வளர்ந்தவர்கள், வளராத வர்களுக்கு என்ன வேண்டும் என்று நினைக்க வேண்டும். தாயன்பினும் கூடுதலான அன்புடன் நினைக்க வேண்டும். முதல் நிலையில் நல்லதைக்கூட அந்த மக்கள் ஏற்கமாட் டார்கள். புறக்கணித்துப் பேழ்கணித்து நிற்பர். அந்த நிலையிலும் அவர்களைப் பரிவுணர்வுடன் அணுக

வேண்டும். அவர்களுடைய குற்றங்களைக் காணக்கூடாது; கூறக்கூடாது. எவ்வித அடிப்படையும் இல்லாமலே - காரணங்கள் இல்லாமலே "மனித நிலை"யில் அவர்களுக்கு ஏற்பளிக்க வேண்டும். அதாவது மனிதனை மனிதனாக அங்கீகரித்தல் என்பதாகும். அதேபோழ்து உடன்பாட்டு நிலையில் நின்று, உடன்படுத்திக் கொண்டு அவர்களிடம் உள்ள பாவத்தை நீக்க வேண்டும். பாவத்திற்குக் காரணமான ஊன்தடிப்புடன் கூடிய வாழ்நிலையை மாற்ற வேண்டும். உடல், சதை தாங்கும் சுமைதாங்கியாக அமையாமல் அருள் நலம் சுமக்கும் உடலாக மாறவேண்டும். இருள் செறிந்த அறியாமையிலிருந்து மீட்க வேண்டும். இருளை நீக்கும் முயற்சி எது? ஒளியை உருவாக்க வேண்டும்; அதாவது உள்ளொளியை—ஆன்ம ஞானத்தை வளர்க்க வேண்டும்; இன்பத்தினை வழங்க வேண்டும். அளிக்கப் பெற்ற இன்பத்தினை இடைவழியில் இழக்காமல் வாழ்ந்திடத் துணை செய்ய வேண்டும். இதற்குத் தொடர்ந்து கண்காணித்தல் வேண்டும். இதனை ஆட்சியாளர் Follow up என்பார்கள். நமது நாட்டு நிலையில் முன்னேற்றத் திசையில் அடிவைத்த அளவுக்குப் பின்னோக்கியும் வந்திருக்கிறோம். மதிப்பீடுகள் சீராகச் செய்யப் பெறமையினாலேயே நமது முன்னேற்றம் முன்னேற்றமாகத் தெரியவில்லை. பயனுமில்லாமல் போகிறது.

வாழ வேண்டிவர்களைப் பற்றி எண்ணுமின்! அவர்களுக்குரிய நன்மைகளைப் பற்றி நினைமின்! அவர்கள் நன்றுணர மறுத்தாலும் நினைவகற்றாதீர்! செயலிழக்காதீர்! சாலப் பரிந்து அன்பு செய்ம்மின்! அவர்களிடத்தில் அறிவொளியை ஏற்றித் தருக! அவர்கள் இன்புறு நலன்கள் பெற்று வளர, வாழப் பணி செய்க! செய்த பணியைத் தொடர்ந்து பேணுக! இஃது ஒரு சிறந்த வாழும் நெறி!

## 8

# குழந்தையும் – பொற்கிண்ணமும்

செல்வம் கொழிக்கும் வீடு. பொற்கிண்ணங்கள் நிறைய புழக்கத்தில் உள்ள வீடு. ஐந்து வயது நிரம்பாத இளம் குழந்தையின் கையில் பொற்கிண்ணம் ஒன்று கிடைத்து விடுகிறது.. அந்தக் குழந்தைக்குப் பொற்கிண்ணத்தின் மதிப்புத் தெரியுமா? அல்லது அதைப் பயன்படுத்தும் முறைதான் தெரியுமா ஒன்றும் தெரியாது. அந்தத் தங்கக் கிண்ணத்தைத் தூக்கி எறிந்துவிட்டாலும் வியப்பதற்கில்லை, பொற்கிண்ணத்தைக் கேட்டாலும் கொடுத்துவிடும் பொன்னின் அருமை தெரியாத அறியாக் குழந்தை அது.

அதுபோலவே ஆன்மாக்களிலும் அறியாக் குழந்தைகள் உண்டு. உடலால் மூத்திருந்தாலும்—உயிரால் குழந்தைமையில் நிற்போரே மிகுதி. இக்குழந்தைகளின்மேல் கொண்ட கருணையின் காரணமாக இறைவனே எளியனாக வலியவந்து ஆண்டுகொண்டு அருளை வழங்கினாலும் பாராட்டுவதில்லை; திருவருளின் அருமையை உணர்வதில்லை.

முன்னின்று பொழியும் திருவருளை விட பொன் பெரிது—வாழ்வு பெரிதெனக் கருதி திருவருளை அனுபவிக் காமல் அல்லல் வழிப்பட்டுழல்வது உலகியற்கை.

எளிமையைப் பெருமையாகக் கருதிப் போற்றுவது சால்புடையோர் மரபு; எளிமையை ஏமாளித்தனமெனக் கருதி ஏமாற்ற முயல்வது புன்மையாளர் மரபு. முயன்று பெற்றால் அப்படிப் பெற்றது அற்ப அளவிளதாயினும் ஆரா மகிழ்ச்சியுறுவர். அமைதி பெறுவர். முயலாது வந்தது பெருமைக்குரிய அளவினதாயினும் மகிழ்ச்சி யுறுவதில்லை. காரணம் எளிமையின் தத்துவம் அறியாமையே. இக்கருத்தினை மாணிக்கவாசகர் தம்மீது ஏற்றிப் பாடுகின்றார். அழகான பாடல் — ஆழமான பாடல், உள்ளத்தை தொட்டு உணர்த்தும் திருப் பாடல்.

> மையி லங்குநற் கண்ணி பங்கனே
> வந்தெ னைப்பணி கொண்ட பின்மழக்
> கையி லங்குபொற் கிண்ண மென்ற லால்
> அரியை என்றுனைக் கருது கின்றிலேன்
> மெய்யி லங்வெண் ணீற்று மேனியாய்
> மெய்ம்மை அன்பருள் மெய்ம்மை மேவினார்
> பொய்யி லங்கெனைப் புகுத விட்டுநீ
> போவதோ சொலாய் பொருத்தமாவதே.

நினைக்குந்தொறும் இன்பநலமளிக்கும் சுவைமிக்கப் பாடல், இறைவன் பேரருளாளர், அருட்செல்வியைப் பங்கிலேயுடையவன். தூயவெண்ணீறணிந்தவன். இறைவன், ஏன் வெண்ணீறணிகின்றான்?

வினை வழிப்பட்டுழலும் உயிர்கள் நீறணிவது இயற்கை. ஆனால் வினையில் நீங்கிய முதல்வன் நீறணிவது ஏன்? குழந்தைகளுக்கு நோய் எனில் குழந்தைக்கு மருந்து கொடுப்பதில்லை. பத்தியமும் இடுவதில்லை. குழந்தையின் நோய்க்குத் தாயே மருந்து குடிக்க வேண்டும். பத்தியமும் பிடிக்க வேண்டும். ஆதலால் தம்மைத் தொழுதெழுவார் வினைவளம் நீறெழ நீறணிகின்றான். அத்தகு கருணைப் பெருங்கடல் வலிய மணிவாசகரை ஆட்கொண்டது.

அப்படி ஆட்கொள்ளும் போது திருவருளை உணர்ந்த மெய்யறிவாளர்கள்—அன்பர்கள் திருவருள் நலம் பெறு கிறார்கள், பொய்யர்கள் பொய்யாகி உலகத்திலேயே உழல் வார்கள். இப்படி என்னைப் பொய்யுலகில் விட்டுவிட்டுப் போகலாமா? என்று இறைவனை இரந்து கேட்கிறார் மாணிக்கவாசகர். அவருக்காகவா? நமக்காகத்தான்! பாடல் படித்து ஓதிப்பயன் பெறுதற்குரியது.

9

# அழுதால் பெறலாம்

நாம் தவறு செய்ய விரும்பாது போனாலும் சார்பால் அல்லது சூழ்நிலையால் தவறுசெய்யும்படி நேரிட்டு விடுகின்றது. அதுமட்டுமின்றி நாம் குறையுடையவர்களே! அதனாலேயும் பொய்யும்—பொய்வழிப் பட்ட செயல்களும் நடமாடுவதுண்டு. இவை தவிர்க்க முடியாதவை என்று சொன்னால்கூடத் தவறில்லை. ஏனெனில் சீவமுத்தி நிலையிலும் கூட மலத்தின் ஆற்றல் செயற்படுமெனச் சைவ நூல் கூறுகின்றன. அதற்கு "வாசனாமலத்" தாக்குதல் என்பர் அறிஞர்கள். ஆதலால் தான் தவறுதல் மனித இயற்கை என்பர் அறிஞர்கள், ஆனால் இயல்பிலே நிகழும் பொய் நிகழ்ச்சிகளுக்கும், வேண்டுமென்றே செய்யும் பொய்மைகளுக்கும், நிறைய வேற்றுமை உண்டு. முன்னையதற்கு மன்னிப்பு உண்டு; பின்னையதற்கு மன்னிப்பு இல்லை. பொய்யைச் சொன்னவரை—அதனோடு தொடர்புடைய தவறான செயல்களைச் செய்தவர்களை இறைவன் மன்னிப்பான் என்பது உண்மை. ஆனால் எப்பொழுது மன்னிப்புக் கிடைக்கும். பாவமன்னிப்புக்கு நம்முடைய சமயம் சொல்லும் முறையே சிறந்தது. குறிப்பிட்ட சில சடங்குகளின் மூலம் பாபத்தைக் கழித்துக் கொள்ளலாம்

என்று கூறுவது தமிழ் வழக்கல்ல, பிற புல வழக்கு, கிறித்தவ நெறியில் .... முன்னால் பாபமன்னிப்புமுறை இருந்து வந்தது. அதாவது, போப், பாபம் செய்தவர்களுக்காகப் பிரார்த்தனை செய்து பாபத்தை மாற்றிவந்தார்.

காலப்போக்கில் போப் பாப மன்னிப்புச் சீட்டு விற்கத் தொடங்கினார். உடன், மார்டின் லூதர் பாப மன்னிப்புச் சீட்டு முறையை எதிர்த்தார். இந்த வரலாறு இந்த நாட்டில் எல்லாருக்கும் தெரியும். சில சடங்குகளைச் செய்வதின் மூலமும் பாபத்தைக் கழித்துவிடலாம் என்பது வடமொழி வழக்கு. ஆனால் சைவத்தமிழ் வழக்கு முற்றிலும் மாறு பட்டது. அதுமட்டுமின்றி அறிவிற்கும் — அனுபவத்திற்கும் ஏற்றது சைவத் தமிழ் வழக்கேயாகும்.

மாணிக்கவாசகர் அழுதவர்; அழச்சொன்னவர் அவர் தம் பாடல் மூலம் நம்மையெல்லாம் அழவைப்பவர். "மனம் கரைந்து மலம் கெடுக்கும் வாசகம்" என்று மனோன்மணீயம் கூறுகிறது. நாம் செய்தவற்றை நாமே நினைந்து—வருந்தி அழுவதின் மூலம் மன்னிப்புப் பெற முடியும். அங்ஙனம் அழுவதினால் நெஞ்சு பக்குவப்படுகிறது. அதனால் மீண்டும் தவறு செய்யும் பண்பு கால் கொள்வதில்லை, இதனை,

"யானே பொய்யென் நெஞ்சும்
பொய்யென் அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால்
உன்னைப் பெறலா மே

தேனே அமுதே கரும்பின்
தெளிவே தித்திக்கும்
மானே யருளாய் அடியேன்
உன்னைவந் துறுமா றே"

என்ற திருவாசகத்தின் மூலம் உணரமுடிகிறது.

நாள்தோறும் உடலில் சேரும் அழுக்கை, குளித்து நீக்கித் தூய்மைப்படுத்திக் கொள்வது போலவும் — நாள் தோறும் உடையில் சேரும் அழுக்கை, துவைத்து நீக்கித் தூய்மைப் படுத்திக் கொள்வது போலவும் நாள்தோறும் உள்ளத்தெழும் பொய்மையை இறைவனை நோக்கி அழுவதின் மூலம் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். அழுகை இதயத்தின் ஆழத்திலிருந்து வர வேண்டும், அழுகை பிழைதிருத்தும்; பிழையிலிருந்து தவிர்க்கும்; பிறவியைத் தடுக்கும்; ஆரா இன்பத்தை அளிக்கும்.

# 10

# வாழாத நெஞ்சம்

வாழ்க்கைக்குக் குறிக்கோள் உண்டு. இந்த வாழ்க்கை ஏதோ குருட்டாம் போக்காக அமைந்த ஒன்றல்ல. திட்டமிட்ட ஓர் அமைப்பேயாகும். வாழ்வது மட்டும் போதுமா? முறைப்படி வாழவேண்டும். வாழ்க்கைக்கு ஒரு நெறியும் — முறையும் வேண்டும் என்று உணர்ந்த பெருமை தமிழினத்திற்கு உண்டு. அதனாலன்றோ தமிழில் எழுத்து சொல் இலக்கணத்தோடு பொருள் இலக்கணமும் எழுந்தது. திருக்குறளும் "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்" என்று கூறுகின்றது.

வாழ்வாங்கு வாழ்வது என்றால் என்ன பொருள்? முறையாக உண்டு—உடுத்து வாழ்வதாகுமா? இல்லை. வாழ்க்கையின் குறிக்கோளை அடைகிற வழியில் பயனுடைய வாழ்க்கை வாழ்தலே வாழ்வாங்கு வாழ்தல். வாழ்க்கையைப் பொருளொடு கூட்டி—அறத்தோடு அணைத்து—இன்பத்தோடு இணைத்துப் பின்விலகி வீடுபெறும் வேட்கை வழி நின்று வாழ்வதே முறையான வாழ்க்கை. "வீடு", என்றால் விடுதலைபெற்று வாழும் இடம் என்று பொருள். எதிலிருந்து விடுதலை? துன்பத்திலிருந்து விடுதலை! துன்பத்திற்குக் காரணம் எது? பிறப்பு! பிறப்பினின்றும் அதனைத்

தொடர்ந்து வரும் துன்பங்களிலிருந்தும்' விடுதலை பெறுவதே வீடு.

திருக்குறளும் 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' என்று கூறுகின்றது. பிறப்பை நீக்கப் பிறப்பையே சாதனமாகக் கொள்வது நமது நெறி. வீட்டு நிலை வினையற்ற நிலை. பிறப்போடு கூடிய நிலை, வினையோடு கூடிய நிலை, வினைத்தொடர்பு அவாவிலும், அவாவினை நிழலெனத் தொடரும்; துன்பத்திலும் ஆழ்த்தும். வினைத்தொடர்பின்மை திருவருளில் ஆழ்த்தும். அதன்பயன் பிறப்பு—அதனைத் தொடரும் வினை - வினைவழிப்பட்ட துன்பம் இவைகளி லிருந்து விடுதலை, செத்துப் பிறக்கும் தொழிலுக்கு முற்றுப் புள்ளி. இத்தகைய குறிக்கோளோடு கூடிய வாழ்க்கையே வாழ்க்கை. இங்ஙனம் வாழ்வதே உண்மையிலேயே வாழ்ந்த தாகக் கருதப்பெறுகிறது.

இத்தகு வாழ்க்கையைப் பெறுவது எங்ஙனம்? உயிர் களின் வளர்ச்சி சிந்தனையினாலும், கூட்டுறவினாலும் ஆவது? வினையில் நீங்கி விளங்கிய அறிவினால் உள்ள இறைவனின் தொடர்பும் சிந்தனையுமே உயிர்களை வாழ் வாங்கு வாழ்கிற வாழ்வுக்கு அழைத்துச் செல்லும். இறை வனைச் சிந்தித்துப் பேசிவாழ்வது பயனுடைய வாழ்க்கை, வினைத் தொடர்பை நீக்கியருளும் சிறப்புறும் வாழ்க்கை. இங்ஙனம் வாழமுடியாத உலகாயகத்தின் வழி உருண்டோடி வாழ்தல் தனக்குத் தானே கேடு விளைவித்துக் கொள்ளும் வாழ்க்கையாகும். யானையின் தலையில் யாரும் மண்ணை அள்ளிப் போடவேண்டாம். அதுவே தன் தலையில் மண்ணை அள்ளிப் போட்டுக்கொள்ளும். அது போல இறைவனை வாழ்த்தி வாழமுடியாதவர் தமக்குத் தாமே கேடு சூழ்ந்து கொள்கிறார்கள். அவர்களுக்கு அவர்கள் வாழ்வதாக நினைப்பு. ஆனால், அவர்கள் வாழ்வதில்லை ஆண்டுகள் பலஓடி இருக்கலாம். போகங்கள் பல துய்த்திருக்கலாம். எனினும் வாழ்க்கையின் குறிக்கோளை — பயனை

அடையாத வாழ்க்கையே அது. "குறிக்கோள் இலாது கெட்டேன்," என்று அப்பரடிகள் அலறுகின்றார். இதனையே,

*"வாழ்கின்றாய் வாழாத*
*நெஞ்சமே வல்வினைப்பட்டு*
*ஆழ்கின்றாய்! ஆழாமற்*
*காப்பானை ஏத்தாதே*
*சூழ்கின்றாய் கேடு! உனக்குச்*
*சொல்கின்றேன் பல்காலும்*
*வீழ்கின்றாய் நீ அவலக்*
*கடலாய வெள்ளத்தே"*

என்று திருவாசகப் பாடல் விளக்குகிறது. அதாவது வாழு! வாழ ஆசைப்படு, வாழ்வாங்கு வாழ முயற்சி செய். வாழ்க்கையின் பயனை அடையும் வழியில் வாழ்வாயாக. வாழ்க்கையின் பயனாக விளங்கும் திருவருளில்—மாறிலாத இன்பத்தை வாழ்த்தி வாழ்வாயாக. வாழ்த்தி வாழ்தலே வினை நீக்கும்—அவலம் நீக்கும் என்று திருவாசகம் வாழும் வழிகாட்டுகிறது; இல்லை, வாழும் வழியில் அழைத்துச் செல்கின்றது.

# 11

## புலன்களும்– பொறிகளும்

உயிர்களுக்கு உய்தியைத் தருவது வழிபாடு. உயிர்களுக்கு வினைநீக்கமும் – திருவருளின்பமும் வழி பாட்டின் மூலமேயாம். எனவே உயிர்கள் தம்முடைய உய்தியைக் கருதியே வழிபாடு செய்கின்றன. "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்" என்று திருவாசகம் பேசுகிறது. உயிருக்குப் பயன்கூடுவது அனுபவத்தின் வழியாலேயாம். உயிர், காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிக் கரைந்து வழிபாடு செய்வதின் மூலமே உய்திபெற முடியும். உயிர்கள் உய்திபெற வேண்டிச் செய்யும் வழிபாட்டை "ஒன்றி இருந்து நினைமின்கள். உந்தமக்கு ஊனமில்லை" என்று அப்பரடிகள் அருளிச் செய்துள்ளார். வழிபாட்டில் புலன்களும் — பொறி களும் ஒருங்கியைந்து ஈடுபடவேண்டும். இக்கருத்தையே "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அளப்பருங் கரணங்கள் நான்கும் சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும் திருந்து சாத்துவிகமே ஆக" என்று பெரியபுராணப் பாடல் விளக்குகிறது.

புலன்களையும் – பொறிகளையும் ஒருங்குபடுத்தி வழி பாட்டில் ஈடுபடுத்தும் கருத்துடனேயே நம்முடைய சமயத்தின் சடங்குகள் அமைந்துள்ளன. புலனாலே

சிந்திக்கும் திறமை சிலருக்கு உண்டு. உதாரணமாக கணக்குப் போட வேண்டியிருக்கிறது. அக்கணக்கைப் புலனாலேயே போட்டுச் சொல்லக்கூடியவர்கள் இருக்கலாம். அவர்கள் மனத்தின் மூலமே போட்டு விடை சொல்லி விடுவார்கள். அப்படிப் போட முடியாதவர்கள் ஏடும்—எழுத்துகோலும் எடுத்து கைகொண்டு எழுதிப் போட்டுப் பார்த்துச் சொல்வர். அதுவே இறைவனை நெஞ்சத்திலிருத்திச் சிந்திக்க லாம். இவ் வாய்ப்பு எல்லோருக்கும் அமைவதில்லை. பூசலார் நாயனார் போன்றோருக்கேயாம் இந்த அருளியல் நிலை, புலன்களால் மட்டும் இறைவனைச் சிந்திக்கலாம். அச் சிந்தனையில் நிலைத்து நிற்க முடியாதவர்களுக்கும் — அதோடு புலனால் சிந்திக்கும் திறமை இல்லாதவர்களுக்குப் புலன்களுக்குச் சிந்தனை ஊட்டவேண்டிப் பொறிகள் செய்யும் வழிபாட்டுச் சடங்குகள் தொடங்கலாயின. பொறி களும் புலன்களும் ஒருங்கியைந்து செய்யும் வழிபாடு தூய்மை யானதாக—அனுபவத்தோடுகூடியதாக ஆழமானதாக—காதல் தன்மைமிக்குடையதாக இருக்கும். அதனாலன்றோ சிவநெறியில் அகப்பூசையும் புறப்பூசையும் இன்றியமையாதன வாக வலியுறுத்தப் பெறுகின்றன. மாணிக்கவாசகர் தனது சிந்தனையையும் காட்சியையும் — வணக்கத்தையும் — வார்த்தையையும் இறைவன் த்னக்காக்கிக்கொண்டு ஆட் கொண்டருளினமையை வியப்புடன் வாழ்த்திப் பாடு கின்றார்.

> சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
> கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
> வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குன்
> மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்கள் ஆர
> வந்தெனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
> மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
> தந்தனைசெந் தாமரைக் கா டனைய மேனித்
> தனிச் சுடரே இரண்டுமிலித் தனியனேற்கே

இறைவனே ஆட்கொண்டான் மாணிக்கவாசகரை. அவன் உடையான் அல்லவா! "உடையாய் என்னைக் கண்டு கொள்ளே" என்று மாணிக்கவாசகரே குறிப்பிடுகின்றார். சிந்தனையே செயலுக்கு அடிப்படை. சிந்தனையின் வழியே செயல் மலரும். முதலில் சிந்தனையை உரிமையாக்கினார். அவ்வழி காட்சியும் — வாழ்த்தும் — வணக்கமும் உரிமை யாயின. சிந்தனை — காட்சி — வாழ்த்து — வணக்கம் எல்லாம் திருவருள் வழிபட்ட அன்பு புலன்களும் திருவருளை அனுபவித்தின்புற்றன. ஆதலால் இறைவழி பாட்டில் பொறிகளும்—புலன்களும் ஒருங்கிணைந்து செய்யக் கூடிய சடங்குகள் இன்றியமையாதனவேயாம்.

# 12

## நினைந்தூட்டும் தாயினும்....

திருவாசகத்திலுள்ள பாடல்கள் அனைத்தையும் உற்று நோக்க வேண்டும். ஒவ்வொரு பாடலும் அரும்பெரும் கருத்துக்களை அள்ளித்தரும் சிறப்புடன் மிளிர்வனவாகும்.

பல்வேறு தன்மைகளைக் கொண்ட தாய்மார்களை உலகில் காணலாம். குழந்தை பசியால் அழுவதற்கு முன் காலமறிந்து பாலூட்டும் தாய்—அழுகுரல் கேட்டபின் பாலூட்டும் தாய்—அழுது ஓய்ந்தபின் பாலூட்டும் தாய் இம்மூவரிலும் பசிநேரமறிந்து பாலூட்டும் தாயேத் தலையாயவள். அத்தகைய தாயைக்காட்டிலும் பேரன்புக் கொண்டவன் இறைவன். எனவேதான் 'இறைவனைப் பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்தவனா'கக் கூறுகின்றார்.

தாயின் பால் உடலை—ஊனை—அதாவது ஆணவத் — தடிப்பை வளர்ப்பதாகும். ஆணவத் தடிப்பையுடையவன் இறைவனின் திருவருளுக்குப் பாத்திரமாக முடியாது. இறைவனின் திருவருட்பாலோ ஆணவத் தடிப்பை—ஊனை. உருக்குவதோடு மட்டுமின்றி உள்ளொளியை—அருளைப் பெருக்கவல்லது. எனவேதான் இறைவனைத் தாயினும் சாலப் பரிந்தவனாகக் குறிப்பிடுகின்றார்.

செல்வந்தர் வீட்டுக் குழந்தை ஒன்று செல்லமாக வளர்ந்தது. அக்குழந்தைமீது தாய்க்கு அளவற்ற பாசம். அது என்ன தவறு செய்தாலும் அதைத் தண்டிக்க மனம் வராதவள். ஒருநாள் அலமாரியிலிருக்கும் பொற்கிண்ணத்தை எடுத்து விளையாட ஆரம்பித்தது குழந்தை. குழந்தையின் கையில் உள்ளதோ விலை மதிப்பெற்ற பொற்கிண்ணம். குழந்தையோ அதன் பெருமையை—சிறப்பை அறியாதது. தாயோ குழந்தையிடமிருந்து கிண்ணத்தைப் பிரிக்க—பிடுங்கி வைக்க மனமில்லாதவள். எனவே அது அக்கிண்ணத்தைச் சிதைத்து விடாதவாறு—தொலைத்து விடாதவாறு அதைப் பின்தொடர்ந்து சென்று பார்த்துக் கொள்வாள். அதுபோல இறைவன் மாணிக்கவாசகருக்கு திருவருளாகிய பொற் கிண்ணத்தை அளித்தான். தான் பெற்ற திருவருளைத் தொலைத்து விடாதவாறு இறைவன் புறம் புறம் திரிகின்றான்.

குழந்தை வளர வளரப் பொற்கிண்ணத்தின் அருமை அறிந்து அதைச் சிதைக்காதவாறு—தொலைக்காதவாறு சிக்கெனப் பிடித்துக்கொள்வதோடு மட்டுமின்றித் தாயை விட்டுப் பிரியாது. அதுபோல மணிவாசகர் திருவருளின் சிறப்பை உணர்ந்து அதைச் சிக்கெனப் பிடிப்பதோடு மட்டுமின்றி இறைவனையும் தொடர்ந்து செல்கின்றார்.

இதை மாணிக்கவாசகர்:—

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது இனியே

என்ற பாடலில் அழகாகக் குறிப்பிடுகின்றார்.

## 13

# எல்லாமே இறைவனின் திருக்கோலம்

மாணிக்கவாசகர் நிலத்தியல்பும் — ஐம்பூதங்களின் இயல்பும் உணர்ந்த பேரறிஞர். இதனைத் திருவண்டப் பகுதி நமக்கு நன்றாக விளக்கிக் காட்டுகிறது. இறையுணர்வுடையோருக்கு இந்த உலகத்தின் ஒவ்வொரு பொருளும் இறைவனாகவே காட்சியளிக்கும்—திருவருளைப் படித்தறியும் பெரும் புத்தகம் இந்த உலக இயற்கை. உலகம் வேறு — இறைவன் வேறல்ல, உலகமே அவன்; அவனே உலகம்; எல்லாமே திருவருள் மயம். எல்லாவற்றிலும் இறைவனுடைய திருவோலக்கக் காட்சி! திருஞானசம்பந்தர் தன்னுடைய திருமுறையில் இயற்கைக் காட்சி நலங்களை வியந்து பாடிப் பரவுகின்றார். மாணிக்கவாசகரும் இறைவனை நினைந்து வாழ்த்த நினைக்கின்றார். ஆனால் எங்ஙனம் வாழ்த்துவது? எந்தச் சொற்களைக் கூறி வாழ்த்துவது என்று தெரியாமல் திகைக்கின்றார். ஏன்? ஒன்றைச் சொல்லி வாழ்த்தினால் பிறிதொன்று விடுபட்டுப் போகுமே என்ற கவலை! எல்லாமே இறைவனின் திருக்கோலம்!

மாணிக்கவாசகர் இயற்கையையும் இயற்கையின் இயக்கத்தைப் பற்றியும் நன்கு உணர்ந்தவர். இயற்கை முழுவதும் தில்லைப்பெருமானின் திருவுருவமே என்னும் கருத்துடையவர். காணும் பொருளெல்லாம் கயிலாயனே என்ற உறுதி மிக்க உள்ளமுடையவர் அவர்.

திருவாசகத் தேனில் ஒரு துளியை உங்கள் முன் வைக்கிறேன் அள்ளிப் பருக.

*"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி*
*ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்*
*கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு*
*வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே"*

இறைவன் வானாகவும், பூமியாகவும், காற்றாகவும், ஒளியாகவும், உடலாகவும், உயிராகவும், உண்மையாகவும், இன்மையாகவும், தலைவனாகவும் யான் என்றும் எனது என்றும் கூறுகின்றவர்களைக் கூத்தாட்டுகின்றவனாகவும் நிற்கின்றான். இங்ஙனம் காட்சி தரும் இறைவனை என்ன சொல்லி எப்படி வாழ்த்துவேன் என்று ஏங்கித் தவிக்கின்றார். இறைவன் ஐம்பூதமாய் நின்றருள் வழங்குகின்றான்; உயிர்களின் இன்பநுகர்ச்சிக்குக் காரணமாய் உடலாக விளங்குகின்றான். உயிர்க்கு உயிராக நின்றருள் செய்கின்றான். தனக்குவமையில்லாத தலைவனாக விளங்குகின்றான்; அகப்பற்றும் புறப்பற்றும் உள்ளவர்களை ஆட்டுவித்து அனுபவத்தைக் கூட்டுவிக்கின்றான். இறைவனுடைய புகழ் அளவிடற்கரியது; சொற்களைக் கடந்தது. காணும் பொருளெல்லாம் இறைவனாகவே காணும் காட்சி திருவருள் காட்சி; வரகுணபாண்டியன் வரலாறு நாடறிந்த ஒன்று; கற்றறையில் வீழ்ந்து கிடந்த வேப்ப விதைகள் எல்லாம் சிவலிங்கங்களாகவே காட்சியளித்தன. "குற்றம் நீ! குணங்கள் நீ!' என்று அப்பரடிகள் கூறுகிறார். இங்ஙனம் எல்லாவற்றையும் திருவருள் வயத்ததாகக் கருதுவதும் — வாழ்வதும் — பாராட்டுவதும் இன்ப அன்பைப் பெருக்கும், உலகை ஒரு குடும்பமாக்குவது அமைதியை விளைவிக்கும். பகைமை நீக்கிப் பண்பைப் பெருக்கும். காழ்ப்பு நீங்கிக் கருணை வளரும். துன்பங்கள் தொலையும், இன்பம் பெருகும். திருவாசகத்தில் உள்ள இப்பாடல் எல்லாச் சமயத்தாரும் ஓதுதற்குரிய முறையில் பொதுமை நலம் செறிந்து விளங்குகிறது. உண்மையான - ஆழமான சமயநெறி பொதுமை நலம் பெற்றே விளங்கும்.

# 14

## தகைசால் தலைமை

தலைமை, பொறுப்புடைய ஒன்று, தலைமைக்குரிய இயல்புகள் பலப்பல; தலைக்குத் தளராத நெஞ்சம் வேண்டும். எதையும் தாங்கும் இதயம் வேண்டும். தம்மைப் பின்பற்றுவோரைக் காக்கும் ஆற்றல் வேண்டும். இன்று பலர் தலைமைப்பதவிக்கு ஆசைப்படுகின்றனர். ஆனால் அவர் களிடத்தில் தலைமைக்குரிய தகுதி கொஞ்சமும் இருப்ப தில்லை. தலைமை நாடிப் பெறக்கூடியதல்ல. தகுதியுடையார் மாட்டு தலைமை வந்தடையும். தலைமைக்குரிய போட்டிகள் இன்று மட்டும் நடப்பதல்ல. உலகம் தோன்றிய நாள் தொடங்கி – தலைமைத் தத்துவம் மலரத் தொடங்கிய காலந் தொட்டு தலைமைப் போராட்டம் நடந்தே வந்திருக்கிறது. ஏன்! வரலாறுகள் முழுவதும் தலைமைப் போராட்டச் செய்திகள்தானே! புராணங்களிலும் கூட தலைமைப் போராட்ட வரலாறுகளையே காண்கிறோம்.

தக்கன் வேள்வி ஒன்று இயற்றினான். தக்கனுக்குச் சிவபெருமானிடம் உள்ள வருத்தத்தின் காரணமாக தான் இயற்றிய வேள்விக்குச் சிவபெருமானை அழைக்கவில்லை. திருமாலும் நான்முகனும்தான் வேள்விக்கு அழைக்கப் பட்டிருந்தார்கள். சமய-மரபு வழி சிவபெருமானே

தனக்குவமை இல்லாதவன். "சாதலும் பிறத்தலும் இல்லாதவன். பிறவாயாக்கைப் பெரியோன்" என்று சிலப்பதி காரம் வாழ்த்துகிறது. அவனே வேள்வியை-வேள்விவழி அளிக்கப்படும் பொருளைப் பெறுதற்குரிய தலைவன். எனினும் அவன் அழைக்கப் பெறவில்லை. சிவபெருமான் இருக்கவேண்டிய இடத்தில் வேள்வித் தலைமையிடத்தில் திருமால் முதலிய அமரர்கள் அமர்ந்தார்கள். தலைமையின் மீது உயர்ந்த ஆசையால் வேள்வியை-வேள்விப் பொருளை ஏற்றுக் கொண்டார்கள்.

பின்னர் பாற்கடல் கடைந்த காலத்து நஞ்சு எழுந்தது. நஞ்சை அடக்கும் ஆற்றல் திருமால் முதலிய அமரர்களுக்கு இல்லை. அவர்களுடைய தலைமை நஞ்சை அடக்கி அமரர் களைக் காப்பாற்றப் பயன்படவில்லை. அவர்களால் முடி யாமல் போய்விட்டது. ஏன்? அவர்களையே காப்பாற்றிக் கொள்ள முடியாமல், தவித்தார்கள். பெருமையை விரும்பிய தகுதியில்லாத போலித் தலைமையாளர்கள் நஞ்சைக்கண்டு அஞ்சினார்கள், அலறினார்கள். எல்லா உயிர்க்கும் அம்மை யப்பராக இருந்தருளும் சிவபெருமானை நோக்கிக் கதறி னார்கள், காப்பாற்றுக என்று அடைக்கலம் புகுந்தார்கள். சிவபெருமான் புன்முறுவல் பூத்தான். சிறுமை பொறுத்து அருள் வழங்கினான். நஞ்சை உண்டு-கண்டத்தில் அடக்கித் திருமால் முதலிய அமரர்களுக்கு வாழ்வளித்தான். "விண்ணோர்கள் அமுதுண்டும் சாக ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்வான் என்று இளங்கோவடிகள் சிவபெருமான் தகைமைசால் தலைமையை வாழ்த்துகிறார். "நீலமணி மிடற்றொருவன் போல மன்னுக பெரும நீயே" என்று புறநானூறு போற்றுகின்றது. சிவபெருமானே தனக் குவமை இல்லாத தலைவன்-கடவுள். மற்றையோர் கடவுள ரல்லர். புண்ணியத்தின் விளைவாகப் பதவி பெற்ற உயிர்களேயாம். திருமாலையும் நான்முகனையும் சிவனோடு சேர்த்து மூவர் என்று சொல்வது அறமல்ல. இங்ஙனம்

மாணிக்கவாசகர் சிவபெருமானின் தலைமைச் சிறப்பை - இறைத்தன்மையை-மூவர் கோனாக விளங்கும் தன்மையை விளக்கும் வகையில் அருளியுள்ள பாடல் படித்தின் புறத்தக்கது.

"சாவமுன்னாள் தக்கன் வேள்வி தகர்த்தின்று நஞ்சமஞ்சி
ஆவ வெந்தாய் என்றவி தாவிடும் நம்மவரவரே
மூவரென்றே எம்பிரானொடும் எண்ணி விண்ணாண்டு
மண்மேல்
தேவ ரென்றேஇறு மாந்தென்ன பாவந்திரி தவரே."

15

# நியாயமே!

தேசம் உய்யத் திருவாசகம் தந்த மாணிக்கவாசகப் பெருமானின் வரலாறு கருத்திற்கினிய விருந்தாகும். வரலாற்றுப் போக்கில் ஐயங்கள் எழுவதற்கு வாய்ப்புண்டு. இது சரியா? அது சரியா? என்று பல கேள்விகளை மாணிக்க வாசகர் வரலாற்றில் எழுப்ப முடியும். ஆம். வெறும் அறிவு விவாதத்திற்குட்பட்டது—நடைமுறைக் கொவ்வாதது. அனுப வத்திற்கல்லாதது. வெற்று அறிவுணர்ச்சியோடு மாணிக்க வாசகர் வரலாற்றைப் படித்தால் குழப்பமே மிஞ்சும். ஆழ்ந்த அறிவோடும், நடைமுறையோடும், அனுபவத்தையும் சாத்தியக் கூறுகளையும் கூட்டி மாணிக்கவாசகர் வரலாற்றைப் படித்தால் அவ் வரலாறு வாழ்க்கைக்குப் பெரு விருந்தாக இருப்பதை உணரலாம். இந்த முறையில் மாணிக்கவாசகரின் வரலாற்றை ஆராய்வோமாக.

பாண்டிய மன்னனிடத்தில் மாணிக்கவாசகர் அமைச்சராக இருக்கின்றார். அறிவிலும், ஆட்சிமுறையிலும், குடிமக்களுக்கு நல்லன செய்வதிலும் சிறந்து விளங்குகின்றது மாணிக்கவாசகரது அமைச்சியல். குடிமக்களிடத்திலிருந்து அரசன் வரி வாங்குகின்றான். அங்ஙனம் மக்களிடம் வரி வாங்குவது அரசனுடைய ஆடம்பர வாழ்க்கைக்காக அல்ல;

வரிப் பணங்களைக் கொண்டு மக்களின் வாழ்க்கைக்குரிய திருப்பணிகளைச் செய்ய வேண்டும். பாண்டிய மன்னனோ மக்களின் வரிப்பணம் கொண்டு பரிகள் வாங்கி வரச் சொன்னான். பரிகள் ஆடம்பரத்தின் சின்னம் அல்லது போர்ப்படை, பரிகள் வாங்கச் சொன்ன காலத்தில் பாண்டிய அரசனுக்குப் பகையேயில்லை. ஆதலால் ஆடம் பரத்துக்காகவே அரசன் பரிகளை வாங்கிவரச் சொன்னான் என்று கருத இடமிருக்கின்றது.

தேவையற்ற ஒன்றைச் செய்ய அமைச்சர் மாணிக்க வாசகரின் மனம் துணியவில்லை. ஆனால் அரசனின் ஆணை, அரசனைப் பரிவாங்கும் எண்ணத்திலிருந்து நல் வாழ்வுத் துறைக்கு அழைத்துச் செல்ல வேண்டும். திருத்துதலில் பலமுறைகள் உண்டு. திருத்துபவர் திருத்தப் படுபவர் ஆகியோரைப் பொறுத்து முறைகள் மாறுபடும். தன்னினும் தாழ்ந்தாரை இடித்துக் கூறித் திருத்தலாம். தனக்குச் சமமானோரை அறவுரைகள் கூறித் திருத்தலாம். தன்னினும் உயர்ந்தோரை அவர் விரும்பியதை ஒழித்து வேறொன்றைச் சொல்வது அல்லது செய்தவன் மூலமே திருத்தலாம். இங்கு அரசன் திருத்தப்பட வேண்டும். ஆதலால் மாணிக்கவாசகர் அரசன் கூறியது விடுத்து, அதாவது பரிகளை வாங்காமல், திருக்கோயில் எடுப்பித்து, இதுவே செய்யத்தக்கது என்று அறிவுறுத்தினார். ஆதலால் அரசனுக்குப் பெருமை தரும் எண்ணத்தில் மாணிக்கவாசகர் செய்தாரே தவிர வேறு கருத்தில்லை. அங்ஙனம் பார்க்கும் பொழுது பரிகள் வாங்கக் கொடுத்த பணத்தைக் கொண்டு கோயில் கட்டியது நியாயமே ஆகும்.

“திருக்கோயில் கட்டியது எந்த வகையில் சிறந்தது. பரிகள் வாங்குவதைவிட?” என்று பகுத்தறிவு உலகம் கேட்கத்தான் செய்யும். திருக்கோயில் கட்டியதன் மூலம் நாடும் அரசனும் பெற்ற நன்மை ஒன்றல்ல; பலப்பலவாகும். சிறப்பாக அரசனுடைய பொருள் அறங்கலந்த அருளிய

லுக்குப் பயன்பட்டது. அதன்மூலம் அறமும், கலையும், அருளும் வானுற வளர்ந்து அரசனுக்கு அழியாப் புகழைத் தந்தது. எப்படி அறம் ஆயிற்று? கலைஞர்களும் ஊழியர்களும் திருக்கோயில் கட்டுங்காலத்தில் தொழில் பெற்றனர்; தொழிலுக்கேற்ற ஊதியம் பெற்றனர்; வாழ்வை வளப் படுத்திக் கொண்டனர். இதை அறம் அல்ல என்று எப்படிச் சொல்லமுடியும்? கல்லெல்லாம் கலையாகி, கடவுளராகி, பேசும் தெய்வத்தைத் தன்னகத்தே கொண்டுள்ள கோயில்கள் கலையின் விளக்கந்தரும் இடந்தானே!

உலக உயிர்களுக்குத் தாயும், தந்தையுமாகித் தன்னருள் பொழியும் புனிதன் பிரார்த்தனைக்குப் பயன்படுவதால் திருக்கோயில்கள் அருளியல் விளைவிக்கும் பண்ணைகள் தாமே! அதுமட்டுமா? பரந்த மண்டபங்களும், அவைகளின் ஊடே கலைபயில் கூடங்களும் மருத்துவமனைகளும், நடுவர் மன்றமும் இன்னபல அமைப்புக்களும் அமைந்து விளங்கின மையால் மக்கள் பணிசெய்யும் மன்றமாகவும் திருக்கோயில் விளங்கிற்று. இத்தகு திருக்கோயில் ஒன்றை மாணிக்கவாசகர் எடுத்தது நியாயமே.

அரசன் குதிரைகளோடு வரும்படி மாணிக்கவாச கருக்கு ஆணை பிறப்பித்தான். மாணிக்கவாசகர் என் செய்வார்? தமக்கு உற்ற புகலிடமாய் விளங்கும் இறைவ னிடத்தில் முறையிட்டார். ஆம். அவன்தானே எல்லாம். நமக்கு அன்புப்பட்டவர் பாரம் பூண்பது இறைவனின் குணமன்றோ? குதிரைகளை கொண்டு வருவதாகத் திரு வருள் ஆணை பிறந்ததும் குறிப்பிட்ட நாளில் குதிரைகள் வரும் என்ற செய்தியோடு மாணிக்கவாசகர் மதுரை சென்றார்; அரசனிடம் தெரிவித்தார். குதிரைகளும் குறிப் பிட்ட நாளில் வந்தன. இறைவன் ஒரு பெருந்திருவிளை யாடல் நடத்தினான். காட்டில் திரியும் நரிகளை எல்லாம் பரிகளாக்கினான். தாமே குதிரைச் சேவகனாக அமர்ந்தான். குதிரைகளைக் கொண்டு வந்து அரசனிடம் கயிறு மாற்றிச்

சேர்ப்பித்தான். அரசனும் நிலையற்ற மகிழ்ச்சியில் திளைத்தனன். கதிரவன் படுத்தனன். காரிருள் சூழ்ந்தது. பரிகளெல்லாம் நரிகளாயின. உலகமே நடுங்க ஊளை யிட்டன. அரசனுக்குச் செய்தி எட்டியது. வெகுண்டெழுந் தனன். மாணிக்கவாசகரை வெஞ்சிறையில் இட்டு, கல்லு டைக்கச் செய்தான். இடையில் பகலில் பரியும், இரவில் நரியுமாக ஆக்கிய திருவிளையாடலின் உளக்குறிப்புத்தான் என்னே? இக்கருத்தை ஆராய "உறங்குவதுபோலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" என்ற திருக்குறள் நினைவிற்கொண்டு ஆராய்ந்தால் அரிய கருத்துக்கள் வெளிப்படும். இக்குறளின் படி இம்மை-பகலுக்கும் மறுமை இரவுக்கும் உவமிக்கப்படுவது தெளிவாகிறது. இம்மையில் — இன்பம்போலத் தோன்றுவன மறுமையில் துன்பத்தை விளைவிக்கக்கூடும். இந்தப் படிப்பினையைப் பலருக்கு நினைவுபடுத்துவதற்காகவே, பகலில் இன்பந்தரும் குதிரை களாகவும் இரவில் தொல்லைதரும் நரிகளாகவும் ஆக்கித் திருவிளையாடல் செய்தருளினார். இங்ஙனம் சிந்தித்துப் பார்க்கும் பொழுது பரமன் நரிகளைப் பரிகளாக்கியதும் பரிகளை நரிகளாக்கியதும் நியாயமே! நிற்க.

சிறையில் வாடிய மாணிக்கவாசகர் ஆற்றொணாத் துயருற்றார். அருளாளராகிய மாணிக்கவாசகர் அல்லலுறுவது இயற்கைக்கே தாங்க முடியவில்லை. இயற்கை அன்னை சினங்கொண்டாள். வைகையில் வெள்ளமெனப் பொங்கிப் பாண்டியமாநகரை அழிக்கத் தொடங்கினாள்; பெரும்புயல் மதுரையைச் சூழ்ந்தது. நல்லவர் படுந்துன்பந் தாளாமல் இயற்கை பொங்கி வருவதும் நியாயமே!

"வைகையாற்றின் வெள்ளந்தடுக்கக் குடிக்கோர் ஆள் வருக" என்று அரசனின் ஆணை பிறந்தது. அரசனின் ஆணை கேட்ட குடிமக்கள் வெள்ளம்போல் திரண்டு வெள்ளந்தடுக்கும் வேலையில் ஈடுபட்டனர். ஆனால், ஒரே ஒரு குடி வெள்ளத்தடுப்பு வேலைக்கு ஆளனுப்ப முடியாமல்

தவித்தது. ஆம், அந்தக் குடியில் பெண்ணொருத்தியே வாழ்ந் தாள். அவளும் முதியவள். வேலை செய்யும் சக்தியற்றவள். அரசன் ஆணைவழி ஆளனுப்ப இயலவில்லையே என்று ஏங்குகின்றாள். அற்றவருக்கருந் துணையாக விளங்கும் ஆண்ட வனை நோக்கி வேண்டுகின்றாள். வீதி வழியே "கூலியோ கூலி" என்ற குரல் கேட்கின்றது. ஆம், 'தேவர்க் கோவறியாத தேவதேவன்' தெருவழியில் நடந்து வருகின்றான்; தட்டும் மண்வெட்டியும் தாங்கி, "கூலியோ கூலி" என்று கூவி நடந்து வருகின்றான். குரல் கேட்ட கிழவி—வந்து ஆறுதல் பெற்றாள்; அமைதி கொண்டாள். வந்திக்கு ஆளாக அமைகின்றாள். கூலி பொன்னல்ல, பொருளல்ல; வயிற்றுப் பசிதீர்க்கும் பிட்டேயாகும். பிட்டைத் தின்றுவிட்டு வெள்ளம் தடுக்கும் வேலையில் ஈடுபடச் சென்ற கூலியாள் அங்குத் தனது வேலையை ஒழுங்காகச் செய்யவில்லை. தான் செய்யாத தோடு மாத்திரமின்றி செய்பவரையும் கெடுக்கின்றான். இதனால் வந்தியின் பகுதி அடைபடாமலே கிடக்கின்றது. மாலையில் அரசன் வெள்ளத் தடுப்பு வேலையைப் பார்வையிட வருகின்றான். அடைபடாத பகுதியைப் பார்க் கின்றான். அதற்குரிய வந்தியின் ஆளை வெகுண்டு அடிக்கின்றான். அடித்ததென்னவோ எதிரிலிருந்த ஆளை, ஆனால் அடிபட்டது வையத்துயிர்க்கெல்லாம்; அடித்தவன் உட்பட. கொற்றாள் மறைந்தனன்! இந்நிகழ்ச்சிகளின் தொகுப்பிலே பெறப்படும் நற்கருத்துக்கள் எவை, எவை? ஏன் இறைவன் கொற்றாளாக வந்தனன்? அவன் நினைத்த மாத்திரையில் எல்லாவற்றையும் செய்யக் கூடியவனாயிற்றே? அப்படியிருக்க அவனே கொற்றாளாக வந்தது திருத் தொண்டின் நெறியை உலகுக்கு உணர்த்தவேயாகும். சமுதாயத் திருத்தொண்டுகளைச் செய்வதில் எல்லோரும் ஈடுபட வேண்டுமென்ற படிப்பினையைக் காட்டுவதற் காகவே இறைவனே கொற்றாளாக வந்தனன்! அப்படி வந்தபோதும் பொன்னுக்கும் பொருளுக்கும் மண் சுமக்காமல்

வெறும் பிட்டுக்கு மண் சுமந்தது ஏன்? உலக உயிர்கள் வாழ உணவு தேவை. தனக்குத் தேவையான அளவு ஒன்றையே இவ்வுலகிலிருந்து பெற்றுக்கொண்டு, பொன் பொருளில் ஆசைப்படாமல் திருத்தொண்டு செய்யவேண்டும் என்ற கருத்தை விளக்கவே பிட்டுக்கு மண் சுமந்தான்! இவ்வுலக முழுவதையும் ஓர் ஒழுங்கிலும் முறை பிறழாத நிகழ்ச்சியிலும் அழைத்துச் செல்லும் ஆண்டவன் ஏன் தன்னுடைய கொற்றாள் கோலத்தில் அதற்குரிய பொறுப்பைச் செய்து நிறைவேற்றாது விட்டான்? வாழ்க்கை கடமையோடு பிணைக்கப்பட்டது. கடமையைச் செய்யத் தவறுகிறவர்கள் கடுந்தண்டனைக்குரியோர் என்பதை வையகத்துக்கு எடுத்துக் காட்டவே கடமை தவறுவதுபோல் நடித்து அடி பெற்று அறிவுரை கொடுத்தனன். இந்த உலக உயிர்கள் அனைத்தும் இறைவனின் இருப்பிடம் என்பதை உலகுக்கு உணர்த்தவே, அவன்மீது விழுந்த அடி உலகம் முழுவதும் விழுந்தது! இங்ஙனமெல்லாம் மாணிக்கவாசகரது வரலாற்றை உணரும் பொழுது, இந்த வரலாற்றை உலக முழுவதும் உணர்ந்து படிக்க வேண்டும் என்ற ஆசை ஏற்படுகின்றது. ஒவ்வொருவரும் மாணிக்கவாசகரது வரலாற்றைப் படித்துப் பயனடைவார்களாக!

16

# மாணிக்கவாசகர் கண்ட காட்சி

பிறவாமை வேண்டுவது உயர்ந்தோர் மரபு. ஆயினும் நல்லன கருதிப் பிறவியை வேண்டுவோரும் உண்டு. அப்பரடிகள் பிறவியை வேண்டுகின்றார். ஏன்? ஆடல் வல்லான் திருக்கோலத்தைக் கண்டு கண்டு களித்திருக்கப் பிறவியை விரும்பினார். “மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே.” என்பது அப்பர் வாக்கு. பிறவி நீக்கம் எப்போது வரும்? ஆசைகளும் அவாக்களும் உள்ளவரை பிறவி நீங்காது. பொறிகள், புலன்கள் துய்ப்பனவெல்லாம் துய்த்து அவ்வழி அவா நீங்கப் பெற்றனவாய் விளங்க வேண்டும். ஆன்மா புலன்கள் வழி, பொறிகள் வழி கடவுட் காட்சியை அனுபவிக்கும் தகுதி பெற வேண்டும். இத்தகுதி எளிதில் அமைவதில்லை. உடல் ஒரு துய்ப்புச் சாதனமே! துய்ப்பினை மறுத்துத் துறவு மேற்கொண்டாலும் துறவு முழு நிலையில் கைகூடுமா? துறவு, விருப்பு-வெறுப்புக்களினின்று விடுதலை பெற்றிருக்கிறதா, இல்லையே! துறவு, மதத்துடன், மடங்களுடன், ஆசிரமங்களுடன் பிணைந்துவிட்டதால் துறவு உணர்வு பூர்வமாக இல்லையே! துறவிகளுக்குள் நடந்த சண்டை, சச்சரவுகளே இல்லையா? நிறைய உண்டு! ஆதலால், துறவு என்பது புலனடக்கம் மட்டும் அல்ல;

திருமூலர் கூறியாங்குப் புலன்களை மடை மாற்றலேயாகும். பொறிகள், புலன்கள், உயிர்க்குலத்திற்கு நல்லன செய்தல், அவ்வுயிர்கள் மகிழ்வுழித் தாமும் மகிழ்தல் என்பதே வாழ்வு நெறி. என்று உயிர் தனக்கு வரும் துன்பங்களைச் சற்றும் தயங்காமல் விரும்பி ஏற்று அனுபவிக்குமோ அன்றே துறவு கால் கொள்கிறது. என்று, ஆன்மா பிறர் நலத்திற்காகவே முயன்று உழைக்கும் நோன்பை எடுத்துக் கொள்கிறதோ அன்று துறவு வாழ்க்கை வருகிறது. இத்தகு துறவு இன்று எங்கிருக்கிறது? இன்று, துறவு சாதிகளைக் கூடத் துறந்தபாடில்லை. மாணிக்கவாசகர் பொன்வேண்டாம் என்றார்! ஏன்? புகழையே வேண்டாம் என்றார்; மாணிக்க வாசகர் பழுதிலாத் துறவு பூண்டவர். பழுத்த மனத்து அடியார்: ஆதலால், மாணிக்கவாசகருக்கு இந்த மண்ணி லேயே கடவுட்காட்சி கிடைத்தது."

"கண்ணால் யானும் கண்டேன் காண்க!" என்று தாம் கண்ட கடவுட் காட்சியை உறுதிப்படுத்துகின்றார்.

மாணிக்கவாசகர் தாம் பிறவாநிலையை அடைந்தது 'திண்ணந்தான்' என்று உறுதிப்படுத்துகின்றார்: ஆம்: தொடர்ந்து சங்கிலித் தொடர்போல வந்தது பிறவி; வெட்டப் பெற்றாலும் பூமிக்குள் புதைந்து கிடக்கும் கிழங்கிலிருந்து அடுத்தும் தாவரம் முளைப்பதைப் போல அவாவை அகற்றினாலும் அகந்தையை அடக்கினாலும் அவை தலை காட்டும் இயல்பின. தினையின் அளவு அவா இருந்தாலும் அந்த அவா வெள்ளமாக வளரும் இயல்பினது. அகந்தையும் அப்படித்தான்! பெருங்காயம் இருந்த பாண்டம் போல அகந்தையின் தாக்கம் இருக்கும்! அகந்தைக்குப் பெயர் "மானம்". சூரபன்மன் முருகவேளினை உணர்ந்து கொண்டு விட்டான்; தொழுதிட நினைக்கிறான்; ஆனால், தடுத்தது மானம் ஒன்றே! மாணிக்கவாசகர் இந்த நிலைகளை எல்லாம் கடந்து விட்டார்! வேண்டிலேன் பொன்! வேண்டிலேன் புகழ்! "ஏசப்பட்டேன் நின்னடியாரில்" என்பது திருவாசகம்.

இங்ஙனம் பாழ்த்த பிறவியாக அமைந்ததை எளிதில் கடக்க அருள் செய்த இறைவனின் திருவருளை எந்தச் சொற்களால் போற்றுவது? புகழ்வது! எங்ஙனம் சிந்திப்பது என்று எண்ணு கின்றார்.

ஆம்! மாணிக்கவாசகர் இறைவன் ஆட்கொண்டருளி யமையை வியந்து வியந்து போற்றுகின்றார்! ஏன்? பிறவியிலிருந்து விடுதலை பெற வழி தெரியாமல் தவித்திருக் கிறார் மாணிக்கவாசகர். தனியாக நின்று தவித்திருக்கிறார். இந்தச் சூழ்நிலையில் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் ஆசிரியராக எழுந்தருளி நெறிகளை அறிவித்து வழிகாட்டியது பெறுதற்கரிய பேறு அல்லவா? இன்றைய மனித சமுதாயம் 'உதவி' என்றால் பொருள் கொடுப்பதையே கருதுகிறார்கள். உலகத்தின் எல்லா உதவிகளிலும் சிறந்தது வழிகாட்டும் உதவியேயாகும். வழியறியாது தவித்த மாணிக்க வாசகர் அவர் அருளிய திருவாசக வழி இன்று மக்களுக்கு வழிகாட்டுகிறார்.

மாணிக்கவாசகர் கடவுட்காட்சியைக் கண்டு அனுபவித்தவர்.

மனிதக் காட்சிக்கும் கடவுட் காட்சிக்கும் நிறைய வேறுபாடு உண்டு! மனிதன் தொலைவில் வரும்பொழுது அவனுடைய உருவம் தெரியும். ஆம்! எத்தனை அடி உயரம்? எவ்வளவு கனம்? தொலைவில் மனிதக் காட்சியின் உருவம்! அடுத்து அண்மையில் நகர்ந்து வரும்பொழுது அவன் கையின் நீளம் என்ன? மூக்கு எப்படி இருக்கிறது? அடுத்து அண்மித்து, வந்து நிற்கும் பொழுதுதான் அந்த ஆள் கருப்பா? சிவப்பா? என்பது தெரியவரும். இது மனிதக் காட்சி!

கடவுட் காட்சியில் நெடுந்தொலைவில் வரும்பொழுது வண்ணம்-நிறம் தெரியும். அதனாலேயே "சோதியே" என்று எரிகின்ற சுடரில் ஒளியைப் போற்றி நினைந்து பாராட்டு கின்றார். "செந்தாமரைக் காடு அனைய மேனி" என்கிறார்

மாணிக்கவாசகர். "சோதியே! சுடரே! சூழ் ஒளி விளக்கே!" என்கிறார். சோதி-அகண்ட ஒளி, புவிக்கோளத்தை விளக்கிக் காட்டுவது சுடர்! மனைகளை, வீடுகளை விளக்கிக் காட்டுவது ஒளிவிளக்கு! ஆன்மாவை விளக்கம் செய்து, ஆன்ம தரிசனமும் அவ்வழி கடவுள் தரிசனமும் தந்தருளும் பாங்குடையது. ஆதலால் கடவுட் காட்சியில் தூரத்துக் காட்சி வண்ணக் காட்சிதான்! ஓங்கி உயர்ந்த சோதி! இந்தத் தத்துவங்களை விளக்குவது தான் மலைமேல் விளக்கு! அண்ணாமலை தீபம்!

மலை, நெடுந்தொலைவில் உள்ளது; உயரமானது. ஆங்கு ஒரு சோதி அழைக்கிறது; வழிகாட்டுகிறது. தமிழ் நாட்டில் கார்த்திகை மாதக் கிருத்திகை நட்சத்திரத்தன்று 'சொக்கப்பனை' கொளுத்தும் பழக்கம் உண்டு. இன்றும் நடந்து வருகிறது. இதுவும் இறைவன் ஓங்கி உயர்ந்த சோதியாக விளங்குகின்றான். (அறிவாலும் பொருளாலும் தேடி காண முடியாதது அன்பின் வயப்படும் பொருள் அது) காட்சியளிக்கின்றான் என்ற தத்துவமேயாகும்! அடுத்து, அண்மித்து வரும்பொழுது கடவுட் காட்சியில் உருவம் தெரிகிறது! ஆம்! குனித்த புருவம் உடையவன்; கோவைப் பழம் ஒத்த செவ்வாயினன்; அவன் உதடுகளில் புன்சிரிப்பு; விரித்த சடையினன்; நனைந்த சடையன்; திருவெண்ணீற்றில் துதைந்த திருமேனி உடையவன். ஒற்றைக்கால் தூக்கி ஆடுகின்றான்! அவன் உருவில் பாதி பெண். இவையெல்லாம் உருவக்காட்சி; இந்த நிலைகளையும் கடந்து இறைவன் அண்ணித்து நெருங்கி நிற்கும்பொழுது புலப்படுவது உறுப்புக்காட்சி! அதாவது திருவடிக் காட்சி! இறைவனை அண்மித்து நிற்கும் பொழுது புலப்படுபவை திருவடிகள்; திருவடிகளைப் பற்றிய நாயன்மார்களும் ஆழ்வார்களும் அனுபவித்து அனுபவித்துப் பாடுவார்கள்; திருக்குறளும் கடவுள் வாழ்த்தில் திருவடிகளையே பேசியிருப்பது

அறிதலுக்குரியது மட்டுமல்ல அறிவுக்கு விருந்தும் கூட! திருவடிகள் தாள்கள் என்றும் அழைக்கப் பெறும். தாங்கும் தன்மையுடையன தாள்கள்; பல்லுயிரும் பல உலகும் படைத் தளித்து வாழ்விக்கும் இறைவனின் தாள்கள்! தாங்கும் தன்மையுடைய தாள்கள்! தாள்கள் முயற்சியின் சின்னம்! உழைப்பின் சின்னம்! “நோன்றாய்” என்று புறநானூறு கூறும்! “தாளாண்மை” என்று திருக்குறள் கூறும். திருவடிப் பேறு என்றே சமயத் தத்துவங்கள் கூறும்! திருவடிஞானம் என்னும் தத்துவம்.

திருவடிக் காட்சி, திருவடிஞானம், எளிதில் கிடைக்காது. முதலில் ஆன்மா இடையீடின்றி சிவத்தை எண்ணுதல் வேண்டும்; சிந்தித்தல் வேண்டும். தவமும் கூட விகார உணர்வுகளுடன் செய்யின் திருவடிக் காட்சி கிடைக் காது; ஏன்? தேவர்களே இன்னமும் கடவுளைக் காண வில்லை; காண இயலவில்லை; தேவர்கள் கெட்டிக்காரர்கள்; கடவுளைக் கண்டதாகவும் கடவுளைப் பற்றிப் பலபடவும் கூறுகின்றனர். ஒருவர் செம்மேனியின், பிறிதொருவர் வெண்ணீரணிந்த திருமேனியராதலால் வெண்மை நிற முடையவர் என்று கூறுகின்றார். ஒருவர் இல்லை ‘அநேகன்’ என்று கூறுகின்றார். ஏன்? இவையனைத்தும் பொய்: உண்மையும் கூட! ஏன்? இறைவன் பக்தர்கள் நினைக்கின்ற வடிவில் அவர்களுடைய உள்ளத்தில் எழுந்தருளும் தன்மையன்; ஆதலால், எவ்வெவர் கூற்றிலும் உண்மை உண்டு; இறைவன் அணுவாக இருக்கிறான்; இல்லை, சென்று சென்று தேய்ந்து விடும் அணுவாய் இருக்கிறான்; நுண்ணி யோன் காண்க;

இந்தப் பாடலில் இறைவன் சுட்டி அறியப்படுபவன் அல்லன்! இறைவனை எழுத்தும் சொல்லும் காட்டாது! இறைவன் ஞானத்தின் திருவுரு! இறைவனை ஞானத் தாலேயே அனுபவிக்க முடியும்! ஆன்மா, ஞானமயமாகும்

பொழுதே கடவுட்காட்சி நிகழும். உடம்பினால், மனத்தினால் செய்யும் பணிகள் முதிர்ந்து அறிவுத் தொழிலே தலைமை தாங்கும் நிலையில் ஞானம் முகிழ்க்கிறது; எதுபோல் எனில், அரும்பு, மலர், காய், கனி போல! அறிவு – அறியாமைக் கலப்பற்ற அறிவு. அறிவு, சிவத்தை அறியும் அறிவு வளர, வளர அறியாமை-ஆணவமலத்தின் ஆற்றல் ஒடுங்கும். அப்போது இறைவன் ஞானத்தை அருளுவான். ஞானமே சிவத்தை அனுபவிக்கும் பேற்றினையும் தரும்; இன்ப அன்பினையும் நல்கும்;

இன்று பத்திமை மேவியுள்ள அளவுக்கு, ஞானத்தில் ஆர்வம் இல்லை;. வேட்கை இல்லை! ஞானம் பெறுதலுக்குரிய சிவபூசை முதலியன பண்ணும் ஆர்வம் அகப்பூசை செய்யும் மரபு மறந்தேபோய் விட்டது. பூசலார் அகப் பூசையில் தோய்ந்தவர் இல்லை! ஞான நூல்களை கேட்கும் ஆர்வம் இல்லை. ஞான நூல்களை ஓதும் ஆர்வம் இல்லை. இதனாலேயே சமய ஆசாரங்கள், சடங்குகள் பெருகி வளர்ந்து கூட ஆன்மாவின் தரம் உயரவில்லை; ஆணவம் வேறு வேறு வடிவத்தில் ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கிறது. இன்று எங்கு நோக்கினும் ஆணவத்தின் போக்கே காணப்படுகிறது. இறைவன் சந்நிதியிலேயேகூட ஆணவம் ஆட்சி செய்கிறது. சமயசீலம் அருகி வருகிறது. தாழ்வு மனப்பான்மை யாரிடமும் இல்லை! விருப்பும், வெறுப்பும் மனித உலகத்தை ஆட்டிப் படைக்கின்றன.

இந்தத் துன்பத்திலிருந்து மாந்தர் உலகம் மீள உள்ள ஒரே வழி, ஆன்மாவின் ஆணவத்தைக் கரைத்துக் கரைத்துக் கெடுக்கும் திருவாசகத்தை ஓதுதல்; திருவாசகமே நமக்கு ஞானாசிரியன்! திருவாசகம் நமக்குத் துணை! திருவாசகம் நம்மை வளர்க்கும்! திருவாசகம் ஞானம் நல்கும்; ஏன்? திருவாசகத்தின் வழி மாணிக்கவாசகர் கண்ட காட்சியை அனுபவித்தால் இறைவன் திருவடிகளைப் பற்றலாம்!

# 17

# திருவெம்பாவை - திருப்பள்ளி யெழுச்சி விளக்கம்

## திருவெம்பாவை

### சக்தியை வியந்தது

திருச்சிற்றம்பலம்

*ஆதியு மந்தமு மில்லா அரும்பெருஞ்*
*சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்*
*மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?*
*மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்*
*வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து*
*போதா ரமளியின்மே னின்றும் புரண்டிங்ஙன்*
*ஏதேனு மாகாள் கிடந்தா ளென்னே! யென்னே!*
*ஈதேயெந் தோழி பரிசேலோ ரெம்பாவாய்.* 1

அறிவால் சிவமேயாய மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகம் தேன்; மன்னுயிர்க்கு மருந்து, திருவாசகம் ஓதுதல் தீவினைக்கு மருந்து. சிவஞானத்தை நல்கும்

திருவமுது. திருவாசகத்தில் திருவெம்பாவைப் பாடல்கள் திருவருள் நிலையை விளக்குவன; திருவருளை வழங்குவன. திருவெம்பாவைப் பாடல்கள் மகளிர் பாடுகின்றனவாக அமைந்துள்ளன. மார்கழித் திருவாதிரைத் திருநாள், சிவபெருமான் திருநாள்! மார்கழித் திருவாதிரைத் திருநாளன்று நிறைவுறும் வகையில் சிவபெருமானுக்குச் சிறப்பு வழிபாடுகள் செய்வர்; மகளிர் நீர் நிலைகளுக்குச் சென்று நீராடிப் பராசக்தியைப் பாவைத் திருவுருவில் வழிபடுவர். பாவை வழிபாட்டினால் பார் செழிக்கும்; மங்கலமாகிய மனைமாட்சி வளரும்; திருவருளின்பமும் கிடைக்கும். அறியாமையில், இருள் ஆணவத்தில் கிடக்கும் உயிர்களைப் பராசக்தியின் அருள் எடுத்துத் திருவருளைப் பதித்து இன்ப அன்பினை வழங்குவதைப் பாவை விளக்குகிறது.

பாவைப் பாடல்கள் அம்மையை வழிபடும் பாடல்கள், அம்மையப்பனாகவே பாடுதல் மரபு. ஆனால், திருவெம் பாவை சிவசக்தியை-பராசக்தியைப் போற்றிப் பரவுகிறது.

> "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
> பாதத் திறம்பாடி"

என்பதும்,

> "முன்னிக் கடலைச் சுருக்கி"

என்ற பாடலும் அம்மையைப் பாடிப்பரவுவன. ஆதலால், 'திருவெம்பாவை' என்கின்றோம்.

மார்கழித் திங்கள்; பொழுது புலரவில்லை. நாட்காலை, ஆர்வமுடைய மகளிர் எழுந்துகூடி நீர்நிலை நோக்கிப் புறப் படுகின்றனர். அதுபோது துயிலெழுந்து வாராதாரின் வீட்டு வாயிலில் நின்று தூங்குபவளை எழுப்புகின்றனர்.

"ஒளி பொருந்திய கண்களையுடைய நங்கையே! தொடக்கமும் முடிவும் இல்லாத அரியபெரிய சோதியை

நாங்கள் புகழ்ந்து பாடக்கேட்டும் துயில்கின்றாயோ? நின் செவி வன்செவியோ? திருவீதியில் சிவபெருமானை வாழ்த்தும் வாழ்த்தொலி கேட்ட அளவில் படுக்கையி னின்றும் புரண்டு எழுந்து விம்மி விம்மி அழுகின்றாள்! தன் நிலை இழந்தாள்! இவள் எச்செயலுக்கும் ஆகாள்! இவள் நிலை வியப்பிற்குரியது–" என்று பாடுகின்றனர்.

இறைவனுக்குத் தொடக்கமில்லை; இறுதியும் இல்லை. தோன்றுவன வெல்லாம் அழியும் என்பது நியதி. இறைவனை ஞானப்பேரொளியாக—அகண்ட ஒளியாக வழிபடுதல் வழக்கம். "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்" என்பார் தாயுமானார். இறைவன் அரும் பெரும் சோதியாக விளங்குவதைப் "பசுபதியாகிய இறைவா! கதிரவன் மண்ண கத்தைச் சூழ்ந்துள்ள இருளையோட்டிக் காண்பார் கண்களுக்கும் புலனாகின்றான். ஆனால் நீயோ, அக்கதிர வனைப் போல நூறாயிரங்கோடி ஒளிக்கதிர்களையுடை யனாக இருந்தும் என் கண்களுக்குப் புலனாவதில்லை. என் அகவிருள் வலிமையுடையதோ? அன்று. அன்று! நின் கருணைப் பெருக்கு முழுதுமாகத் தேவை" என்று ஆதிசங்கரர் கூறுவதால் அறிக!

சிவபெருமானை வாழ்த்தும் வாழ்த்தொலி கேட்டதும் படுத்திருந்தவள் ஏன் வரவில்லை? அவள் உறங்கவில்லை; வாழ்த்தொலியைக் கேட்ட அளவிலேயே பக்தியில் மன முருகி மெய்ம்மறந்து கிடக்கிறாள்! அவள் திருவருள் வயப்பட்டு விட்டாள்! இனி உலகியலுக்கு ஆகாள் என்பது கருத்து. உறக்கத்தைத் தவிர்ப்போம்: உளம் உருகி வழிபடுவோம்!

*பாசம் பரஞ்சோதிக் கென்பா யிராப்பகல் நாம்*
*பேசும்போ தெப்போதிப் போதா ரமளிக்கே*
*நேசமும் வைத்தனையோ? நேரிழையாய் நேரிழையீர்*
*சீசீ! யிவையுஞ் சிலவோ? விளையாடி*

*ஏசு மிடமீதோ? விண்ணோர்க ளேத்துதற்குக்*
*கூசு மலர்ப்பாதந் தந்தருள வந்தருளும்*
*தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்*
*ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோ ரெம்பாவாய்.* 2

மாதங்களிற் சிறந்த மார்கழித் திங்கள்; வைகறைப் போது! வீட்டு வாயிலில் எழுப்பும் குரல் கேட்கிறது! குரல், எழுப்புவதாக மட்டுமில்லை. எள்ளி நகையாடுவதாகவும் இருக்கிறது! "அணிகலன்களையுடைய பெண்ணே! பேசும் பொழுதெல்லாம், 'எந்தாய்! எந்தை இறைவனே!' என்று பேசுவாய்! நின் அன்பு முழுதும் அவனுக்கே உடைமை என்பாய்! ஆனால், இப்போது படுக்கைக்கே அன்பு வைத்தாயோ?" என்று காலம் கடந்து உறங்குபவளை எள்ளி நகைத்து எழுப்புகின்றனர். தூங்குபவள், துயிலின் பிடியில் சிக்கியிருந்ததால் நல்ல பணிக்கு எழுப்புபவர்களை நோக்கிச் "சீச்சி" என்கிறாள். "விளையாட இதுவா இடம்?" என்று கேட்கிறாள். வெளியே நின்று துயிலெழுப்பிய தோழிகள். "நாங்கள் ஏசவும் வரவில்லை; விளையாடவும் வரவில்லை. நாங்கள் அனைவரும் தேவர்களால் தொழுதற்கரிய—நமக்கு எளிதாக வந்தருளும் இறைவன்—திருச்சிற்றம்பலத்துத் தலைவன் திருவடிகளுக்கு அன்புடையோம். அந்த அன்பினை நீயும் பெறுதற்பொருட்டே எழுப்புகின்றனம்" என்கின்றனர்.

"பாசம்" என்பது மிக்க அன்பினைக்குரிப்பது. இப் பாடலில் இறைவனுடைய திருவடிகளின் அருமையும் எளிமையும் ஒரு சேர விளக்கப் பெற்றுள்ளன. விண்ணோர்கள் ஏத்துதற்குக் கூசும் மலர்ப்பாதம்" என்பது அருமையை உணர்த்துகிறது. விண்ணோர்கள் சூழ்ந்து சூழ்ந்து இறைவனை வாழ்த்த முயன்றாலும் பெருமான் அவ்வாழ்த் தினை ஏற்பதில்லை. ஏன்? அந்த வாழ்த்தில் பக்தியில்லை; நலம் இல்லை; வானவர்கள் வாழ்த்துதலில் அன்பில்லை; ஆசை நிறைய இருக்கிறது. அமரர்கள் ஆசைநோக்கி வாழ்த்து

கின்றனரேயன்றி, வாழ்த்துதல் நோக்கமன்று. ஆதலின், வானவர் வாழ்த்தினைக் கண்டு இறைவன் நாணுகின்றான். அமரர்கள் திருவடிகளைப் பெறுதல் இயலாது. அதே திருவடிகள் எளிதில் நம்மை நாடிவந்து ஆட்கொள்கின்றன. "தந்தருள வந்தருளும்' என்று எளிமையும் விளக்கப் பெறுகிறது.

"பாசம் பரஞ்சோதிக்கு என்பாய்" என்றதாய் "சொல்லும் நீ, செயலுக்குரிய காலத்தில் தவறுகிறாய் என்று உணர்த்தப் பெறுகிறாள். சொல்பவர்கள் பல செயலில் சிலர் கூடக் காண்பது அரிது. வைகறைப் போது இறைவணக்கத் திற்கேற்ற இனியபோது, ஆரவாரமுடைய புறவுலகம் மோனத்தில் அமிழ்ந்திருக்கும் அந்த நேரம் இறை வழிபாட்டுக்கு உற்ற நேரம்.

இப்பாடல்; உயிர்களின் பிறப்பின் நோக்கத்தை இறை வனைப் பூசித்து இன்ப அன்புநிலையை எய்திடுதல் வேண்டும். அதுவே பிறப்பின் குறிக்கோள்! அக்குறிக் கோளினின்றும் பிறழ்ந்து வாழ்வெனும் மையலிற் சிக்குண்டு கிடக்கும்பொழுது ஞானாசிரியன் கருணையோடு கடிந் துரைத்து ஈடேற்றுதல் வழிவழிவந்த வழக்கம். அதுவே தந்தருளும் நிலை; இறைவன் எளிமையில் தந்தருளுகின்றான்; அவ்வருளைப் பேண—பாவை நோன்பு நோற்றிடுவோம் வாரீர்! வாரீர்!

முத்தன்ன வெண்ணகையாய்! முன்வந் தெதிரெழுந்தென்
அத்தனா னந்த னமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீ ரீசன் பழவடியீர்! பாங்குடையீர்!
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ?
எத்தோநின் னன்புடைமை? யெல்லோ மறியோமோ?
சித்த மழகியார் பாடாரோ நஞ்சிவனை?
இத்தனையும் வேண்டும் எமக்கேலோ ரெம்பாவாய். 3

மார்கழித் திங்கள்; பொழுது புலர்கிறது. மண்ணிருள் நீங்குகிறது; மனத்திருள் நீங்கவில்லை. அகவிருள் நீக்கத்திற் குரிய அகனமர்ந்த வழிபாட்டினாலேயாம். வழிபாட்டிற்கு மகளிர் புறப்பட்டு விட்டனர். வழிபாட்டில் கலந்துகொள்ள வராத தோழியின் வீட்டு வாயிலில் எழுப்புகின்றனர். காலத்தில் வாராது தூங்குபவளிடம் நேற்று "நீங்கள் நாட் காலையில் எழுந்துவரும் முன்னே நான் எழுந்து வந்து இறைவனைத் துதிப்பேன்; புகழ்ந்து பாடுவேன்" என்று சொன்னாயே! இப்பொழுது உறங்குகின்றாயே!" என்று நினைவூட்டுகின்றனர். "செயலில் திட்பமின்றிப் பேசிப் பயனென்ன?" உடன் எழுந்துவா! கதவைத்திற!" என் கின்றனர்.

தூங்குகின்றவள், "மெய்யன்புடையீர்! பழமையான அடிமையுடையீர்! நீவிர் குற்றம் பாராட்டாது சீராட்டி ஆட்கொள்ளலாகாதோ?" என்று கூறுகிறாள். அவளை எழுப்பக் கூடியிருந்தவர்கள், "உன் அன்பு அறியாததா? மனத்தூய்மையுடையவர்கள் இறைவனைப் பாடமாட்டார் களோ? உன்னை எழுப்பவந்த எங்களுக்கு நீ தரும் பரிசு வேண்டியது தான்!" என்று கூறுகிறார்கள்.

இத்திருப்பாடல் இறைவனை மொழியால் பாராட்டி வணங்குகிறது; 'பழ அடியார்'-வழிவழித் தொண்டு பூண்டவர்; இறைவனுக்குத் தொண்டு பூண்டொழுகும் பரம்பரைக் குடியிற் பிறந்தவர் பழைய அடியார். ஒரே பிறப்பிலும் கூடப் பன்னெடு நாட்கள் மாறா அன்பில் தொண்டு செய்து வருவாரும் பழைய அடியாராவர் 'பாங்குடையீர்' என்பவர், பழைய அடியார்க்குத் துணை நிற்கும் தோழமைப் பண்பில் சிறந்தோராவர். 'பத்துடையீர்' என்பவர். அடியார்க்குரிய இலக்கணம் பத்து உடையவர். அதுவும் புறத்திலக்கணம் பத்து, அகத்தில்க்கணம் பத்து என்று உபதேச காண்டம் கூறும். புறத்திலக்கணமாவது திருநீறும் கண்டிகையும் அணிதல், சிவனடியாரை வணங்கல்,

சிவனைப் புகழ்ந்து பாடுதல், ஐந்தெழுத்து எண்ணுதல், சிவபூசை செய்தல், சிவ புண்ணியங்களைச் செய்தல், சிவபுராணங்களைக் கேட்டல், திருக்கோயில் வழிபாடு செய்தல், திருவருள் நெறி நிற்பாரிடமே உண்ணுதல், சிவனடியார் உவப்பன கொடுத்தல் ஆகியன. அகத்திலக் கணமாவது; இறைவனது பொருள்சேர் புகழைக் கேட்கும் பொழுது மெய்ப்பாடுறுதல்! அவை மிடறு விம்மல், நாத்தழு தழுத்தல், இதழ்துடித்தல், உடல் குலுங்கல், மயிர் சிலிர்த்தல், வியர்த்தல், சொல்லெழாமை, கண்ணீர் அரும்புதல், வாய்விட்டு அழுதல், மெய்ம்மறத்தல் ஆகியன. சித்தத்தில் தூய்மையுடையவர் இறைவனைப் பாடுவர். சித்தத்திற்கு அழகு. திருவருட் சிந்தனையாம். பழைய அடியார், புத்தடி யாரைக் குற்றம் நீக்கிச் சிவமாக்கும் அருளிப் பாட்டினை இயல்பாகவுடையவர். இங்ஙனம், சித்தம் அழகியார் இறைவனைப்பாடும் பெற்றியை நினைந்து நாமும் பாடுவோ மாக! திருவருளை நினைந்திடுவோம்; சித்தத்தில் அழகினைப் பெற்றிடுவோம்; மாந்தர் குலத்தின் சிந்தனையில் அழகு தோன்றின் சகமெலாம் அழகு பொலியும்.

*ஒண்ணித் திலநகையா யின்னம் புலர்ந்தின்றோ?*
*வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ?*
*எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோ மவ்வளவும்*
*கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே*
*விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்*
*கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்*
*உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்*
*தெண்ணிக் குறைவில் துயிலேலோ ரெம்பாவாய்.* 4

மார்கழித் திங்களின் குளிர், உறக்கத்திற்குத் துணை செய்கிறது. பொழுது புலர்கிறது! பொழுது புலர்தல் எழுச் சிக்குத் துணை. உறக்கமா? எழுச்சியா? என்ற வினாவிற்கு விடை காண்பதிலேயே உயிருலகம் வளர்கிறது; வாழ்கிறது.

அறியாமை, அழிக்கும் இன்பங்களில் ஆழ்த்தும், அறிவு, இலக்குகளில் ஈடுபடுத்தும்; குறிக்கோளில் கொண்டு சேர்க்கும். அறியாமையில் ஆழ்வோர் அழிவிலின்பத்தை மறுத்தல் இயற்கை.

உறங்கும் தோழியிடம், "இன்னும் பொழுது புலர வில்லையோ?" என்று கேட்கின்றனர். உறங்குபவள் உறக்கத் தின் சுவையில் மேலும் சில வினாடிகள் உறங்க எண்ணி, அதே பொழுது தன்னுடைய உறக்க ஆர்வத்தை வெளிப் படுத்திக் கொள்ளாமல்—சாக்காக. "எல்லோரும் வந்து விட்டனரா?" என்று கேட்கிறாள். இது, நேற்றும் இன்றும் உள்ள உலகியல் நடைமுறை. உறக்கத்திலிருப்போர் ஏதாவது ஒரு சாக்குச் சொல்லி உறக்கத்தை நீட்டிக்கவே விரும்புவர். இங்ஙனம் உறங்குபவள் கூற, எழுப்ப வந்தவர்கள் "நீயே வந்து எண்ணிக் கொள்" என்று மறுமொழி கூறுகின்றனர். ஏன்? உறங்குபவளின் உறக்கத்தை நீட்டிக்க விரும்பவில்லை; உடனடியாக உறக்கத்திற்கு முடிவுகட்ட விரும்புகின்றனர். அதுமட்டுமின்றி, உறங்குபவள் பேருறக்கத்தில் இல்லை. உறங்கியும் உறங்காமலும் இருக்கின்ற நிலையினளே! அவளுக்கு ஒரு பணியிருந்தால் உடன் எழுந்து வந்து விடுவாள். அவள் எழுச்சிக்குப் பணி தூண்டுதலாக அமையும்! ஆதலால், "நீயே வந்து எண்ணிக்கொள்!" என்கின்றனர். இங்ஙனம் கூறுகிறவர்களுக்கும் இதில் ஒரு தற்காப்பு இருக்கிறது. அதாவது, அரன் நாமத்தைக் கூறாமல் யார் யார் வந்ததனர்? என்று எண்ணிப் பொழுதைக் கழிக்க இவர்கள் விரும்பவில்லை. இங்ஙனம் எண்ணிப் பழகினால், யார் யார் வந்தார்? என்று எண்ணும் பழக்கமே மிகும். இறைவன் திருநாமத்தை எண்ணும் பழக்கம் முறுகி வளராது. ஆதலால் இவர்கள் எண்ண விரும்பவில்லை! எண்ணும் நிலையில் இவர்களும் இல்லை.

அமரர்களுக்கு அமுதவானை, வேத விழுப்பொருளைக் கண்ணுக்கு இனியானைக் காதலால் பாடிக் கசிந்து உருகி

நிற்கின்றனர். ஆதலால், எண்ணும் நிலையில் இவர்கள் இல்லை. கணக்கு வழக்கைக் கடந்த திருவடியைப் பாடிக் கசிந்துருகி நிற்பவர்களால் எங்ஙனம் எண்ண இயலும்? இறைவன் திருநாமம், பிறவிப் பிணிக்கு மருந்து. ஆதலால், மருந்து என்றார். உலகில் நிலவும் ஒரு பிணிக்குப் பல மருந்துகள் உண்டு. ஆனால். பிறவிப் பிணிக்கு மருந்துகள் பல இல்லை. இறைவன் திருவடியாகிய ஒரு மருந்தே பிறவிப் பிணிக்கு மருந்து. ஆதலால், "விண்ணுக்கு ஒரு மருந்து" என்றார். 'ஒரு' என்பது, எண் பொருட்டன்று' சிறப்புக் கருதியே! அந்த ஒரு மருந்தை நாம் அனைவரும் காட்சியால் அறிந்து எண்ணி இன்புறப் பாடுவோமாக!

*மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம்*
*போலறிவோ மென்றுள்ள பொக்கங்க ளேபேசும்*
*பாலூறு தேன்வாய்ப் படிறீ! கடைதிறவாய்*
*ஞாலமே விண்ணே பிறவே யறிவரியான்*
*கோலமு நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டும்*
*சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்*
*றோல மிடினு முணரா யுணராய்காண்*
*ஏலக் குழலி பரிசேலோ ரெம்பாவாய்.* 5

பொழுது புலர இருக்கிறது. ஞாயிற்றொளியின் முன்னாலே இரிந்தோட இருக்கும் இருள் கவ்விப் பிடிக்கிறது. அதுபோல், திருவருள் வழி நிற்க வேண்டிய உயிர்கள் ஞானநெறிப்படுதற்குமுன், திணிந்த இருளில் கிடக்கும். எளிதில் அருள் நெறிக்குத் திரும்பா! இறைவன் திரு நாமத்தைப் பேரொலியாகக் கேட்டாலும் சற்றும் ஞானம் வராது என்னும் குறிப்பை இந்தத் திருப்பாடலில் மாணிக்க வாசகர் விளக்குகின்றார்.

உறங்குபவளை எழுப்பவந்து நிற்போர், "சிவனே! சிவனே!" என்று ஓலமிடுகின்றனர். உறங்குபவள் எழுந்திருக்க வில்லை. உடலுக்கு எழிலும் நலமும் தேடும் நாட்டமுடை

யவர்கள், உயிருக்கு நலம் நாடும் நாட்டமில்லாமல் இருக்கின்றனரே என்ற இரக்கக் குறிப்பு அறிந்து உணர்க! உறங்குபவள், யாதும் அறியாதவளல்லள்; வாழ்வியலிற் சதுரப்பாடுடையவள், அறியாததை அறிந்ததைப் போலப் பேசும் திறத்தள்! ஊரில், உலகத்தில் உள்ள பொய்களெல்லாம் அவள் நாவிற்கு அன்றாடம் அத்துபடி! இத்தகையோர் வஞ்சகர்! ஆயினும், தேனூறப் பேசுவர்; இனிக்க இனிக்கப் பேசுவர்; நெஞ்சைத் திறந்து காட்டமாட்டார்கள். 'நெஞ்சு' என்று ஒன்று இருந்தால்தானே அவர்கள் திறந்து காட்ட! உறங்குபவள் கலந்துரையாடி மகிழ்ந்திருந்தபோது "திருமாலும் நான் முகனும் தேடிக் காணாத திருவருள்மலையை யானறிவேன்!" என்று கூறியிருக்கிறாள்! அங்ஙனம் உண்மையில் அறிந் திருப்பின் சிவனே! சிவனே!" என்ற ஓலம் கேட்ட பிறகும் உறங்குதல் இயலாது. அதுமட்டுமா? அவன்-அந்த மாமருந்து, உயிர்களைத் திருத்தி ஆட்கொள்ளும் கருணையைப் பாடும் பொழுது உண்மைப் பத்திமையுடைய ஆளாகாது வாளா இருத்தல் இயல்பன்று. ஆதலால் அவள் 'அறிவேன்' என்று சொல்லியிருந்தது பொய். பொய்ம்மையில் மெய்ம்மை காண இயலாது. மெய்பொருளை அனுபவித்தற்கியலாது; ஆதலால், பொய்யினைத் தவிர்த்திடுமின்! கண்ணுதற் பெருமான் கருணையைப் பாடுமின்! 'சிவனே, சிவனே! என்று ஓல மிடுமின் என்பது பாட்டின் பொருள்!

திருமாலும் நான்முகனும் காணாத மலையினை என்பது 'திருமால்' நான்முகன்' என்ற பெயர்களைக் கொண்டு மயங்கற்க! இப்பெயர்ச் சொற்கள் தத்துவங்களை விளக்க வந்தன. திருமால், செல்வத்தின் சின்னம்! நான்முகன் அறிவின் சின்னம்! செல்வமும் அறிவும் செருக்கினை விளைவிக்கும். செல்வம் 'எனது' என்ற செருக்கினையும், அறிவு 'நான்' என்ற செருக்கினையும் தரும். 'நான்' 'எனது' என்ற செருக்கற்ற நிலையே திருவடி-திருவடியைச் சார்ந்த திருவருளின்ப நிலை, என்ற கருத்தினை "மாலறியா நான்

முகனும் காணா மலை" என்று விளக்கி அருளுகின்றான் அறிவாலும் இறைவனைக் காண முடியாது. செல்வத்தினாலும் இறைவனைக் காண முடியாது. ஞானம் ஒன்றாலேயே இறைவனைக் காண முடியும். இறைவன் திருவருள் உலகின் எல்லோராலும், எல்லாப் பொருள் களாலும் தேடிக் காணப்படாதது. ஆயினும் அடியார்கள். அத் திருவருள் வலிய வந்து, பிழைகளைத் திருத்திச் சீராட்டி ஆட்கொள்ளும் கருணையை வியந்து உள் நெக்குருகப் பாடுகின்றனர்.

"ஞாலமே, விண்ணே, பிறவே அறிவரியான்
கோலமும் நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடி"

என்ற சொற்றொடர்களை நினைந்து நினைந்து ஓதுதற்குப் பாடுவோமாக! ஓதுவோமாக!

மானே! நீ நென்னலை நாளைவந் துங்களை
நானே யெழுப்புவ னென்றலும் நாணாமே
போன திசைபகரா யின்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே யறிவரியான்
தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்குன் வாய்திறவாய்
ஊனே யுருகா யுனக்கே யுறுமெமக்கும்
ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோ ரெம்பாவாய்

6

பகலிற் பேசுவதுபோல் இரவில் சிலர் நடப்பதில்லை. அதுமட்டுமன்று. முதல் நாள் பகல் பேச்சோடு இரவுப் பழக்கத்தின் காரணமாக மாறுபட்டு, மறுநாட்காலை முரண் பட்டு ஒழுகுவர்; பழகுவர், அயர்ந்து இருளிற் சிக்கிவிட் டாலும் ஒளியின் அனுபவத்தை இருள்கெடுத்து விடுகிறது. இத்திருப் பாடலில், உறங்குகிறவள் நேற்றுப் பகற்போதில்

மார்கழிநோன்பை எடுக்கும் வகைபற்றிப் பேசிக்கொண் டிருந்தபொழுது, நானே நாளை வந்து உங்களை எழுப்பு கின்றேன்" என்று சொன்னாள். ஆனால், இப்பொழுதோ உறங்கிக் கொண்டிருக்கிறாள்! உறக்கத்தில் அவள் உயி ருணர்வு சென்ற திசை தெரியவில்லை! சொன்ன சொற்படி நடக்க இயலவில்லையே என்ற நாணத்தை இழந்து உறங்குகின்றாள். ஆதனால், எழுப்புகிறவர்கள் "இன்னும் பொழுது புலரவில்லையோ?" என்று எள்ளிக் கேட்கின்றனர். எழுப்புகிறவர்கள் மேலும் இரக்க உணர்ச்சியோடு, "உனக் காக நீ, பாட எழுந்து முன் வராது போனாலும் நாங்கள் வந்து எழுப்புகிறோமே! எங்களுக்காகவாவது எழுந்து பாடவா!" என்பது உலகியல். அறியாமையினால் அடம் செய்யும் குழந்தையைத் தாய், தன்மீது ஆணைகாட்டித் தனக்காகவாவது சிறப்புடைச் செயல்களைச் செய் என்று வழி நடத்தும் உலகியல் வழக்கு அறியத்தக்கது. பொதுவாக, உலகியல் அவரவர்க்கென்று உணர்ந்து நலம் நாடுதல் — செய்தல் எளிதன்று. பெருவழக்குமில்லை. தொடர்புடையார் நலங்கருதிச் செய்தல் மூலமே, நலம்பெறுதல் இயல்பு. தாயின் நலங்கருதிச் சேயும், சேயின் நலங்கருதித் தாயும், கணவன் நலங்கருதி மனைவியும், மனைவியின் நலங்கருதிக் கணவனும் ஒழுகும்பொழுது, ஒழுக்கநிலை எய்துகின்றனர்; நலம்பல எய்துகின்றனர். பிறர்நலம் பேணும் பெட்பில் இடரின் இயல்பாய் வளர்கின்றனர். "எங்களுக்காகவாவது பாடு!" என்பதில் உள்ள அருமை அறிக.

உறங்குபவள், இறைவன் திருப்புகழைக் கேட்டும் அவன் தன் தண்ணருளைப் பாடக்கேட்டும் ஊனுருகாமல் உள்ளம் உருகாமல், ஒரு வார்த்தையும் பேசாமல் உறங்கும் நிலையை எண்ணி வருந்துகின்றனர்; ஒப்புரவுப் பண்பிற்குக் கூட அவள் ஏழாதிருப்பதை எண்ணி வேதனைப்படு கின்றனர். அதுதான் போகட்டும்! இறைவன் புகழைப் பாடுகிறவர்களை ஊர் மெச்சுகிறது; உலகம் மெச்சுகிறது.

அதற்காகவாவது பாடக்கூடாதா? என்று, "எமக்கும் ஏனோர்க்கும் தங்கோனைப் பாடேல் ஓர் எம்பாவாய் என்று பாடுகின்றனர்.

இறைவன், மெய்யடியார் உள்ளத்தே பள்ளக்காண் உறுபுனல்போல் வந்து தங்குவான். இது "மலர்மிசை ஏகினான்!" என்ற திருக்குறளுக்குப் பரிமேலழகர், "அவரவர் நினைந்த வடிவத்தோடு விரைந்து சேறலின்" என்று எழுதிய உரையோடு ஒப்புநோக்கி உய்த்துணரத் தக்கது. இறைவனின் திருவருளுக்குத் தாழ்ந்த நெஞ்சம் நாம் பெற்றால், அத் திருவருள், பெற்ற அளவிலேயே வந்து பொருந்தும். "தாழ் வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சாரும் ஊழ்பெற லரிது" என்றார் அருணந்தி சிவம். ஆதலால். நாம் இறைவனைத் தேடவேண்டாம். அவன் அருள் நோக்கித் தாழ்வோம்! அவனே வந்து ஆட்கொள்வான்.

*அன்னே யிவையுஞ் சிலவோ? பலவமரர்*
*உன்னற் கரியா னொருவ னிருஞ்சீரான்*
*சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்*
*தென்னாவென் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்*
*என்னானை யென்னரைய வின்னமுதென் றெல்லோமும்*
*சொன்னோங்கேள் வெவ்வேறாயி யின்னந் துயிலுதியோ*
*வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்*
*என்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய்.* 7

துயிலில் ஆழ்ந்து கிடப்பவள், இறைவனின் பொருள் சேர் புகழ் பரவும் ஒலி கேட்டும் எழுந்திருக்கவில்லை! உறங்குபவள் வயதில் இளையாள். "அம்மா! தாயே!" என்று நகைப்புக் குறிப்பில் அழைக்கின்றனர். "அம்மா! தாயே!" இப்படியும் ஒருநிலை உனக்கு உண்டா? நீயே முன்பெல்லாம் சிவத்தை நினைப்பூட்டும் சிறு ஒலிகள் கேட்டால் கூட—திருச்சின்னம் கேட்டால் "சிவ, சிவ!" என்று உணர்ந்து சொல்வாய்; அங்ஙனம் அந்தத் திருநாமத்தை நீ சொல்லும்

பொழுதே உருகி நிற்பாய். ஆனால் இப்போது நீயோ, நாங்கள் அனைவரும் இறைவனைப் பற்றிப் பேசியும் நீ யாதும் அறியாதவள் போல் உறக்கத்தில் கிடக்கின்றாயே! இஃதென்ன உறக்கம்! என்று எழுப்புபவர்கள் கேட்கின்றனர். இத்திருப்பாடல் ஞானம் தலைப்பட்ட உயிர், பழக்க வாசனையால் பாதிக்கப்பட்ட நிலையை எடுத்துக் காட்டு கிறது. பெருங்காயம் இருந்த பாண்டத்தில் பெருங்காயத் தினை எடுத்த பிறகும் பெருங்காயத்தின் மணமிருக்கும். அந்த மணத்தினையும் எடுத்து விழுங்கும் ஆற்றலுடைய பொருள், அப்பாண்டத்தில் இடப்பெறாது போனால், பெருங்காயத்தின் மணமேவிஞ்சும். அதுபோல, ஆணவத்தின் ஆற்றல் அடங்கிற்றாயினும் அதன் வீச்சு முழுமையாக அகன்று விடுவதில்லை. பழக்கத்தின் வாசனையால் அது தலை காட்டும். பழக்கம் தவிரப் பணித்தல் நமது கடன். ஆணவத்தினின்றும் விலகித் திருவருள் தலைப்பட்ட உயிர், திருச்சின்னத்தின் ஒலி கேட்டபொழுதும் "சிவ, சிவ!" என்றது, சிவனறிவு நெறிப்பட்டது; அருள் தழீஇ நின்றது. அதனால், ஊனுருகி, உளமுருகி, உயிருருகி மெய்யுணர்வு வழிப்பட்டு நின்றது. ஆனால், இந்த இன்னுயிரைப் பழைய வாசனை ஆணவத்தின் முடை நாற்றம்-அறியாமையின் இருள் வீச்சு சூழ்ந்து கவ்விக் கொண்டது. அதனால், "பாடியும் கேட்கிலை; பேசியும் கேட்கிலை! சின்னங்களின் ஒலி கேட்டதுமே அழுதவளாகிய நீ, இன்றோ இறைவனின் திருநாமத்தை, அருளிப்பாடுகளை விரித்துப் பேசுவதைக் கேட்டும் எழுந்திருக்கவில்லையே!" என்று ஆற்றாமை மேலிடக் கூறுகின்றனர்.

இறைவனோ, அமரர்களுக்கு அறிய முடியாதவன் ஏன்? அமரர்களுக்கு ஞானம் ஏது? அவர்கள் தங்கள் அகக் கருவிகளாலேயே ஆண்டவனைத் தேடுபவர்கள் அவ்வகக் கருவிகளும் கூட இன்ப விழைவிலும், அதிகார விருப்பிலும் தம்முள் மயங்கியவை. அதனால், அமரர்கள் ஞானம்

பெறுதல் அரிது. இவையெல்லாம் அறிந்தும் அறியாதவள் போல் வாளா கிடத்தியோ? என்று இரக்க முற்றுப் பாடுகின்றனர்.

இத்திருப் பாடலில், உயிர் ஆணவமலச் சார்பால் மயங்கிக் கிடந்துழி, இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளி நன்னெறி, உணர்த்தியும், தோழனாகப் போந்தருளி நன்னெறி யில் உடன்நின்று நடத்தியருளியும் ஆட்கொண்டருளும் திறன் பாராட்டப்பெறுகிறது. நாமும் நெஞ்சத்தைக் கடின மாக்கும் அறியாமையினின்றும் அகலுவோம்; உறக்கத்தைத் தவிர்த்திடுவோம்; காணும் காட்சி அனைத்திலும், கேட்கும் ஒலி அனைத்திலும் சிவத்தினைக் கண்டிடுவோம்; நெஞ்சத் தால், வாயால் "சிவ, சிவ" என்று எண்ணியும், சொல்லியும் இன்பநிலை எய்துவோமாக!

கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழி லியம்ப இயம்பும்வெண் சங்கெங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கரணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையே
வாழியீ தென்ன வுறக்கமோ? வாய்திறவாய்
ஆழியா னன்புடைமை யாமாறு மிவ்வாறோ?
ஊழி முதல்வனாய் நின்ற வொருவனை
ஏழைபங் காளனையே பாடேலோ ரெம்பாவாய். 8

பொழுது புலர்கிறது; கோழி கூவுகிறது.. பொழுது புலர்வதைக் கோழி உணர்த்துகிறது. ஆம்! இருளில் கிடந்து தேறித் தெளிந்து பெற்ற உருவம்தானே சேவல்! அச்சேவலுக்குத் தானே பொழுது புலர்தலையும், புலர்தலின் அருமையையும் அறிந்து மகிழும் ஆற்றலுண்டு. அதனால், மகிழ்ந்து கூவுகிறது! அறியாமையின் பிணிப்பு இருள்! அறிவு தலையெடுத்தல் பொழுது புலர்தல்! பொழுது புலரும் மகிழ்ச்சியால் அறிவு தலைப்பட்ட இன்னுயிர்கள் இசைக்கருவிகளை இயக்கு கின்றன; எங்கும் இன்ப இசைவெள்ளம்; இறைவனோடி

சைக்கும் இசை வெள்ளம்; அந்த இசைவெள்ளத்தில் ஆழ்ந்து பரம்பொருளைப் பாடுகின்றோம். நாங்கள் பரம்பொருளைப் பாடும் ஒலி உனக்குக் கேட்கவில்லையா? அம்மா! தாயே! வாழ்க, உன் உறக்கம்!

உடல் உறக்கம் இன்றியமையாததே! பாவைப் பாடலில் உணர்த்தப்படும் உறக்கம் உடல் உறக்க மன்று! உயிர் உறக்கம்; இன்று உலகிடை விழித்திருந்து உண்டு திரிந்து வாழ்வோரில் கோடானு கோடி பேர் உயிருறக்கத்தில் ஆழ்ந் திருக்கின்றனர். ஐயகோ! உயிர்கள் அறியாமைப் பேருறக்கத் தினின்றும் விழித்தெழும் நாளே இன்பம் தொலையும் நாள்; இன்புற்று வாழும் நாள்; அப்போதே உயிர்கள் வளரும்; வாழும்! வாழ விரும்புவோருக்குப் பேருறக்கம் ஆகாது. உயிர் பேருறக்கத்தில் ஆழ்ந்து வாழ்தல் வாழ்வன்று. வாழ் வியலுக்குக் கண் திறந்திருந்தால் போதாது; உணர்வின் வாயில்களும் திறந்திருக்க வேண்டும். இங்கே தூங்குபவள் மெல்லக் கண் திறக்கிறாள். ஆனால், வாய் திறக்க மறுக் கிறாள்! கண்ணிருந்து வாய் பேசாத ஊமையானால் காட் சிக்குப் பொருளேது? இதனை உணர்த்த "வாழி! ஈதென்ன உரக்கமோ? வாய் திறவாய்!" என்கின்றனர்.

செல்வத்திற் சிறந்த திருமாலே, அரனை அயரா அன்பால் அருச்சித்ததை அறியாயோ? ஆழியான் அன்புடைமையை அறிந்திருந்தும் நீ, படுக்கையில் மயங்கி உறங்குவது ஏன்? இறைவனை நீ சந்திக்காமல் உன் வாழ்வு நிறைவுறாது. ஏன்? இறைவன் பிறப்பு—இறப்புகளைக் கடந்த வன்! ஊழிகளை கடந்து தனி ஒருவனாய் விளங்குகின்றவன். ஊழிக்காலத்தில் அவனருளை நாடாமல் என் செய்வாய்? அன்று தேவைக்கெனத் தொழாமல், இன்று இயல்பாய்த் தொழுதல் நன்றன்றோ! அவன் ஊழி முதல்வனாய் ஓங்கி உயர்ந்து நின்றாலும் ஏதும் பெறாத ஏழைகள் பால் இரக்கமுடையவன். அருளே திருமேனியாகிய அம்மையைப் பங்கிலே உடையவன். அம்மையின் கூட்டால் அவன்

அருட்கடலாக விளங்குகின்றான். அவனைப் பாட எழுந்து வா! இந்த அழைப்பு நம் ஒவ்வொருவருக்குந்தான்! நாம் அனைவரும் பாடுவோம்! நமது வாழ்வில் இருள் இரிந்து ஓடட்டும்! பொழுது புலரட்டும்!

*முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே*
*பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே!*
*உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்*
*உன்னடியார் தாள்பணிவோ மாங்கவர்க்கே*
*பாங்காவோம்*
*அன்னவரே யெங்கணவ ராவா ரவருகந்து*
*சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்*
*இன்ன வகையே யெமக்கெங்கோ னல்குதியேல்*
*என்ன குறையு மிலோமேலோ ரெம்பாவாய்.* 9

கன்னியரனைவரும் உறக்கத்திலிருந்து எழுந்து கூடி விட்டனர். ஒருநிலை மனத்துடன் இறைவனைப் புகழ்ந்து பாடுகின்றனர். "பழமைக்கும் பழைமையானவனே! புதுமைக்கும் புதுமையானவனே! உன்னைத் தலைவனாகப் பெற்றோம். ஆதலால், நாங்கள் சிறந்த அடியார்கள் நாங்கள் அடியார்களையே வணங்குவோம். அடியார்களிடத்தேயே தோழமை கொள்வோம்! அவர்களையே மணப்போம்! அவர்கள் உவப்பனவே செய்து, உழுவலன்புவழி கிடப்போம். அவர்கள் பணியே, எங்கள் பணியெனச் செய்வோம். இங்ஙனமே அருளிச் செய்த நீ இவ்வகையே அருளிச் செய்யின் எக்குறையும் இல்லாது வாழ்வோம்." என்று இறுமாந்து பாடிப்பரவிப் பாவை நோன்பு நோற்கின்றனர்.

உயிர்களில் ஆண், பெண் வேறுபாடு இல்லை. திருவெம்பாவைப் பாடல்கள் உயிர்களில் உய்திக்குரிய பாடல்களே! சிறப்பாகப் பெண்கள் ஓதுதலுக்குரியன. தலைவனாகிய இறைவனை உயிர்கள் சார்தலே மணம். உடற்குரிய திருமணங்கள் நிகழ்ந்து, ஈருடலில் வாழ்ந்த உயிர்கள்

ஒருயிராக உருமாறி, ஆண்-பெண் வேறுபாட்டை இழந்து இறையருளில் திளைத்தலே இன்ப அன்பு நிலை, பெண், சிவத்தினை மணத்தல் சிவ நெறியில் இல்லை. சிவம், போகங்களைக் கடந்த போகம். அதனால் பாவை மகளிர் இறைவனை மணக்க விரும்பவில்லை. அடியார்களை மணக்க விரும்புகின்றனர். இறைவனிடம் மாறா அன்புடைய அடியார்களைத் திருமணம் செய்து கொள்வது நோக்கத்திற்குத் துணை செய்யும். இம்மை வாழ்க்கை சிறக்கும். இன்பமும் கிடைக்கும்; இன்ப அன்பும் கிடைக்கும். மங்கையர்க்கரசியார்-நின்ற சீர் நெடுமாறன் வரலாறு அறிக!

பழைமை, புதுமை என்பன காலத்தைப் பொறுத்து அல்ல. நேற்றும், இன்றும் என்றும் வாழ்விற்கு நலத்தருவன புதுமையே. காலத்தாற் பழைமையானதும், பின்னைப் புதுமையாக உயிர்களை இன்புறுத்தல் கூடும். இறைவன் கால தத்துவத்தைக் கடந்தவன். காலம் எண்ணிக் காட்டும் முயற்சி சில ஆயிரம் ஆண்டுகளாகத் தான். மனிதகுலம் தொடங்கிய நாளிலிருந்து கால அளவு முறை இருந்ததில்லை. வரலாற்றா சிரியன் “வரலாற்றுக் காலத்திற்கு முன்பு” என்பான். இறைவனோ காலங்களைக் கடந்தவன்; ஆதலால் “முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்” என்றார். கால எல்லைக்குட்பட்ட பொருள்கள் உருமாற்றங்கள் பெறும்; சில அழியவும் கூடும். எல்லாம் வல்ல இறைவனருளோ உருமாற்றங்கள் பெறாதது; அழியாதது. அதனால் இறைவன், ‘முன்னைப் பழம் பொருள்; அதனால் உயிர்களுக்கு என்ன பயன்? காலச் சுழற்சியில் உருமாறி அலைந்து எய்த்துக் களைத்து வளரும் உயிர்களுக்கு அந்தந்தக் காலச் சூழ்நிலையில் உயிர்கள் துய்த்து மகிழ்ந்து அனுபவிக்கும் புதுமைக் கோலங்களை வடிவங்களை — உணர்வுகளை இறைவன் பெற்றுப் பின்னைப் புதுமையாகவும் விளங்கிப் பயன்படுகிறான். ஆட்கொள்கிறான்.

"பெற்ற அனுபவத்தை வளர்க்கும் தோழமையை அருளிச் செய்வீர்! அடியவர்களையே கணவன்மாராகப் பெற அருளிச் செய்வீர்" என்று வேண்டுகின்றனர். மகளிரை மணக்கப் பொன் விரும்பிக் கேட்கும் இந்த யுகத்தில் பொன்னனைய மகளிர், தம்மை மணக்க விரும்பும் நம்பிக்குத் திருவெம்பாவை காட்டும் இலக்கணத்தை வகுத்தால் இயல்பாகவே வரதட்சணை ஒழியும்; ஏன்? ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்தம் அடியார்களாக முடியும். அங்ஙனம் வளர்த்தவர்கள் பொன்னை நேசிக்க மாட்டார்கள்; பொன்னனையாரை நேசிப்பர்; இறையருளை நாடிநிற்கும் அடியார்களை நாடுவோம்; அவர்களுக்குத் தோழமை பூண்போம்; தொண்டு செய்வோம்!

*பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்*
*போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே*
*பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்*
*வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலும்*
*ஓத வுலவா வொருதோழந் தொண்டருளன்*
*கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகாள்*
*ஏதவனூ ரேதவன்பே ராருற்றா ராரயலார்*
*ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய்.* 10

இன்றுபாடிய திருப்பாட்டில், நமையாளும் ஞானத் தலைவர் மாணிக்கவாசகர் மகளாக மாறிக் கோயிற் பணிப் பெண்களோடு பேசுகின்றார்; பெருமானைப் பற்றி வினவுகின்றார். அன்று, கோயிற் பணிப்பெண்கள் ஞானத்தில் முதிர்ந்தவர்கள்; பழுத்த மனத்து அடியவர்; திருவருளே நினைப்பாக வாழ்ந்தவர்கள்; இந்தநிலை, திருக்கோயில்கள் சாதிகளின் கூடாரமாகச் செல்வத்தின் பண்ணையாக, நிலப் பிரபுத்துவத்தின் மறுபதிப்பாக உருமாறியவுடன் மாறிற்று; கோயிற் பணிப்பெண்கள் நிலை தாழ்ந்தது. இன்று அதனினும் தாழ்ந்த நிலை! இன்றைய திருக்கோயில்களிலும் "பணிப்

பெண்கள்" பெயரில் சிலருண்டு. எண்ணெய் வற்றிய உடல் தாங்கி, அறியாமையின் மறுபதிப்பாகச் சிலர் பணி செய்கின்றனர். அவர்களைப் "பணிப் பெண்கள்" என்பது சொல் வழக்கே யாம். மாணிக்கவாசகரே கோயிற் பணிப் பெண்களுடன் ஞான வினா-விடை நிகழ்த்தினார் என்றால், அவர்களின் மாட்சிமை என்னே!

மாணிக்கவாசகர் இத்திருப்பாடலில் இறைவனின் நிலையை இனிது விளக்குகின்றார். சொற்களின் எல்லையைக் கடந்தது அவனுடைய திருவடிகள்! பொருள்களின் முடிபாக உள்ளது அவன் திருமுடி! அவன் மங்கை பாகன்! அவன், புகழ்ச்சியைக் கடந்த போகம்! ஆயினும் அவன் தோழன்; தொண்டர்கள் உள்ளத்தில் விருப்புடன் தங்கி அருள்பவன். அவன் ஊர் எது? அவன் பெயரென்ன? அவனுக்கு உறவினர் உண்டா? உண்டெனில் உறவினர் யார்? உறவினர் உண்டெனில் அயலாருண்டோ? அயலார் உண்டெனில் அவர் யார்? அவனைப் புகழ்ந்து பாடும் வழி எது? வகை எது? என்று கோயிற் பணிப்பெண்களை வினவுவார் போல விளக்கி அருளுகின்றார்.

பொருள் முடிவு, திருமுடி என்றது பொருள்களின் எல்லை சிவமே என்பதை உணர்த்துவதற்கே! திருவாசகத்தின் பொருள் ஆடல் வல்லான்தானே! சொற்களுலகம் பொருளைப் பொருளின் பொருளைத் தேட துணை செய்வ தில்லை. சொற்களைக் கடந்த பொருளைத் தேடுவோம்; காண்போம்.

உருவ வழிபாட்டின் இன்றியமையாமையை இப் பாடல் உணர்த்துகிறது. ஒலி, வரி வடிவம் பெற்றாலன்றி முழுதின்பம் தராது. அதுபோல் அருவநிலையினனாகிய ஆண்டவன் அருவுருவ நிலையை உருவ நிலையை உயிர்களுக் காகக் கொண்டு ஆண்டு கொண்டருளும் திறன் பாராட்டப் படுகிறது. இங்கு இறைவனின் திருவருள் மாதொரு பாகனாக

இருப்பது உணர்த்தப்படுகிறது. இத்திருவுருவமே பழந்தமிழகத்தின் வழிபாட்டுத் திருமேனி. அம்மையப்பன் ஒருவாகத் திகழும் திருக்கோலத்தைத் திருக்கழுமலப் பதிகத்தில் "தொன்மைக் கோலம்" என்று அருளிச் செய்துள்ளார். இறைவன், தொண்டர் உள்ளத்தினன். அவனுக்கு ஊரில்லை; பேரில்லை; உற்றாரில்லை; அயலாரில்லை. நாமும் இறைவனைத் தொழுவோம்! தொண்டராய்த் தொழும்பு செய்வோம்? அவனை நம் முள்ளத்தனாகப் பெறுவோம்! இறையருள் வழிநின்று மனித குலத்தில் உறவினர், அயலார் என்றில்லாமல் ஒருமை நெறியில் சன்மார்க்கராய் வாழ்வோம்!

*மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்*
*கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி*
*ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்கா ணாரழல்போற்*
*செய்யாவெண் ணீறாடி செல்வா சிறுமருங்குல்*
*மையார் தடங்கண் மடந்தை மணவாளா*
*ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டின்*
*உய்வார்க ளுய்யும் வகையெல்லா முய்த்தொழிந்தோம்*
*எய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பாவாய்.* 11

மார்கழித் திங்கள் குளிர்காலம்; சுனையில் படிப் படியாகக் கால்வைத்து இறங்குதல் இயலாது; குளிர் வருத்தும். ஆதலால், திடீரெனச் சுனையில் குதித்து விடுகின்றனர். தண்ணீரைக் குடைந்து ஆடுதலால் தண்ணீர் இதமான சூடுறுகிறது.

*"மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்*
*கையால் குடைந்து குடைந்து"*

ஆடுவதாகப் பாடினார். எல்லாவற்றிற்கும் அப்பாலாகக் கடந்து நிற்கும் கடவுள், உயிர்களை ஆட்கொள்ளத் திருமேனி தாங்கி ஆடும் திருவிளையாடல்கள் விளக்கப் பெற்றுள்ளன.

இறைவன் திருவருளை நினைந்து நீரில் ஆடுதல் உடல் — உயிர்த்தூய்மைகளை ஒருசேரத் தரும். ஆதலால் இங்குச் சுனையாடும் மகளிர், 'ஐயா! நாங்கள் வழியடியோம்! செய்யா! வெண்ணீறாடி! செல்வா! மையார் தடங்கண் மடந்தை மணவாளா!" என்று பாடிப் பரவுகின்றனர். 'வெண்ணீறாடி!' என்றும், 'மணவாளா' என்றும் இறைவன் திருமேனியை வாழ்த்துகின்றனர். வெண்ணீறு அணிவது வினைநீக்கம் தரும். அங்ஙனமாயின் வினையினீங்கி விளங்கிய அறிவினனாகிய இறைவனுக்கு ஏன் வெண்ணீறு?

> "........................................தொழுதெழுவார்
> வினைவளம் நீறெழ நீறணி அம்பலவன்..........."

என்பது திருக்கோவையார். அதாவது, தம்மைத் தொழுவார் வினை நீறாகும் வண்ணம் இறைவன் நீறணிகின்றான். குழந்தையை நோக்கித் தாய் மருந்துண்பதுபோல! இறைவன் திருமேனியிலுள்ள வெண்ணீறு ஊழிப்பெருந்தீயில் விளைந்தது. இறைவனை 'ஆரழல்போற் செய்யா!' என்றதால் படைப்புக்குரிய செம்மையையும், 'வெண்மை' என்றதால் பாதுகாப்பையும் 'நீறு' என்றதால் துடைப்பையும், 'செல்வா' என்றதால் வீடுபேறு அருளுதலையும் காட்டிற்று.

இறைவனைத் தீ வடிவினனாக வணங்குதல் வழக்கு. ஐம்பூதங்களில் தீ ஒன்றே சார்ந்த பொருளின் தூய்மை யின்மையை நீக்கித் தூய்மை செய்து நலந்தருகிறது. அதுபோல இறைவனின் திருவருள், நம்முடைய ஆணவத்தைச் சுட்டெரித்து நலம் தருகிறது. இறைவன் உயிர்களை ஆட் கொள்ளும்வகை ஒன்றல்ல; பலப்பல; ஆட்கொள்ளும் வகைகள் மாறுபடுவது உயிர்களின் தகுதி நோக்கியேயாம். இறைவன் உயிர்களை ஆட்கொள்ள உயிரினது பொறி, புலன்களைத் திருவருள் வயத்ததாகச் செய்திருக்கின்றான். உயிர்கள் தம் அகக் கருவிகள் அருளார்ந்த நிலையை அடைந்திடச் சிவபூசையை மேற்கொள்கின்றன. சிவயோகம்

கடைப்பிடித்து ஒழுகுகின்றன. மேலும், பெற்ற சிவானு பவத்தில் நிலைபெற்றிடவும் பழைய பழக்கம் வாராது தடுக்கவும், ஐந்தெழுத்தை எண்ணுகின்றன. இவையே உயிர்கள் உய்யும் வகை. உய்யும் நெறிகளில் எல்லாம் நின்று ஒழுகுதலால் இளைத்துப் போகாவண்ணம் இன்னே — இனிதே காத்தருள்க என்று பேசப்படுகிறது.

இறைவா! உயிர்களை ஆட்கொள்வதற்காகப் பிறப்பில் ஈடுபடுத்துதல், இன்பதுன்பங்களை வழங்குதல், அடித்தல், அணைத்தல் ஆகிய உனது அனைத்து அருள் விளையாட்டுத் துறைகளிலும் நாங்கள் பிழைபடாமல் தேர்ந்துள்ளோம். ஓரோவழி பிழைபட்டிருந்தாலும் பொறுத்துக் கொள்க! இன்று நேற்று நாங்கள் உனக்குத் தொழும்பு பூண்டவர் களல்ல; வழிவழி அடியோம்! பல்லாண்டு அடிமை பூண் டொழுகுவாரை எய்க்கவைப்பது ஆகாது. ஆதலின், எய்யாமற் காத்தருள்க! என்று வேண்டினார்கள். நாமும் வாழ்க்கையில் எய்த்தல் கூடாது. எய்ப்பினில் வைப்பாக விளங்கும் திருவருளை வாழ்த்துவோம்! அவனை நினை வூட்டும் திருநீறு அணிவோம்! அருளோடு உடனுறையும் பெருமானை வாழ்த்துவோம்! வாழ்வோம்!

ஆர்த்த பிறவித் துயர்கெடநா மார்த்தாடும்
தீர்த்தனற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடும்
கூத்தனிவ் வானுங் குவலயமு மெல்லோமும்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழன்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
ஏத்தி யிருஞ்சுனைநீ ராடேலோ ரெம்பாவாய். 12

இத்திருப்பாடல், பாவை நோன்பு நோற்கும் மகளிர். இறைவனின் திருப்புகழைப் பாடிக்கொண்டு சுனையாடுதலை இனிதே விளக்குகின்றது. நீராடும்பொழுது, இறைவன் திருப்

புகழைப் பாடுதல் மூலம் உடலும் தூய்மையுறுகிறது; உயிரும் தூய்மையுறுகிறது. சாதாரண நீர்நிலைச் சுனைகள்கூடத் தீர்த்தங்களாகின்றன. மகளிர் வளையல்கள் ஒலிக்கவும் மேகலைகள் ஆரவாரம் செய்யவும், குழலணி மலர்களில் வண்டுகள் எழுந்து ஒலிக்கவும் பொய்கையைக் குடைந்து ஆடுகின்றனர்; ஈசனின் பொற்பாதத்தைப் பாடுகின்றனர்.

துயர், காரியம், துயருக்குக் காரணம் இருள்மலப் பிணிப்பு; அதாவது, ஆணவத்தின் சேர்க்கை; அறியாமையின் கூட்டு. உயிரை இயல்பிற் பற்றியிருக்கும் ஆணவத்தினை அகற்றி, இன்ப அன்பினை வழங்க அளிக்கப் பெறுவது பிறவி. பிணி நிக்க வந்தது பிறவி, சார்ந்ததன் காரணத்தால், உபசார வழக்கால் பிறவியும் பிணி என்றே கூறப்பெற்றது. பிறவி, ஒரு மருந்து, மருந்து உண்டபின் இன்பந்தருமானாலும் உண்ணும் பொழுதும், பத்தியம் காக்கும்பொழுதும் துன்பத்தினைத் தருகிறதல்லவா? அதுபோல அறியாமை நீக்கத்தில் இழப்பல் லாதனவற்றை இழப்பென்று கருதி அல்லலுறும் துன்பம் உண்டல்லவா? அத்துன்ப நுகர்வுக்குப் பின்தானே இன்பம்! அவ்வளவில் பிறவியும் துன்பமெனக் கூறப்பெறுகிறது. ஒரோவழி நோயில்லாவிடினும் சில உயிர்கள் பிறத்தலுண்டு. அது மற்றவர் நோய் நீக்க எடுக்கும் பிறப்பே யாகும். நாயன்மார்களின் பிறப்பு இத்தகையதே!

இத்திருப்பாடலில் இறைவனுடைய திருநாமம் 'தீர்த்தன்' என்று பேசப்படுகிறது. உயிர்கள் உய்யும் நெறிகளில் ஒன்று தீர்த்தமாடுதல். தீர்த்தமாடுதல் உயிர்கள் மகிழ்வொடு செய்யும் ஓர் அறப்பணி. இறையருள் பெறுதற்குரிய மற்ற நெறிகளைவிடத் தீர்த்தமாடுதலில் எளிமையும், மகிழ்ச்சியும் கலந்திருக்கிறது. அதனால் இறைவனே தீர்த்தங்களாகின்றான்.

*"சென்றாடும் தீர்த்தங்கள் ஆனார் தாமே"*

என்பது அப்பரடிகள் வாக்கு. தீர்த்தங்களாடும்பொழுது உடல் தண்ணீரிலும், உயிர் திருவருளிலும் தோயாமல்

ஆடுவதில் பயனில்லை. மாசு நீங்கப் பிறவிப் பெருங்கடலில் மூழ்கலும், வினை மாசு விலக இறைவனின் அருள் நோக்கத் தீர்த்தத்தில் ஆடுதலும் உய்யும் நெறி. இத்திருப்பாடலில் 'தீர்த்தன்' என்றதால் தீர்த்தத்தையும் 'நற்றில்லைச் சிற்றம்பலம்' என்றதால் தலத்தையும், 'கூத்தன்' என்றதால் மூர்த்தியையும் எடுத்துக்காட்டி விளக்கினார். தீர்த்தம், தலம், மூர்த்தி ஆகிய முறையே ஆடி, வலம் வந்து, வாழ்த்துவாருக்கு எளிதில் திருவருள் கூட்டும். இம்மூன்றும் வெவ்வேறாக இல்லாமல் ஒருருவமாக விளங்கும் ஆடல் வல்லானின் எடுத்த பொற் பாதத்தைப் போற்றுதல் துயர் நீக்கும்; இன்பத்தைக் கூட்டுவிக்கும்; எடுத்த பொற்பாதத்தை இதயத்தில் ஏத்தி வழிபடுவோமாக!

*பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்*
*அங்கங் குருகினத்தாற் பின்னும் அரவத்தால்*
*தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்*
*எங்கள் பிராட்டியு மெங்கோனும் போன்றிசைந்த*
*பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநம்*
*சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்*
*கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்*
*பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.* 13

மார்கழித் திங்கள், பாவைநோன்பு நோற்கும் மகளிர் பூஞ்சுனையில் ஆடி விளையாடுகின்றனர். பூஞ்சுனையிலாடும் மகளிர் காணும் காட்சியனைத்தும் திருவருட் காட்சியாக விளங்குகின்றன. அவர்கள் குடைந்தாடி மகிழும் பூஞ் சுனையைச் சிவசக்தியாகப் பாவித்து ஆடுகின்றனர். பைங் குவளைக்கார் மலர். கருமை நிறமுடையதானாலும் நீல நிறத்தில் தோற்றமளிக்கிறது. நமையாளும் அருட் சக்தியின் நிறம் நீலம். 'செங்கமலப் பைம் போது' என்றதால் செம்மேனி உணர்த்தப் பெற்றது. நீலநிறத்ததாகிய அருட்சக்தி தண்ணருளையும், சிவப்பு நிறத்ததாகிய சிவம் வெவ்விய ஆற்றலையும்

குறிக்கும். ஓவிய நூல் வல்லார் அருளுக்கு நீலத்தையும் ஆற்றலுக்குச் சிவப்பையும் பயன்டுத்துதல் அறிக.

நீலமலரும், வளையல்களும் அம்மையை உணர்த்திச் செந்தாமரை மலரும், பின்னிக்கிடக்கின்ற பாம்புகளும் சிவபெருமானை உணர்த்தின. உடலழுக்குக் கழுவுவார் சாரும் மடுப்போல, மன அழுக்கு நீக்குவார் நாடும் திருவருளை ஒத்திருப்பதால் பொய்கையின் மடு சிவசக்தி மயமாயிற்று. பொங்கும் மடு, இறைவனைக் காட்டுகிறது. குவளைமலர் இறைவனின் பேரருள் உடைமையையும், செங்கமலப்போது, வரம்பிலின்பம் உடைமையையும், குருகினம் தூய உடம்பினையும், அரவம் முடிவிலா ஆற்றலையும், மலங்கழுவுவார் பாசங்களினின்று இயற்கையில் நீங்கியமையையும் விளக்கிக் காட்டுகின்றன.

உய்திக்குரிய தகுதிப்பாட்டை அடைந்த உயிர்கள் காணும் காட்சியெல்லாம் சிவக்காட்சி! துய்ப்பனவற்றையும் உய்ப்பனவற்றையும் கூட அவை, சிவபோகமாக்கிக் கொள்ளும். இத்தகைய உயிர்களுக்குக் குடங்கள் அடுக்கிக் கூர்ச்சங்கள் அணிந்து, மந்திரங்களை ஓதிச் செய்யும் கிரியா தீட்சைகள் தேவையில்லை. இத்தகைய உயிர்கள், தாம் காணும் காட்சிகளிலிருந்தே ஞானத்தினைப் பெறும், பைங்குவளைக் கார்மலரைப் பார்க்கும் பக்குவ உயிர்கள் அருட்கண்ணால் நோக்கப் பெற்றுப் பாசத்தை ஒழித்திடும் அனுபவத்தைப் பெறுகின்றன. செங்கமலப் பைம்போது, பாவனையால் பாசத்தை ஒழித்துத் திருவருளைப் பதித்தல், அதாவது, ஞானாசிரியன் மாணவனது இதய கமலத்துக்குள் புகுந்து அவனறிவை வாங்கித் தன் இதய கமலத்தில் கலந்ததாகக் கொண்டு, மாணவன் அறிவின் புன்மையை நீக்கித் தனது தண்ணருளைச் சேர்த்து, மாணவனை இதயத்தில் மீண்டும் சேர்த்து நிலைப்படுத்துதலாம். இவ்வளவும் பாவனையில் நிகழுதல் வேண்டும். பாவனையால் இங்ஙனம் நிகழுமா? என்று ஐயுற வேண்டியதில்லை.

கருடனைப் பாவிப்பதன் மூலம் பாம்பின் நஞ்சை இறக்குதலைக் காண்கின்றோம்.

'அங்கம் குருகினம்' என்பது, திருக்கரங்களால் தொட்டுப் பாசத்தை நீக்கிப் பதியருளைச் சேர்ப்பித்துக் காத்தல். ஒலி பேசப் பெறுவதால் திருவைந்தெழுத்தை உபதேசித்து நலம்புரிதல். இங்ஙனம், அம்மையப்பனாகிய பெருமானை அடைந்து, பெறுதற்குரிய அனைத்து இன்பத்தினையும் மடுவின் மேலேற்றி மொழிந்த எளிமையும் அருமையும் நினைந்து இன்புறத் தக்கது. நாமும் பெருமானின் திருவருளைப்பாடி மகிழ்ந்து அத்திருவருள் இன்பத்தினில் ஆழ்ந்து மகிழ்ந்து இன்புற்று ஆடுவோம்".

*காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்*
*கோதை குழலாட வண்டின் குழாமாடச்*
*சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி*
*வேதப் பொருள்பாடி யப்பொருளா மாபாடிச்*
*சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி*
*ஆதி திறம்பாடி யந்தமா மாபாடிப்*
*பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை தன்*
*பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய்.* 14

இத்திருப்பாடல், சிவபெருமானின் கீர்த்தியைப் பேசுகிறது. அம்மையின் புகழைப் பாடிப் பரவுகிறது. எம்பெருமானின் கீர்த்தியையும், அருளன்னையின் புகழையும் பாடி ஆடுக! என்று ஆற்றுப்படுத்துகிறது.

நோன்பு நோற்கும் மகளிர், பூஞ்சுனையில் பாய்ந்தாடும் பொழுது நிகழும் நிகழ்வுகளைப் பாடல் கூறுகிறது.

*"காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்*
*கோதை குழலாட வண்டின் குழாமாட"*

மகளிர் சீதப்புனலாடுகின்றனர்; சிற்றம்பலம்பாடி வேதப் பொருள்பாடுகின்றனர். வேத விழுப்பொருளாக விளங்கும்

இறைவனைப்பாடி ஆடுகின்றனர். இருள்நீக்கி இன்பம் வழங்கும் சோதியின் திறம்பாடி ஆடுகின்றனர். இறைவன் எப்பொருளுக்கும் முதலாக விளங்கும் நிலையைப் பாடி ஆடுகின்றனர். இறைவன் எல்லாப் பொருள்களுக்கும் ஈறாக விளங்குவதை எண்ணிப் பாடுகின்றனர்; உயிர்களின் அறிவை வேறுவேறாக வளர்த்து எடுத்தாளும் அன்னை திருவருட் சக்தியின் திறம்பாடி ஆட அழைக்கின்றனர்.

"வேதப் பொருள்பாடி" என்றதால் ஞானமாகிய அருவ நிலையையும் "சோதி" என்றதால் அருவுருவ நிலையையும் 'கொன்றைத்தார்" என்றதால் உருவ நிலையையும் ஓர்ந்து உணர்க! காலங் கடந்த பரமசிவம், அனாதியானது. கால தத்துவத்திற்கிசைந்த ஆதியாகவும் நின்று அருள்பாலிக்கும் அருமைப்பாட்டினை அடிகள் நினைந்துருகிப் பாடுகின்றார். அறிவியல் நியதிப்படி அனாதியாயிருக்கும் ஒன்றே இறுதி நிலையாதல் கூடும்.

இத்திருப் பாடலில் உணர்வைத் தொடும் பகுதி.

"பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி"

என்ற சொற்றொடராகும். பேதித்தலாவது உயிர்களின் அறிவை ஒருகாலுக்கொருகால் வேறாகச் செய்தல், அங்ஙனம் அறிவை வேறுபடுத்துதல் 'வளர்த்து' என்று கூறியதால் ஆக்கவழியின்பாற்பட்ட வேறுபாடு என்பது அறியத் தக்கது. "அறிதோறறியாமை" என்ற வள்ளுவர் வாக்கும் அறிக! குற்றங்கண்டவிடத்து அடித்தும், குணங் கண்டவிடத்து அணைத்தெடுத்துப் பாராட்டி வளர்ப்பதும் தாயின் இயல்பு. "புளியம் விளாறினால் மோதுவிப்பாய்பின்னை உகப்பாய்" என்றார் அப்பரடிகள். அன்னை சிவசக்தி உயிர்கள் பக்குவமடைதற்காக, உயிர்களைப் பிணித்து நின்ற மலத்திற்கு அனுகூலமாய் உடன்பட்டு நின்று வினைப்போகங்களில் அழுந்தி அனுபவிக்கச் செய்கிறாள்! உயிர்கள், வினைப்

போகத்தில் திளைத்து அயரும்பொழுது திருவருள் நினைப்பினைத் தந்து பக்குவத்தை வளர்த்து அருட்சக்தியாய் நின்று இன்பம் ஊட்டுவாள்! மறைப்பதும் அருட்சக்தியே! அருளுவதும் அந்த அருட் சக்தியே! என்பதை விளக்கப் 'பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை" என்றார். மறைக்கும் ஆற்றலாய் உடன்நின்று வினைப் போகத்தில் அழுத்தம் பண்ணி உயிரைப் பிணித்து நிற்கும் மலம், துய்ப்பின்வழி ஆற்றலை இழக்கிறது. வளர்த்தலாவது, உயிரை இன்பதுன்பத்தை நுகரச் செய்தல். அதேபொழுது வினைப் போகத்திலேயே ஆழ்ந்திடாவண்ணம் உரிய நேரத்தில் எடுத் தணைத்து ஏற்றம் தருதலை 'எடுத்தல்' என்றார். அருட் சக்தியை வணங்குதல் இருளை நீக்கும்; இன்பம் தரும்.

*ஓரொருகா லெம்பெருமா னென்றென்றே நம்பெருமான்*
*சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர*
*நீரொருகா லோவா நெடுந்தாரை கண்பனிப்பப்*
*பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்*
*பேரரையற் கிங்ஙனே பித்தொருவ ராமாறும்*
*ஆரொருவ ரிவ்வண்ண மாட்கொள்ளும் வித்தகர்தாள்*
*வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி*
*ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.* 15

இத்திருப்பாட்டில் இறைவனின் திருவருள் வசப்பட்ட ஒரு பெண்ணின் சொல்லையும் செயலையும் விளக்குகிறாள் பிறிதொரு பெண். அந்தப் பெண் அறிவிப்பது போல் அடிகளே அறிவிக்கிறார். சிவபெருமானிடம் தலையன்பு கொண்ட பெண்ணொருத்தியின் தன்மைகளை எல்லாப் பெண்களும் உணரும் வண்ணம் ஒருத்தி விளக்கும் முறையில் பாடல் அமைந்துள்ளது.

சிவனருள் திறத்தில் ஆழ்ந்த மூத்த நிலையில் நிற்கும் இவள், சில சமயத்தில் "எம்பெருமானே" என்று பல முறை

அரற்றுகிறாள். அவனே, "நம் பெருமான்" என்று அவன் புகழை இடைவிடாது வாயினாற் பேசுகிறாள்; சிந்தை மகிழ்ச்சியில் பொங்கப் பேசுகிறாள்; கண்களில் நீர் பொழிய நின்று பேசுகிறாள்; நிலத்தில் வீழ்ந்து வணங்குகிறாள்; இடையில் மாய்மாலம் காட்டும் தேவர்கள் யாரையும் வணங்கமாட்டாள். இறைவனுக்குப் பித்தானார் செயல் இது போலும்! இந்நெறியில் ஆட்கொள்ளும் அந்த வித்தகர் யார்? அந்த வித்தகரை-ஞான வடிவினரின் திருவடிகளை வாயாரப் பாடிப் புனலில் ஆடுவோமாக என்று அழைக்கிறாள்.

தலைவன் நாமத்தைத் தலையன்பு பூண்டோர் பித்தேறி அரற்றுதல் இயற்கை. அதிலும், மங்கையர்க்கும் மங்கையர் மனம் பெற்றோர்க்கும் இயல்பானது. இறைவன் திருநாமத்தை இடைவிடாமல் சொல்லுவதிலேயே இன்பம் தோன்றுகிறது. "நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே!" என்புழி மறத்தல் இல்லை. இறைவன் திருநாமத்தை இடைவிடாமல் சொல்லுவதால் சித்தத்தில் களிப்பு மிகுகின்றது. அவ்வழி கண்கள் இரண்டிலும் ஆனந்த அருவி வழிகிறது. இந்த மெய்ப்பாட்டு நிலையை அடைந்தவர்கள் உயிர் நாயகனாக - தலையளித்து ஆளும் தலைவனாகச் சிவத்தினையே கொள்வர்; சென்று-சிறு தேவதைகளை வணங்கார்; விண்ணோரைப் பணியார்.

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடி கெடினும்" என்பது திருவாசகம். இறைவன், "எவ்வுயிர்க்கும் உடைமையாளன்; நம்பெருமான்" என்றும் அதே பொழுது தம்முடைய தனி உரிமை பாராட்டும் உணர்வில் "எம்பெருமான்" என்றும் கூறுகிறார்.

இத்திருப்பாடலில் முத்த நிலைய்ை எய்திய உயிர், மனம், மொழி, மெய்களால் ஒருசேர ஒரு நிலையில் இறைவனை வாழ்த்தி வணங்கும் பெற்றிமையை விளக்கும் திறம், அருமையுடையது. "நம்பெருமான் சீரொருகால்

ஓவாள்!” என்றதால் வாயும், “சித்தம் களிகூர” என்றதால் மனமும், “பாரொருகால் வந்தனையாள்” என்றதால் மெய்யும் வழிபாட்டில் ஈடுபடும் நிலை விளக்கப்படுகிறது. இப் பாடலில் முத்த நிலையடைந்த பெண்ணின் கண்கள் ஆனந்த அருவிக் கண்ணீரிலே மூழ்கி ஆடுகின்றன. அவள் தம் திருவுடல் பொய்கை நீரிலே மகிழ்ந்து ஆடுகிறது. இவ்விரு நிலையும் ஒருசேரப் பெற்றார், மண்ணிற் பிறந்த பயன் எய்துதல் எளிது. ஆதலால், இறைவன் திருப்புகழை நாமும் வாயாரப் பாடிச் சிந்தையால் நினைந்து, உடலால் வணங்கி உய்தி பெறுவோமாக!

*முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்*
*என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையா ளிட்டிடையின்*
*மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்*
*பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்*
*என்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்*
*தன்னிற் பிரிவிலா எங்கோமா னன்பர்க்கு*
*முன்னி யவன் நமக்கு முன்சுரக்கு மின்னருளே*
*என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்.*

16

இத்திருப்பாட்டில் அம்மையின் அருளைப்போல மழை பொழிக! என்று வேண்டப்படுகிறது. பாவை நோன் பிற்கு உறுப்பு, மழை; பாவை நோன்பின் பயன் மாமழை; திருவருள் மாமழை; மேகமே! நீ, இக்கடல் நீரைக் குடித்து எம் அன்னையைப் போல நீல நிறம் பெற்று விளங்குக! நமையாளும் தேவியின் இடையைப் போல மின்னுக! தாயின் சிலம்பைப்போல ஒலித்திடுக! அன்னையின் அழகிய திருப்புருவம் போல வானவில் காட்டுக! இங்ஙனம் நீ விளங்கி எமை ஆளுடைய தலைவனை என்றும் பிரியாத பேரருட்சக்தியின் அருளைப்போல மழையைப் பொழிந் திடுக! என்று வேண்டப்படுகிறது.

இன்னும் முறையாகக் கன்னிப் பெண்கள் பாவைப் பாடல் பாடி, நீராடி நோன்பு நோற்றால் வான்மழை தவறாது பெய்யும். இது சத்தியம்! நமது குன்றக்குடியில் கடந்த பத்தாண்டுகளாக இசைஞானியார் மாதர் சங்கத்தினர், மார்கழித் திங்களில் நாட்காலை நீராடிப் பாவை நோன்பு நோற்று வருகின்றனர். குன்றக்குடியில் மழை பொய்த்த தில்லை. தமிழக மகளிர் பாவைப் பாடல்களைப் பாடிப் பாவை நோன்பு நோற்றால் மழை பொழிவது உறுதி.

பாவை நோன்பின் பொதுப்பயன் வான்மழை சுரத்தலும், நாடு வளம் பெறுதலுமாகும்; சிறப்புப் பயன் திருவருட்பேறு. மண்ணில் வளம் இன்றேல் உயிர்களின் வினை நீக்கத்திற்குரிய துய்ப்பனவும் உய்ப்பனவும் கிடைக்காதன்றோ! துய்ப்பு இல்வழி வினைப்போகம் நீங்காது. ஆதலால், மன்னுயிர் உய்தியும், மண்ணின் வளமும் இணைப்புடையன. துய்ப்பனவும் உய்ப்பனவும் இல்லாத வழி துறத்தலும்கூட இல்லை. இஃதொரு சிறந்த வாழ்வியல் உண்மை. நம்முடைய சமயம் இந்த அடிப்படையில் அமைந் திருக்கிறது. அதனாலன்றோ, நம்பியாரூரர், “இம்மையே தரும் சோறும் கூறையும்” என்றார். கச்சியப்ப சிவாசாரியாரும்.

“வான்மழை வழாது பெய்க! மலிவளம் சுரக்க! மன்னன் கோன்முறை அரசு செய்க! குறைவிலாது உயிர்கள் வாழ்க” என்று அருளிச்செய்தமையை அறிக.

கதிரவனின் ஒளிக்கற்றை வீசும்பொழுது மழையும் பொழியுமானால் கதிரவனுக்கு எதிர்த்திசையில் வானவில் தோன்றும். இங்குச் சிவசூரியன் முன்னிலையில் அம்மையின் அருள்மேகம் கருணைமழை பொழிவதால் சிவசூரியனை நோக்கும் திருப்புருவம் என்னச் சிலைகுலவி என்றார். இறைவன், எம்பிராட்டியை எப்போதும் பிரியாதவன். பொருள், பொருளின் ஆற்றல்-இறை பிரித்தற்கியலாதன. பொருளுக்கு ஆற்றலின்றேல்! இயக்கமில்லை; இனிய

பயன்களும் இல்லை. ஆற்றல் பற்றிநின்று தொழிற்படும் பொருள் தேவை. நெருப்பு பற்றி எரிய விறகு தேவை. மின்னாற்றல் சிறந்து தொழிற்பட இயந்திரங்கள் தேவை. இங்குச் சக்தி, ஆற்றல்! சிவம், பொருள்! அதனால் பிரிவில்லை! அம்மையொடு பிரிவில்லா அப்பனை என்றும் தொழுவார்க்கு இன்பம்.

வான்மழை பொழியும்! வளம் சுரக்கும்! பாவைப் பாடல்களைப் பாடுவோம்! இயற்கைப் பூஞ்சுனையில் பாய்ந்து ஆடுவோம்! எம்பிராட்டியின் புகழைப் பாடுவோம்! மாமழை காண்போம்! மண்ணில் வளம் கண்டிடுவோம்! இனிதே வாழ்வோம்! இன்ப அன்பு நெறியில் சென்றிடு வோம்.

*செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்*
*எங்கு மிலாததோ ரின்பநம் பாலதாக்*
*கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி*
*இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்*
*செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை*
*அங்க ணரசை யடியோங்கட் காரமுதை*
*நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்*
*பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்* 17

கன்னிப்பெண்கள் பலர் பூஞ்சுனையில் குடைந்தாடு கின்றர்; இறைவன் புகழ் பாடி ஆடுகின்றனர். அவர்களில் ஒருத்தி குளிருக்கு அஞ்சி கரையிலிருக்கிறாள். அவளை நோக்கிப் பாடியது இந்தப் பாடல். “கொங்குண் கருங்குழலி” என்று அவள் அழைக்கப்படுகிறாள். ஒதுங்கியிருந்தவளும் நற்பெண்! சிந்தையில் வளர்ந்த சிவமணம் பூத்த பெண்ணே யாம்; அவள், “கொங்குண் கருங்குழலி” அதாவது, மணம் பொருந்திய கூந்தலையுடையவள். நற்பெண்டிர் கூந்தலுக்கே மணம் உண்டு.

கொங்குண் கருங்குழலி! இறைவனின் தண்ணருள் நம்முடைய குற்றங்களை நீக்கி நிறை நலம் நல்க - விண்ணவர்கள்பால் இல்லாத ஒரு தனி இன்பத்தை வழங்க நமது இல்லங்களாகிய உடல்கள் தோறும் எழுந்தருளித் திருவடிகளைத் தந்து அருளுகின்ற அருட்டிருச் செல்வன்; வென்றித் திருவுடையான்; அமுதமனையான் நம்தலைவன். நன்மைகள் உண்டாக அவனைப் பாட வருக! பூஞ்சுனையில் நீராடிப் பாடி ஆடிட வருக! என்று அழைக்கின்றனர். இறைவன், உயிர்களின் குற்றங்களைக் கருதிப் புறக்கணிப்ப தில்லை; கருணையோடு ஆட்கொள்வான்; உயிர்கள் துன்புறா வண்ணம் குற்றங்களை நீக்கியருள்வான்; குணங் களைக் கொடுத்தாட்கொள்கின்றான்; உயிர்களை ஆட்கொள் வதற்காக உயிர்கள் உறையும் உடல்கள் தோறும் எழுந்தருள் கின்றான்; செங்கமலப் பொற்பாதங்களைத் தந்தருள் கின்றான்.

இறைவன் சேவகன், அவன்தன் வீரம் உயிர்களைக் காக்கிறது. இறைவனுடைய வீரம் அநீதிகளிலிருந்து உயிர் குலத்தைக் காத்தாள்கிறது. மிகவுயர்ந்த தலைவனாகிய இறைவன், மிகத் தாழ்ந்த உயிர்களை நோக்கி இறங்கி வந்து, உயிர்களின் செவ்வி பார்த்து உயிர்கள் உவப்பன செய்து ஆட்கொண்டருளும் திறன் நோக்கிச் 'சேவகள்' என்று அருளிச் செய்தார்.

விண்ணோர்கள் நோற்றுப் பெற்ற இன்பம் அதிகார இன்பமே! அதிகாரத்தின் வழி செருக்கு உண்டு. யாதொரு அதிகாரமும் இல்லாதபொழுது எல்லாரும் நல்லவர்களே! ஆயினும் அதிகாரம் கிடைத்தபோது குணங்கள் கெடுதல் இயற்கை. அதிகாரம் தொழிற்படும்பொழுது தன்முனைப்புத் தோன்றும்; புகழ்வேட்டையில் நாட்டம் கூடும். ஆதலால், விண்ணோர்கள் செருக்கில் தலைப்பட்டு அழிவதேயன்றி அழிவிலின்பத்தை அவர்கள் ஒருபொழுதும் பெறமாட் டார்கள். விண்ணோர்கள் சிவலோகம் சென்று சிவபெரு

மானின் செவ்வி பார்த்து—கருணை நோக்கிக்காத்துக் கிடக்கின்றனர். ஆனால், சிவபெருமானோ நம்மை ஆட்கொள்வதற்காக விண்ணிலிருந்து மண்ணகம் போந்து நம் இல்லங்கள்தோறும் எழுந்தருளிப் பொற்பாதங்களைத் தந்தருளுகின்றான் என்றதால், இறைவன் திருவருள், வானோர்க்கு அருமையாகவும், மண்ணில் உள்ள நல்லவர்களுக்கு எளிமையாகவும் கிடைத்திடுவது எண்ணி இன்புறத்தக்கது.

*அண்ணா மலையா னடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்*
*விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றார்போற்*
*கண்ணா ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்*
*தண்ணா ரொளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்*
*பெண்ணாகி யாணா யலியாய்ப் பிறங்கொளிசேர்*
*விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்*
*கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்*
*பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந்தாடேலோ ரெம்பாவாய்.*

18

இன்று பாடிய திருப்பாட்டில் இறைவன் எல்லாமாய், அல்லதுமாய், அமுதமுமாய் நின்றருளும் இயல்பு பாராட்டப் பெறுகிறது; போற்றப்பெறுகிறது. பெண்ணே! அண்ணாமலை அண்ணலின் திருவடித் தாமரைகளின் திருமுன்பில் அமரர்களின் மணிமுடிகள் ஒளியிழந்து போயின! கதிரவனின் ஒளிக்கதிர் முன்பு இருள் இரித்தோடியது. விண்மீன்கள் ஒளி குன்றிப்போயின! பொழுது புலர்ந்து விட்டது! நமையாளும் பெருமாள் ஆணாகிப், பெண்ணாகி, அலியாகி, வானுலகமாகி, மண்ணுலகமாகி, இவ்வளவிற்கும் வேறாகி, அன்பர்க்கு அமுதமுமாகி நின்றருளும் திருவடிகளைப் பாடிப் புதுப்புனலில் மூழ்கியாடிட வந்திடுக! என்று பேசப் பெறுகிறது!

இத்திருப்பாடல் முத்திநிலை யெய்திய பெண் பாடிய பாடல். இத்திருப்பாடல், உயிர் இறையருளிற் கலந்து நின்றிடும் இயல்பினை விளக்குகிறது; ஆண்டவன் திருவடிகளே தீர்த்தம் என்று கூறுகிறது. 'அண்ணமலையான்' என்பது அண்ணாமலையையே குறிக்கும். திருவண்ணாமலையிலுள்ள திருமலை, ஞானத் திருமலை! அதுவே சிவம்! அம்மலையைத் தொழுதலே பேறு. அதாவது, இறைவன் அமரர்கள் அண்ணாந்து பார்க்கும் அளவுக்குச் செந்தீ மலையாக உயர்ந்து, அண்ணாமலையான பின்பே தலம், திருவண்ணாமலையென்று பெயர் பெற்றது. தலத்தை வைத்து மூர்த்திக்கு வந்த பெயரன்று; மூர்த்தியை வைத்துத் தலத்திற்கு வந்த பெயர்.

இறைவன் உயிர்களுடன் உடனாகி, வேறாகி, ஒன்றாகி ஆட்கொண்டருளும் படிநிலைகளைப் பாடல் விளக்குகிறது. "பெண்ணாகி, ஆணாய், அலியாய்ப் பிறங்கொளிசேர் விண்ணாகி, மண்ணாகி" என்று குறிப்பிட்டதால், இத்திருவுருவங்களில் உயிர்களோடு உடன் சேர்ந்து நின்று, ஊட்டி, மலம் நீக்கும் கருணைத் திறம் ஓர்க! இக்குறிப்பிலேயே.

"........................
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய்என் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்துநீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே"

என்றார் அப்பரடிகள்.

"இத்தனையும் வேறாகி" என்றதால், வேறாய் நின்றும் "கண்ணாரமுதமாய்" என்றதால் ஒன்றாகியும் உயிர்களை ஆட்கொள்ளும் திறன் அறிக. உயிர்களோடு திருவருள் உடனாதல் மூலம் வேறுபாடின்றி நம்பிக்கைக்குரியனவாகி

அதேபொழுது வேறாதல் மூலம் தேவைப்படும்பொழுது கடிதலுக்கும், தடிதலுக்கும் உரியதாகி. ஒன்றாதல் மூலம் உயிர்நலத்தையே நாடுதலால் இன்பம் விளைவித்தலும் ஏற்புடையதாகிறது.

பெண், ஆண், அலி என்பன அறிவுடைப் பொருள்கள், மற்றயாவும் அறிவிலாப் பொருள்கள். அறிவுடைப் பொருள் இயங்கும்; அறிவிலாப் பொருள்கள் இயங்கா. திருவருள் இவ்விருவகைப் பொருள்களுக்குள்ளும் கலந்து நின்று உயிர்களின் உய்திக்குத் துணை செய்கிறது. இத்திருப்பாடலில் இறைவன் திருவடியைப் புகழ்தலால் திருவருட்சக்தியை வியந்ததாம். உயிர்களைத் தாங்கி அருள் பாலித்திடும் பாங்கு திருவடிப் போதுகளிலேயேயாம். ஆதலால், திருவடிகள் என்றாலும், திருவருள் என்றாலும் ஒரு பொருளே; திருவடிகளைப் போற்றுவோம்! திருவருளை வாழ்த்துவோம்! திரு வெல்லாம் பெற்றிடுவோம்!

*உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலமென்*
*றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்*
*எங்கள் பெருமா னுனக்கொன் றுரைப்போங்கேள்*
*எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க*
*எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க*
*கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க*
*இங்கிப் பரிசே யெமக்கெங்கோ னல்குதியேல்*
*எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்.* 19

இன்றைய பாவைப் பாட்டு, திருவருள் தோய்வில் ஒன்றாகி நிற்கும் பெண்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் இறைவனுக்கே ஆக்குக! என்று பாடியது.

எங்கள் தலைவனே! "உங்கையிலுள்ள பிள்ளை உனக்கே அடைக்கலம்" என்னும் பழமொழியை நின்னிடத்தில் மீண்டும் விண்ணப்பிக்க அஞ்சுகின்றோம். ஐய, ஒரு விண்ணப்பம்! கேட்டருள்க! எங்கள் தோள்கள் நின்

அன்பரையே தழுவுக! எங்கள் கைகள் உனக்கே பணி செய்க! எங்கள் கண்கள் இரவும் பகலும் நின்னையே காண்க! இவ்விண்ணப்பத்தை ஏற்றருளிச் செய்யின் நாங்கள் பெரும் பேறு பெற்றவர்கள்! யாதொரு கவலையும் அற்றவர்கள். இறுமாந்து வாழ்வோம். ஞாயிறு எந்தத் திசையில் தோன்றினால் என்ன?

"உன் கையிற் பிள்ளை; உனக்கே அடைக்கலம்"- இது பழமொழி. திருமணக் காலத்தில் மணப் பெண்ணை மணமகன் கையில் ஒப்படைத்துச் சொல்லும் பழமொழி என்பர். தாயிடம் பிள்ளையைக் காப்பாற்று-என்று கூறியது என்பர். தாய்க்குப் பிள்ளையை வளர்த்தல் கடமை. தாய்க்கு நலமும் மகிழ்வும் தரும்பணி. ஆதலால் தாய்க்கு அறிவுறுத்த வேண்டியதில்லை. உயிர்க்குத் தந்தை இறைவன்; உயிர்க்குத் தாய் பராசக்தி. தந்தையாகிய இறைவன் தாய் பராசக்தியிடம் உணர்த்தியது என்றும் கொள்ளலாம். "நானுனக்குப் பிள்ளை; இன்றல்ல, நேற்றல்ல, வழிவழி அடியேன்; என்னைக் காப்பாற்றி அருள்க!" என்று எல்லாம் அறிந்த நின்னிடத்தில் விண்ணப்பிக்க அஞ்சுகின்றோம். உரிமைப் பொருளைவிட அடைக்கலப் பொருளைப் பாதுகாத்தல் கடமை. நாங்களோ உனக்கு அடைக்கலப் பொருள்! உரிமைப் பொருளுங் கூட! ஆதலால், நாங்கள் வேண்டுவதை எமக்கருளிக் காப்பாற்றுக! நாங்கள் கேட்பதும் மிகையன்று! ஆண்டானுக்கும் அடிமைக்கும் ஒருசேர நன்மை பயப்பவை; சிறப்புடையன; ஆண்டானுக்கு நலம் செய்வன; கருத்துச் சிறப்புடையன; ஆண்டானுக்கல்லாது அடிமைக்கே நலம் செய்வன — நலமுடையன அல்ல. அங்ஙனம் வேண்டுபவர்கள் ஆண்டான் — அடிமை நெறிமுறையில் நிற்பவர்கள் அல்லர்; மாணிக்க வாசகர் நல்லடிமை;

"மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்

*அண்ணா எண்ணக் கடவேனோ*
*அடிமை சால அழகுடைத்தே!"*

என்று பாடுகின்றார்.

கன்னிப் பெண்கள் ஆண்டான் நலனுக்கு முரணில்லாத – ஆண்டான் நலனுக்கு நலம் சேர்க்கும் வகையிலேயே வேண்டுகின்றனர். "சிவனடியார்களையே மணக்கவேண்டும்; சிவபெருமான் பணிகளையே செய்ய வேண்டும்; வேறு எப்பணியும் செய்யலாகாது" என்று வேண்டுகின்றனர். கன்னிப்பெண்களின் அடிமைத் திறத்தில் நிற்கின்றனர். எங்கள் கண்கள் நின்காட்சி தவிர, வேறு காட்சியைக் காணற்க! வேறொன்றையும் காணாத துணிவு புலப்படுகிறது. இவ்வகையால் காண்பனவும் துய்ப்பனவும், பணி செய்வனவும் பெருமானுக்கே என்ற தெளிவு பெற்றுள்ளனர். "மணமகன்'—என்றதால் இம்மைப் பயனும், 'பணி' என்றதால் மறுமைப் பயனும் 'கண்ணுதற் காட்சியே காண்க' என்றதால் வீடுபேறும் பெறுதற் குரியன.

திருவருள் நாட்டம் உடையார் காதல் திருவருள் வழியது; சுந்தரர்–பரவையார் காதல்; சுந்தரர்–சங்கிலியார் காதல் ஆகியவற்றால் அறிக! அடியாரோடு இணங்கி வாழவும், இறைவனுக்குப் பணி செய்யவும், கண்கள் அவன் காட்சியைக் காணவும் அருளப் பெற்றதால் ஞாயிறு எங்குத் தோன்றினால் என்ன? நமது நாட்டு மகளிர் குலமும் இந் நன்னெறியில் நின்றொழுகி இறுமாந்து வாழ்ந்திட நமது பிரார்த்தனை!

*போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்*
*போற்றி யருளுகநின் னந்தமாஞ் செந்தளிர்கள்*
*போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்*
*போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்*

போற்றியெல் லாவுயிர்க்கு மீறா மிணையடிகள்
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியா முய்யவாட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியா மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். 20

மார்கழித் திங்கள்—பாவை நோன்பு நிறைவுறும் நன்னாள்! இருள் மயக்கில் கிடந்த உயிர்கள், அறிவு புலரப் பெற்றுப் பொலிவெய்தின; துய்ப்பனவும் உய்ப்பனவும் பெற்றுத் துய்த்தன; இனிதே வளர்ந்தன; அன்னையின் கருணையினால் திருவருள் நினைப்பினைப் பெற்றன; எம்பெருமானை உள்ளத்திலே எழுந்தருளச் செய்து கொண்டன; அந்த உயிர்கள் முத்திநிலை எய்தி, மோனநிலை எய்திப் பாடிடும் அருமையான பாடல் இது. இறைவனை அண்மித்து நிற்பவர்கள் திருவடிகளையே காண்பர்; பாடுவர், இறைக்காட்சியில் வண்ணக்காட்சி, நெடுந்தொலைவுக் காட்சி! வடிவக்காட்சி, செம்மைக்காட்சி! திருவடிக்காட்சி, அண்மைக்காட்சி!

> "வண்ணந்தான் அதுகாட்டி வடிவு காட்டி
> மலர்க்கழல்கள் அவைகாட்டி."

என்பார் நமது பெருமான். திருநாவுக்கரசர் பாடிய திருவடித் தாண்டகங்கள் ஊனுயிர் உருக்குந் தன்மையன. முத்த நிலையில் நின்று திருக்குறள் தந்த திருவள்ளுவனாரும் திருவடிகளைப் பற்றியே பேசினார்.

இத் திருப்பாட்டில் முத்திநிலை எய்திய மகளிர், இறைவன் திருவடிகளையே எல்லாமாக வியந்து பாடுகின் றனர். கன்னி மகளிர், மார்கழி நீராடி ஒன்று சேர்ந்து இறைவன் திருவடிகளைப் போற்றித் துதிக்கின்றனர். "காப் பாற்றும் பெருமானே! எப்பொருட்கும் முதலாயுள்ள திருவடி களைக் கொடுத்தருள்க! எல்லாவற்றிருக்கும் ஈறாக உள்ள தளிரனைய திருவடிகளைக் கொடுத்தருள்க! உயிர்க் குலத்தின் தோற்றத்திற்குக் காரணமாகவுள்ள திருவடிகளுக்கு

வணக்கம். எல்லாவுயிர்களுக்கும் காவலாக விளங்கும் கழல்களுக்கு வணக்கம். எல்லாவுயிர்களுக்கும் முடிவெய்து தற்குக் காரணமாய திருவடிகளுக்கு வணக்கம். அரியும் அயனும் காணாத கமலத் திருவடிகளுக்கு வணக்கம். எங்களை அடிமையாகக் கொண்டு ஆண்டருளி உய்தி கூட்டித் தரும் பொன்மலர்த் திருவடிகளுக்கு வணக்கம். இங்ஙனம் அழகமர் திருவடிகளைப் பலகாலும் வணங்கிப் பூம்புனல் பாய்ந்தாடுவோம்” என்று துதிக்கின்றனர்.

இத்திருப்பாடலில் இறைவன் திருவடிகள் ஐந்தொழில் நிகழ்த்தும் இயல்பு வாழ்த்தப் பெறுகிறது. மார்கழி ஆதிரை நாள், சிவபுண்ணியத்திற்குரிய நன்னாள்! அன்று பெரு மானை அருச்சித்தல் சிறப்பு, ‘தோற்றமாம்’ என்றது படைப் பையும் ‘போகமாம்’ என்றது காப்பையும் ‘ஈறாம்’ என்றது அழிப்பையும், ‘காணாத புண்டரிகம்’ என்றது மறைப்பையும், ‘ஆட்கொண்டருளும் பொன் மலர்கள்’ என்றது அருளையும் கூறிற்று.

இத்திருப்பாடலில் எட்டுப் போற்றிகள் வந்துள்ளன. ‘போற்றி’ என்ற சொல், தமிழில் அருச்சனைக்குரிய மந்திரச் சொல். எண்வகைப் போற்றிகள் அமைந்துள்ள இப்பாடலை நாள்தோறும் ஓதி மலர் தூவி வழிபட்டால் இறைவனின் எண்குணங்களும் நம்மிடம் வந்து தங்கும். இங்ஙனம் மார்கழி நீராட்டு, திருவருளோடு ஒன்றாகிய இன்பக் கலப்பாய் — அன்பு நீரோட்டமாய் அமைந்தது. நிகழ்வனவெல்லாம் திருவடிகளாகிய திருவருட்சக்தியே என்று காண வைத்ததால் திருவருட்சக்தியை வியந்ததாயிற்று.

இந்நாட்டுப் பாவையர் பாவைநோன்பு மரபுவழி நோற்றிடுக! பாவைப் பாடல்களைப் பாடிப் பூஞ்சுனையில் ஆடிடுக! வான்மழை பொழிக! மலிவளம் சுரக்க! உயிர்கள் தழைத்தினிது வாழ்க! இறைவன் மனக்கோயிலில் எழுந் தருள்க! இன்பமே சூழ்க! எல்லோரும் வாழ்க!

# திருப்பள்ளியெழுச்சி

## திரோதான சுத்தி

திருச்சிற்றம்பலம்

*போற்றியென் வாழ்முத லாகிய பொருளே*
*புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்*
*டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்*
*எழினகை கொண்டுநின் திருவடி தொழுகோம்*
*சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்*
*திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே*
*ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்*
*எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.* 1

திருவாசகத்துள் திருப்பள்ளியெழுச்சி, நலம் நாடுவோர் நாளும் ஓதுதற்குரியது. நூற்குறிப்பு, திருப்பள்ளியெழுச்சியைத் 'திரோதன சுத்தி' என்று கூறும். நத்தையை நினைத்தால் முத்தை மகிழ முடியாது. புனுகு பூனையை நினைத்தால் புனுகின் மணத்தை அனுபவிக்க முடியாது. நத்தையை, புனுகு பூனையை மறந்தால்தான் துய்ப்பு; அவ்வழி மகிழ்ச்சி! அதுபோல் வினைப்பயனைத் துய்க்குங்கால் வினை நிகழ்ந்த வழியை நினைத்தால் துய்ப்பு தடைப்படும். துய்ப்புக்குத் துணை நிற்பது திரோதானம்.

உயிருக்கு மறைப்பினைச் செய்து வினைப்பயனைத் துய்க்குமாறு பக்குவம் செய்த திரோதான சக்தி, அருட் சக்தியாக வெளிப்பட்டு அருளும் காலம் திருப்பள்ளி யெழுச்சி. இப்பக்குவ நிலையை, உயிர்கள் பெற்று, இறைவனை எழுந்தருளவும், வேண்டிச் செய்யும் பணியையும் கேட்டு நிற்பது திருப்பள்ளியெழுச்சி! உயிர், அருட்சக்தி தலைப்படலால் தனது உள்ளத்தில் இறைவனை

எழுந்தருளும்படி வேண்டி, அங்ஙனமே எழுந்தருளப் பெற்றுத் திருவருள் வழிப்பணி நிற்கும் வேட்கையைத் தெரிவிப்பது திருப்பள்ளி யெழுச்சி. பாழறையாகிய மன அறையில் இறைவனை எழுந்தருளச் செய்யும் பாடல்களே திருப்பள்ளி யெழுச்சி. திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன், மனக்கோயிலில் குடிபுகும் நாளே உயிர்கள் வாழத் தொடங்கும் நாள்; இன்பநாள்.

"எம் பெருமானே! பொழுது புலர்ந்தது! நின் திருவடிகளில் மலரைத் தூவித் தொழக் காத்திருக்கின்றோம். பள்ளி யெழுந்தருள்க!"

"அடியேனது வாழ்விற்கு மூலமாகிய பொருளே! தாமரைகள் மலரும் நன்செய் சூழ்ந்த திருப்பெருந் துறையுறை சிவபெருமானே!, ஆனேற்றுக் கொடியை உயர்த்தியவனே! என்னை அடிமையாகப் பெற்றவனே! தலைவா! பொழுது புலர்ந்தது! நினது மலரடிகளில் மலர்களைச் சாத்தி எமக் கருளும் திருமுகத்தின் புன்முறுவலை நினைத்து திருவடிகளைத் தொழுவோம்! எழுந்தருள்க!" என்று அழைக்கின்றார்.

உயிர் வாழ்க்கைக்கு உய்தியாகிய ஊதியம் தேட கடவுள் 'முதல்' என்பதை உணர்த்த 'வாழ்முதல்' என்றார். கடவுள் வாழ்த்துப் பொருள் மட்டுமன்று; வாழ்வுப் பொருளு மாம்! புல்லும் பூண்டும், கல்லும் கட்டியும் இல்லாது உழுத சேற்றில், செந்தாமரை தோன்றி மலரும். முரண்பாடுகளும் மாறுபாடுகளும் இல்லாது அன்பில் உழுத பழுத்த மனத் தடியார்–சிவானுபூதிச் செல்வர் சிந்தையில் பரமசிவம் தோன்றும்.

"போற்றி! என் வாழ் முதலாகிய பொருளே!" 'திருப்பெருந் துறையுறை சிவபெருமானே!" 'ஏற்றுயர் கொடி யுடையாய்!" 'எனையுடையாய்!' 'எம்பெருமான்' என்ற ஐந்து விளிகள், இறைவனின் ஐந்து முகங்களை நினைந்து

அழைத்ததை உணர்த்தும். ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் என்பன திருமுகங்கள். இவ்வைந்தும் முறையே ஈசானம் வடகிழக்கும், தத்புருடம் கிழக்கும், அகோரம் தெற்கும், வாமதேவம் வடக்கும், சத்தியோஜாதம் மேற்கும் ஆகிய திசைகளை நோக்கி இருந்தருள் செய்வன. இத் திருமுகங்களில் இறைவனை அருச்சித்து வழிபடுவோர் இன்புறுவர்.

ஞானம் விரும்புவோர் ஈசானத்திலும், செல்வம் விரும்புவோர் தத்புருடத்திலும், பாச நீக்கம் விரும்புவோர் அகோரத்திலும். சம்பத்து விரும்புவோர் வாம தேவத்தினும், முத்தி வேண்டுவோர் சத்தியோஜாதத்திலும் வழிபடுவர். பேறுகள் அனைத்தையும் ஒருசேரத் தருவது ஞானம். ஆதலால், ஈசானத்தில் வழிபட்டால் அனைத்தும் பெறலாம்; ஞானம் பெறலாம்; பொன்னும் போகமும் பெறலாம். ஆதலால், இறைவனை வாழ்முதலாகக் கருதி, உள்ளத்தில் எழுந்தருளச் செய்க! ஏத்தி வழிபடுக! இன்புற்று வாழ்க!

*அருணணிந் திரன்றிசை யணுகின னிருள்போய்*
*அகன்றது வுதயநின் மலர்த்திரு முகத்தின்*
*கருணையின் சூரிய னெழவெழ நயனக்*
*கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணாந்*
*திரணிரை மறுபதம் முரல்வன இவையோர்*
*திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே*
*அருணிதி தரவரு மானந்த மலையே*
*அலைகட லேபள்ளி யெழுந்தரு ளாயே.* 2

இன்றைய திருப்பள்ளியெழுச்சித் திருப்பாடல், இறைவன், உயிர்களின் சாதல்-பிறத்தல் துன்பத்தை நீக்கியருளும் பாங்கினை வாழ்த்துகிறது.

"திருப்பெருத்துறையில் எழுந்தருளியுள்ள சிவ பெருமானே! திருவருட் செல்வத்தை அருள எழுந்தருளும் பேரின்ப மலையே! அலைகடலே! செங்கதிரோன் இந்திரன்

*திசையை—கீழ்த்திசையை அணுகினன்; இருள் அகன்றது; உதய ஒளி எங்கும் பரவிற்று. நின் திருமுகத்தின் அருளைப் போலக் கதிரவன் ஒளி மேலுயர்ந்து வரவரத் தாமரைகள் மலர்கின்றன; வண்டுகள் ஒலிக்கின்றன. பள்ளியெழுந்தருள்க! திருவருளினைத் தந்திடுக!"*

இறைவன், பிறவிப்பிணியின் மருந்து என்பதை உணர்ந்த "பேரின்ப மலையே", என்றும் இறப்பிற்கு மருந்து திருவருளே என்பதை உணர்த்த 'அலை கடலே' என்றும் வாழ்த்தினார்.

அருணோதய நேரத்தில் செய்யும் வழிபாட்டினால் அக இருள் நிங்கும்; ஞானம் கைகூடும். காண்பானும் காணப்படும் பொருளும் வேறுவேறாக இருந்து கலப்பால் ஒன்றானபோதே இன்பம் விளையும். சுவைப்பானே சுவையாயின் நுகர்ச்சி ஏது? கற்கண்டைச் சுவைக்கும் மனிதன், கற்கண்டாகவே ஆகிவிட்டால் சுவை ஏது? எந் நிலையிலும் இறையும் உயிரும் வேறுவேறு பொருள்களே!

இத் திருப்பாடலில் 'அருணன் கீழ்த்திசை அடைந் தான்' என்றதால், அருட்சக்தியின் வெளிப்பாட்டையும், 'இருள் போயிற்று' என்றதால் துன்பமல நீக்கமும் 'உதயம் அகன்றது' என்றதால் சிவஞானம் பரவிற்று என்பதும். 'திருமுகத்தின் கருணையின் சூரியன் எழஎழ நயனக் கடிமலர் மலர' என்றதால் சிவ தரிசனமும் திருவருட்பேறும் கிடைத்தன என்பதும். 'கண்ணாம் அறுபதம் முரல்வன' என்றதால் அதில் நுகரும் வண்டுகளாக அடியார் கண்கள் அமைந்துள்ளன என்பது உணர்த்தியமை அறிக!

இத் திருப்பாடலில் உலகியலும் அருளியலும் ஒப்புமையாகப் பேசப்படுகிறது. கதிரவன் கீழ்த்திசையில் எழுவதால் புறத்திருள் நீங்குகிறது. கண்ணுதற்பெருமான் கருணை அகத்தில் எழுவதால் அகஇருள் நீங்குகிறது, புறத்தே கதிரவன் எழுவதால் ஒளி பரவுகிறது. கண்ணின் ஒளிக்குக்

கதிரவன் துணை செய்கிறான். கண்ணுக்குக் காணும் பொருளைக் காண உதவி செய்கிறான். பழுதைப் பாம்பைப் பிரித்துக் காட்டுகிறான். மேடு-பள்ளத்தைக் காட்டுகிறான். கண்ணுதற்பெருமான் கருணை ஒளி அகத்தே எழுதல் மூலம் ஞான ஒளி பரவுகிறது. ஆன்மாவின் அறிவுக் கண்ணுக்கு அந்த ஞான ஒளி, காட்டும் கண்ணாக விளங்குகிறது. நன்மை—தீமை, புண்ணியம்—பாவம் ஆகியவற்றைக் காட்டு கிறது. அதனால், ஆன்மாவின் அகக்கருவிகளும் புறக்கருவி களும் ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களும் செல் லுழிச்சென்று சிந்தனையில் வளர்ந்து, அழிவிலின்பத்தை அடைய முடிகிறது. கதிரவன் எழுச்சியால் கமலங்கள் மலர்கின்றன. கண்ணுதற்பெருமான் எழுச்சியால் உயிர்களின் இதயங்கள் மலர்கின்றன.

அறியாமை நீங்கி, அறிவு தலைப்பட்டு ஞானத்திற் பயின்று, செய்வன செய்து, இன்ப அன்பில் தலைப்படுதலே பிறப்பின் குறிக்கோள்! இப்பேற்றினை அளிக்க வரும் கடவுள் வந்து வழங்குகின்றான் ஆனந்த மலையைக் காணத் தயக்கம் ஏன்? அலைகடல் ஒலி கேட்கத் தயக்கம் ஏன்? அவன் பள்ளியெழுந்தருளிவிட்டான் அயர்ச்சியில் கிடக்கும் நாம் எழுந்து ஏத்துவோமாக!

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுக ளியம்பின வியம்பின சங்கம்
ஓவின தாரகை யொளியொளி யுதயத்
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
யாவரு மறிவரி யாயெமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தருளாயே. 3

மாணிக்கவாசகர் திருவடிக் காட்சிக்கு வேண்டி நிற்கின்றார்.

"தேவ தேவனே! திருப்பெருந்துறையுறை சிவ பெருமானே! யாவராலும் அறிதற்கு அரியவனே! எமக்கு எளிமையானவனே! எம்பெருமானே! குயில்கள் கூவின; கோழிகள் கூவின; நாரைகள் ஒலித்தன; சங்குகள் ஒலித்தன; விண்மீன்கள் ஒளிகுன்றன, உதய காலத்து ஒளி எழுந்தது! தேவரீர்! திருப்பள்ளியெழுந்தருள்க! எமக்குத் திருவடி யிரண் டினையும் காட்டத் திருவுள்ளம் கொள்க!

அக இருள் நீக்கி ஞானம் தலைப்படுதல் திருவடிக் காட்சிக்கு உரிய காலம். பின்னே கூவும் குயில் முன்னே கூறப்பட்டது ஏன்? குயில் மிகவும் கருமையானது. ஆயினும் இனிய குரலுடையது. அதுபோல ஆண்வமலம் கருமை யானது,. அதாவது துன்பமானது. ஆனால் ஆணவமல அனுப வத்தின் விளைவு, பயன், முடிவு—இன்பம்; அதோடு குயில் கூவின காலம் இருள் விலகும் நிலை எய்தியது என்பதாம். கோழி, மிகுந்த செம்மையும் சிறிது கருமையும் கலந்தது. இது மறைக்கும் இருளும், அருளும் சக்தியும் கலந்ததன் சின்னம்! அதன் அடையாளம் கோழி! கோழி கூவுதல் அறியாமை அருகி, அருள்மேம்பட்டு விளங்கும் நிலை்யை உணர்த்தும். குருகு, பெரும்பகுதி வெண்மையும் சிறுபகுதி செம்மையும் உடையது. குருகு பரிபாகச் சிறப்பையும், வாசனாமலர் சேர்க்கை சிறிதுமுடைய தூய நிலையை உணர்த்தும் அடையாளம். அதனால்தான் நாரை தவம் செய்யும் முனிவர் களுக்கு உவமையாயிற்று. சங்கு முழுதும் வெண்மையானது. உலகியல் துறைதோறும் சென்றலைந்த சிந்தனை இன்று அருட் சக்தியின் கருணையினால் இருள் நீங்க-ஞானஒளி தலைப்பட மனம் ஒருமைப்படுகிறது; இறைவனை ஏத்த ஒருப்படுகிறது. அதனால் திருவடி தந்தருள்க என்பது பொருள். வழிபாட்டுக்கு ஒருமை இன்றியமையாதது. "ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்" என்ற சொற் றொடரும் "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊன மில்லை" என்ற அப்பர் திருப்பாடலடியும் "ஒருமையுடன்

நினது திருமலரடி நினைக்கின்ற” என்ற வள்ளலார் வாக்கும் எண்ணத்தக்கது. வழிபாடு அகலமாவதிற் பயனில்லை; ஆழ மாதல் வேண்டும், பொறிகள் நிகழ்த்தும் வழிபாடு போதாது. புலன்களை வழிபாட்டில் ஈடுபடுத்த வேண்டும். புறப்பூசை யினும் அகப்பூசை உயர்ந்தது. அகப்பூசை கழனியில் பயிர். புறப்பூசை பயிருக்கு வேலி. அதனாலன்றோ, பூசலார் எழுப்பிய மனக்கோயில் கற்கோயிலினும் இறைவனுக்கு உவப்பாயிற்று. புறப்பூசை மணமற்ற மலர். அகப்பூசை மண மலர். அகனமர்ந்த அன்பில் ஒருமையுணர்வுடன் அவன் திருவடிக்கு ஒரு பச்சிலை சாத்துதல்–இல்லை, சாத்துவதாக எண்ணுதல் நூறாயிரங்கோடி அருச்சனைக்குச் சமம்.

பொழுது புலர்கிறது. அகஇருளும் நீங்க அமைதியாக அமர்ந்திடுக! உலகத்தை–உலகத்தில் நம்மோடு தொடர்புள்ள பொருள்களை ஒவ்வொன்றாக எண்ணி உள்ளத்தால் ஒதுக்குக; அவற்றினின்றும் விலகுக! ஒருநிலை எய்திடுக! ஒரு வனை உன்னுக; அவனோடு ஒன்றாகிடுக; இந்தச் சீரிய நோன்பிற்கு உடலை வருத்த வேண்டாம்; உயிரை வருத்த வேண்டாம்; வீட்டை விட வேண்டாம்; காட்டைத் தேட வேண்டாம்; இருந்த இடத்திலிருந்தே இயற்றலாம். “எக் கோலம் கொண்டாலென்ன? ஏதவத்தைப் பட்டாலென்ன? முத்தர் மனமிருக்கும் மோனத்தே!” காலம் தாழ்த்தாதீர்! இறைவனை மனக்கோயிலில் பள்ளியெழுந்தருளச் செய்வீர்!

இன்னிசை வீணைய ரியாழின ரொருபால்
இருக்கொடு தோத்திர மியம்பின ரொருபால்
துன்னிய பிணைமலர்க் கையின ரொருபால்
தொழுகைய ரழுகையர் துவள்கைய ரொருபால்
சென்னியி லஞ்சலி கூப்பின ரொருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
என்னையும் ஆண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

இன்றைய திருக்கோயில் காட்டுகிறது. "திருப்பெருந் துறை உறையும் சிவபெருமானே! ஆண்டவனே! நீ, திரு வோலக்கம் கொண்டருளும் திருச்சபையில் 'தான்' அழியப் பெற்ற சிவனடியார்கள் ஞான இசையினை வீணையாலும் யாழினாலும் மீட்டுகின்றனர்; இருக்கை ஓதுகின்றனர். நின்னுடைய பொருள்சேர் புகழ்மிக்க பாடல்களைப் பாடுகின்றனர். நின் திருவடிப் போதுகளுக்கு மலர்தூவ, மலரேந்திய கைகளுடன் நிற்கின்றனர். தொழுத கையினர், நின் திருவருட் பொலிவைக் கண்டு எளிமையில் ஆட் கொள்ளும் அருளும் திறன் நோக்கி அழுகின்றனர்; கூடும் அன்பினில் கும்பிடலே குறிக்கோளாகக் கொண்டு சென்னியிற் கைகுவித்து நிற்கின்றனர். இங்ஙனம் அருள் பழுத்த மனத்தடியார் பலர் நிற்க, என்னையும் ஆண்டருள் செய்த பெருமானே! அடியேன் உள்ளத்தில் திருப்பள்ளி யெழுந்தருள்க!"

திருவடிக்கண் அன்பும் ஆசாரமும் சீலமும் இல்லாத தன்னை, ஒறுத்துத் திருத்துவதற்குப் பதிலாக ஆட்கொண் டருளி உயர்த்தும் கருணையை நினைந்து உருகி "என்னையும் ஆண்டு கொண்டு இன்னருள் புரியும்" என்று பாடிப் பரவுகின்றார். இசையில் சிவநாமத்தை இசைக்கும் பொழுது உலகுயிர்கள் ஞானத்தில் நாட்ட முறுகின்றன. சூழ்நிலையில் ஐந்தெழுத்திசைத்த ஆனாய நாயனார் அருமை நினையத் தக்கது.

இருக்கு வேதம்:- இது மந்திர வடிவானது. இறை வனுக்குத் திருமுழுக்காட்டும் பொழுது இருக்கு ஓதி ஆட்டுதல் மரபு. தோத்திரம், இறைவனைப் புகழ்ந்து பாடுதல், இருக்கு, கன்ம நெறியையும் தோத்திரம் அன்பு நெறியையும் வளர்க்கும்.

தொழுதல்:- கங்கு கரையற்ற அன்பு கரை புரண்டு வெளிப்படும் பொழுது எழுந்தும் விழுந்தும் கைகளைக்

குவித்தும் சிரம்மேல் உயர்த்தியும் வணங்குதல் தொழுத லாகும். உள்ளமே தொழுகிறது; உடலின் செயல்கள் மெய்ப் பாடே!

அழுதல்:– இன்ப அன்பு மேலீட்டினால் அழும் அழுகையே அழுகை; ஆக்கத்தில் அழும் அழுகை இது. இறைவனை நினைந்து அழுதல் அன்பினை வளர்க்கும்.

துவள்கை:– உள்ளம் அன்பில் நைந்து உருளுவதாலும், திருவருளின்பத்தை ஆராமையால் மிக்குத் துய்ப்பதனால் நிகழும் மெய்ப்பாடு! அழுதலும், துவள்தலும் சிவஞானி களின் செயல்! ஆழ்கடல், அலையால் ஆர்ப்பரிக்காது நீர் மட்டம் உயருதல் போல், அன்பர்கள் இறையன்பில் ஆழங் கால்பட்டு அனுபவத்தில் உயர்ந்து வளர்ந்து சென்னியிற் கரங்குவித்து நிற்பர். இஃதோர் உயர்ந்த குறிக்கோள்!

இந்த உயர்ந்த அனுபவத்தைப் பெறுதல் எளிதன்று. இந்த உயர்ந்த அனுபவத்தைப் பெற இறைவனை உள்ளக் கோயிலில் எழுந்தருளச் செய்ய வேண்டும். அவனுடைய திருவடிகளை மனத்துட்கொண்டு அருச்சித்தல் வேண்டும். அவனுடைய புகழை இசைக்கும் இசையைக் கேட்க வேண்டும். இறைவனை நினைந்து அவனுடைய பெருமையை நினைந்து, கருணையை நினைந்து அழக் கற்றுக் கொள்ள வேண்டும். இங்ஙனம் அழக் கற்றுக் கொள்ளாமல் அருச்சனைகள் பலசெய்து பயனில்லை, அருச்சனை அருளைப் பெறும் கருவியன்று. அழத் துணைசெய்யும் சாதனமே அருச்சனை! ஊண் துறந்து உடலை வெறுத்துத் தவம் செய்து பயனில்லை. "ஐயன் ஐயாறனார்க்கு அன்பால் பொருளில்லை" என்பார் அப்பரடிகள்!' "உன்றன் வார் கழற்கு அன்பு எனக்கு நிரந்தரமாய் அருள்வாய்!" என்பார் மாணிக்கவாசகர். அவன் மலைதான்; ஆனால், உளியில் அகப்படும் மலையன்று; அன்பினில் அகப்படும் மலை.

ஆதலால், இறைவனை இனிய அன்பில் ஏத்தித் தொழுமின்! அவன் அருளோடு ஆட்கொள்வான்!

பூதங்கள் தோறுநின் றாயெனி னல்லாற்
    போக்கிலன் வரவில னெனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுத லாடுத லல்லாற்
    கேட்டறி யோமுனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயற்றிருப் பெருந்துறை மன்னா
    சிந்தனைக் கும்மரி யாயெங்கள் முன்வந்
தேதங்க ளறுத்தெம்மை யாண்டருள் புரியும்
    எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 5

இன்று பாடிய திருப்பள்ளியெழுச்சித் திருப்பாடலில் "இறைவன் காண்டற்கரியவன்; ஆயினும் துன்பங்களைத் தொலைத்து அருள்பாலிப்பவன்" என்று கூறி, நம்மை ஆற்றுப் படுத்துகின்றார் மாணிக்கவாசகர்.

"திருப்பெருந்துறை அரசே! சிந்திப்பதற்கும் அரிய வனே! இங்குத் திருமேனி தாங்கி எழுந்து வந்தருளித் துன்பங் களை நீக்கி அருளின்பம் வழங்கும் பெருமானே! "நீ, ஐம்பூதங் களிலும் ஒன்றிக் கலந்திருக்கிறாய்!" என்று ஞானிகள் பாடு கின்றனர்; ஆடுகின்றனர். அங்ஙனமின்றி நின்னைக் கண்ட வர்களைக் கேட்டிலோம். நின்னை அறிந்தவர்களைக் கேட்டி லோம். எம்பெருமானே! பள்ளியெழுந்தருள்க!

"திருப்பெருந்துறையில் பெருமான் எழுந்தருளியிருந்தும், அவன் சிந்தித்ததற்கு அரியவனாகவே இருக்கின்றான். ஏன்? அறியாமையில் மூழ்கிக்கிடப்போர்–ஆணவ வெறியில் தலை தடுமாறுவோர் சிந்திக்கமுடியாது.

"கேட்டறியோம் உனைக் கண்டறிவாரை" என்பதில் ஒரு தர்க்கம் இருக்கிறது. காண்டல் முந்தியா? அறிதல் முந்தியா? தூரத்துப் பொருள்களை அறிந்த பிறகே, காணும் ஆர்வம்; அறிவால் அறிந்த பிறகே காண்பது நிகழ்கிறது. அது

போல இறைவனை ஏதுக்களாலும், எடுத்த மொழிகளாலும் உய்த்து உணர்ந்து அறிந்த பிறகு அவனைக் காணும் வேட்கை அரும்புகிறது. அவ்வழியேதான் இறைவனைக் காணும் காட்சி கிட்டுகிறது. கடவுள், அறிவில் தலைப்படுபவன். அறிவினாலன்றிக் கடவுளைக் காண இயலாது. அதனால் "கேட்டறியோம் உனைக் கண்டறிவாரை" என்றார்.

பூதங்களாகிய மண், புனல், அனல், கால், வெளி ஆகியவற்றில் இறைவன் நீக்கமற நிறைந்திருக்கிறான். ஆயினும், இறைவன் சாதல்-பிறத்தலுக்கு உரியவனல்லன்.

"நினைப்புலவோர் கீதங்கள் பாடுதல் ஆடுதலல்லால்" என்ற சொற்றொடரில் புலவோரைப் 'போற்றுவோர்' என்ற பொருளில் குறிப்பிடுகின்றார். இன்று புலவோர் என்பது உலகியல் வழக்காகிவிட்டது. புலவோர் என்ற சொல், அருளியல் உலகில் தோன்றி வழக்கிற்கு வந்த சொல்! புலவோர் என்றால், புலன்களை உழுது பண்படுத்தி ஞானத்தில் முதிர்ந்திருப்பவர்கள். இவர்களே அந்தணர்கள்! இவர்களே ஞானிகள்! "புலனழுக்கற்ற அந்தணாளன் கபிலன்" என்று சங்க நூல் பேசும். இன்று பெரு வழக்காகக் கூறுவதைப் போலப் "புலவோர்" என்பவர் இலக்கண — இலக்கியம் பயின்றவர் அல்லர்; தேவர்களும் அல்லர். புலன்களை வென்ற ஞானிகள் புலவோர், அவர்கள் இறைவனைப் பாடுவர்; ஆடுவர்!

"புலவோர் கீதங்கள் பாடுதல் ஆடுதலல்லால் கேட்டறியோம் உனைக் கண்டறிவாரை" என்றதால் இந்தச் சிவஞானிகளுக்கும் சிவம் அனுபவத்திற்கு உரிய பொருளே யாம்; காட்சிப் பொருளன்று.

"சிந்தனைக்கும் அரியாய்" என்ற சொற்றொடரால் சிந்தையின் செயலாய் "நான் சிந்திக்கிறேன்" என்ற முனைப்பில் தன்னுடைய சிற்றறிவையே கருவியாகக் கொண்டு அறிய முற்படுதல். கண்ணுக்கு ஒளி உண்டேயானாலும், கதிரவன்

ஒளியின்றேல் காட்சி ஏது? அது போல உயிர், இறைவனின் கருணையைப் பெற்று அவனுடைய கண்களையே தன் கண்களாகக் கொண்டு காண முயன்றால் அவனைக் காணலாம். "அவனருளே கண்ணாகக் காணின் அல்லால் காண்பார் யார்?" என்றும், "அவன் அருளாலே அவன்தாள் வணங்கி" என்னும் வாக்குகளை அறிக!

இறைவன் தானே வலிய வந்து, உயிர்கள்பால் இரக்கம் கொண்டு, காண்பதற்குரிய திருமேனி கொண்டு வந்தருளித் துன்பங்களை நீக்கி ஆட்கொண்டருளும் கருணையை வியந்து "முன்வந்து ஏதங்கள் அறுத்தெமை ஆண்டருள் புரியும்" என்று பாடிப் பரவுகின்றார்.

பப்பற வீட்டிருந் துணருநின் னடியார்
பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானிடத் தியல்பின்
வணங்குகின் றாரணங் கின்மண வாளா
செப்புறு கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப் பறுத்தெமை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 6

இன்றைய பாடல், இறைவன் பிறப்பினை நீக்கி ஆட்கொண்டருளும் கருணையை வாழ்த்துகிறது.

"மங்கை நாயகனே! செந்தாமரை மலர்கள் பூத்த வயல்கள் சூழ் திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள சிவ பெருமானே! இடையறாது தொடரும் பிறப்பை நீக்கி எமை ஆட்கொண்டு அடிமை கொண்டருளும் பெருமானே! பாசங்களை விட்டகன்று பரப்பரப்பன்றி நின்னையே நினைப்பற நினைக்கின்ற சிவஞானியர் பலர் வணங்கு கின்றனர். திருத்தொண்டிற்குக் களமாக-பயனாக அமையும் மண்ணில் பிறந்து தமது அறியாமையை, அவ்வழி உள்ள தீமையை நீக்கிக் கொண்டு பக்குவம் அடைந்தார் பலர்.

*மக்கள்-பலர் கன்னியரியல்பில் வந்து வணங்கி நிற்கின்றனர். எம்பெருமானே! பள்ளி யெழுந்தருள்க!"*

புண்ணியம் இருவகை. ஒரு புண்ணியம் இன்பத்தைத் துய்த்தற்குத் துணை செய்வது. பிறிதொரு புண்ணியம் இன்பங்களைக் கடந்த திருவருளின்பத்தில் திளைக்கத் துணை செய்வது. இருவகைப் புண்ணியமும், செய்யும் நன்மைகளால் விளைவதேயாம். முன்னையதில்-அதாவது, இன்பங்களைத் துய்க்கச் செய்யும் புண்ணியம் 'நான்' என்ற முனைப்பில் செய்யப் பெறுவது; விளம்பர வேட்கை யுடையது; புகழ் வேட்டையை நாட்டமாக வுடையது. இக்குண இயல்புகளுடன் செய்யப்பெறும் புண்ணியம். திருவருளைத் தருவதில்லை; மண்ணுலக-அமரருலக இன்பங்களை வழங்கும். இவ்வின்பங்களைத் துய்க்கும் அமரர் வேட்கை தணியாமை கண்டு, பிறவித் துன்பத்திற்குரிய காரணங்கள் மாறாமை கண்டு வருந்தி மண்ணிற் பிறந்து பெருமானைப் பூசித்து சிவத்தொண்டுகள் செய்து, அடியார் பணியை அரன் பணியெனச் சென்று உய்தி பெறுகின்றனர்.

"அணங்கின் மணவாளா!" என்றது, தனக்கென்று யாதோர் உருவமும் இல்லாத இறைவன் உயிர்களுக்கு அருள. உமையொடு கூடிய உருவமே பெறுகின்றான் என்பதை உணர்த்த! மங்கை நாயகரை வணங்குவோர் இம்மையும் பெறுவர்; மறுமையும் பெறுவர்; அழிவிலின்ப வீடும் பெறுவர்!

'இப்பிறப்பறுத்து எமை ஆண்டருள் புரியும்' என்ற சொற்றொடரில் உள்ள 'இப் பிறப்பு' என்பது இரக்கக் குறிப்புடையது. மாணிக்கவாசகரே, 'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்' என்பார். உயிர், உய்தி பெறுதற்கே' பிறப்பு, ஆனால், உய்தி கிடைக்காமையினால் பல பிறப்புக்கள் பிறந்து எய்த்தாயிற்று. இப்பிறப்பு, மிகச்சிறந்த மானுடப் பிறப்பு!

இப்பிறப்பிலும் திருவருள் கிடைத்து உய்திபெறாது போனால் உயிரின் நிலை......அந்தோ, பரிதாபம்!

'பப்பற வீட்டிருந்து உணரும் நின்னடியார்' என்ற சொற்றொடர் ஆழ்ந்த பொருளுடையது. அடியாராதல் எளிதன்று. மனத்தின் இயல்பு பரப்பரப்படைதல். தருமைக் குரு முதல்வரின்,

> "பரபரக்க வேண்டா பலகாலும் சொன்னேன்
> வரவரக்கண் டாராய் மனமே!"

என்ற அருளுரை அறிக! பொறிகளின் உணர்வுக்குச் செய்திகள் கிடைத்தவுடன் அவை உண்மையா? பொய்யா?– நன்மையா? தீமையா? என்று ஆராய்ந்து அறியும் திறனில் லாதவர்கள் பரபரப்பர்; உலையிடைப் பெய்த நொய் யரிசியைப் போல ஆவர். வெகுளி, அவலம் முதலியன வயப் பட்டு அழிவர்; அழிவைச் செய்வர். பரபரப்பை விட்டு அமைதியான மனச்சூழ்நிலையில் எண்ணிச் செயற்படுவோர் இம்மை—மறுமைகளைப் பெறுவர். ஏன்? இறையருளும் கூட எளிதில் கிட்டும். அலைகளில்லா ஆழ் கடலில்தான் விலை மதிக்க முடியாத முத்துக்கள் தோன்றுகின்றன. அதுபோல அலையும் சலனங்கள் இல்லாத அமைதியான மோன மனத்தில்தான் இன்பம் கிடைக்கும்; திருவருள் கைக்கூடும். அத்தகைய, மனம் பெற்றோர் இறைவனைக் காண்பர்.

இப்பிறப்பு அருமையானது. மண்ணகம், உய்தியைத் தரும் புண்ணிய பூமி! பரபரப்பினை விடுவோம்! அமைதி யினை அடைவோம்!ஆண்டவனைத் தொழுவோம்! இருட் பொழுது புலரும்! உதய ஒளி தோன்றும்! எம் பெருமான் நமது இதயங்களில் பள்ளியெழுந்தருள்வான்?

> அதுபழச் சுவையென அமுதென அறிதற்
> கரிதென எளிதென அமரரு மறியார்
> இதுவவன் றிருவுரு இவனவ னெனவே
> எங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும்

*மதுவளர் பொழிற்றிரு வுத்தர கோச*
*மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா*
*எதுவெமைப் பணிகொளு மாறது கேட்போம்*
*எம்பெரு மான் பள்ளி யெழுந்தரு ளாயே* 7

இறைவனை வணங்கும் முறைகளையும், வணங்கிக் கேட்கும் மரபுகளையும் இன்றைய பாடல் விளக்குகிறது.

"அமரர்களும், திருவருளின்பம் பழத்தின் சுவையென, அமுதின் சுவையென, அறிதற்கு அரிதென, அறிதற்கு எளிதென அறியார். அங்ஙனம் இருக்க 'இது அவன் திருவுரு; இவன் அவன் எனவே' எங்களை ஆண்டு கொண்டு இங்கு எழுந்தருளும் பெருமானே! தேன்மலர்ப் பொழில்கள் சூழ் உத்தர கோச மங்கையுள்ளானே! திருப்பெருந்துறையுறை அரசே! எம்பெருமானே! எங்களைத் தொண்டு கொள்ளும் முறை எது? என்று இரந்து கேட்கின்றோம். பெருமானே! திருப்பள்ளி எழுந்தருளி எமைப்பணி கொள்ளும் பாங்கினைக் கூறிடுக! பணியினைக் கொண்டிடுக!"

'அது' என்பது சிவானந்தம். சிவானந்தம் மனத்தின் உணர்வு தழீஇய நுகர்ச்சிக்குப் புலனாவது. அதற்குப் பெயரும் இல்லை! உருவமும் இல்லை! அதனால் 'அது' என்றார். பழச்சுவை, அமுதச் சுவை முதலியவற்றை இன்ன சுவையென அறிந்து கூற, முன்னர் அந்தச் சுவைகளைச் சுவைத்தோராலேயே முடியும். சிவானந்தம் அமரர்களால் ஒருபோதும் சுவைத்தறியப்படாதது. அதனால் 'இதுபோல' 'அதுபோல' என்று கூறி அலமருகின்றனர். சிவானந்தத்தைச் சுவைத்தறிதல் அருமையானதா? அல்லது எளிமையானதா? அதை எப்படி அமரர்கள் கூற முடியும்? அமரர்கள் அந்தத் துறையில் ஒரு சிறிதும் முயன்றறியாதவர்கள். அவர்கள் முயன்றதெல்லாம் போகம் பெற்றிட! தாம் உயர்ந்திட! தம்மைப் பலர் தொழுதிட–அன்றி அவர்கள் எப்பொழுது சிவானந்தம் நோக்கி முயன்றனர்? அத்துறையில் ஒருசிறிதும்

முயலாதார் அருமை என்று கூறுதல் வெறும் பொய்! தமது இயலாமையை மறைக்க அறிவார் போல அருமையென்றும் எளிமையென்றும் முரண்படக் கூறுகின்றனர். முரண் பாடுகளே அறியாமையின் சின்னம் தானே!

'இது அவன் திருவுரு; இவன் அவன் எனவே' என்ற சொற்றொடர், திருவுருவ வழிபாட்டுத் தத்துவத்தை விளக்குவது. திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் திரு வுருவத்தை உருவமாக எண்ணி வழிபடுவது ஆகாது. சிவ மாகவே எண்ணி வழிபடுதல் வேண்டும்.

*"திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச்*
*சிவன் எனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே"*

என்றார் அருணந்தி சிவம். உருவங்கள் வாயிலாக உயிரினை நாடி அன்பு செய்தல் அருளியல் அறிவு.

உயிர் சிவமாகவும், உயிருறையும் உடல் சிவம் எழுந்தருளும் திருக்கோயிலாகவும் எண்ணத் தூண்டுகிறது. சீவன், தனது தன்மைகளை இழந்து சிவத்தின் தன்மையைப் பெற்றுச் சித்தம் சிவமாதலே வாழ்வின் இலக்கு. இதனைக் குமர குருபரர் "பின்னும் ஓர் மாத்திரை குறுகினேன் பின்" என்பார். அதாவது, 'சீவன்' என்ற சொல்லில் உள்ள ஒரு மாத்திரை குறைந்து 'சிவன்' ஆயிற்று என்பது. சிவன் என்றால் பொருளாற் சிவனல்ல; தன்மையால் சிவன்! சிவத்தன்மை பெற்ற உயிர் தங்கும் பொழுது உடல் விமானம் ஆகிறது.

'இது வேண்டும்; அது வேண்டும்' என்று கேட்டு இறைவனை வணங்குதல் கூடாது. நமக்குத் தேவையான வற்றை அறிந்து வழங்குகின்ற அருளிப்பாடு அவனுக்கு உண்டு. அவனால் வழங்கப் பெறாதன யாதானும் உண்டாயின் அவை நமக்கு வேண்டுவன அல்ல. இறைவனைத் தொண்டு கொள்ளும் படியே வேண்ட வேண்டும். தொண்டு செய்யும் உரிமை வழி இன்பம் வந்தமையும். எம்பெருமானை

வணங்குவோம்! எது எமைப் பணி கொளுமாறு என்று கேட்போம்! பணிகளைச் செய்வோம்!

*முந்திய முதல்நடு இறுதியு மானாய்*
*மூவரு மறிகில ரியாவர்மற் றறிவார்*
*பந்தணை விரலியும் நீயுநின் னடியார்*
*பழங்குடில் தொறுமெழுந் தருளிய பரனே*
*செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்*
*திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி*
*அந்தண னாவதும் காட்டிவந் தாண்டாய்*
*ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே.*

8

இறைவன் நம்முடைய பழங்குடிசைதோறும் எழுந்தருளி அருளும் திறனை ஊனுருக, உயிருருகப் பாடிப் பரவுகிற பாடல் இது!

"அடைதற்கரிய அமுதமே! முற்பட்ட முதலும் நடுவும் முடிவும் ஆனவனே! உன்னை மும்மூர்த்திகளும் அறிய வல்லாரல்லர். மும்மூர்த்திகளாலேயே நின்னை அறிந்து ஏத்த முடியாதெனில் வேறு யார் நின்னை அறிதல் கூடும்? பந்தணை விரலியும் நீயும் உடனாகி அடியார்களுடைய பழங்குடிசைதோறும் எழுந்தருளிய பெருமானே! மேலுக்கும் மேலானவனே! செந்தழல் போன்ற திருமேனி காட்டித் திருப்பெருந்துறையுறை திருக்கோயிலும் காட்டி, எங்கள்பால் வந்து ஆட்கொண்டவனே! பள்ளியெழுந்தருள்க!

முதல், அனைத்திற்கும் முந்தியது ஆதலால், 'முந்திய முதல்' என்றார். உயிர்களுக்கு—வினைப்போகத்திற்கு ஈடாக உரியகால எல்லை வரை போகத்தை ஊட்டிப் பாதுகாத்தலின் 'நடு' என்றார். ஊழிக்கால எல்லைக் கண் உயிர்களைத் தம்மிடத்து ஒடுக்கி ஓய்வளித்து அனைத்திற்கும் முடிவாயிருத்தலின் 'இறுதியும் ஆனாய்' என்றார்.

படைத்தல், காத்தல், அழித்தல், ஆகிய முத்தொழில் களையும் அயன், அரி, உருத்திரன் என்ற மூவர் நிகழ்த்துவது இறைவனின் திருவருட் குறிப்பினாலேயாம். மூவரும் முத்தொழிலைச் செய்தாலும் பெருமானை அறியார்.

"நின்னடியார் பழங்குடில்தோறும் எழுந்தருளிய பரனே!"—'பழங்குடில்' என்பது குடிசையன்று; உயிர்கள் உறையும் நுண்ணுடம்பே பழங்குடில். நுண்ணுடலில், உயிர்களின் உள்ளமே இறைவன் விரும்பிப்புகும் குடில். இந்த நுண்ணுடல் உயிருக்குப் பிறப்புக் காலம் தொட்டு வருவது. அதனால் பழங்குடிலாயிற்று! மண்ணில் உள்ள பழங்குடில் ஓலைகள் பிரிந்தும் கம்புகள் கலைந்தும் நைந்து இருக்கும். அதுபோல அடியார் உள்ளமும் பிறப்பில் தொடக்கத்தில் இருந்த மலக்கட்டுக் குலைந்து அன்பினால் நைந்து விளங்கும் என்பது உய்த்தறிக. "பழங்குடில் தொறும்" என்ற சொற் றொடர் வியப்பிற்குரியது. அளப்பில் உயிரினத் தொகுதியில் ஒவ்வோருயிரின் உள்ளந்தோறும் அவன் தவறாமல் புகுகின்றான்.

'செந்தழல் புரை திருமேனியும் காட்டி' என்பது இறை வனின் அருவ நிலையையும் 'திருப்பெருந்துறையுறை கோயிலும் காட்டி' என்பது அருவுருவ நிலையையும் 'அந்தண னாவதும் காட்டி' என்பது உருவநிலையையும் உணர்த்தி யமை அறிக! உள்ளப் பெருங்கோயிலில் எழுந்தருளும் இறைவனையே ஆன்மநாயகனாக வழிபடுதல் வழக்கம். மாணிக்கவாசகருக்குத் திருப்பெருந்துறையுறை சிவபெரு மானே ஆன்ம நாயகன்! முன், திருப்பெருந்துறை திருத்தல மல்ல, மாணிக்கவாசகரை ஆட்கொண்ட அருள் திருமேனி எழுந்தருளியதால் திருப்பெருந்துறை ஆயிற்று; திருத்தலம் ஆயிற்று! மாணிக்கவாசகப் பெருமானால் கோயிலாக்கப் பெற்றது. அதனால், 'திருப்பெருந்துறையுறை கோயில்' என்றார். திருப்பெருந்துறை, ஆட்கொண்டருளிய எம்பெரு மானுக்கு அடைமொழி. இறைவன் குருநாதனாக எழுந்தருளி

அருள்பாலித்தமையை 'அந்தணனாவதும் காட்டி' என்று கூறி உணர்த்துகின்றார்.

இத்திருப்பாடலால் இறைவன் எல்லாருக்கும் முன்னே யுள்ள மூத்தவனானாலும், முதல்—நடுவாக விளங்கினாலும், மூவரால் அறிய முடியாத விழுப்பொருளானாலும் அவன் எளிவந்த கருணையோடு நமது உள்ளமாகிய பழங்குடில் தோறும் எழுந்தருளிச் செந்தண்மை காட்டி, ஆட்கொண்ட, பள்ளியெழுந்தருள்கின்றான். நமது இல்லங்களில் எழுந்தருளி யுள்ள இறைவனை இழக்காமல் ஏத்திப் போற்றுவோமாக!

*விண்ணகத் தேவரும் நண்ணவு மாட்டா*
*விழுப்பொரு ளேயுன தொழுப்படி யோங்கள்*
*மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே*
*வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்*
*கண்ணகத் தேநின்று களிதரு தேனே*
*கடலமு தேகரும் பேவிரும் படியார்*
*எண்ணகத் தாயுல குக்குயி ரானாய்*
*எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.* 9

இன்று பாடிய திருப்பள்ளியெழுச்சிப் பாடல் இறைவன் கருணையினால் மண்ணில் எழுந்தருளி ஆட்கொளும் திறன் வாழ்த்தப்படுகிறது.

"விண்ணோரும் சென்று அடைய வொண்ணாத செம் பொருளே! உன்னுடைய தொண்டாற்றும் அடியோங்கள் மண்ணுலகத்தே வாழ, மண்ணகத்தே எழுந்தருளிச் செய்த வனே! திருப் பெருந்துறை யுடையவனே! வழிவழித் தொண்டராகிய எங்கள் கண்ணிற் பாவையே! அகத்தே களிதரு தேனாய்க் களிப்பு அளிப்பவனே! விண்ணவர்க்குக் கடலமுதம் ஆனவனே! அருமருந்தே! கரும்பே! அன்பால் விரும்புகின்ற அடியவர்கள் நினைவில் உள்ளவனே! உயிர்களுக்கு உயிரே! தலைவனே! திருப்பள்ளி யெழுந்தருள்க!"

விண்ணவர்களும் காணாத விழுப்பொருள், பெருமான்! மக்கள் தேவர்களை உயர்ந்தவர்கள் என்று நினைக்கின்றனர். விண்ணவர்கள் அறிவு, பதவியின் காரண மாக வளராததால் இறைவனைக் காண முடியவில்லை.

நமது சமயமரபில் நாம் விண்ணகத்திற்குச் செல்வ தில்லை. இறைவனை மண்ணகத்தில் நடமாடச் செய்வதே நம்முடைய மரபு. "இறைவனுக்கும் கூட விண்ணில் விருப்ப மில்லை." "வான்பழித்து இம்மண் புகுந்து மனிதரை ஆட் கொள்ளும் வள்ளல்" என்ற திருவாசகத்தால் அறிக! மாணிக்கவாசகரை ஆட்கொள்ள எம்பெருமான் குருமூர்த்தி, குதிரைச் சேவகன், கொற்றாள் என வந்து ஆட்கொண் டருளிய அருளிப் பாட்டினை நினைந்து பாட மொழி ஏது, அதனாலன்றோ "மண்ணகத்தே வந்து வாழச் செய்தானே?" என்றார். வாழ்தல் நோக்கமுடையது. நோக்கம் நிறை வேறினால் வாழ்தலுக்குப் பொருளுண்டு. அது வாழ்தல் என்று கருதப் பெறும். "வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே!" என்பார் மாணிக்கவாசகர். இங்கு மாணிக்கவாசகர் "வாழச் செய்தானே!" என்பதால், அமைச்சுப் பொறுப்பிலிருந்து விலக்கி, ஞானாசிரியனாகக் காட்சி தந்து 'சிவாய நம' எனச் சொல்லித் தந்து, அச் சொல்லின் பொருளைக் காட்டி, அப்பொருளுக்குத் திருக்கோயில் எழுப்பும் பணியினில் ஈடுபடுத்திக் கொற்றத்தால் வந்த ஏதங்களைத் தடுத்து இனிதே ஆட்கொண்டு அவன்தன் திருவருளின்பத்தில் திளைக்கும் இன்னுயிராக வையகத்தில் பிறந்த உயிர்கள் உய்தி உணர்வைப் பெற்று உணரும் கால எல்லை வரை திருவாசக மாக வாழும் அருளிப் பாட்டினை எண்ணி மகிழ்ந்து 'வாழச் செய்தானே!' என்றார்.

குரங்கின் ஆட்டம், களியாட்டம் ஆமோ, அல்லது ஆடற்கலையாமோ? 'களிப்பு' என்பது தூய்மையானது; பொறிகளைக் கடந்து புலன்களிற் பொருந்தி, உயிருக்கு இதம் அளிப்பது. களிப்பு. புறத்தே விரிவதன்று; அகத்தே சென்று

ஆங்கு விரிந்து முழுமையாகிப் பொறிகளில் இன்பத் தென்றலென வெளிப்படுவது! கண்ணகத்தே நின்று களிதரு தேனே! என்றதால் கண்களில் நின்றே களிப்பைப் பெறுதல் என்பது பொருள்! எல்லாவித இன்பத்திற்கும் அல்லது துன்பத்திற்கும் கண்களேதான் வாயில்! மற்றப் பொறிகள் தனித்தனியே தான் இயங்கும்! ஆனால், கண்கள் மற்றப் பொறிகளுக்கும் துணையாக இயங்க முடியும். கண்கள் வழியாக ஐம்புலக் களிப்பையும் ஒருசேரத் துய்க்க முடியும். "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" என்ற சேக்கிழார் திருவாக்கும் அறிக. தொண்டு செய்யும் அடியார்கள் மண்ணகத்தே வாழ. வந்தருள் செய்யும் பெருமான் பள்ளி யெழுந்தருள்கின்றான்! அவன் திருப்பள்ளியெழுச்சி எழுந்தருளும் திருவோலக்கத்தைக் கண்களால் காண்க! களித்து மகிழ்ந்து வாழ்ந்திடுக!

புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
　　போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
　　திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவு மலரவ னாசைப்
　　படவுநின் னலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை யாட்கொள்ள வல்லாய்
　　ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

மாதேவன் மண்ணிடைத் தோன்றி ஆட்கொள்ளும் திறனை வாழ்த்துகிற பாடல் இது.

"திருப்பெருந்துறை யுறைவாய்! ஆரமுதே! திருமாலும் நான்முகனும் பூமியிற் பிறவாமல் நாட்களை வீணாகக் கழிக்கின்றோமே என்று எண்ணிக் கவலைப்படுகின்றனர். பூமியில் பிறந்தால் சிவபெருமான் உய்யக் கொள்கின்ற நெறியில் உய்தி பெறலாமே என்று திருமால், மண்ணிற் பிறப்பை விரும்புகின்றான்; பிரமன் பிறந்திட ஆசைப்

படுகின்றான். பெருமானே! நீயும். நினது திருவருளும் உடனாக இப் பூமியில் தோன்றியருளி எம்மை ஆட்கொள்ள வல்லவனே! பள்ளியெழுந்தருள்க!"

மண்ணிற் பிறந்திடும் பிறப்பு, பொய்யன்று; மாயை யன்று; துன்பம் அன்று. உயிர்களை இறைவன் ஆட் கொள்ளும் இடம் மண்ணகமே! பிரமன், திருமால் ஆகியோர் விண்ணகத்தில் படைத்தல், காத்தல் தொழில்களைச் செய்து பெருமையுடன் வாழ்கின்றனர். ஆயினும், எல்லையில் இன்ப அன்பு கிட்டியபாடில்லை. . துன்பத்திற்குக் காரணம் நீங்கவில்லை. அதனால், உய்திக்குரியன நாடாமல் பதவி களுக்குரிய பணிகளிலேயே காலம் கழிந்து வீணாகப் போகிறதே என்று கவலைப்பட்டு மண்ணிற் பிறக்க ஆசைப்படுகின்றனர். உய்திக்குரிய பணிகள் இறைவனைப் பூசித்தல்; இறைபணி நிற்றல்; அன்பர் பணிசெய்தல் ஆகியன. பதவிகளின் வழிபட்ட கடமைகள் வாழ்த்துக்களைப் பெறுதல்; மரியாதைகளைப் பெறுதல்; மகிழ்ந்திருத்தல்; அதிகாரம் செய்தல்; முகமனுக்கு முகம் மலர்ந்திருத்தல்; இடித்துக் காட்டினால் ஒறுத்து ஒதுக்குதல் முதலியன. பதவி களின் வழிப்பணியினால் உலகத்தில் தாழ்வென்னும் தன்மை வராது; சூழ்ந்து நிற்பர் அனுமதிக்கமாட்டார்கள்; அதனால், பதவிச் சுழலிலிருந்து விலகி மண்ணிற் பிறத்தல் உய்தற்குரிய நெறியைத்தரும் என்று அமரர்கள் எண்ணுகின்றனர். அதனால், திருமாலும் பிரமனும் கூட மண்ணில் பிறப்பதை. மலர்கொண்டு அருச்சிப்பதை விரும்பி ஆசைப்படுகின்றனர். ஆனால், மண்ணிற் பிறந்தோர் இறைவனை எண்ணிப் போற் றிடாது வாழ்நாளை வாளா கழிக்கின்றனர்.

நம்முடைய சூழ்நிலையில்கூட உய்தற்கேற்ற பணிகளுக் குரிய பணிகள் கொள்ளை கொண்டு விடுகின்றன. இக் கொள்ளையிற் சிக்காதார் யார்? பதவிகள், உய்திக்குரிய பணிகளுக்குத் தடையாக இருப்பின் பதவியைத் துறத்தலே நன்று.

இப்பூமி, சிவன் உய்யக் கொள்கின்ற புண்ணியபூமி! இறைவனுக்கு அருளே திருவுரு; திருமேனி! அதனால், 'கருணையும் நீயும் அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்" என்றார்.

இறைவன் ஆட்கொண்டருளக் கருணைகொண்டாலும் உயிர் திருவருளுக்கு அடிமையாதலை விரும்பினாலும் ஆட்கொண்டருளும் நிகழ்வு நிகழ்வதில்லை! எத்தனை தடைகள்! மலரெடுக்கும் சிந்தனையைச் செய்தித்தாள் தடுக்கிறது! அகனமர்ந்த பூசனையில் குறுக்கிடுகிறது. தொலைபேசியின் அலறல்! ஐந்தெழுத்தை எண்ணும் முயற்சியில் அன்பர்கள் குறுக்கீடு! 'பெருமானைப் பூசிக்க' தபால் பெட்டி தடையாக வருகிறது! இவ்வளவும் புறத் தடைகள்! அகத்தே இப்பொழுதென்ன? சில நாள் போகட்டும் என்று எண்ணுகிறது!

பணியும் பூசைதானே என்று கருதுகிறது. இன்று என்ன? திருவிழா வரட்டுமே என்று தோன்றுகிறது! இத்தனை தடைகளையும் தாண்டி உயிர் ஆட்பட வேண்டும்; அவன் ஆட்கொள்ள வேண்டும். தடைகளை நீக்கி அவன் ஆட்கொள்வான் என்பதனை "ஆட்கொள்ள வல்லாய்!" என்றார். "வல்லாளன் தென்னன் திருப்பெருந்துறையான் ஆட்கொண்டருளத் திருப்பள்ளியெழுந்தருளியுள்ளான்! வழி படுவோம் ! வாரீர்!

## வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான் மறையறங்களோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகம் எல்லாம்

திருச்சிற்றம்பலம்

# 18

# தாய்போல் கருணையன்

இறைவன் காண்பதற்கு அரியவன்; கடவுள் காணப் படாத பொருளா! இல்லை, இல்லை! கடவுளைக் காண முடியும். கடவுள் அளவுகளால் அளந்தறியப் படாதவன்.

"நின்னளந்தறிதல் மன்னுயிர்க்கு அருமை" என்று திருவாசகம் பேசும். அவன் 'ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியன்' பிறவா யாக்கைப் பெரியோன்; மனம் வாக்குகளுக்கு எட்டாதவன்! ஆயினும் நம்முடைய மனத்தில் எழுந்தருளுகின்றவன்!

அண்டங்களாகப் பரந்திருக்கும் பொருள், நமது உள்ளத்திற்குள் ஒடுங்கி இருந்தருள் செய்யும் கருணையைப் பட்டினத்தடிகள் வியந்து பாடுகின்றார். "அளவினில் இறந்த பெருமையை, ஆயினும், எனதுளம் அகலாதொடுங்கி நின்றுனையை" என்று பாடுகின்றார்.

திருவள்ளுவரும் "மலர்மிசை ஏகினான்" என்றார். இதற்குப் பரிமேலழகர், "அவரவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின் ஏகினான் என்றார்" என்றெழுதும் உரை நினைந்து இன்புறற்பாலது. திருவாசகமும் "என்றன் உடலிடம்

கொண்டாய் யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே" என்று கூறகிறது.

அப்பரடிகள் "நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டான்" என்று அருளிச் செய்துள்ளார். இறைவன் மிக விரும்புவது கற்கோயிலை யன்று. மனக்கோயிலையே! கற்கோயில் எழுந்தருளியது மனக்கோயிலில் புக வாயில்கள் காணவே!

அதனாலன்றோ, பல்லவ மன்னன் கட்டிய கற் கோயிலில் எழுந்தருளுதலைவிட பூசலார் எழுப்பிய மனக்கோயிலிற் புகுவதற்கு விரைந்தார்.

இறைவன் உயிர்களுக்கு அருள் வழங்குவதில் முன்னிற் பான். அந்த வகையில் கடவுள் ஓர் நாயகன். அவனுக்கென்று ஒரு வடிவம் இல்லை. ஏன்? அவன் உலகே வடிவமானவன்.

அப்பரடிகள் "எல்லா உலகமும் ஆனாய்" என்றார். நமது பட்டினத்தடிகளும் "மெய்யினை இறந்த மெய்யினை ஆயினும், வையகம் முழுதும் நின் வடிவம் எனப்படும்" என்றார். ஆதலால் உயிர்கள் உற்றறிவனவெல்லாம் அவன் அறிவான்!

இறைவன் ஞானியரிடத்தில் - அடியார்களிடத்தில் விளங்கியருளுகின்றான். அல்லாதாரிடத்தில் விளக்கமுறுவ தில்லை. ஏன்? ஆணவ இருள்வழி மயக்கில் வெளிப்படு வதில்லை. அன்பும் தவமும் பெருகப் பெருக இறைவன் வெளிப்படுவன்; விளங்கித் தோன்றுவன்; அறிந்தும் உணர்ந்தும் அனுபவித்தும் ஆனந்திக்கலாம். இறைவன் எய்ப் பினில் வைப்பு.

இறைவன் உயிர்களை அதனதன் பக்குவநிலைக்கேற்ப ஆட்கொள்கின்றான். ஆட்கொள்ளும் பொதுத் தன்மையில் வேறுபாடில்லை. முறைகளிலேயே வேறுபாடு. அவன், போகியாக இருந்தும் ஆட்கொள்கின்றான். அவன் யோகி யாக இருந்தும் ஆட்கொள்கிறான். துறவியாக இருந்தும்

ஆட்கொள்கின்றான். தாயுமாகித் தண்ணருள் செய்கின்றான் தோழனாகத் துணை நிற்கின்றான்.

ஆலமர் செல்வனாக, அருட் குருவாக, துறவியாக நின்றும் அருள் வழங்குகின்றான் என்பது கொள்கை. அடிகள் இறைவனை ஐம்பொறிகளால் தொட்டு அனுபவிக்க முடியாததால் "நுகரா நுகர்ச்சியை" என்று பாடுகின்றார். ஆனால் இறைவன் அறிவால் அனுபவிக்கப்படும் பொருள் என்பது தத்துவம் இதனை,

> "மாசில் வீணையும் மாலை மதியமும்
> வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
> மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணையடி நீழலே"

என்பது அப்பரடிகள் அருள்வாக்கு.

இந்த இன்பங்கள் பொறிகளால் நுகரத்தக்கனவேயாம். ஆனாலும் புலன்களின் அறிவு அமையாதாயின் பொறிகள் துய்த்தற்கியலா! மாசில்லாத வீணையின் இசையைச் செவிகள் உடையார் கேட்கலாம். ஆனாலும் இன்புறுதல் இயலாது. இசைக்கலை அறிந்தாலே நுகர்ந்து அனுபவித்து மகிழலாம். மாலை மதியத்தைக் கண்ணுடையார் அனை வரும் காணலாம். ஆனால் களித்து மகிழ அறிவு தேவை. தென்றலைத் தேகமுடையார் அனைவரும் உணர்ந்து மகிழலாம்; உற்று மகிழ இயலாது. அதற்கு உற்றுணரும் அறிவு தேவை.

ஆதலால், புலன்களின்றிப் பொறிகளுக்குப் பொருள் இல்லை; அனுபவம் இல்லை; பயனில்லை! இறைவன் பேரின்பக் கடல். நுகரா நுகர்ச்சி! அவனைச் சிந்திப்பார். நெஞ்சத்தினின்றும் அவன் அகலான். இதனைப் பட்டினத்தார் "அகறா அகற்சியை" என்பார்.

மாணிக்க வாசகர் "இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!" என்பார். இறைவன் திருவுள்ளத்தில் எண்ணிய அளவிலேயே உலகைப் படைத்தருளுகின்றான்; காத்தருளுகின்றான். தீமையை அழித்து நன்மையைக் காத்தருளுகின்றான். இறைவன், இயல்புகள் அனைத்தும் நினைந்து சொற்களால் வாழ்த்துதல் இயலாத ஒன்று.

இறைவனது உயர்ந்த குணங்களை எண்ணித் தொழப் பயன்படும் சொற்கள் ஆற்றலுடையன அல்ல. அச்சொற்கள் இறைவனை அணைய இயலாதன. ஆயினும் நீ, தாயிற் சிறந்த தயா உடையவன். தாய் கடமையைக் கருதிக் குழந்தையைப் பிரிந்து சென்றிருக்கிறாள். குழந்தை அழுகிறது! குழந்தையின் அழுகுரல் தாய்க்குக் கேட்காது!

ஆயினும் குழந்தையின் பசியை அவளே தெரிந்து, அவள் தானே வந்து ஊட்டி வாழ்விப்பதைப் போல பல பிறவிகளிற் பிறந்து இளைத்து, நின் அருளினின்றும் விலகி நிற்கும் எனக்கு நின் கருணையைப் பாலித்து ஆட் கொள்ளுதல் கடனன்றோ! என்று பட்டினத்தார் பாடும் பாடல் நெஞ்சைத் தொடத் தக்கது.

"ஆவலித் தழுதலில் அகன்ற தம்மனை
கேவலம் செய்மையிற் கேளா ளாயினும்
பிறித்தற் கரிய பெற்றிய தாகிக்
குறைவினில் ஆர்த்தும் குழவியது இயல்பினை
அறியாது எண்ணில் ஊழிப் பிறவியின்
மயங்கிக் கண்ணிலர் கண்டுபெற் றாங்கே
தாய்தலைப் படநின் தாள்இணை வணக்கம்"

என்பது பாடல். "பிறவி தோறும் ஆசையினால் கட்டப்பட்ட கட்டுகளை நீ யன்றோ அவிழ்த்துவிட வேண்டும்! நான் எவ்விதம் அவிழ்ப்பேன்? என்று இரந்து கேட்கிறார் பட்டினத்தார். நாமும் கேட்போம்!

19

# பேசு, வாழி!

*பட்டினத்தார் இறைவனை நினைந்து நினைந்து நெகிழ்ந்துருகிப் பாடும்படி கூறுகின்றார். நாய் ஊர் சுற்றும்; மலம் உண்ணும்! எச்சில் இலையைத் தேடும்; தின்னும்; புழுதியிற் புரளும். அதனால் மாணிக்கவாசகர் "ஊர் நாயிற் கடைப்பட்டு" என்று இழிநிலைக்கு எல்லை காட்டுவார்.*

*ஆயினும் நன்றி அறிதலாகிய நற்குணத்திற்கு நாய்க்கு ஈடு எதுவுமில்லை. நாய் வலிந்து தீமை செய்வதில்லை. ஆயினும் மனிதன் நாயைப் போல் நன்றி அறிதலில் வளர வில்லை. ஆனால் நன்றியைக் கொன்ற வரலாறு உண்டு.*

*இறைவன் தோன்றாத் துணைவன். உள்ளத்திலும் எழுந்தருளியுள்ளான். வேண்டுவன எல்லாம் தருகின்றான். வாழ்விக்கின்றான். என்ன செய்தென்ன? அவன் இறைவனை நினைக்கின்றானா! இல்லை மறுக்கின்றான். அவன் கருணையை உணர்ந்தானா?*

*இறைவனை அறிவால் தேட முடியாது. பொருளால் தேட முடியாது. ஆயினும் தாயிற் சிறந்த தயாவாக அவன் இறங்கி அருளுகின்றான். "பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" என்பது திருவாசகம்.*

அழுதும் ஊட்டாத தாயரும் உண்டு. அழுகுரல் கேட்டு ஊட்டும் தாயரும் உண்டு. நினைந்தூட்டும் தாய்மை சிறந்தது. இறைவனாகிய தாய் அவளினும் சிறந்தவனாம்! எப்படி? நினைப்பு, மறதியைத் தொடர்ந்து வருவது. மறதியின்றேல் நினைத்தல் ஏது? நினைந்தூட்டும் தாய் என்றதாலேயே அவள் மறந்திருந்தாள் என்பது பெறப்படுகின்றது.

இறைவனாகிய தாய்க்கு மறதியில்லை. அதனால் நினைவு கூர்தலும் இல்லை. இறைவன், உயிர்களை மறப்பானாயின் ஏது உயிர்ப்பு? ஏது உலகம்? ஆதலால், இறைவன் உயிர்களை மறப்பதும் இல்லை; நினைப்பதும் இல்லை; ஆனால் அறியாமை வயப்பட்ட உயிர்கள் இறைவன் மறந்து விட்டான் போல எண்ணிப் புலம்பு கின்றன. இல்லை; அவ்வுயிர்களை அவை அறியாமல் தொடர்ந்து வருகின்றான்.

அவன்றவன் கருணையினால் ஊன்பொதி தசையினை உருகும் உடலாக மாற்றுகிறான். ஆன்மாவில் ஞான விளக்கினை ஏற்றி ஒளி உண்டாக்குகிறான். ஆனந்தமாய் தேனினைச் சொரிந்து அற்புதம் செய்கின்றான். இந்த அற்புதத்தினை, அனுபவத்தினை உயிர்கள் இழக்காமல் துய்த்து மகிழப் புறம் புறம் திரிந்து பாதுகாக்கின்றான்.

உலகியலில் பெரியோர் முன்செல்வர், அருளியலில் உயிர்களே முன் செல்லும். இறைவன் பின்னே வருவான். ஏன்? முன்னே செல்லும் உயிர்கள் இடறி விழுந்தால் எடுத்தாள வேண்டுமல்லவா? அதனால் அவன் உயிர்களின் பின்னே வருகின்றான் இல்லை! அவன் பித்துப் பிடித்து உயிர்களின் பின்னே திரிகின்றான்.

அவன் உயிர்களை ஆட்கொண்டருளித் திரிவதற்கு யாது பொருள்? யாது குறிக்கோள்? ஒன்றுமே இல்லை! "குறியொன்றும் இல்லாக் கூத்து" என்று திருவாசகம் பேசும்.

இங்ஙனம் வண்ணப் பணித்து வாவென்று வான் கருணை பொழிந்திடும் அண்ணலை நினைந்து

அழாமையால் "நாய் அனைய" என்று நாயை இழித்துக் கூறுகின்றதைப் போல, நாயை உயர்த்துகின்றார்.

நாய்க்கு நன்றி உண்டு. தம் தலைவனைக் காணின் அன்பு காட்டும். ஆனால் மனிதனுக்கு அது இல்லையே! என்ற ஏக்கத்தில் "நாயனைய என்னைப் பொருட்படுத்தி நன் களித்துத் தாயனையனாய் அருளும் தம்பிரான்" என்று பாடுகின்றார் பட்டினத்தார். பேரருளின் அருமைப் பாட்டை உணராதது ஏன்? ஆசைகளால் மனித மனம் அலைப்புறு கின்றது. ஆதலால், அருளில் நாட்டமில்லை.

தூண்டில் வாயிற் புழுவை விரும்பி மீன் இறக்க வில்லையா? அது போல நாம் துன்பத்தில் அழிகின்றனம். விளக்கொளியை விரும்பி விட்டில் விழுந்து இறக்கும் அறியாமையை யார்தான் மறுக்க இயலும்.

நாமும் காட்சியில் மயங்கி அழிகின்றோம். வண்டினங்கள் மணம் நாடுவன. அதனால் செண்பக மலர்களில் வண்டுகள் விழுந்து புரளும். சண்பக மலர் மணம் நாடி தாங்களும் அழியும்.

நெறி கடந்த இன்ப நுகர்வுகளில் உயிர்கள் அழிகின்றன. இவை ஐயறிவின. அவை மயங்கி அழிதல் இயற்கை. அவை சூழ்நிலையை மாற்றும் திறனுடையன அல்ல. ஆறறிவின னாகிய மானுடம் இங்ஙனம் அழியலாமா? மனிதன் சிந்தையில் தெளிவு பெற்று, தெளிவினுள் சிவத்தைக் கண்டு வாழ்ந்திடுக.

ஆசை கொடிது "ஆசை அறுமின்கள்" "ஆசை அறுமின்கள் ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்" என்பது திருமந்திரம். ஆசை மனத்திற்கு மயக்கத்தைத் தரும்; அறிவைக் கெடுக்கும்" அவலத்தைத் தரும்; ஈசனோடாயினும் ஆசை அறுமின். இன்று, கண்ணப்பர் பிறந்த நாட்டில் கடவுள் வழிபாடு வணிகமாகி விட்டது. ஆசைப்பட்ட மனம் மாசுறும்.

ஆதலால் ஆசையுடன் இறைவனை வணங்கற்க; திருவடிகளை வாழ்த்துதலையே உடைமையாகக் கொள்க; பட்டினத்தார் இறைவனைப் பேசு, பேசு, பேசு என்று பன் முறை கூறுகின்றார் ஏன்?

> "பேசு வாழி பேசு வாழி
> ஆசையொடு மயங்கி மாசுறு மனமே
> பேசு வாழி பேசு வாழி"

இன்று, வாய் படைத்தவர்கள் எல்லாம் பேசத்தான் செய் கின்றனர். ஆனால் ஐயகோ! அவர்கள் பேசுவது பேச்சா? அவர்கள் ஏன் ஊமையராய்ப் போயிருக்கக் கூடாது. பேச்சு, இன்று தூற்றலாக விளங்குகிறது. இது நன்றன்று.

ஆண்டாள் நாச்சியார் "தீக்குறளைச் சென்றோதோம்" என்று விளக்கிய 'கோள்' இன்று நடமாடாத இடம் எது?

வாழ்க்கை விரைந்து ஓடுகிறது; ஓட்டைக் குடத்தில் நிரப்பிய தண்ணீரைப் போல! இறைவனின் புகழை இன்றே பேசு; இப்பொழுதே பேசு; இந்நொடியிலேயே பேசு; எப்பொழுதும் பேசு! என்றும் பேசு! என்று உயிர்களை விரைவுணர்ச்சியில் ஆற்றுப்படுத்துகின்றார்.

திருவாசகம்,

> "பேசிற்றாம் ஈசனே எந்தாய் எந்தை
> பெருமானே என்றென்றே பேசிப் பேசி"

என்று கூறும். இறைவனைப் பேசுதல் எளிதன்று. தடைகள் தோன்றும். உலகியல் சூழும்; பலகாலும் பேசிப் பழகி விட்டால் இறைவனையே பேசுதல் எளிதாகும்.

சுந்தரர்,

> "நற்றவா உனை நான் மறக்கினும்
> சொல்லும் நா நமச்சிவாயவே"

என்றார். இறைவனைத் தொடர்ந்து நினைத்தலையும், பேசுதலையும் நமது வழக்கமாகக் கொள்வோமாக.

20

# ஞான உழவு!

பட்டினத்தார் துறவி; "காதற்ற ஊசியும் கடைவழி வாராது" என்று கடைபோகத் துறந்த மாமுனிவர். துறவின் தூய திருவுரு, பட்டினத்தார். பட்டினத்தார் வழித் துறவு சிறந்தால் உலகு சிறப்புறும். பட்டினத்தார் முற்றத் துறந்த முனிவரானாலும் உழைப்பின் அருமையை உணர்ந்திருக் கிறார்; உணர்த்துகிறார். இன்று துறவுக்கும், உழைப்பிற்கும் தொடர்பில்லை என்று சிலர் கருதுகின்றனர். உழைப்பே உலகத்திற்கு உயிர் .நாடி.

ஞான வாழ்க்கைக்கும் தளராத உழைப்புத்தான் தேவை. உலகியல் பொருளாதார முன்னேற்றத்திற்கு மட்டுமே உழைப்பு தேவை என்று கருதக் கூடாது. ஞான வாழ்க்கைக்கும் இடையீடில்லாத, தொடர்ச்சியான, சோர் வில்லாத முயற்சி தேவை. அக நிலையிலும் தேவை, புற நிலையிலும் தேவை. ஞான வாழ்க்கையில் கடுமையாக உழைத்தால் இப்பிறப்பிலேயே, உயிர் நிலையிலேயே ஞானம் பெறலாம்.

வாழ்க்கையின் மையம் மனமே! மனத்தின் வழியே பொறி, புலன்கள் தொழிற்படுகின்றன. மனம் தூய்மையாக

இருந்தால், பொறிகள் தூய்மையாக இருக்கும். புலன்கள் தூய்மையாக இருக்கும். அதனாலன்றோ வள்ளுவம்,

"மனத்துக் கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்"

என்றது. மனம் நிலம் போன்றது. நிலம் உழுது வளப்படுத்தாது போனால் வளம் தராது. ஆனால் உழாத—வளப்படுத்தாத நிலத்தில் புல், பூண்டுகள், முட்செடிகள் முளைக்கும். ஆக, நிலத்தை உரியவாறு பயன்படுத்த வேண்டும்.

அதுபோலவே, மனத்தை உழுது பண்படுத்த வேண்டும். மனத்தின் கண் தோன்றும் கருத்துக்கள், தீய எண்ணங்கள் ஒருநாள், இருநாள் முயற்சியில் மாறா. அவற்றை நாம் விடுக்க முயலும்தோறும் அவை கிளர்ந்து எழும். அதனால் மனத்தை "வஞ்சக் கட்டை" என்கிறார், பட்டினத்தார். நன்மை செய்தல் போலக் காட்டித் தீமை செய்ததால் "வஞ்சக் கட்டை" என்றார்.

மனத்தின் வஞ்சனையை, வஞ்சனையின் தீய எண்ணத்தை முதலற அதாவது வேரற எடுத்தல் வேண்டும். கழனியில் வேளாண்மை செய்யப்புகின் கழனியிற் கிடக்கும் வேளாண்மைக்கு பொருந்தாப் பொருள்களை அகற்ற வேண்டும்.

அதுபோல மனத்திற் கிடக்கும் பொருந்தா எண்ணங் களைத் தூர்வை எடுக்கவேண்டும். நிலத்தில் உரமிட, தண்ணீர் பாய்ச்ச வாய்ப்பாகவும், இடும் உரமும் பாய்ச்சும் தண்ணீரும் பரந்தோடிக் கெடாமல் இருக்கவும் பாத்திகள் அமைத்தல் இயற்கை. அதுபோல மனத்திலும் அன்பு, அறம், தொண்டு ஆகியவகைகளைப் பாத்திகளாக அமைத்து ஒன்றினை ஒன்று தழுவித் தொடர்ந்து தொழிற்படச் செய்ய வேண்டும்.

கழனியில் நட்டால் மட்டும் பயிர் வளர்ந்துவிடாது. உரம் இடுதல் வேண்டும். மனம் விளைந்து பயன்தர உண்மை

என்ற எரு இடவேண்டும். எது உண்மை? பொய்யாது ஒழுகுதலே உண்மை.

வள்ளுவம் வரையறுத்துக் காட்டிய வாய்மையில் வாழ்தலே உண்மை. மனத்தின்கண் விளைந்த சிவம் என்ற பயிர் முறையாக வளர, நாள்தோறும் ஆர்வம் என்ற தண்ணீரைப் பாய்ச்ச வேண்டும். இவ்வளவும் செய்த பிறகும் பயிர் வளர்ந்து கதிர் முற்றி நிற்கும்போது எருதுகளால் அழிவு வராமல் காப்பாற்ற வேண்டும். எருதுகள், விளைந்த கழனியிற் புகுந்து உழப்பும்; கதிர்களைத் தின்னும்; விளைந்த கதிர் களைக் காலிற்போட்டு மிதிக்கும்; விரட்டச் சென்றாலும் அவைகள் எதிர்த்துத் தாக்கும்.

அதுபோல, மனத்தின் கண் விளையும் சிவப் பயிரை ஐம்பொறிகள் அழிக்கும். ஐம்பொறிகள் சிவம் என்னும் பயிரை அழிக்காமல் சாந்தம். தகைமை, சீலம் ஆகிய வேலிகளை அமைத்துப் பாதுகாக்க வேண்டும்.

இங்ஙனம் மனத்தின் கண் சிவப் பயிரைக் காத்தால் ஞானம் பழுக்கும். இச் சிவப்பயிர் புண்ணியத்தை நல்கும். உயிரினைச் சேமப்படுத்தும் என்று வேளாண்மைத் தொழி லோடு ஞானத்தை உவமைப்படுத்தி, பட்டினத்தார் அருளி யுள்ள பாடல் ஓதி இன்புறத் தக்கது.

"உழப்பின் வாரா உறுதிகள் உளவோ
கழப்பின் வாராக் கையறவு உளவோ

அதனால்,

நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற அகழ்ந்து போக்கித் தூர்வை செய்து
அன்பென் பாத்தி கோலி, முன்புற
மெய்யெனும் எருவை விரித்துஆங்கு ஐயமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சி, நேர் நின்று

*தடுக்குநர்க்கு அடங்காது இடுக்கண் செய்யும்*
*பட்டி அஞ்சினுக்கு அஞ்சி, உள் சென்று*
*சாந்த வேலி கோலி வாய்ந்தபின்*
*ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்*
*கருணை இளந்தளிர் காட்ட, அருகாக்*
*காமக் குரோதக் களை, அறக் களைந்து*
*சேமப் படுத்துழிச் செம்மையின் ஓங்கி*
*மெய்ம்மயிர்ப் புளகம் முகிழ்த்திட்டு, அம்மெனக்*
*கண்ணீர் அரும்பிக் கடிமலர் மலர்ந்து*
*புண்ணிய*
*அஞ்செழுத்து அருங்காய் தோன்றி, நஞ்சுபொதி*
*காள கண்டமும் கண்ணொரு மூன்றும்*
*தோளொரு நான்கும் சுடர்முகம் ஐந்தும்*
*பவள நிறம்பெற்றுத் தவளநீறு பூசி*
*அறுசுவை யதனினும் உறுசுவை யுடைத்தாய்க்*
*காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்*
*சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி*
*பையப் பையப் பழுத்துக் கைவர*
*......................"*

என்று திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் அருளி யுள்ளார். பட்டினத்தார் வழியில் நாமும் ஞான வேளாண்மை செய்திடுவோம்! ஞான உழவில் மனத்தைத் தூய்மை செய்வோம்! மனத்தினைக் காடு ஆக்காமல் "சிவம்" என்னும் பயிர் விளையும் கழனியாக்குவோம்!

மனத்தில் முகிழ்க்கும் சிவஞானத்தைச் சீலத்தால் பாதுகாத்துத் தொண்டு என்னும் தூயவேலி அமைத்துப் போற்றிப் பாதுகாப்போம்! மனம் சிவம். ஆனால் மண்ணுலகம் சிறக்கும். பட்டினத்தார் வழியில் ஞானஏர் உழவைப் பூட்டுக! ஞானஏர் உழவை சிறப்புற நடத்துக.

# 21

# எல்லை கடந்த பொருள்!

கடவுள் எங்கே? அவர் எப்படி இருப்பார்? கண்ணால் காணக் காட்ட முடியுமா? — என்ற வினாக்கள் இன்று பிறந்தன அல்ல. கடவுள், பழம் பொருள்! வினாக்களும் பழமையானவையே! விடை காண முடியாத வினாக்கள்! விடையே காண முடியாத வினா உண்டா? உண்டு!

விடையே காண முடியாத வினா உண்டு என்பதே அறிவியலின் அடிப்படை! இடையில் விடை என்ற பெயரில் சில விடைகள் தோன்றலாம். அவையே முடிவான விடைகளா? என்ற வினாத் தோன்றும்; இங்ஙனம் வினாவும் விடையுமாகச் சுழன்று வளருவது அறிவியல். திருவள்ளுவரும் "அறிதோறறியாமை" என்பார்.

ஐம்பூதங்களை அறியும் அறிவியலிலேயே அறியாமை இருக்கிறது. கண்ணால் காண்பன, உடலால் உற்றறிவன - இவற்றிலேயே இன்னமும் முழுநிலை கண்டபாடில்லை! இவற்றைக் கடந்த கடவுளைப் பற்றி 'காண்க' என்பதும் 'காட்டுக' என்பதும் 'காட்டுவேன்' என்பதும் சிறுபிள்ளை விளையாட்டேயாம்.

அறிவு, வளரும் இயல்பினது. அதற்கு எல்லை கிடையாது. சாதாரணமாக உலகியலில் அறிவுடையார் யார்? என்று காண்பதே புரியாத புதிர்! அறியாமையே கூடப் போலியாக அறிவு வேடம் பூண்டு ஆரவாரம் செய்வதைக் காண்கின்றோம். இதில் சாதாரண அறிவு கிடக்கட்டும்! வேதங்கள் என்ன ஆயின? என்று கேட்கலாம்.

வேதங்களும் கூட வளர்ந்தும் வளராத உயிர்களின் படைப்புக்கள் தாமே! வேதங்கள் முழுநிலைத் தகுதி யுடையன என்றால் அவற்றுக்கு எப்படி உரைகள் மாறுபடும்? சிலர் வேதங்களுக்குப் பெருமை சேர்ப்பதற்காக வேதங்களை இறைவனே அருளிச் செய்தான் என்பர். அஃது ஏற்றுக் கொள்ள முடியாத உண்மை! உபசார வழக்கு– அவ்வளவுதான்!

வேதங்கள் இறைவனைத் தேடியும் காண முடிய வில்லை என்பது மாணிக்கவாசகர் வாக்கு. வேதங்கள் கடவுளால் படைக்கப்பட்டன அல்ல. அவைகளால் கடவுளைக் காணவும் இயலாது. கடவுள் வேதங்களையும் கடந்தவன். வேதங்களால் தொடர முடியாதவன் என்பார் பட்டினத்தார்.

"ஆரணம் தொடராப் பூரண புராண"

என்று பாடுகின்றார். கடவுள், பூரணன்! பூரணம் உடைய ஒன்றை பூரணமில்லாத ஒன்று காணவும் இயலாது; காட்டவும் இயலாது. வேதங்கள் காலத்தால் பழைமை யானவை. ஆனால், கடவுள் காலத்தைக் கடந்த பழைமை யானவன் என்பதை விளக்க "பூரண புராண" என்றார்.

வேதங்களானாலும் சரி, வேறு எந்த நூலானாலும் சரி, உரைகள் காண்பது அறிவுத் துறையில் முயல்வோர் வழக்கு. வகை வகையாக உரைகள் காண்பர்! பின், அவ்விரு வகை உரைகளிடையே மோதல்! இங்ஙனம், வகை வகையாக உரைகள் காண முயல்வார். உரைகளையும் கடந்த

உள்ளார்ந்த அனுபவத்தில் ஈடுபடின் பயன் உண்டு! ஆனால், அத்துறையில் ஈடுபடுவோர் அரியரில் அரியர். அனுபவத்திற்கும் உணர்விற்கும் வாயிலாக அமையாத உரைகாணும் முயற்சி பயனற்றது.

பாட்டுக்குப் பொருள் உண்டு! ஆனால், பாடுவோர் பாட்டினைப் படித்து, உணர்வாரின் தகுதி நோக்கிப் பொருளின் அறிவு கூடும்; குறையும்—மாறுபடும்; முரண் படும். மனிதர்கள் காணும் பொருள், எல்லைகள் உடையது.

எல்லைகளைக் கடந்த பொருளுக்கு, எல்லைக் குட்பட்ட பாட்டும், பொருளும் எப்படி எல்லை காட்ட முடியும்? இல்லாத ஒன்று. அதனால் பட்டினத்தார் கடவுள், உரைகளைக் கடந்தவர்; உரைகளின் வரைகளைக் கடந்தவர்; உரைகள் காட்டும் பொருள்களின் அளவைக் கடந்தவர் என்று பாடுகின்றார்.

> "உரையின் வரையும் பொருளின் அளவும்
> இருவகைப் பட்ட எல்லையும் கடந்து"

என்பது அருள்வாக்கு!

அறிவு, நிறை நலம் சான்றதாக வளரும் பொழுது "ஞானம்" என்று பெயர் பெறுகிறது. ஞானத்தைத் திருவள்ளுவர் "வாலறிவு" "செம்பொருள்" "மெய்ப்பொருள்" என்றெல்லாம் கூறி விளக்குவார். அறிவு, ஞானமாக முதிர்ச்சி யடையும்போது அறியாமையின் நிழல்கூட இருக்காது. அந்த ஞானம் கண்டோரை, கேட்போரைத் தன்பால் ஈர்க்கும்; மணம் நிறைந்ததாக இருக்கும்.

ஞானத்தில் வார்த்தைகள் பேசா! ஞானம் மோனத் தன்மையுடையது. ஞானம் குறிப்பில், உணர்த்தும். ஞானத்தைப் பெறுதற்குத் தகுதி உடையார் குறிப்பில் உணர்வர். இந்தத் தத்துவத்தின் வழிபாடே ஆலமர் செல்வன் வழிபாடு! ஆலமர் செல்வன் இருந்தபடியே இருக்கிறார்.

ஆனால் எண்ணிலாதனவற்றை உணர்வார்க்கு உணர்த்து கின்றார்!

ஆலமர் செல்வன், வலக்கையின் ஆட்காட்டி விரல் அதாவது சுட்டுவிரலைக் கட்டை விரலுக்குக் கீழாகக் கொண்டு பொருத்தி, மற்றைய மூன்று விரல்களையும் நீட்டிய வாறு காட்டி ஏதோ பாடம் சொல்லிக் கொடுக்கிறார்! “சின்னமுத்திரை” என்று சொல்லப்படுகின்ற இந்த முத்தி ரையைப் பற்றிக் கவிஞன் பாடத் தொடங்கினால் நூறு பாட்டுக் கூடப் பாடலாம்!

ஞானம், மோனத்திலே காட்டும் படிப்பினை என்ன? சுட்டுவிரல் மடங்குகிறது. சுட்டிக் காட்டப் படுதல் பெருமையின் சின்னம்! புகழின் அடையாளம்! மனித உலகம் அலமருவதெல்லாம் சுட்டிக் காட்டும் சொல்லைப் பெற வேண்டியே! அதனாலன்றோ, இன்று மனித உலகம் புகழ் வேட்டைக் காடாக விளங்குகின்றது.

ஆதலால், புகழினைப் பெறும் அவாவினை, ஞானத் தினை நோக்கி மடைமாற்றம் செய்தல் வேண்டும். கடவுளை நாடிச் செல்லும் ஆன்மா—உயிர் மோனத்தில் அமரும். மோனம் என்பது உயர்நிலை! செயலின்மையெல்லாம் மோன நிலையாகாது! வாயினால் பேசாமையெல்லாம் மோன நிலையாகாது.

சிலர் “இன்று மௌனம்” என்பர். ஆனால், அன்றுதான் அவர்களின் பொறிகளும், புலன்களும் வேகமாகத் தொழிற் படும். அதில் என்ன பயன்? சும்மா இருத்தல் என்பது உயர் ஞானக் கலை! உயிர் உடல் மற்றும் அறிதல் கருவிகள், செயற்கருவிகள், உணர்வுக் கருவிகள் அனைத்தும் ஒரு நிலையில் ஒன்றித்து, அடங்கி அனுபவத்தில் திளைத்தலே மௌனம். இதையே அனுபூதி என்பர்.

இதுவே, பேசா அனுபூதி! பேச்சு இறந்ததே அனுபூதி! விவகார உணர்வு ஒடுங்கும் வரையில் அனுபூதி தோன்றாது. இதனைப் பட்டினத்தார், நன்கு விளக்குகிறார்.

ஆதலால், இறை நெறியில் பட்டினத்தார் நெறி, தேடும் நெறியல்ல; ஓதும் நெறியல்ல; உற்றுணர்ந்து அறியும் நெறியேயாம். ஞானம் ஆரவாரத்தில் வராது. ஆழ்கடலின் அடி மடியில்தான் நன்முத்து கிடைக்கும்.

அதுபோல வாழ்க்கையின் ஆழ்கடலில்தான் "ஞானம்" என்ற முத்து கிடைக்கும். ஆதலால் பட்டினத்தார் நெறியில் இறைவனைக் காண மோனத்தில் அமருவோம்.

மோனம் என்பதற்கு பரபரக்காமல் ஒன்றினை நினைந்து நினைந்து அதில் ஆழ்தல் என்பதே பொருள். எந்தச் சூழ்நிலையிலும் மனம் விகாரமடையாமல் அமைதியாக இருத்தலே மோனம். இத்தகைய மோனநிலை ஆற்றல் மிக்கது. அத்தகு மோனத்தைப் பெற பட்டினத்தார் அடிச்சுவட்டில் முயலுவோமாக! வாழ்ந்து வாழ்விப்போமாக.

# 22

# பிழை தவிர்த்தாளும் பெருமான்!

பட்டினத்தார் அருளாளர்; வாழ்க்கையில் வெற்றி பெற பிழைகளைத் தவிர்க்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார்! ஆற்றுப்படுத்துகின்றார். சிறு பிழைகளையும் மலையாக நினைந்து வருந்துதல் வேண்டும். "நேற்றோடு வாழ்க்கை முடியாமல் இன்றைக்கும் வாழ அனுமதிக்கப் பெற்றிருப்பது பிழைகளைத் தவிர்த்துக் கொள்வதற்காகவேயாம். இறைவன் பிழைகளைப் பொறுப்பான். அதனால் தொடர்ந்து பிழைகள் செய்யலாமா? செய்யக் கூடாது.

பிழைகளினின்றும் விடுதலைபெற முயற்சி தேவை. பிழைகளை நினைந்து வருந்துதல், பிழைகளுக்குரிய காரணங்களை அறவே களைதல், பிழைகள் வாராது தடுக்கும் முயற்சியில் தலைப்படுதல் ஆகியன தேவை.

பட்டினத்தடிகள் பிழைகளைப் பட்டியல் போடுகிறார். மற்றவர் பிழைகளுக்குப் போட்ட பட்டியலன்று. அதை எளிதில் பலர் போடுவர். ஆனால் அவர் தம்பிழையென்று எண்ணி நினைந்து வருந்துகின்றார்; அழுகின்றார்.

பிழைகளுக்குக் காரணம் அறியாமை. அறியாமை என்பது தெரியாமையன்று; ஒன்றினைப் பிறிதொன்றாகத்

திரிபுணர்ச்சியுடன் அறிவதே அறியாமை. திரிபுணர்ச்சியால் உலகம் துன்புறும்; அழியும்; அறியாமை நீக்கத்திற்கு ஞான நூல்களைக் கற்கவேண்டும். கற்கும் நூல்களைத் தேர்ந் தெடுப்பது ஒரு கலை.

கற்பது, பழக்கமும், வழக்கமும் ஆகவேண்டும். நாள் தோறும் நூல்களைக் கல்லாதவர்கள் பிழை செய்கிறார்கள். ஞான நூல்களைக் கற்றால் மட்டும் போதாது அந்நூற் கருத்தினைக் கருதுதல் வேண்டும். சிந்தித்தல் வேண்டும். அங்ஙனம் கருதாததும், பிழையே!

இதயம் ஈரமாக இருத்தல் வேண்டும். "ஈர அன்பினர்" என்பார் சேக்கிழார். ஈரத்தின் விளைவு கசிதல்—உருகுதல். இறைவனை நினைந்து கசிந்துருகி அழாததும் பிழையே. வாழ்க்கையின் இன்பதுன்பச் சூழற்சிகளில் நினைக்க வேண்டாததை நினைக்கவும், நினைக்கக் கூடியதை மறக்க்வும் வேண்டிய சூழ்நிலை ஏற்படும். இறைவனை நினையா திருத்தல் பிழை.

இறைவனின் திருவருளைத் தருவது ஐந்தெழுத்து. ஐந்தெழுத்தின் அருமையைத் திருமுறை அருளிய ஞானாசிரி யர்கள் பாடியுள்ளனர். ஐந்தெழுத்தினை "வைத்த பொருள்" என்று கருதும்படி அப்பரடிகள் அறிவுறுத்துகின்றார். சுந்தரர், "மற்றுப் பற்றெனக்குன் திருநாமமே மனம் பாவித்தேன்" என்பார். ஐந்தெழுத்தினை எண்ணிச் சொல்லாததும் பிழையே!

இறைவன் போற்றுதலுக்குரியவன்; அவன் குறைவிலா நிறைவு; கோதிலா அமுது. அப்பொருளைப் போற்றித் துதி செய்தல் கடமை. அங்ஙனம் செய்யாததும் பிழை. கற்று, கருதி, கசிந்துருகி நின்று, நினைந்து, ஐந்தெழுத்து ஓதி, துதித்து வாழ்தல் பிழையிலா வாழ்க்கைக்கு வழிகாட்டும்.

கடவுள் எழுந்தருளியுள்ள திருக்கோயில்கள் விண்ணளந்து காட்டி வினை மறைப்பவை. நெடுந்

தொலைவுக்குத் தெரியும்! தோட்கப்படாத செவிகளுக்கும் கேட்கும் வகையில் மணிகள் ஒலி செய்யும். ஆதலால், திருக்கோயிலைக் கண்டவுடன் தொழுக! ஆலய மணி ஒலி கேட்டவுடன் தொழுக! அப்படித் தொழாஅத தூஉம் பிழை. இவை அடிகள் காட்டும் பிழைகள்! இப் பிழைகளிலிருந்து கிளைத்தெழும் பிழைகளும் உண்டு. பிழைகள் நீங்க வில்லையானால் பிழைகளைத் தொடர்ந்து பழி வரும்; பழி, பாவத்தைத் தரும்; பாவம், நரகத் துன்பத்தைத் தரும். ஆதலால், பிழைகளைத் தவிர்த்து வாழ முயல்க!

பிழைகளைத் தவிர்ப்பது எளிதன்று. பழக்கம் மிகமிகக் கொடிது. உயிரின் அறிவு பழக்க வாசனையின் வழியிலேயே செல்லும். தீய பழக்கங்களிலிருந்து உயிரை நேரடியாக மீட்பது எளிதன்று. மீட்கும் பணியைவிட உயிர்க்கு நலம் பயக்கும் பழக்கங்களில் ஈடுபடுத்துதல் நன்மையைத் தரும்; மீட்பாகவும் அமையும். தீமையும் எளிதாக விலகும். பிரார்த் தனை என்பதே பிழைகளை நினைந்து வருந்தி நல்லறிவு வேட்டலேயாம்.

"யானே பொய்என் நெஞ்சும்
பொய்என் அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால்
உன்னைப் பெறலாமே!"

என்று மாணிக்கவாசகர், பாடுகின்றார்.

ஆதலால், பிழைகளைத் தவிர்த்து வாழப் பிரார்த்தனை செய்க! உயிர்களைப் பிழைகளிலிருந்து மீட்பது பிரார்த் தனையே! பிழைகளைத் தவிர்க்கப் பயன்படும் பிரார்த் தனையே இன்று பிழைகளாக உருமாற்றம் பெற்றுள்ளன. தீவினையை நினைந்து வருந்த வேண்டியதிருக்கிறது.

இறைவனின் சந்நிதியில் பொன்னும் பொருளும் புகழும் வேண்டிப் பிரார்த்தனை செய்தல் பிழையென்பதை அறிக! ஆதலால், பிழைகளைத் தவிர்த்திட முயலுக!

அறியாமையை அகற்றுக! நல்ல ஞான நூல்களை—கற்க! கருதுக! இறைவனை நினைந்து கசிந்துருகி அழுக! தொழுக! உய்வு பெறுக.

நாம் மனிதர்கள்தாமே! நம்முடைய அறிவு, ஆற்றல் எல்லைக்குட்பட்டவை. நாம் வாழும் சமுதாய அமைப்பு செப்பமில்லாதது. ஆதலால், நாமே பிழைகளிலிருந்து முற்றாக விடுதலைபெற இயலாது. முயன்றாலும் அது சேற்றுக் குட்டையிற் சிக்கிய மாடு கரை ஏறியதைப் போலத்தான்! அதற்காகப் பிழைகளைத் தவிர்க்கும் முயற்சியை விட்டுவிடக் கூடாது.

முற்றாக நம்மைப் பிழைகளிலிருந்து நீக்கித் தவிர்த் தாளும் தண்ணளி பெருமானுக்கு உண்டு. அவன் பொறுத்தருளாது போனால் நமக்கேது உய்தி? குன்றே அனைய குற்றங்களைக் குணமாகக் கொண்டு ஆட்கொள் ளுதல் அவனுடைய கருணையின் செயல்! அவன் உயிர்கள் நோகாவண்ணம் பையத் தாழுருவித் தண்ணளி செய்திடு வான்.

“கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின்
அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே!

பட்டினத்தார் வழியில் நாமும் பிழைகளை நினைந்து வருந்துவோம்! பிழைகளைத் தவிர்த்து வாழ்ந்திடுவோம்!

# 23

# கொல்லாமை வேண்டும்

பட்டினத்தடிகள் முழுதுணர்ந்த ஞானி. அவர் உலகியலை அறிந்து வருந்தியதைப் போல யாரும் வருந்த வில்லை. மனித உலகில் தொடர்ந்து நடைபெறும் ஓர் அநீதி — வல்லாளன் வல்லமை இல்லாதானை அடித்துச் சாப் பிடுதல்.

உலகில் எத்தனையோ சமய நெறிகள் தோன்றியும், இலக்கியங்கள் தோன்றியும், சட்டங்களும் அவ்வழிப்பட்ட ஆட்சி முறைகளும் தோன்றியும் இந்த அநீதி நீங்கிய பாடில்லை.

காலையிலிருந்து மாலை வரையில் கடுமையாக உழைப்பவர்க்கு வாழ்க்கை இல்லை. அவர்கள் பிழைக் கிறார்கள். ஏன் இந்த அநீதி? இந்தக் கேள்வியை பிரெஞ்சுப் புரட்சிக்கு வித்திட்ட ரூசோவும் கேட்டார்; சோவியத் புரட்சிக்குத் தந்தையாகிய லெனினும் கேட்டார். நமது அருள்ஞானத் துறவியாகி பட்டினத்தாரும் கேட்கிறார். மற்றவரைக் கொன்று வாழுதலும் வாழ்க்கையாமோ?

வல்லோர், வலிமையில்லாதாரை அடுதலும் தொலைத் தலும் ஆண்டாண்டுக் காலமாகத் தொடர்ந்து நடந்து வரும்

அநீதி! ஆலயங்கள் என்ன செய்கின்றன? ஆம்! அவை இன்று வல்லமையாளர்களுக்குப் புகலிடம்! சான்றோர் என்ன செய்கின்றனர்? அவர்களைத் தேடிக் காணவேண்டிய திருக்கிறது. இந்த அநீதியை அறநெறிப் பார்வையில் அடிகள் அறிவிக்கிறார்!

ஒரு பெரிய பாம்பு; சிறிய பாம்பை விழுங்குகிறது. சிறிய பாம்பு, அதனினும் சிறிய தேரையை விழுங்குகிறது. தேரை, அதனினும் சிறிய பூச்சிகளை விழுங்குகிறது. இவை எங்கும், எல்லா இடத்திலும் வலிமையின்மையுடையன படும் அவதிக்கு எடுத்துக் காட்டு! அடிகள் ஏன் இதைக் கூறுகிறார்? ஓர் உண்மையை விளக்க முற்படுகிறார். பாம்பு தற்காப்புக் காகவே கடிக்கும். வலிந்து சென்று கடிக்காது. வலிந்து தீமை செய்தல் மனிதனைத் தவிர வேறு எந்த உயிரினத்திற்கும் இல்லை. பாம்பைத் துன்புறுத்தாதார், பாம்பினாலும் துன் புறுத்தப்பட மாட்டார். "சான்றோர் அவைப்படின் பாம்பும் உய்யும்" என்பது கலித்தொகை. மனிதர்கள் தமக்குத் தீமை செய்யாதார் மாட்டும் தீமை செய்கின்றனர். ஏன்? அவர் களுக்கு நன்மை செய்தாருக்கேகூடத் தீமை செய்கின்றனர்.

மனிதர்கள் மேற்கொண்டு ஒழுக வேண்டிய அறத்திற் சிறந்தவை—துன்புறுத்தாமை, கொல்லாமை ஆகிய அறங் களாம். இதனை அகிம்சை யென்று அண்ணல் காந்தியடிகள் கூறினார். மகவெனப் பல்லுயிரையும் ஒப்ப நோக்கும் அருளுணர்வு வேண்டும்.

தற்செயலாகத் தன்னிடத்திற் பிறந்த மக்களே தம் மக்கள் என்று மட்டும் கருதி அன்பைச் சுருக்குதல் கூடாது.

அங்ஙனம் அன்பு சுருங்கினால் வறட்சியால் காய்தல், உவத்தல் ஏற்படும். அதனால் அறிவு மயங்கி நடுவுநிலை கெட்டு ஒழுக்கம் கெடும். ஒருவரை ஊட்டி வளர்த்தும், ஒருவரைப் பரிவு காட்டாது ஒதுக்கியே வாழ்தலும் கற்ற வர்க்கும் அழகல்ல; தாய்மைக்கும் அழகல்ல.

எல்லா உயிர்கள் மாட்டும் ஒத்தநிலையில் அன்பினைக் காட்டாமல் ஓரவஞ்சனை செய்தவர்கள் நேற்றும் கெட்டார்கள் — கைகேயி சான்று. இன்றும் கெட்டவர்களை நாடு அறியும்! ஆதலால் எல்லா உயிர்களிடத்திலும் அன்பினைக் காட்டுக! கருணையைக் காட்டுக என்று வள்ளுவம் பேசுகின்றது.

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை; இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்" (243)

என்று வள்ளுவர் கூறுகிறார்.

பிற உயிர்கள் அஞ்ச வாழ்வோர், தன்னுயிர் அஞ்ச வேண்டிய காலமும் வரும். இவர்களால் வருத்தப்பட்டவர்கள், துன்புறுத்தப்பட்டவர்கள் எதிர்வினையாக இவர்களுக்குத் துன்பம் தரலாம். அவர்கள் தரமுடியாத நிலையில் இருந்தாலும், தர விரும்பாதவர்களாக இருந்தாலும்கூட நீதிவழிப்பட்ட அறஇயல் இவர்களுக்குத் துன்பத்தைத் தந்தே தீரும். "அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு" என்பது குறள்.

ஆதலால், எல்லா அறங்களிலும் மிக்குயர்ந்தது கொல்லாமை. உடற் கொலை மட்டும் கொலையன்று. உயிர் உரிமைகளைப் பாதுகாக்காது வாழ்வதற்குரிய வாய்ப்புகளை வழங்காது வாழ்விழக்கச் செய்தலும் கொலையே யாம். ஓர் உயிர் வயிறு வளர்க்க நூறு, ஆயிரம் உயிர்கள் கொல்லப் படுகின்றன.

கொல்லா நெறியைத் திரும்பத் திரும்ப பாரதத்தில் புத்தர், மகாவீரர், வள்ளுவர், அப்பர், அருட்பிரகாச வள்ளலார் ஆகியோர் தொடர்ந்து வலியுறுத்தியும் உயிர்க் கொலை நீங்கின பாடில்லை. புலால் உணவு விட்டொழிந்த பாடில்லை. எங்கும் கொலை உணர்வு கூத்தாடுகிறது. கொலை செய்வார் நெஞ்சத்தில் திருவருள் நோக்கு பதியாது. ஏன்? உலகியலும் வறட்சியுறும். பாரதி,

*"நேராக மானுடர்தாம் பிறரைக் கொல்ல*
*நினையாமல் வாழ்ந்திட்டால் உழுதல் வேண்டா;*
*காரான நிலத்தைப் போய்த் திருத்த வேண்டா;*
*கால்வாய்கள் பாய்ச்சுவதில் கலகம் வேண்டா;*
*சீரான மழைபெய்யும்; தெய்வம் உண்டு!*
*சிவன்செத்தா லன்றி மண்மேல் செழுமை உண்டு!*

என்று பாடுகின்றார்.

மானிட உலகம் கொல்லாமையை மேற்கொண்டொழுகுதல் வேண்டும். உடற்கொலை, உயிர்க்கொலை, அறிவுக் கொலை, உணர்வுக் கொலை ஆகிய எந்தக் கொலையும் கூடாது.

இன்று அறிவியல் கொடிய கொலைக் கருவிகளைப் படைத்துக் கொண்டிருக்கிறது. போர்ப்பயம் அச்சுறுத்திக் கொண்டிருக்கிறது. போர் தோன்றின் உயிர்க்குலம் அனைத்தும் அழிந்து போகும். ஆதலால் வேண்டாம்! வேண்டவே வேண்டாம்! ஒருபுறம் கொலை! மற்றொருபுறம் தொழுகை! இதனால் என்ன பயன்? கவிதைகளில் முரண் தொடை இனிமையாக இருக்கலாம். வாழ்க்கையில் முரண் பாடுகள் நல்லனவுமல்ல; நாகரிகமும் அல்ல. ஆதலால், பட்டினத்தார் நெறிவழி கொல்லாமையை மேற்கொண்டு ஒழுகுவோமாக!

வலிமை இல்லாதாரின் உரிமைகளைப் பாதுகாப்பதே வல்லமையுடையாரின் சீலம்; நோன்பு! அப்பொழுதுதான் அருள் பழுத்த மனம் கிட்டும்! அப்பொழுதுதான் கடவுள் தொழுகைக்கும் பொருள் உண்டு. உயிர்க் கொலை தவிர்மின்! புலால் உணவைப் புறக்கணிமின்! யாருக்கும் நோதக்கன செய்யன்மின்! எவ்வுயிர் மாட்டும் அன்பினைச் சொரிமின்! வையகம் உண்ண உண்மின்! உலகம் உடுத்த உடுத்துமின்! கடவுள் பெயரால் கொலை தவிர்த்து பட்டினத்தார் நெறியில் புது உலகம் அமைப்போம்! பொது உலகம் சமைப்போம்!

# 24

# தேடிப் பெறுவதா?

துணையொடு கூடிய வாழ்க்கையே நல்வாழ்க்கை — அன்பு நலங்கனிந்த வாழ்க்கை — அற வாழ்க்கை. உலகியலில் ஒவ்வொருவருக்கும் அவர்கள் வாழ்க்கையில் பல வேறு துணைவர்கள் கிடைக்கின்றார்கள். கொஞ்சநாள் கூடி வாழ்கிறார்கள். பின்னர் பிரிந்து விடுகிறார்கள். சிலர் காரணத்துடன் பிரிவார்கள்—சிலர் காரணமின்றியே பிரிவார்கள்—சிலர் தம் பிரிவுக்குக் கற்பனையாகக் காரணம் காட்டுவார்கள். எப்படியோ இவ்வுலக வாழ்க்கையில், நமக்குக் கிடைத்த துணைவர்களிற் பலர் பிரிந்துவிடு கிறார்கள். தன்னலங்களையும் தடைகளையும் கடந்து பாசத்தோடும் பரிவோடும் துணையாகத் தொடர்ந்து வாழ்ந்தவர்கள் இயற்கை நியதியில்—மரணத்தால் பிரிக்கப் படுகின்றனர். அப் பிரிவினைகளையும் கடந்து உயிரை ஒட்டிச் சென்று மறுமையிலும் உறவு கொள்ளுகின்றவர்களும் உண்டு. அத்தகையோர் கோடியில் ஒருவரே. அத்தகு துணை உலகியலில் கிடைப்பது அருமையிலும் அருமை. அதனா லன்றோ உலகியல் துணைகளைவிட இறைவனைத் துணையாகக் கோடல் சாலச் சிறந்ததெனச் சான்றோர் சொல்லுகின்றனர். இறைவனைத் துணையாகக் கொண்டால்

அவன் எப்பொழுதும் எக்காலத்தும் எக்காரணத்தாலும் பிரிவதில்லை.

இம்மையோடன்றி மறுமையும் எழுமையும் தொடர்ந்து துணையாக இருப்பவன்—நரகொடு சொர்க்கம் நானிலம் புகினும் பிரியாதவன். அதனாலன்றோ மாணிக்கவாசகர் இறைவனை 'தனித்துணை' என்று கூறி வாழ்த்துகிறார். இறைவனைப் பெறுவது எப்படி? பிற சமயங்கள் 'தட்டினால் கதவு திறக்கப்படும்' என்று சொல்லும். தட்டும் சக்தி வந்து விட்டால் கதவு திறக்க இன்னொருவரும் வேண்டுமோ? தட்டும் பதவி பெற்ற ஒருவர் அக் கதவினை உதைத்து, உடைத்து உள்ளே நுழைய முடியாதோ? மேலும் தட்டின பிறகு கதவு திறப்பதில் என்ன பெருமை இருக்கிறது? அதற்குக் கருணை என்றா பெயர்? வலிய உதவி செய்யும் (Volunteer Service) பண்பே வாழ்த்தப் பெறுகிறது. நம்முடைய வழிபடும் தெய்வமாகிய முருகன், தட்டாமலேயே கதவு திறப்பவன்; அதனாலன்றோ 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்று திருவாசகம் பேசுகிறது! நாம் திருவருளைப் பெற வேண்டும். அவ்வின்பத்தைப் பெற்று வாழவேண்டும் என்று விரும்பி முனைவதைவிட நமக்கு அத்திருவருள் நலத்தை வாரி வழங்கவேண்டும் என்றே திருவுளங்கொண்டுள்ளான் முருகன். வந்த பிறகு வாரி வழங்கவில்லை. இதைத்தான் 'வாரி வழங்குகின்றான் வந்து முந்துமினே' என்கிறார் மாணிக்கவாசகர். இக்கருத்தினைத் திருவாசகத்தில் பல இடங்களில் பரக்கக் காண்கின்றோம். இறைவன் திருவருள் வழங்குகின்றமையைப் 'பால் நினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்தூட்டும்' என்கிறார். அழுதபின் ஊட்டும் தாய் அவ்வளவு சிறப்புடையளல்லள். அழாமலேயே காலத்தையும் பசியையும் கருத்திற்கொண்டு நினைந்தூட்டும் தாய் சிறப் பானவள். இறைவனாகிய தாயும், இத்தகைய தாயையும்விடச் சிறந்த முறையில் அருள் வழங்குகின்றான். 'நினைந்தூட்டும் தாயினும்' என்ற வரி நினைந்து நினைந்து மகிழத்தக்கது. இந்த

வரியின் பொருளைத் திருக்குறள் இன்பத்துப்பால் தெளிவாக விளக்குகிறது. தலைவன் தலைவியிடம் 'உன்னை நினைந் தேன்' என்று கூறினான். உடனே தலைவி அழுதாள். 'ஏன்' என்று தலைவன் கேட்கத் தலைவி, 'நினைந்தேன்' என்றால் நினைப்பதற்கு முன் மறந்ததும் உண்டன்றோ? என்கிறாள். மறதிக்குப் பின் தோன்றுவதே நினைவு. இறைவன் நினைந் தருள் வழங்கினான், என்றால் ஒரு போது மறந்தானோ என்ற கேள்வியும் எழும். அவன் ஒருபோதும் உயிர்களை மறக்க வில்லை என்பதைக் குறிக்கவே மாணிக்கவாசகர் இங்ஙனம் குறிப்பிடுகிறார்.

இறைவனின் திருவருளின்பம் நாம் பெறுவதல்ல — அவன் வழங்குவதேயாம். வான்பழித்து, மண் புகுந்து மனிதர் களை ஆட்கொள்கிறான். அவனுடைய திருவருளினாலேயே நாம் ஆட்கொள்ளப் பெறுகின்றோம். அவன் நம்மை ஆட்கொள்வதற்காகவே கோலங்கள் தாங்குகின்றான். ஆயிரம் திருநாமங்கள் பெறுகின்றான். எனவே, இறைவனை நாம் தேடிப் பெறுவதில்லை. அவனே நம்மை நோக்கி ஓடி வருகிறான். அவன் ஓடி வரும்போது நாம் அவனை இழக்காமல் பற்றிக் கொள்ளவேண்டும். மழையை நோக்கி மனிதன் போவதில்லை. மழை வளந்தரும். புயல் வானிலே பரவி வான் வீதியில் வருகிறது. அப்புயலைத் தீண்டி நீர்த் துளிகளாக மாற்றி மழையாகப் பெற மண்ணகத்தே குளிர் காற்றுத் தேவை. குளிர்ந்த காற்றுள்ள இடத்தில் மழை நிறையப் பெய்கிறது. மண் வளம் செழிக்கிறது. அது போலவே இறைவனுடைய திருவருள், வேற்றுமையின்றி எங்கும் பரவிக் கிடக்கிறது. அதைத் தனக்குப் பயன்படுத்திக் கொள்ள நம்முடைய நெஞ்சத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆதலால்தான் நாம் இறைவனைத் தேடிப் போவ தில்லை. அப்படித் தேடிப் போவதாலும் அவனைக் காண முடியாது என்ற கருத்தை அருணகிரியார் அழகாக— தெளிவாக விளக்குகிறார்.

மனித மனம் ஒரு புரியாத புதிர்—அது செல்லக்கூடிய வேகம், மின் அணு அலைகள் செல்லும் வேகத்தைவிட அதிகமானது. அது எங்கும் செல்லும்—எப்போதும் செல்லும். சிறகடித்துப் பறந்து செல்லும். அது நல்லதா? தோட்டத்தில் மேயும் மாடு பட்டிக்குப் போகிறது. அந்த வீட்டு வாழ்வில் உலாவி மேயும் மனத்தை எந்தப் பட்டிக்கு அனுப்புவது? மாட்டை அடைக்கப் பட்டி—மனத்தை அடக்க பக்தி. பட்டியில் அடைந்த மாடு வேறு வழியாக வெளியே போய்விட்டால் பட்டியால் பயனில்லை. பக்தியிருந்தும் பலர் வாழ்வில் மேய்ந்தால் அந்த பக்தியால் பயனில்லை. 'தடுங்கோள் மனத்தை' என்று ஆணை இடுகிறார் அருண கிரியார். கண்டபடி மேயும் மாட்டைக் கட்டிப் போட்டால் பொறுமையாக இருக்குமா? ஆத்திரப்படும், அறுத்துக் கொண்டு போக முயற்சிக்கும். தடுத்து நிறுத்தப்போனால் கோபத்தோடு முட்டும். விரைந்து வேகமாகச் செல்லும் மனத்தைத் தடுத்து நிறுத்தி வாழாது போனால் வெகுளி வாழ்க்கையை வெருட்டும். ஆதலால்தான் 'விடுங்கோள் வெகுளியை' என்றாணையிடுகிறார். மனத்தின் வேகத்தைத் தடுத்து நிறுத்தினமையையும், வெகுளியை விட்டொழித்தமை யையும் காட்டுவன தன்னலச் சார்பழிதலும் பிறர் நலப்பற்றுக்கால் கொள்ளுதலுமேயாம். அப்பொழுது எதுவும் தனக்கு மட்டும் உரியதல்ல—பிறர்க்கும் உரியதாகும். ஏன்? தாம் அனுபவிப்பதைவிடப் பிறரை அனுபவிக்கச் செய்வதி லேயே ஆனந்தம் காண்போர் மேலோர். இங்கேதான் பிறக் கிறது தானம். இப்படிச் செய்வதற்குத்தான் தானம் என்று பெயர். இன்றைய வழக்கில் தானம் என்றால் பாவக் கழுவாய்க்காக வணிகக் கண்ணோட்டத்தோடு இன்னா ருக்குத் தான் கொடுப்பதென்ற வரையறையோடு நடைமுறை இருந்து வருகிறது. அது சரியன்று. இதனால் 'தானம் என்றும் இடுங்கள்' என்று ஆணையிடுகிறார். இவ்வளவும் இருந் தாலும் போதுமா? சிலர் பரபரப்பாகவே திரிவார்கள்.

அமைதியாக எதையும் பார்க்கும்—அநுபவிக்கும் ஆற்ற லற்றவர்களாகப் பலர் இருப்பார்கள். தாமும் மாறுவார்கள். பிறரையும் தம் வழி மாற்ற முயற்சிப்பார்கள். எல்லா வற்றையும் தாமே தாங்குவது போல எண்ணிக் கவலைப் படுவார்கள். அஃது ஆன்மீக வளர்ச்சியின்மையின் சின்னம். இதற்கே 'இருந்தபடி இருங்கள்' என்று ஆணையிடுகின்றார். இருந்தபடி இருப்பதென்றால் உடலால் சோம்பியிருப்பதைச் சொல்லவில்லை. அதற்குப் பெயர் சோம்பேறித்தனம். 'சித்தம் அடக்கிச் சிவாயநம' என்று இருப்பதையே இங்ஙனம் கூறுகிறார்.

"நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே"—என்று இருத்தலே

இருந்தபடி இருத்தல் என்பதாம். இங்ஙனம் ஆழ்ந்தால் முருகனைத் தேடிச் செல்லவேண்டாம். அவன் திருவருளைத் தேடி அடைய வேண்டாம். வேல் தாங்கும் முருகனின் திருவருள் வலியத் தானே வந்து வெளிப்படும் என்கிறார் அருணகிரியார். 'அருள் வந்து தானே உமக்கு வெளிப்படுமே' பாடலை முழுதும் ஒருமுறை படித்துப் பாருங்கள்.

"தடுங்கோள் மனத்தை; விடுங்கோள்
வெகுளியை; தான மென்றும்
இடுங்கோள்; இருந்தபடி இருங்கோள்
எழுபாரும் உய்யக்
கொடுங் கோபச் சூருடன் குன்றந்
திறக்கத் துளைத்தவை வேல்
விடுங்கோள் அருள்வந்து தானே
உமக்கு வெளிப்படுமே."

இப்பாடலை முறையாகச் சிந்தித்து அவன் அருள் நம்மிடை வலிய வந்து மேவி நின்று விளங்கிப் பயன்தரும் வண்ணம் வாழ முயற்சிப்போமாக!

# 25

## பரபரக்காதே

வாழ்க்கையில் ஈடுபடும் முயற்சிகளில் வெற்றி பெற்று அமைதியும் இன்பமும் சூழ வாழ விரும்புவோமாயின் பரபரப்புணர்ச்சி கூடாது. அவசரக் கோலத்தில், பரபரப் புணர்ச்சியுடன் ஒன்றைப் பற்றி முடிவெடுப்பதும் செய்வதும் நல்லதல்ல. அவசரப்படுதல் என்ற குணத்தைக் கெட்ட குணங்களின் வரிசையிலேயே வைத்து மூத்தோர் முடிவு செய்திருக்கிறார்கள்; மோசடி செய்யும் இயல்புடைய வர்களும் ஏமாற்றுகிறவர்களுமே அவசரப்படுவார்கள். அவர் களுடைய நட்பும் அவசரமானதாக இருக்கும்; அவர் களுடைய அன்பும் அவசரமானதாக இருக்கும். அதுபோல அவர்கள் காட்டும் பகைமையும் அவசரமானதாகவே இருக்கும். பிராங்லின் என்ற ஆங்கிலச் சிந்தனையாளன் "Fraud and deciet are ever in hurry" என்று குறிப்பிட்டிருக்கிறார். அவசரப்படுகிறவர்கள், வாழ்க்கையில் பல தவறுகள் செய்கிறார்கள். நல்லவர்களைப் பகைவர்களாக மதித்து விடு கின்றனர்—பகைவர்களை நல்லவர்களாக மதித்துவிடு கின்றனர். இதன் காரணமாக வாழ்க்கை சுவையற்றதாகி விடுகிறது. அதுமட்டுமல்ல—வாழ்க்கையில், ஆற்றல் இழப்பும் பொருள் இழப்பும் ஏற்படுகின்றன. மோசடி எண்ணமும் தந்திரபுத்தியும் உடையவர்கள் மிக அவசரமாக மேவிப்

பழகுவார்கள். பரிவுரைகளையும், புகழுரைகளையும் குவிப்பார்கள். பின் தன்னுடைய மோசடி எண்ணம் நிறைவேறாத போது தூற்றுவர். ஆக, தவறான காரியங்களைத் தவறான வழிகளில் செய்து முடித்துக் கொள்ளும் நோக்கம் உடையவர்களே அவசரப்படுவார்கள்; பரபரப்பாக விளங்குவார்கள். இக்கருத்தை மாணிக்கவாசகப் பெருமானும் தமது திருவாசகத்தில் தெளிவாக விளக்குகிறார். அருளார்ந்த இன்ப வீடு; அவ்வீட்டுக்கப்பால் உள் நுழையப் பலர் காத்து நிற்கிறார்கள். நுழைந்து உட்செல்லும் தகுதியுடையோர் காத்து நிற்கிறார்கள். ஆனால், அத்தகுதியில்லா ஒருவர் தகுதியுடைய அடியாரின் மேம்பட்டவராக நடிக்கிறார். ஆனால் அவர், காத்திருக்கும் மற்ற அடியார்களோடு காத்திருக்கவில்லை. அவர்கள் எல்லோரையும் முந்திக் கொண்டு வீட்டுக்குள் நுழைய விரைந்து முயற்சிக்கிறார். ஏன்? காத்திருக்கும் தகுதியுடைய அடியார்களுக்குக் காலந்தாழ்த்தியாகிலும் நிச்சயமாக இடம் கிடைக்கும். நடிப்பு வெளிப்பட்டால்...? ஆதலினால், விரைந்து இடம்பெற முயற்சிக்கிறார் என்ற கருத்தை விளக்கும் வண்ணம்,

*"நாடகத்தால் உன்அடியார் போல்நடித்து நான்நடுவே*
*வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்*
*ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புனக்கென்*
*ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்எம் முடையானே"*

என்று குறிப்பிடுகிறார். மீண்டும் ஓரிடத்தில் 'விது விதுப்பேனை விடுதி கண்டாய்' என்றும் குறிப்பிடுகின்றார்.

அறம் பேசவந்த திருவள்ளுவரும், 'ஆர அமரச் சிந்தித்துத் தேர்ந்து தெளிந்து முடிவெடுக்க வேண்டும்' என்று வற்புறுத்துகின்றார். இக்கருத்தைத் 'தேரான் தெளிவும்' என்ற குறளாலும் 'தெரிந்து செயல் வகை' என்ற அதிகாரத்தாலும் நாம் பெறமுடிகிறது.

தருமை ஞான முதல்வர் வாழ்க்கையை வெற்றிகரமாக்க அருளிச் செய்த உபதேசத்தை எடுத்த எடுப்பிலேயே **"பரபரக்க வேண்டாம்"** என்றே தொடங்குகின்றார். ஆதலால்

நம்முடைய வாழ்க்கையையும் வாழ்க்கைப் போக்குகளையும் பரபரப்பில்லாத உணர்வுடன் ஆராய்ந்தறிய நம்மை நாம் பழக்கிக் கொள்ள வேண்டும். ஒருவரை நல்லவர் அல்லது கெட்டவர் என்று முடிவெடுப்பதில் அவசரப்படக் கூடாது. அந்த அவசரமுடிவால் நாமே பல நல்லவர்களைக் கெட்டவர்களாக்கி விடவும் முடியும். கெட்டவர்களை நல்லவர்களாக்கி விடவும் முடியும். கெட்டவர்களை நல்லவர் களாக நினைத்து அல்லற்படவும் நேரும்.

எந்த ஒரு நிகழ்ச்சியைப் பார்த்த உடனாவது அல்லது பிறருடைய வாழ்த்து, வசை முதலியவற்றைக் கேட்ட வுடனாவது அவசரப்பட்டு முடிவெடுப்பது நல்லதல்ல. ஒவ்வொன்றுக்கும் இருக்கிற காரண காரியங்களையும் உள்நோக்கங்களையும் சூழ்நிலைகளையும் ஒரு தடவைக்கு மூன்று தடவையாவது அமைதியாக ஆராய்ந்து முடி வெடுத்துப் பழகுவதும் செய்வதுமே நல்லது.

## ஆராயும் மனப்பண்பு

அவசரப்படக் கூடாது என்ற அளவிலேயே அமைதியாகக் காலங் கடத்துவது என்பது பொருளல்ல. வாழ்க்கையில் தெளியும் உறுதியும் பெற, ஆராய்கின்ற மனப் பண்பு தேவை. வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் தனித்தனியே வைத்துப் பார்த்து நன்றா தீதா என்று முடிவு செய்வது நல்லதல்ல—இயல்புமல்ல. மனித மாண்புகள் பற்றிப் பேசும் வள்ளுவம் இந்த அறிவுபற்றித் தெளிவான வழிகாட்டுகின்றது. குணங்களை அறிந்து கொள்க! குற்றங்களையும் அறிந்து கொள்க! பின் அவற்றுள் மிகை எது என்று கணக்கெடுத்து முடிவெடுத்துக் கொள்ளுதல் வேண்டும் என்பதே வள்ளுவத்தின் கருத்து. நாடி ஆராய்வதிலும் குணங்களையே முதன் முதலில் ஆராய வேண்டும் என்று வள்ளுவம் பேசுகின்றது.

இன்றைய வாழ்க்கை முறையில் பலர், குணங்களைப் பார்க்க மறுக்கின்றனர். குற்றங்களையே நாடுகின்றனர். குணங்களை மறைத்துக் குற்றங்களையே பேசுகின்றனர்.

தன்னுடைய நிறைவின்மையைப் பிறர் குறையைக் காட்டுவதன் மூலம் மறைக்க முயற்சிக்கின்றனர்.

இன்றையச் சமுதாய வாழ்க்கை கலைந்த வீடு போல் காட்சி அளிக்கிறது. கலைந்த வீட்டில், எப்படிக் குடியிருப்ப தென்பது முடியாதோ அதுபோலவே, அன்பிலும் உறவிலும் வாழவேண்டிய சமுதாயம் தம்முள் கலைந்து விடுமாயின் மனித சமுதாயம் வாழ முடியாது.

நன்றா தீதா என்று காண்பது மட்டும் போதாது. நன்றும் தீதும் நிகழ்வதற்குரிய காரணங்கள் என்ன என்று ஆராய்தலே வாழ்க்கையின் உயர்ந்த முறை.

ஒரு நிகழ்ச்சி தீமையாக இருக்குமானால் அத்தீமை யினுடைய தோற்றங்கள் சூழ்நிலைகளை ஆராய்ந்து பார்த்துத் தெரிந்து கொண்டு நலன் விளைவதற்கான சூழ்நிலையை உருவாக்கவேண்டும். தீமையை வெறுப்பது மட்டும் சீர்திருத்த மல்ல—தீமையினிடத்தில் அதற்கு மாறான ஒரு நன்மையை வைத்துத் தீமையை அகற்றுவதே சீர்திருத்தம். சிற்சில பொழுதில் சூழ்நிலையின் காரணமாகவும் தம்முடைய வழக்கத்தின் வழிப்பட்ட பலவீனத்தின் காரணமாகவும் செயல் மாட்டாமையின் காரணமாகவும் நம்முடன் பழகிய அரிய நண்பர்களே தீமை செய்து விடுவதும் உண்டு. இத்தீமையின் வழி, நாம் ஆத்திரப்படுதல் முறையல்ல. முன்னும் பின்னும் உள்ள வாழ்க்கைப் போக்குகளை அன்பின் தரமான நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்க்க வேண்டும். அதனாலன்றோ திருக்குறள்,

> "கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
> ஒன்றுநன் றுள்ளக் கெடும்"

என்று கூறுகிறது. இக் கருத்தினையே 'கண்ணால் கண்டதும் பொய்—காதால் கேட்டதும் பொய்—தீர விசாரித்தறிவதே மெய்' என்று பழம் பாடல் கூறுகிறது. ஆகையால் வாழ்க் கையில் தொடர்ந்து நல்ல நண்பர்களைப் பெற்று இனிமையாக வாழ வேண்டுமென்றால் ஆராய்கின்ற மனப்பண்பு தேவை.

## 26

# குமரகுருபரரின் உயிர்க்கொள்கை

வாழ்வியலுக்குத் தத்துவ இயல் தொடர்புடையது. தத்துவத் தெளிவே வாழ்வியலுக்கு நல்ல அடிப்படை. வாழ்வியல் இயக்கத்தில், குழப்பத்தைத் தவிர்த்து நன்னெறியில் படர்வது தத்துவத் தெளிவிருந்தாலே சாலும். இன்று உலகில் பல சமயங்கள், சமயங்களிடையே தத்துவங்கள் வேறுபடுகின்றன. அதனால் தத்துவப் பயிற்சியே தலை வலியாகி விடுகின்றது. ஆனால், தத்துவ இயலில் அறிவியல் ஆய்வு நிகழவும், தெளிந்த முடிவுகளை எடுக்கவும் முடியும்; ஒரே சமயநிலைக்குக்கூட நாம் வர இயலும். ஆனால், மதத் தலைவர்கள் இதனை விரும்ப மாட்டார்கள். இன்று மதம் என்ற அமைப்பு அறிவியலிலிருந்து விடுதலை பெற்றுவிட்டது. மிகவும் இறுக்கத் தன்மையுடையதாகிவிட்டது. நெகிழ்ந்து கொடுக்கும் போக்கு மதத் தலைவர்களுக்கிடையில் இல்லை! ஏன்? மதங்களின் குறிக்கோளாகிய மனிதகுல ஒருமைப்பாடு இன்று மதங்களில் இல்லை. மதமே 'மத'மாக இடம் பெற்று விளங்குகிறது. இது வாழும் உலகத்திற்கு நல்லதல்ல.

தத்துவம் என்பதற்கு உள்ளது என்று பொருள். எவை எவை உள்ளவையோ அவ்வவற்றை ஆய்வு செய்வது தத்துவ ஆராய்ச்சி. உள்ளவைகளை — உண்மைகளைப் பற்றிய அறிவே தத்துவ அறிவு; தத்துவ ஞானம். உலகத்தார் உண்டு

என்பதை எங்ஙனம் மறுக்க இயலும்? செழுந்தமிழ் வழக்காகிய சிவநெறி உள்பொருள்—என்றும் உள்பொருள் — தோற்றமும் மறைவும் இல்லாத பொருள். மூன்று என்ற கொள்கையுடையது. அவை முறையே உயிர், ஆணவம், கடவுள் ஆகியன. இம் மூன்றினைப் பற்றிய தெளிவான அறிவு இருந்தால் நமது வாழ்வினை அமைத்துக் கொள்ளவேண்டிய நெறிமுறைகள் தோன்றும்; வாழ்வு சிறக்கும்!

கடவுள் முதற் பொருள். கடவுளைப் பற்றிய அறிவு நமக்கு அவசியமே. ஆயினும் கடவுளைப் பற்றி அறிந்து கொள்வதற்கு முன்பு, உயிர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளுவது நல்லது. தம்மை உணர்ந்து, தம்மையுடைய தலைவனை உணர்தலே வழிமுறை.

உயிர்கள் இயற்கையாக உள்ளன; என்றும் உள்ளன. உயிர்கள் தோற்றம் இல்லாதன; அறிவு இல்லாதன. உயிர்களுக்குப் பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை. உயிர்கள் பலப்பல. இவை தமிழ் நெறிய தத்துவக் கொள்கை. செந்தமிழ்க் குமரகுருபரர் ‘மன்னுயிர்த் தொகுதி’ என்று குறிப்பிடுகின்றார். மன்னுதல்—நிலை பெறுதல்—என்றும் நிலைபெற்று விளங்குதல் என்பது பொருள். ‘மன்னுயிர்த் தொகுதி’ என்றதால் உயிர்கள் பலப்பல என்ற கருத்தையும் உணர்த்துகின்றார். உயிர்கள் பலப்பல மட்டும் அல்ல. பலவகையின என்ற கொள்கையும் உணர்த்தப் பெறுகிறது. இதனைப் ‘பல்லுயிர்த் தொகுதி’ என்று கூறி விளக்குகின்றார்.

“முட்டையிற் கருவில் வித்தினில் வெயர்ப்பில்
நிற்பன நெளிவ தத்துவ தவழ்வ
கடப்பன நடப்பன பறப்பன வாகக்
கண்ணகன் ஞாலத் தெண்ணில்பல் கோடிப்
பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்திக்கு
நெல்லிரு நாழி நிறையக் கொடுத்தாங்கு”

(சிதம்பரம் மும்மணிக்கோவை 464:15–20)

என்ற பாடல் அடிகளில் விளக்குவதை அறிக.

அடுத்து உயிர்—உய்தற்குரியது. உயிர்கள் இன்பத் துய்ப்பை அடிப்படையாகக் கொண்டவை. உயிர்களுக்குத் துன்பம் செயற்கையே. இயற்கையில் உயிர்கள் இன்பத் துய்ப்பிற்குரியவை; இன்பமானவை. ஆதலால் நற்றமிழ்க் குமர குருபரர் "இன்னுயிர்" என்றே உயிர்களைக் குறிப்பிடுகின்றார்; அழைக்கின்றார். இன்பம் பலவகையின. உயிர்கள், அறிவும் தெளிவும் இன்மையின் காரணமாகத் துன்பமானவற்றை துன்பம் கலந்த இன்பங்களைக்கூட இன்பமென்றே கருது கின்றன. என்றும் எப்போதும் எல்லோருக்கும் இன்பமா யிருப்பதே இன்பம். அது மட்டுமல்ல, இன்பத்திற்கு எல்லை யில்லை; வளர்ச்சியுண்டு. பேரின்பம் வரையில் வளரும். ஆங்கும் எல்லையில்லை; முடிவில்லை. அதனால் 'ஆரா இன்பத்தேன்' என்று குறிப்பிடுகின்றார். குமரகுருபரர் இதனை,

> "அடுத்தவின் வயிர்கட் களவில் பேரின்பம்
> கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே"

என்பார். இறைவனின் குறிக்கோள் மன்னுயிர்களுக்கு இன்னருள் பாலிப்பதேயாம். உயிர்கள் என்றும் உள்ளவை; உயிர்கள் பலப்பல; உயிர்கள் இன்ப இயல்பின, உயிர்களின் குறிக்கோள் ஆரா இன்பம் பெற்றுத் துய்ப்பதுவேயாம். பேரின்ப நுகர்வே உயிர் வாழ்க்கையின் பயன். இதனைக் குமரகுருபரர் 'இன்பப் பயன் கொள்ளும் பொழுது உயிர்கள் சார்பினால் வந்த துன்பங்களிலிருந்து விடுதலை பெறுகின்றன' என்பார்.

உயிர், சிறப்புறு நலன்கள் பெற, உணர்வு தேவை. உணர்ச்சி வேறு; உணர்வு வேறு. உணர்ச்சி உடற் சார் புடையது. உணர்வு உயிர்ச் சார்புடையது. உணர்ச்சி தற்சார்புடையது; தீமையை விளைவிப்பது. உணர்வு, பிறர் நலச் சார்புடையது; தியாக இயல்பினது; நன்மையையே செய்வது. ஆதலால் உயிர்கள் உணர்வில் சிறந்து விளங்குதல் வேண்டும். இதனைச் செந்தமிழ்க் குமர குருபரர்,

*......................உயிரால்*
*வாலத் துணர்வு நீர் பாய்ச்சி*
*வளர்ப்பார்க்கு ஒளிபூத் தளிபழுத்த*
*மலர்க் கற்பகமே'* மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்–44

என்று விளக்குகிறார். உணர்வில்லையெனில் உயிர் இயல்பில் குன்றி, உடலியக்கம் வளர்ந்திருக்கிறது என்பது குறிப்பு. உயிருக்கு உடல் கருவி. கருவிகள், பயன்படுத்துபவர்களை விஞ்சிவிட்டால் விளையக்கூடியது தீமைதானே!

உயிர்களுக்கு, உயிர்க்குயிராக இருந்து அறிவு நிலையில் உணர்த்தி உய்த்துச் செலுத்தும் பொருள் கடவுள். "உயிர்க்கு உயிராம் மதுரேசர்" என்பது மதுரைக் கலம்பகக் கவி. உயிர்க்கு உயிர் என்றால் 'உயிர்' என்றே பொருள் கொள்ளக் கூடாது. உயிரியக்கத்திற்கு—உயிர் மேம்பாட்டுக்குத் துணையாக இருக்கும் ஆற்றல் வாலறிவு. "ஊனாய் உயிர்க்கு உயிரானாய்" என்ற முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் வரியையும் எண்ணுக.

உயிர்கள் தழைத்து வளரவேண்டும். உயிர்கள் தழைத்து வளரத் தடையாய் அமைந்துள்ள ஆணவக்காடுகள் அகற்றப் பெறுதல் வேண்டும். ஆணவம் என்றும் உள்பொருள்; உயிருடன் இருப்பது. ஆணவத்தை அகற்றுதல் இயலாது. ஆணவத்தின் கேட்டை அடக்கி வைக்கலாம். அவ்வளவு தான். ஆணவத்தின் தூண்டுதல் வழி, வினைகளையும், வினைகள் வழி, ஊழ் ஆகிய படிகளையும் கடந்து, உயிர்கள் வளர்தல் வேண்டும். உயிர் தளிர்த்து வளர்தல் என்பது அருட்புனலில் தளிர்த்தலாகும். 'உயிர்ப் பயிர் தழைப்ப' 'கண்டுயிர் தளிர்த்த' என்ற அடிகளைப் பலகாலும் படித்திடுக.

செந்தமிழ்க் குமரகுருபரர், தமது பிரபந்தங்கள் முழுவதிலும், உயிர்கள் என்றும் உள்ளவை, உயிர்கள் பலப்பல, உயிர்கள் வளர்வதற்கு உணர்வு தேவை; உணர் வுக்குத் துணையாயிருந்து தூண்டிச் செய்வது – ஆற்றுப் படுத்துவது கடவுள் என்பதை உணர்த்துகின்றார்.

# 27

## காக்கை விரும்பும் கனி!

மானுட வாழ்க்கை குறைகளையுடையது. ஆயினும் குறைகளே உடையதுமன்று; குறைகளும் உண்டு; நிறைகளும் உண்டு. குறைவிலா நிறைவுடையது கடவுள் ஒன்றேயாம்! "குறைவிலா நிறைவு" என்று மாணிக்கவாசகர் பாராட்டு கிறார். "நன்றுடையான் தீயதிலான்" என்று திருஞான சம்பந்தர் பாராட்டுகின்றார். குறையின் விளைவு, தீமை; துன்பம்! நிறையின் விளைவு நன்று; இன்பம்! "இன்பம் காண் துன்பங்கள் இல்லாதான் காண்!" என்று அப்பரடிகள் பாராட்டுகின்றார்.

குறைகளும், நிறைகளும் கலந்ததே மனித வாழ்க்கை! ஆனாலும், குறைகள் இயல்பானவை என்றும், சரியானவை என்றும் நியாயப்படுதல் கூடாது. குறைகளினின்றும் விடுதலை பெறவே வாழ்க்கை; கல்வி; கேள்வி; அறிவு; சமயம்; இல்லற வாழ்க்கை; துறவற வாழ்க்கை ஆகிய அனைத்தும்!

அறிவறிந்த ஆள்வினை; பொருளீட்டம்; துய்த்தல் ஆகிய அனைத்தும் கூட, மனித உயிர் வாழ்க்கை குறை களினின்றும் நீங்கி, நிறை பெறற்குரிய சாதனங்களே! ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் குறைகளும் உண்டு; நிறை களும் உண்டு. குறைகளையும், நிறைகளையும் சீர்தூக்கி

ஆராய்ந்து மிகுதி நோக்கிப் பாராட்ட வேண்டும்; போற்ற வேண்டும்; ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது திருவள்ளுவர் கருத்து.

*"குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்*
*மிகைநாடி மிக்க கொளல்"* (504)

என்பது திருக்குறள்.

குறைகளைத் திருத்தும் வழி, குறைகளைத் தூற்றுதல் அல்ல. ஒருவரிடமுள்ள குறைகளை எடுத்துத் தூற்றுவதைத் திருவள்ளுவர் "சிறுமை" யென்றே கண்டிக்கின்றார்.

*"அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்*
*குற்றமே கூறி விடும்"* (980)

என்றும், "வடுக்காண வற்றாகும் கீழ்" என்றும் திருவள்ளுவர் அருளிச் செய்துள்ளமை அறியத் தக்கன. அங்ஙனமாயின் குற்றங்களை எடுத்துக் காட்டித் திருத்தாமல் குற்றங்களுக்கும் உடந்தையாக இருக்கவேண்டும் என்பது கருத்தா? அப்படியன்று, குற்றங்களுக்கு உடந்தையாக இருந்தால் குறை நீக்கம் நிகழாதல்லவா? இழிவுபடுத்தும் நோக்கத்தோடு குற்றத்தை எடுத்துக் காட்டுதல் தவறு. பழிதூற்றும் எண்ணத்தோடு, குற்றத்தை எடுத்துக் கூறுதலும் தவறு.

மாறாக அவரிடமுள்ள குணங்களைப் பாராட்டி மனம் நிறைந்த உறவினைப் பெற்று அவ்வழி நம்பிக்கையை வளர்த்துக் கொண்டு தோழமை உணர்வில் வடுப்படாமல் பைய குற்றங்களினின்றும் தேற்றி, விலக்கி நிறைகளைப் பெறத் துணை செய்யவேண்டும்.

அறியாமை மிக்குடைய உயிர்களைத் திருத்தும் திருவருள் "பையத் தாழுருவி" என்பார் மாணிக்கவாசகர். திருஞான சம்பந்தர், மதுரையில் தமது திருமடத்தில் பகைவர் தீவைத்தபொழுது "பையவே சென்று பாண்டியர்க்காகவே" என்றார்.

உடலிற் புறப்பட்ட கட்டி குற்றமுடையதே! துன்பம் தருவதே! ஆனாலும், அதையும் மெல்லத் தடவிக் கொடுத்து அது பழுத்தற்குரிய உணர்வினை வழங்கிப் பழுத்த பிறகு வலியில்லாமலும், செங்குருதி சிந்தாமலும் அறுத்து அகற்றும் முறைதானே மருத்துவமுறை! ஈரும் பேனும் உள்ள தலையானாலும் எண்ணெய் தடவிச் சீவித்தானே அகற்ற வேண்டும்! ஆகக் குற்றங்களைத் திருத்தும்முறை இனிய முறையாக இருக்க வேண்டும்; அன்பு கலந்த முறையாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் உயிர்கள் மகிழ்ந்து குற்றங்களினின்றும் எளிதில் விடுதலைபெறும். இதுவே இறைவன் உயிர்களை ஆட்கொள்ளும் முறையும் கூட!

உயிர்கள் ஆணவத் தொடர்பால் அறியாமை வழிப் பட்டு வேட்கை கொள்கின்றன. இறைவன் "இது தீது!" "அது தீது" என்று எடுத்த எடுப்பில் உபதேசம் செய்வதில்லை. உயிர்களின் வேட்கையை அறிந்துகொண்டு பொன்னும், மெய்ப் பொருளும் தந்து, போகமும், திருவும் வழங்கி, உயிர்கள் செல்லுழித் தான் சென்று, புறம் புறம் திரிந்து, துய்ப்பில் வேட்கை தணிந்துழி அறிவினைத் தந்தருளி ஆண்டருளுகின்றான். சுந்தரர் வாழ்க்கை இதற்கோர் எடுத்துக்காட்டு!

இத்தகைய குற்றங்களை அன்பின் வழியில் அகற்ற முயல்வோர் சான்றோர். இத்தகு சான்றோர் இன்று நாட்டில் அருகிவிட்டனர். ஏன்? பிறர் குற்றத்தைக் தூற்றுவதே தொழிலென வளர்ந்து வருகிறது. துரதிருஷ்டவசமாகச் சீர்திருத்தம் என்று அதற்குப் பெயர் சூட்டியுள்ளனர். இது நெறியுமன்று; முறையுமன்று. ஒருவர் குற்றத்தை நீக்குபவர் களுக்குத் தாயிற் சிறந்த தயாவும், மருத்துவரிற் சிறந்த அறிவும் தேவை.

ஆனால், இன்று நாட்டிடையில் குற்றமே காணும் இயல்பு பெருகி வளர்கிறது. உண்டோ? இல்லையோ? எங்கும்

ஊழலைப் பற்றிய பேச்சு! இவை எடுத்துக் காட்டப்படுவதில்லை. முறையீட்டு மன்றங்களுக்கும் எடுத்துச் செல்வதில்லை. இங்ஙனம் இங்கு மங்குமாகவுள்ள குறைகளைத் தூற்றுவதையே தொழிலாகக் கொண்ட தாள்களும், மேடைகளும் வளர்ந்துவிட்டன.

ஒரு சார்புடையவர்கள் — பகையுணர்ச்சி யுடைய வர்கள் குற்றங்களைப் பார்க்கிறார்கள். குணங்களை எடுத்துக் கொள்ளத் தவறுகிறார்கள்; இல்லை, மறுக்கிறார்கள்! ஆதலால், சிலர் இகழ்வதை ஒரு பொருளாகக் கருதத் தொடங்கினால் வாழவே முடியாது. ஆதலால், நன்னெறி ஆசிரியர் ஒருசிலர் இகழ்வதைப் பொருளெனக் கொள்ளற்க என்கிறார்.

காக்கை வேப்பம் பழத்தையே விரும்புகிறது. அதனால் வேப்பம்பழம் இனிமை யுடையதாகிவிடாது. காக்கை விரும்பாத மாம்பழம் சுவையில்லாததாகவும் ஆகிவிடாது. காக்கைகளைப் போல கருமை மனம் உடையோர் நின் குணங்களைப் பார்க்க மறுப்பர். கவலற்க!

அங்ஙனம் குறையே நோக்கி இகழ்பவர் நிறை நோக்கிப் பாராட்ட மறுப்பவர்தம் உளங்கொள நீ வாழ்தல் அரிது. காரணம் அவர்களுக்கு இகழுதல் ஒரு தொழில்; பழக்கம்! கவலற்க! நம்மை நாமே குறைகளும் நிறைகளும் நோக்கி நினைந்திடுவோம்! நாளும் குறைகளிலிருந்து விடுதலை பெற முயலுவோம்! இகழுக்கு அஞ்சியல்ல! நெறிமுறை வழிப்பட்ட வாழ்க்கையில் நிறைநலம் பெற வேண்டுமென் பதற்காக! என்கிறார்.

> "உண்டு குணமிங்கு ஒருவர்க்கு எனினும்கீழ்
> கொண்டு புகல்வது அவர் குற்றமே—வண்டு மலர்ச்
> சேக்கை விரும்பும் செழும் பொழில்வாய் வேம்பன்றோ
> காக்கை விரும்பும் கனி"

# 28

## நற்சொல் எது?

சொல், பொருளுடையது. பொருள் என்பது பதவுரை மட்டுமன்று. சொல்லின் பொருளை உணர்ந்து அடைதற்குப் பதவுரை ஒரு வாயிலே. அங்ஙனமாயின், சொல்லுக்குப் பொருள் யாது? சொல்லினால், உயிர்களின் அனுபவத்திற் குரியனவாக விளையும் பயனே சொல்லுக்குப் பொருள்.

"பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும்" என்பார் குமர குருபரர். ஆளுடைய அடிகளும் தாம் அருளிய திருவாசகத்திற்குப் பொருள், அம்பலத்தே ஆடல்வல்லானின் திருவடிப் போதுகளே என்றார். இங்ஙனம் சொல்லுக்குப் பொருள் காணும் ஆர்வம், இன்று நாட்டிடையில் இல்லை.

பொதுவாகப் பொறிகளைக் கடந்த புலன்களுக்கும், புலன்களையும் கடந்த உணர்வுக்கும், உணர்வினையும் கடந்த உயிருக்கும் இன்பம் தருகின்றவற்றில் இன்று விழைவு இல்லை; விருப்பம் இல்லை. இன்று பொறிகளின் இன்பத் திலேயே நாட்டம் மிகுதி. செவிக்கினிய சொற்களை விரும்பு கிறார்களே தவிர, நலம் தரும் சொற்களை நாடுவதில்லை.

டு · கூ · உ7.

நம்முடைய நாட்டில் சொற்கள் ஏராளம்! சொல்லு பவர்களும் ஆயிரமாயிரம் பேர்கள்! ஏன், வாய் படைத்தவ ரெல்லாம் சொல்ல ஆரம்பிக்கின்றனர்; பேச ஆரம்பிக் கின்றனர். வாய் படைத்தவருக்கெல்லாம் பேசும் உரிமை இருத்தல் கூடாது. வாய்மையுடையவருக்கே பேசும் உரிமை இருத்தல் வேண்டும்.

இன்று சொற்களை வழங்குவோரிடத்திலும் நலன் நாடும் வேட்கையில்லை. சொற்களைக் கேட்பவர்களிலும் கூடப் பலர் செவிக்கினியவற்றையே விரும்புகின்றனர். அதனால், எங்கும் முகமனுரைப்பவர்கள் அதிகமாகி விட்டனர்.

முகமன் என்பதே முகத்திற்காகச் சொல்வதுதான்! முகமன் கூறுகிறவர்களில் பெரும்பாலோர் போலிகள்! தன்னல உணர்ச்சியுடையவர்கள். அவர்களுக்கு வாழ்விக்கும் நோக்கமில்லை. இந்த நூற்றாண்டில் புகழ்தல் ஒரு கலை யாகவே போய்விட்டது. ஏன், சிலருக்கு அது தொழிலும் கூட!

புகழுக்கே இலக்கணம் நேரில் சொல்வதன்று. புகழுக்குரியவன் இல்லாத இடத்தில் பலரறியப் புகழைப் பறைசாற்றி அது செவிக்குச் செய்தியாக வரும் பொழுது புகழாகிறது. அதுவும் கூடப் பயனைத் துய்த்தவர்கள் அனுப வித்தவர்கள் கூறுவதுதான் புகழ்.

நம்மை நாள்தோறும் சுற்றிக் கொண்டிருப்ப வர்கள்—நத்திப் பிழைத்துக் கொண்டிருப்பவர்கள் சொல்வது புகழன்று. பழங்காலத்துச் சான்றோர்கள் தற்யெலாகத். தம்மை யாராவது புகழ்வதைக் கேட்டுவிட்டால் அந்தப் புகழைக் கேட்க வெட்கப்பட்டார்கள். தம் புகழ் கேட்க நாணுவர் என்பது சங்கத் தமிழ் நல்லுரை.

புகழ் விருப்பம் மிகுதியும் வந்து விட்டதால் நல்லதைக் கேட்கும் பழக்கும் அருகிவிட்டது. செவிகைப்பச் சொற் பொறுக்கும் சால்பு இன்று காண்டற்கரியதாகிவிட்டது

சொற் சுவையைவிடச் சொற் பயனே முதன்மை பெற செய்ய வேண்டும்.

நல்ல மனமுடையவர் ஒப்புக்குப் பேசத் தெரியாமல் போகலாம். புகழ்ந்து பிழைக்கத் தெரியாத அப்பாவிகளாக இருக்கலாம். உள்ளதை உள்ளவாறு சொல்கிறவர்களாகவும் இருக்கலாம். வன் சொல்லாகவும் இருக்கலாம். ஆயினும் சொல்கிறவர்களுடைய நன்னெஞ்சத்தைப் பொறுத்து வன் சொல்லும் கூடப் பயன் நோக்கிய இனிய சொல்லாக இருத்தல் உண்டு.

யாழ், வடிவத்தில் கோணலானது. அம்பு, வடிவத்தில் நேரியது. ஆயினும் இவ்விரண்டின் விளைவு வேறுபாடு டையது என்பார் வள்ளுவர்.

*கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன*
*வினைபடு பாலாற் கொளல்.*

என்பது திருக்குறள்.

தோற்றத்தில் நேரிதாக இருக்கும் கணை கொலை செய்கிறது. தோற்றத்தில் வளைவுகளைப் பெற்று இனிமை யல்லாத தோற்றமுடைய யாழ் இன்னிசையைப் பொழிகிறது. இனிய பயனைத் தருகிறது.

பக்தியிற் பழுத்த நெஞ்சுடைய சாக்கிய நாயனார் எறிந்த கல், இறைவனுக்கு மலராயிற்று. கல்லையும் மலராக்கும் ஆற்றல், அன்பிற் கனிந்த இதயத்திற்கு உண்டு. காமவேள், இறைவன் மீது மலர்க்கணைகளையே தொடுத் தான். ஆயினும், கல்லை மலராக ஏற்றுக் கொண்ட இறைவன், காமவேளின் மலர்க்கணைகளை ஏற்றுக் கொள்ள வில்லை. ஏன்? விளைவு நோக்கியே!

ஆதலால், சொற்களில் சுவை நாடற்க! செவிக்கினிய வாக மட்டும் உள்ள பயனற்ற சொற்களை நாடாதொழிக! சொற்களின் விளைவாகிய வாழ்க்கையின் பயனை நாடுக!

அத்தகைய சொற்கள் வன்சொற்களாக இருந்தாலும் ஏற்றுக் கொள்க!

நல்லோர்களுக்கு, தூய மனமுடையோர்களுக்கு உண்மை தான் சொல்லத் தெரியும், புகழத் தெரியாது.

ஆதலால் சொற்களின் மொழிச் சுவையைவிட சொற்களால் விளையும் பயனையே நாடுக! இதுவே நன்னெறி ஆசிரியர் காட்டும் வாழ்க்கை முறை.

*மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினிது ஏனையவர்*
*பேசுற்ற இன்சொல் பிறிதென்க ஈசற்கு*
*நல்லோன் எறிசிலையோ நன்னுதல் ஒண் கருப்பு*
*வில்லோன் மலரோ விளம்பு.*

என்பது நன்னெறி வாக்கு.

# 29

# பெரியோர் செயல்!

உடலெடுத்த பிறவி உதவி செய்தற் பொருட்டே. உயிர்க்கு நிறை நலத்தினைத் தந்து இன்ப அன்பினை வழங்கி வாழ்விப்பது உதவி செய்யும் பண்பாடேயாம். உயிர், எலும்பொடு தொடர்பு கொண்டு உடலாக உருமாறி உலகினில் உலா வருவது அன்பு செய்தற்கே யாம். திருவள்ளுவர்,

> அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
> என்போடு இயைந்த தொடர்பு. (73)

என்பார். உதவிக்குக் காரணம் அன்பு. உதவி செய்யும் பண்பில் மாறாது வளரும் விலங்கினங்கள், தாவர இனங்கள், களவு—காவலின்றி வாழ்கின்றன. அவற்றில் அனாதை இல்லை.

ஆனால், மனிதன் தனது இயற்கையான உதவி செய்யும் இயல்பினின்றும் மாறுபட்டு வாழ்வதால் அவனுடைய வாழ்க்கை முழுமையாகச் சிறைச்சாலையாக்கப் பெற்றுள்ளது. அந்தோ பரிதாபம்!

உதவியா? நாமா பிறர்க்குச் செய்வது? நமக்கு எங்கே வசதியிருக்கிறது? நமக்கு நாலுபேர் செய்ய வேண்டிய

திருக்கிறதே என்றெல்லாம் அங்கலாய்ப்பவர்களும் உண்டு. அவர்கள் "தனக்கு மிஞ்சியதே தான தர்மம்" என்ற பழமொழியினை எடுத்துக் காட்டி நியாயம் பேசுவர்.

தனக்கு மிஞ்சுதல் ஒருபோதும் உலகத்தில் நடக்கக் கூடிய காரியமில்லை. அதுவும், இன்றைய மனிதன் தேவைகளை நோக்கியே பயணம் செய்து கொண்டிருக் கிறான். அவன்—குறிப்பாக இந்தியன் அமெரிக்காவைப் பார்த்துத் தன் தேவைகளுக்குப் பட்டியல் தீட்டுகிறான்.

தேவை யென்பது உயிர் வாழ்க்கைக்கு இன்றியமை யாதனவும் தாங்கள் மேற்கொண்ட கடமைகளை முறை யாகச் செய்தற்குரியனவுமாகிய நியாயமான தேவைகளாகும்.

நமது நாட்டில் இன்று கார் தேவையான பொருளா? அல்லது சுகத்தின் சின்னமா? அல்லது செல்வத்தின் எடுத்துக் காட்டா? அல்லது வருமான வரிக்குச் சரிக்கட்டா? என்ற வினாக்களை அடுக்கினால் ஒரு சிலருக்கே கார் தேவைப் படும். பலருக்கு அது செல்வத்தைத் துய்க்கும் ஒருவழி; சுகப்பொருள்; வருமான வரிக்குச் சரிக்கட்டு! ஏன்? ஈருருளை வண்டிகூட அப்படித்தான்!

இரண்டு கிலோமீட்டர் தொலைவிலுள்ள பள்ளிக்குச் சென்று பணி செய்து திரும்ப, இன்று ஈருருளை வண்டியை நாடி நிற்போர் பலர். இவர்களுடைய கால்கள், நடக்கும் சக்தியை இழந்துவிட்டன. தெளிவாகச் சொன்னால் இவர் களுக்கு உண்மையான தேவை நடைப் பயிற்சியே யாம்!

நோயின்றி வாழ இவர்களுக்கு இன்றியமையாதது நடையே! ஆனால் அதை உடலுக்குத் தராமல், காரிலும், ஈருருளை வண்டியிலும் பலர் பயணம் செய்வதால் நோய்க்கு ஆளாகின்றனர். ஆதலால் உண்மையான தேவை என்பது வேறு. மனிதன் உண்டாக்கிக் கொள்ளும் செயற்கைத் தேவை வேறு.

"தனக்கு மிஞ்சியதே தான தர்மம்" என்ற பழமொழி தமிழகத்து வழக்கில் பிறந்ததன்று, "தன்னை மிஞ்சியதே தான தர்மம்" என்பதுதான் உண்மையான பழமொழி.

உதவி செய்வதென்பது, பொருள் இருந்தால்தான், என்பதில்லை! அநேகமாக நிறைந்த பொருள்வளம் உடையவர்களில் மிகக் குறைந்தவர்களுக்கே உதவி செய்யும் இயல்பு இருக்கும்.

மிகக் குறைந்த வருவாயுடையவர்களும், வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்பவர்களும்கூட உதவி செய்ய வேண்டும். ஏன்? பொருளில்லையானாலும், பொருள் தேடுதற்குரிய உடலாற்றல் இருக்குமானால் பொருளைத் தேடி வந்தும் உதவி செய்ய வேண்டும்.

> "இல்லென்று இரப்போர்க்கு இயைவது கரத்தல்
> வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
> பொருளே காதலர் காதல்"

என்பது அகநானூறு.

வழங்குதற்காகவே பொருளீட்டுதல் என்பது ஒரு கொள்கை. இல்லை, ஓர் அறம்! புறநானூறு "செல்வத்தின் பயன் ஈதல்" என்று பேசும். உண்ண உணவில்லாத நிலையிலும் வயலில் விதைத்த வித்தை அரித்துக் கொண்டு வந்து சமைத்து உணவு வழங்கிய இளையான்குடி மாற நாயனார் வரலாறும், கற்புடை மகளிர்க்குரிய மங்கல அணியை மாற்றியும் உதவி செய்த குங்குலியக் கலய நாயனார் வரலாறும் நினைவிற் கொள்ளத் தக்கன. ஏன்? நன்னெறி ஆசிரியர் நமது உடம்பிலேயே இதற்கோர் உவமை காட்டி விளக்குகிறார்.

நாக்கு, தானே பூரணமாக ஒன்றைச் சுவைத்தற்கு இயலாது. நாவிற்குப் பூரணமான சுவையை வழங்கப் பற்கள் துணையாயமைந்து மிகக் கடினமான பதார்த்தங்களையும்

தாம் முயன்று மென்று அறைத்துச் சுவை கூட்டி நாக்கிற்கு வழங்குகின்றது. எளிய முயற்சியில் நாக்கு சுவைக்கிறது.

நாக்கினால் பற்களுக்கு யாதொரு பயனுமில்லை. ஆயினும் பற்கள் முயன்று நாக்குக்குச் சுவை கூட்டி வழங்கு கின்றன. அதுபோல ஒவ்வொருவரும் முயன்று மற்றவர் களுக்கு வாழ்க்கையை வழங்க வேண்டும்.

உதவி செய்யும் வாழ்க்கையின் மூலம் நெடிய பயன் விளையும்; அழிவிலின்பம் கிடைக்கும். ஆயினும் சில துன்பங்கள் வராமல் போகா. அத்துன்பத்தினையும் ஏற்று மெய்வருத்தமுற அரிதின் முயன்று உதவி செய்தலே நல்லோர் கடமை. அத்தகைய உதவி வையகத்து வான்மழையைப் போல!

அறிவறிந்த ஆள்வினையை மேற்கொள்க! உடல் களைப்புறும் வரையில் உழைத்திடுக! பழியஞ்சிப் பொரு ளீட்டுக! ஈட்டிய் பொருளை உதவி செய்தல் என்ற உயரிய வேள்விக்குப் பயன்படுத்துக! **வாழ்வித்து வாழ்க!**

> *"கைம்மாறு உகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்*
> *தம்மால் இயலுதவி தாம்செய்வர்—அம்மா!*
> *முளைக்கும் எயிறு முதிர்சுவை நாவிற்கு*
> *விளைக்கும் வலியனதாம் மென்று"*

என்பது நன்னெறி ஆசிரியர் வற்புறுத்தும் நெறி.

# 30

# தாயுமான சுவாமிகள்

தமிழகம் வரலாற்றுப் புகழ் பெற்றது. தமிழக வரலாற்றைக் காலம்தோறும் அறிஞர்கள், சித்தர்கள் தோன்றி வளர்ந்து வந்துள்ளனர். தமிழ், வளர்ந்த மொழி. தமிழ் இனிமையும் எளிமையும் நிறைந்த மொழி. தமிழ் இலக்கிய இலக்கண வளம் கொழிக்கும் மொழி. தமிழ் ஒரு தத்துவமொழி. மெய்ப்பொருள் கண்டுணரவும் செம் பொருளைக் காணவும் துணை செய்யும் மொழி. தமிழ், ஞானத்தமிழ். தமிழ், மானுடம் பேசிய மொழி. தமிழ், மானுடம் வளர்த்த மொழி. வெள்ளத்தைக் கடந்து வளர்ந்தது தமிழ். நெருப்பினை வெற்றி கண்டமொழி தமிழ். ஆரியம் கதவைச் சாத்தும். தமிழ் கதவைத் திறக்கும். தமிழோடிசை கேட்கும் இச்சையால் நாளும் காசு கொடுத்துக் கடவுளும் கேட்ட மொழி—கன்னல் தமிழ். தேரோடும் திருவாரூர் நெடுவீதியில் இறைவன் நடந்தது நற்றமிழ் கேட்டின்புறத் தானே! வேதங்கள் 'ஐயா!' என்று தேடிய திருவடிகள் பரவையார் வீட்டுப் படியில் தோய்ந்தது சுந்தரரின் செந்தமிழ் கேட்டு இன்புறத்தானே! வையை யாற்றங்கரையில் பிட்டுக்கு மண் சுமந்து மொத்துண்டு புண் சுமந்தது பண்சுமந்த பாடல் பரிசு பெறத்தானே! இங்ஙனம் தமிழின் பெருமை

அளப்பரியது. அந்நியரையும் "தமிழ் மாணவர்" ஆக்கிய பெருமை தமிழுக்கு உண்டு.

தமிழகம் புகழ் பெற்று விளங்கிய நாடு. தமிழ் வளம் கெழுமிய மொழி. தமிழினம் சிந்தையில் சிறந்து விளங்கிய இனம். தமிழ் நாட்டின் பெருமை, தமிழினத்தின் பெருமை மெய்ப்பொருள் சார்பு. தத்துவ நூல்கள் பலப்பல தலைமுறை தோறும் வந்து கொண்டிருந்தன.

தமிழ் நாட்டில் காவிரிப்புனல் சூழ்ந்த நாடு வரலாற்றில் இடம் பெற்ற நாடு அல்ல. வரலாற்றை எழுதிய நாடு. காவிரியைக் கங்கையில் புனிதமாய காவிரி என்பார் சேக்கிழார். காவிரிக் கரையில்தான் விண்ணளந்து காட்டி வினைமறைக்கும் திருக்கோயில்கள் எண்ணற்றவை இன்றும் உள்ளன. நாயன்மார்களும் ஆழ்வார்களும் போற்றிப் புகழ்ந்த திருத்தலங்கள் நின்று புகழ்சேர்க்கும் நாடு காவிரிப் புனல் நாடு. அன்னை காவிரியே தன் இரு கரைகளிலும் உள்ள திருக்கோயில்களிலும் எழுந்தருளியுள்ள இறைவனுக்குப் புனலும் பூவும் சொரிந்து வழிபாடு செய்து கொண்டே செல்லும் நாடு, காவிரி நாடு அறுபான் மூன்று நாயன் மார்களில் பலர் வாழ்ந்த நாடு. சோழநாடு திருஞானசம்பந்தர் திருவவதாரம் செய்த புண்ணிய பூமி. காவிரி பாய்ந்து வளமூட்டும் பூமி. தமிழர் சமயம் இன்னதெனத் துணிந்து இலக்கணம் வகுத்த மெய்கண்டார் திருவவதாரம் செய்த தலமும் காவிரி நாட்டைச் சார்ந்ததேயாம். தமிழின் பின் சென்ற அரங்கன் உறையும் பதியும் சோழ நாடேயாம். தமிழின் நாட்டில் சோழநாடு வளம் கொழிக்கும் நாடு. வண்மை செழித்து வளர்ந்த நாடு. ஞானம் கொழித்த – கொழிக்கும் திருநாடு. யோகத்திலிருந்து ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் திருமந்திரப் பாடல்களை அருளிச் செய்த திருமூலர் தவம் செய்த நாடு. ஏன்? சிவபிரான் தமது அலுவலகத்தையே இந்த மண்ணில் மாற்றியமைத்துக் கொண்ட தலம் – திருவையாறு,

காவிரிப்புனல் பாயும் நாட்டில்தான் இருக்கிறது. கம்பன் இராமகாதை இயற்றி அரங்கேற்றிப் புகழ் கொண்டதும், இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்திற்குக் களம் அமைத்துத் தந்ததும் காவிரி வளம் கொழிக்கும் சோழ நாடே. தமிழகம் சிறப்புடையது. காவிரிப்புனலால் வளம் கொழிக்கும் சோழநாடு புகழ் பெற்றது. சிவநெறியும் செந்தமிழும் வளர்த்த—வளர்த்துக் கொண்டிருக்கும் நாடு, சோழநாடு. தமிழர்கள் கடவுள் நம்பிக்கையுடையவர்கள். தமிழர்கள் கடவுளைப் பயப்படக் கூடிய பொருளாக முன்னும் கண்டதில்லை. இனிமேலும் காணமாட்டார்கள். தமிழர் வாழ்வில் கடவுள் தாய்; தந்தை; ஆசிரியன்; தோழன். கடவுள், வாழ்த்துப் பொருள் மட்டு மல்ல; வாழ்வுப் பொருள். கடவுள் அழைத்துச் செல்பவன் அல்ல. ஆற்றல் மிக்க அன்பால் அழைத்தால் வருபவன். எங்கே? எங்கே? என்று தேடி வருபவன். உண்கின்ற சோறாகவும், தின்கின்ற வெற்றிபாக்காகவும் இருந்தருள் செய்பவன். செந்தமிழ் நாட்டில் சிவபெருமான் நிகழ்த்திய திருவிளையாடல்கள் பலப்பல.

தமிழர் கடவுளை அம்மையப்பராகவும் அம்மை யாகவும் வழிபட்டு வந்துள்ளனர். "தாயிற் சிறந்த தாயவுடை யவன்" என்றும் "பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" என்றும் சிவபெருமான் தாயினும் நல்லானாக வந்தருளும் பாங்கினை அறிக; உணர்க.

சிவன், தாயாக அருள் செய்வான் என்பதற்கு ஓங்கி உயர்ந்து நிற்கும் சான்று, திருச்சிராப்பள்ளி தாயுமானார் திருக்கோயில். ஒருகாலத்தில் திருச்சிராப்பள்ளிக்கு வடக்கே காவிரிக்கு அப்பால் உள்ள சிற்றூரில் ஒரு பெண்ணுக்குப் பேறு காலம். மகப்பேறு எளிதில் அமைய, தாயை எதிர் நோக்குகிறாள். தாயும் மருந்து முதலியன வாங்கிக் கொண்டு மகள் வீட்டுக்குப் பயணமானாள். ஆனால் காவிரியில் பெருக்கெடுத்த வெள்ளம் தாயின் பயணத்தைத் தடுத்து

விட்டது. தாயுள்ளம் தவித்தது. தாய், சிராப்பள்ளி மேவிய சிவனைத் தொழுதாள்; வேண்டினாள்; மகளுக்கு உதவி செய்ய சிராப்பள்ளி மேவிய சிவனும் சடுதியில் தாயெனச் சென்று மகப்பேற்றிற்கு உதவி செய்தனன். அன்று முதல் திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளியுள்ள இறைவனுக்குத் தாயுமானவர் என்ற பெயர் நின்று விளங்குவதாயிற்று. திருச்சிராப்பள்ளியில் தாயுமானவர் பெயரில் மகப்பேறு மருத்துவமனை அமைப்பது சிறந்த அறம். மகளிரைப் பொறுத்தவரையில் மகப்பேறு மரணவாயிலிலிருந்து தப்புவது போன்றது. ஆயினும் எந்த ஒரு பெண்ணும் மகப்பேற்றை - தாயாக ஆவதை மறுப்பதில்லை. ஏன்? ஒருவர் மானுட வடிவம் பெறத் துணையாய் அமைவது தாய்மைதானே! இயற்கையாக அமைந்த அறம் இது. மேலும் தாய்மைக்குத் துணை செய்யாத காமம் - இன்பம் விலங்கின் தன்மையது. தாய்மைக்குத் துணை செய்யும் காதலின்பமே இன்பம். தாயுமான ஈசனின் தண்ணருள் போற்றுதும்! போற்றுதும்!

சிவானுபூதிச் செல்வராக விளங்கிய தாயுமானவர் திருமறைக்காடு என்னும் வேதாரண்யத்தில் பிறந்தவர். சைவ வேளாண் மரபில் கேடிலியப்ப பிள்ளைக்கு ஆண் மகவு பிறந்தது. திருச்சிராப்பள்ளியில் பிறந்தது. பெற்றோர்கள் தாயுமானவன் என்று பெயரிட்டனர். தாயுமானவர் முறையாகத் தமிழும் வடமொழியும் பயின்றார். தேவாரத் திருமுறைகள், திருவாசகம் முதலியவற்றை ஓதுவார். அந்நூல் வழி திருவருள் பேற்றினை உணர்ந்தார்.

தந்தையார் காலமாக, தந்தையார் பார்த்த அரசுப்பணி வழி வழி தாயுமானவருக்கும் கிடைத்தது. ஆனால், திருவருள் நாட்டமே தாயுமானவரை ஆட்கொண்டு ஆட்டிப் படைத்தது. சாரமாமுனிவரைக் காணும் பேறு கிடைக்கிறது. சாரமாமுனிவர் யோக ஞான முறைகளைக் கற்றுத் தந்தார்; உணர்த்தினார். சாரமாமுனிவர் உணர்த்திய நெறி, சிவஞான சித்தி நெறி. சிவஞான சித்தியாரில் எட்டாவது நூற்பாவில்

நாற்பதாவது பாடலைக் கொண்டு சிவஞானத்தை உணர்த்தினார் என்பது மரபுவழி கிடைக்கும் செய்தி. "சித்தியில் ஓர் விருத்தப் பாதி போதுமே" என்ற சொல் வழக்கும் உண்டு. தாயுமானார் நாளும் ஞானநெறியில் வளர்ந்து வந்தார். பழுத்த துறவுமன நிலையையும் பெற்று வந்தார். நாடாண்ட அரசியின் காமத்திற்கும் உடன்பட்டாரில்லை. அரசுப் பணியிலிருந்து விலகி, திருத்தல யாத்திரை செய்யலானார். விராலி மலையில் சித்தர்களுடன் தங்கினார். ஆனாலும் சித்து விளையாட்டுக்களில் தாயுமானாருக்கு ஈடுபாடு வரவில்லை.

தாயுமானவருக்குத் திருமணம் நடைபெறுகிறது. தந்தையுமாகிறார். ஆனால், மனைவி சில ஆண்டுகளிலேயே இறந்து விடுகிறார். மனைவியைத் தொடர்ந்து தாயும் காலமாகிறார். இந்தச் சூழ்நிலையில் மீண்டும் கடுந்துறவினை மேற்கொண்டு கோவணத்துடன் வீட்டை விட்டு வெளியேறுகிறார். திருச்சிராப்பள்ளிக்கு வந்து மௌன குரு மடத்தில தம் குருவுடன் தங்குகிறார். பின் 1662-ம் ஆண்டில் இராமநாதபுரம் சென்று பரிபூரணம் அடைகின்றார்.

தாயுமானவர் பல்வகையாப்புக்களில் நிறையப் பாடியுள்ளார். தாயுமானவர் பாடல்களில் அளவிறந்த வடமொழிச் சொற்கள் பயிலுகின்றன. ஆயினும் செந்தமிழ்ச் சுவை குன்றி விடவில்லை. தாயுமானவர் வாக்குப்படியே மொழிக்கு மொழி தித்திப்பாக அமைந்தவை தாயுமானவர் பாடல்கள். பக்திச் சுவையும் ஞான வேட்கையும் ததும்பும் இயல்பின தாயுமானவரின் பாடல்கள். தாயுமானவர் பாடல்களை நாள்தோறும் ஓதினால் பொறிகள் அடங்கும்; புலன்களின் சேட்டை குறையும். ஏன்? மனமே கூட அடங்கும்.

தாயுமானவர் துறவி; துறவினையும் கடந்த துறவி. தாயுமானவருக்கு பக்தி உண்டு. ஆனால் பக்தி நெறியையும் கடந்த ஞானநெறியில் நின்றவர் தாயுமானவர். தாயுமானவர் ஞானி.

"மெய்ஞ்ஞானத் தாணுவினோடு அத்துவிதம்
சாரும் நாள் எந்நாளோ?"

என்ற வரி தாயுமானவரின் ஞானவேட்கையைப் புலப் படுத்தும். தாயுமானவர் சிவஞான சித்தி நெறி பயின்றவர். ஆதலால் சித்தாந்த மரபுகளைத் தழுவியனவாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

சித்தாந்தம் என்றும் உள்பொருள் மூன்று என்ற கொள்கையுடையது. அவையாவன: கடவுள், உயிர், உயிரை இயல்பாகப் பற்றிய ஆணவம். இவை மூன்றும் என்றும் உள்ளவை. சிவத்திற்குத் தோற்றமும் இல்லை; அழிவும் இல்லை. பழைய மதங்களில் சங்கரரின் மாயா வாதம் மட்டும் "நானே கடவுள்" என்று கூறும். அங்ஙனமாயின் உயிர்க்குள்ள குற்றங்குறைகளுக்கு யார் பொறுப்பேற்பது? இந்தக் கருத்து அறிவியல் உலகில் நிற்காது. அதனால்தான் விளம்பரத்தால் தூக்கி நிறுத்த முயல்கின்றனர். தத்துவச் சிந்தனையாளர் மத்தியில் எடுபடாது; விலை போகாது.

தாயுமானவர் சித்தாந்த மரபு நெறியில் "என்று நீ அன்று நான் உன்னடியன் அல்லவோ!" என்று அருளிச் செய்துள்ள பாங்கினை அறிக. சைவசித்தாந்த சமயநெறியின் உயிரைப் பற்றிய சிறந்த கோட்பாடாவது உயிர். சார்ந்ததன் வண்ணமாதல். உயிர், ஆணவத்தைச் சார்ந்த நிலையில் ஆணவம் நிற்கும். சிவத்தைச் சார்ந்திருக்கும் பொழுது சிவமாக விளங்கும்.

"அறியாமைச் சாரின் அதுவாய் அறியும்
நெறியான போது அது வாய் நிற்கும்"

என்பார். ஆணவம் உயிரின் அறிவியல்பை மறைப்பதால் ஆணவத்தை அறியாமை என்று கூறும் மரபுண்டு. உயிர்கள் பிறப்பும் இறப்பும் இல்லாதவை. உயிர்கள் அறிவித்தால் அறியும் இயல்பின. உயிர்கள் பலப்பல என்ற சிவநெறிக் கொள்கைகள் தாயுமானவர் பாடல்களில் இடம் பெற் றுள்ளன.

ஆணவத்துடன் இரண்டறக் கலந்து கிடந்த உயிரை இறைவனின் தண்ணருள் மாயை, கன்மங்களைக் கூட்டிப் பிறப்பை நல்குகிறது. மாயையும் கன்மமும் கெடுக்கும் மலங்களல்ல. ஆற்றுப்படுத்தும் மலங்கள். சித்தாந்த மரபுவழி முதலில் ஆன்மா, தன்னைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும். அதன்பின்தான் கடவுளை அறிதல் இயலும். இருளும் ஒளியும் ஓரிடத்தன. ஆனால், ஒளிமேவிய நிலையில் இருள் நீங்கும். உயிர், சிவமாய அறிவுச் சார்ந்து விடின் அறியாமை அகலும். அறியாமை தலைகாட்டாது. காரிட்ட ஆணவக் கருவறையிலிருந்து ஞான உலகிற்கு உயிரைக் கொண்டு வரத் திருவுள்ளம் கொண்டு கருவிகள் – பொறி, புலன்களுடன் கூடிய உடலினைத் தந்து பிறப்பில் ஈடுபடுத்துகின்றான் இறைவன். உயிர்க்கு வழங்கப்பெறும் பிறப்பு, மருத்துவம் செய்தல் போலவேயாம். இறைவன் உயர்க்குயிராய் நின்று ஆண்டருள் செய்கின்றான். இறைவன் உணர்த்தும் பொழுது உயிர் உணர்கிறது. ஆனாலும் உயிரை, அறிவுப் பொருள் என்று சொல்லும் வழக்கும் இருக்கிறது. இதனைத் தாயுமானவர்,

> "நீ யுணர்த்த நான் உணரும் நேசத் தாலோ
> அறிவென்றே எனக்கு ஓர் நாமம் இட்டது"

என்று அருளிச் செய்து விளக்குகின்றார். உயிர் நிலையில் கடவுளை அறிதலுக்குரிய உபாயத்தைத் தாயுமானார் எடுத்துக்கூறி விளக்குகின்றார்.

> "தன்னை அறிந்து அருளே தாரகமாய் நிற்பதுவே
> உன்னை அறிதலுக்கு உபாயம் பராபரமே"

என்பது தாயுமானார் வாக்கு. உயிர் சிவத்தைச் சார்ந்தாலே இன்பம். மற்றையது எதுவும் உயிர்க்கு இன்பம் தாரா.

> தன்னை யறிந்தால் தலைவன் மேல் பற்றலது
> பின்னையொரு பற்றும் உண்டோ பேசாய் பராபரமே!

# 31

# வள்ளலார் நெறி I

எந்தக் குறையை எந்த ஒரு பெரியார் எந்த நாளிலே இது தவறு என்று இடித்துக் கூறினாரோ அந்தத் தவற்றை அந்தக் குறையை அவர் காலத்திலாவது அல்லது அடுத்த தலைமுறையிலாவது நாம் நீக்கினோ மில்லை. குறை களைந்தோம் இல்லை.

திருவள்ளுவர் காலந்தொட்டு அப்பரடிகள் காலம் உள்பட மாணிக்கவாசகர் காலம் உள்பட இராமலிங்க அடிகள் காலம் உள்பட இன்றுவரை அவர்கள் இடித்துக் கூறிய குறைகளையே நாம் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறோமே தவிர-சொல்லி வந்திருக்கிறோமே தவிர அவற்றிலிருந்து மக்கள் விடுதலை பெற்றிருக்கிறார்களா என்றால் இல்லை இல்லை இல்லை என்ற பதில் தான் கிடைக்கும்.

இந்த நாட்டில் ஆயிரம் ஆண்டுக்கு ஒருதரம் அல்ல, ஒரு நூற்றாண்டுக்கு ஒருதரம் பெரியவர்கள்-கொள்கையாற் சிறந்தவர்கள் - சால்புடையவர்கள் - சான்றாண்மை யுடைய வர்கள் தோன்றி இனிய தமிழில் எண்ணற்ற அறிவுரைகளை எடுத்துச் சொல்லி வந்திருந்தாலும்கூட அவற்றையெல்லாம்

நம்மவர்கள் போற்றத் தெரிந்தார்கள் - புகழக் கற்றுக் கொண்டார்கள். (பஜனை மடத்தில் வைத்து வழிபாடு செய்யக் கற்றுக் கொண்டார்கள். மற்றபடி அவற்றை நடை முறைக்குக் கொண்டு வரவில்லை.)

இந்த நாட்டில் வள்ளலார் பிறந்தார் - திரும்ப ஒரு வள்ளலார் பிறந்து வந்தாலும்கூட இந்தக் காரியம் முடியுமா என்பது எனக்குச் சற்று ஐயப்பாடுதான். இன்று நேற்றல்ல - ஆயிரம் ஆண்டுக்கால வரலாற்றைப் பார்க்கிறேன். இந்த நாட்டு வரலாற்றில் ஒரு 300 அல்லது 500 ஆண்டுகள் ஓர் ஒழுக்க நெறியைச் சேர்ந்தாற்போல தமிழர்கள் பின்பற்றி யதாகக் கூற முடியாது. நாம் எவ்வளவுதான் பேசினாலும், எவ்வளவுதான் விடிய விடியக் கதறினாலும் இந்த நாட்டு மக்கள்-கூறுகிறவர்களும் கேட்கிறவர்களும் செயல்பட மாட்டார்கள். இப்படி இந்த நாட்டின் போக்கு அமைந்திருப் பதைக் கண்டு நான் பெரிதும் வருத்தப்படுகிறேன். அப்படி யிருந்தும் எனக்கு ஏமாற்றமும் தோல்வி மனப்பான்மையும் ஏற்பட்டும்கூட நான் தொடர்ந்து எனது பணிகளைச் செய்து கொண்டிருக்கிறேன் என்றால், இன்னும் எனக்கு வயது நிறைய ஆகாததால் ஒருகால் என் தலைமுறையில் முடிந் தாலும் முடியலாமே என்ற ஆசைதான். ஆனாலும் இராமலிங்கர் கூறியதுபோல, கடைவிரித்தேன்- கொள்வா ரில்லை- கட்டிக்கொண்டேன் என்று சொல்லும்படியாக, இந்தத் தலைமுறைத் தமிழர்கள் என்னை விட்டுவிடமாட் டார்கள் என்ற நம்பிக்கையில் சொல்லிக் கொண்டிருக் கிறேன். அந்த நம்பிக்கை பொய்க்கக் கூடாது என்று சொல்ல ஆசைப்படுகிறேன்.

அருள்நெறித் திருக்கூட்டத்தினர் இந்த சன்மார்க்க சங்கங்களில் கலந்து கொள்ளக் கூச்சப்படுகிறார்கள் என்று சொன்னார்கள். என்னைப் பொறுத்தவரை ஏறாத மேடை யில்லை. ஏறாத மேடை ஏறுகிற மேடை என்ற வேறுபாடு எனக்கில்லை என்பது எல்லோருக்கும் தெரியும். என்னோடு

முற்றிலும் கருத்துவேறுபாடு கொண்டவர்களின் மேடை களிலும் போய்க் கலந்து கொண்டு அவர்களின் பொல் லாப்பை ஏற்றுக் கொண்டவர்களில் நானும் ஒருவன்- இப்படிச் சொல்லுவதைவிட நான் தான் என்று சொன்னால் கூடத் தவறில்லை. இப்படி எல்லா மேடைகளுக்கும் கூச்சமின்றிச் செல்லுகிற வாய்ப்பை ஆண்டவன் எனக்கு எந்த வழியோ அருளிச் செய்திருக்கிறார். ஆனால், அருள் நெறித் திருக்கூட்டத்தினர் அச்சப்படுகின்றனர்- கூச்சப்படு கின்றனர் என்றால், அதற்குக் காரணம் அவர்கள் வள்ள லாரின் நெறி மட்டுமின்றி, வள்ளலாருக்கு முன்னமேயே வள்ளலாராலேயே பாராட்டப் பெற்ற பெருமக்களின் நெறியையும் ஏற்றுப் போற்றிப் பாராட்ட வேண்டும் என்று விரும்புகிறார்கள். இந்தக் கொள்கையோடுதான் அருள்நெறித் திருக்கூட்டம் தொடங்கப் பெற்றது. வள்ளலாரின் நெறி யோடு, அப்பரடிகள், மாணிக்கவாசகர் போன்றவர்களின் நெறியையும். ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதே அருள் நெறித் திருக்கூட்டத்தின் அடிப்படைக் கொள்கை. சன் மார்க்க நெறியினர் காலப்போக்கில் உருவ வழிபாடு திருக் கோயில் வழிபாடு போன்றவைகளில் நம்பிக்கையின்றித் தனியே ஒரு மடம் கட்டி, தனியே ஒரு ஜோதி வைத்து வழிபடும் உணர்வுடையவர்களாக ஆகிவிட்டமையின் காரணமாகத் திருக்கோயில்களைப் பேணிப் பாதுகாக்க முடியாமற் போய்விடுமோ என்ற அச்சம் சிற்சில இடங்களில் அருள் நெறித் திருக் கூட்டத்தினர்க்கு இருக்கிறது. அந்த அச்சத்தை மாற்ற வேண்டிய பொறுப்பு சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்தவர்களுக்கும் உண்டு என்று சொல்லிக் கொள்ள விரும்புறேன்.

**"கந்த கோட்டத்துள் தலமோங்கு கந்தவேளே"** என்று கூறும் வள்ளலாருக்கு உருவ வழிபாட்டில் நம்பிக்கை கிடையாது என்று கூறிவிட முடியாது. அதை அவர் முழுக்க ஏற்றாரா இல்லையா என்பது வேறு. எனினும் திருவுருவ வழிபாடு,

திருக்கோயில் வழிபாடு போன்றவற்றில் வள்ளலாருக்கு நம்பிக்கை இருந்தும் கூடப் பெரும்பான்மையான சன்மார்க்க சங்கத்தினர் திருக்கோயில் வழிபாட்டை வலியுறுத்தாமல் — அது பற்றியே பேசாமல் தனியே ஒரு மடம் அமைத்து அங்கே ஒரு ஜோதியை வைத்து வழிபடுகின்றனர்—இராமலிங்க அடிகளை மட்டும் வைத்து வழிபடுகின்றனர். இந்நிலை இருப்பதனால், ஆண்டாண்டுக் காலமாக இந்த நாட்டின் பாரம்பரியத்தில் ஊறிக் கிடக்கும் திருக்கோயில் வழிபாடு காலப்போக்கில் அழிந்து விடுமோ என்ற அச்சத்தின் காரணமாகத்தான் அருள்நெறித் திருக்கூட்டத்தினர் சன் மார்க்க சங்கத்தில் சேர வெட்கப்படுவார்கள் — கூச்சப் படுவார்கள். சன்மார்க்க சங்கத்தினர் திருக்கோயில் வழி பாடும், திருவுருவ வழிபாடும் தேவைதான்— தங்கட்கும் உடன்பாடுதான் என்கிற நிலைமையை உருவாக்கி அருள் நெறித் திருக்கூட்டத்தினரின் அச்சத்தைப் போக்கினால் இந்தச் சிக்கல் எளிதில் தீர்ந்து விடக்கூடும் என்று நம்புகிறேன்.

அருள் நெறித் திருக்கூட்டமும், சன்மார்க்க இயக்கமும் மாறுபட்ட கருத்துடைய இயக்கங்கள் அல்ல. உடன்பாடான இயக்கங்கள்தாம் துணை இயக்கங்கள்தாம் - வழி இயக்கங்கள்தாம். ஆதலின் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. சன்மார்க்க சங்கத்தினர் ஒரு பரு வடிவத்திலே நின்று விடுகிறார்கள். அருள்நெறித் திருக்கூட்டம், மேலும் ஒரு ஆயிரம் ஆண்டுக்காலப் பாரம்பரியத்திலே தன்னைப் பின்னிப் பிணைத்துக் கொண்டிருக்கிறது. இந்த நாட்டில் திருக்கோயில்களைப் பேணிக் காக்கவேண்டும்- திருக் கோயில்களுக்கு வருகிறவர்களின் எண்ணிக்கையை உயர்த்த வேண்டும்- திருக்கோயில்களுக்கு வருகிறவர்களின் வழி பாட்டுணர்ச்சியை வளர்க்கவேண்டும் என்ற உணர்விலே தான் அருள் நெறித் திருக்கூட்டம் இயங்கி வருகிறது.

இன்று பலர் நன்மை செய்வதாக நினைத்துக் கொண்டு பல தீமைகளைச் செய்கிறார்கள். இந்தப் புத்திசாலித்தனம் நம் நாட்டிலேதான் உண்டு

நமக்கெல்லாம் இராமலிங்கர் மீது பக்திதானே! அவர் மீது பக்தியும், பாசமும் கொண்டுதானே நாம் இங்கே கூடியிருக்கிறோம். அவர்மீது காகிதப் பூவைப் போட்டால் அது போலிதானே! அவர் திருவுருவப் படத்தை அலங் கரிக்கும் தேரில் காகிதப் பூவைப் போட்டால் அது எதைக் காட்டும்? நாம் இன்னும் மணமிக்கவர்களாக ஆகவில்லை என்பதைத்தானே? வழிபாட்டில்—வழிபாட்டு நிகழ்ச்சிகளில் — வீட்டு நிகழ்ச்சிகளில் மணமிக்க மலர்களையும் பயன் படுத்துவது ஏன்? மனிதனின் உள்ளுணர்வு மணமிக்க மலர்போல பூத்து, மலர்ந்து மணம் வீசவேண்டும் என்பதன் அறிகுறியாகத் தானே? கையிலே மலர்க் கொத்து (Bouquet) கொடுக்கிறோமென்றால், கையிலே இருக்கிற மலர்போல உள்ள மலரும் மணம் வீசவேண்டும் என்பதற்காகத்தானே? இப்படிச் செயலால் உணர்த்துவது (Practical Study) செய்முறைப் படிப்பு. பல ஆண்டுகட்கு முன்பே மதம் இந்தச் செய்முறைப் படிப்பை நடைமுறைக்குக் கொணர்ந்தது.

இன்று, திருமண வீட்டிலே பூ கொடுக்கிறோம்.

"இந்த மலரைக் கொடுக்கிறேன்; மலர், மணமும் இனிமையும், தண்மையும் மகிழ்ச்சியும் தருவதுபோல, உங்களுக்கும் எனக்கும் இருக்கிற உறவிலே மணம், இனிமை, தண்மை, மகிழ்ச்சி, கவர்ச்சி எல்லாம் இருக்கட்டும் என்பதற் காகத்தான். இப்பொழுது கொடுக்கப் பெறுகிற துலுக்கன் செவந்திப் பூவின் மணம் போல உங்கட்கும் எனக்கும் உறவு இருக்கட்டும் என்றால், அது நடைமுறைக்கு ஒத்து வருமா?

விருந்தினர்க்கு மாலை போடுவது சடங்கு. அந்த மாலையைப் பெற்றுக் கொள்ளுகிறவர் 'உங்கள் அன்பை - உறவைக் கண்ணின் இமை போலக் காப்பாற்றுகிறேன்' என்பதன் அடையாளமாக-மரியாதையாகக் கண்ணில் ஒற்றி வாங்கிக் கொள்ள வேண்டும். இப்பொழுது அணிவிக்கப் பெறுகிற மாலையைக் கண்ணிலே ஒற்றினால், மாலையில்

சுற்றிக் கட்டப் பெற்றுள்ள காக்காய்த் தகடு கண்ணிலே குத்திக் காயப்படுத்தி விடும்.

'கண்மூடிப் பழக்க மெல்லாம் மண் மூடிப்போக' என்று பாடினார் வள்ளலார். என்ன கண்மூடிப் பழக்கம்?

நம் நாட்டில் பொதுவாக இருக்கிற ஒரு குறை, ஏன் என்று கேட்டால் பாவம் என்கிற மனோபாவம். தாயை மகள் கேள்வி கேட்டால் தவறு! தகப்பனை மகன் கேள்வி கேட்டால் தவறு! ஆசிரியரை மாணாக்கன் கேள்வி கேட்டுவிட்டால் வந்தது ஆபத்து! இவற்றிற்கெல்லாம் மேலாக, மதத்தின் தலைவரை மக்கள் கேள்வி கேட்டு விட்டால் இந்த உலகமே பிரளயத்தில் அழிந்துவிடும். இங்கு மதத்துறையில் இருக்கிறவர்கள் மக்களை அச்சுறுத்திய தாலேயே இந்த நாட்டின் 'மதம்' கெட்டுப் போய்விட்டது. மக்களிடத்தே அச்சம் பரவியுள்ளது!

கேள்வி கேட்க முடியவில்லை. இதைத்தான் வள்ளலார் கண்மூடிப் பழக்கம் என்றார். பலருக்குக் கருத்தில்லை — கருத்தோடு தொடர்பும் இல்லை. கண்ணை மூடிக்கொண் டனர். எனவே கண்மூடிப் பழக்க வழக்கங்கள் மலிந்தன.

நம் நாட்டிலே அர்ச்சகர் வீட்டிலே அர்ச்சகன் பிறந்து விடுகிறான். அவனுக்கு ஞானம் வேண்டாம்; ஒழுக்கம் வேண்டாம்; அறிவுகூட வேண்டாம். ஆனால் தாசில்தார் வீட்டிலே தாசில்தார் பிறப்பதில்லை—தண்டல் நாயகம் வீட்டில் தண்டல் நாயகம் பிறப்பதில்லை.

பொதுவாகப் பலரிடம் ஏன் செய்கிறீர்கள் என்றால் தெரியாது! எதற்காகச் செய்கிறீர்கள் என்றால் தெரியாது! இதைச் செய்ததால் நீங்கள் என்ன பயனைப் பெற்றீர்கள் என்றால் தெரியாது! இதைச் செய்ததால் எத்தகைய உணர்வைப் பெற்றீர்கள் என்றாலும் பதில் கிடைக்காது. இந்த நிலைமையில் பரவியிருந்த பழக்க வழக்கங்களைப் பார்த்துத் தான் 'கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப்போக' என்றார் இராமலிங்கர். இப்படி நாம் சொல்லுவதால்

பழக்கங்களை இராமலிங்கர் கண்டித்தார் என்று கூறுவதாகப் பொருளில்லை. பழக்கங்களை அவர் கண்டிக்கவில்லை. பழக்கங்களினாலேயே மனிதனின் உள்ளுணர்வு தூண்டப் பெறுகிறது. புறச்சடங்குகள்-பழக்கங்கள் முதலியவற்றால், அமைந்து போய்க்கிடக்கிற- அடங்கிப்போய்க் கிடக்கிற — தம்பித்துப் போய்க்கிடக்கிற உணர்ச்சிகளை அசைத்து விடமுடியும். தூண்டிவிட முடியும். எனவே அறிவிற்கும் அனுபவத்திற்கும் தொடர்பின்றிச் சிந்தனைக்கும் செய லுக்கும் தொடர்பின்றித் தன்னிச்சையாகச் செய்கிற செயல் களைத்தான் வள்ளலார் கண்டித்தார்.

இன்று பலருக்குப் புராணக் கதைகள் தெரியுமே தவிர தத்துவங்கள் தெரியாது. இடைக் காலத்தில் இந்த நாட்டில் சமயம், சமயக்கல்வி, தூய உணர்வு, சமயப் பயிற்சி இவற்றை யெல்லாம் யார் சொல்லிக் கொடுப்பது என்ற வரை யறையின்றி, சொல்லிக் கொடுக்க உரிமையுடையவர் எல்லாம் தொழில் முறையில் மாறிப்போன பிறகு, சமயம் என்ற தேர் அக்குவேறு—ஆணி வேறாகப் பிய்த்தெறியப்பட்டு விட்டது. இந்தச் சூழ்நிலையில்—இந்தக் காலகட்டத்தில் இராமலிங்கர் பிறந்தார். அவர் தோன்றிய காலமே அழுகிக் கெட்டுப் போயிருந்த காலம்தான். இராமலிங்கர் மீதுள்ள பக்தியின் காரணமாக ஒருகால் அவர் காலத்தை நாம் பொற்காலம் என்று கருதிக் கொள்ளலாம். ஆனால், தமிழகம் கெட்டுப் போயிருந்ததை அவரே பல இடங்களில் நொந்து பாடியிருக்கிறார். அவர்காலம் ஒரு சோதனைக் காலம். அன்று, ஆறுமுக நாவலர் போன்றவர்களே இராமலிங்கரை எதிர்த்தார்கள் என்றால், பொறாமையினால் எதிர்க்க வில்லை. நாவலர் போன்றவர்கள் கொஞ்சம் பாரம்பரிய மான வைதிக உணர்வுடையவர்கள். அவர்கட்கு வள்ளலார் போன்றவர்களின் சன்மார்க்க சமரச நெறி பிடிக்கவில்லை. நாவலர் போன்றோர் சாதி முதலிய எல்லாம் மறைந்து விடக்கூடாது என்பது போன்ற உணர்வுடையவர்கள். எனவே எதிர்த்தார்கள்.

(புதிய காற்றுச் சிலருக்குப் பிடிக்காது; சிலர் உடம்புக்கு ஒத்துவராது. பிடிக்காது என்றாலும், ஒரு சூழலை உருவாக்கித் தலைமீது சுமத்தி விட்டால் பின்னர் பரவாயில்லை என்று சொல்லி ஏற்றுக் கொள்வர்.) அரிசனங்களை ஆலயத்திற்குள் அனுமதியுங்கள் என்று அண்ணல் காந்தியடிகள் தொடக் கத்தில் கேட்டுக் கொண்ட போதெல்லாம் அதை உறுதியாக எதிர்த்து வந்த வைதிகர்கள், சட்டம் வந்த பிறகு பரிவட்டம் கட்ட ஆரம்பித்து விட்டார்கள். கடவுளுக்காக ஒத்துக் கொள்ளாதவர்கள் சட்டம் வந்த பிறகு, சட்டத்தின் பேரால் வருகிற பிரதிநிதிக்குப் பணிந்து ஏற்று நடைமுறைப்படுத்த முன்வந்தால் சட்டம் பெரிதா? சாத்திரம் பெரிதா? மக்கள் நலன் பெரிதா? தனிமனிதன் நலன் பெரிதா?

வள்ளலார், தமிழகத்தின் எல்லாவிதமான பழைய பாரம்பரியங்களையும் ஒத்துக் கொண்டார். திடீரெனத் தோன்றியவர் அல்லர் அவர் என்ற உண்மையினை,

*'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட*
*மரபினில் யானொருவன் அன்றோ'.....*

என்ற வரிகள் மூலம் அவரே ஒத்துக் கொண்டிருக்கிறார்.

நமது தமிழ் நாட்டின் வரலாற்றைத் திரும்பத் திரும்பப் புரட்டிப் பார்த்தால் மேதைகள், ஞானியர்கள், வரலாற்றுப் பெரியோர்கள் இப்படித் தொடர்ந்து தோன்றி வாழ்ந்து வந்திருப்பதை யறியலாம். மாணிக்கவாசகரையும், அவரது திருவாசகத்தைப் பற்றியும் அவர் பாடுகையில்,

***வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை***
***நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே***
***தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து***
***ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே***

என்று குறிப்பிடுகிறார். மாணிக்கவாசகரின் திருவாசகத்தைக் கேட்டபொழுது, "கீழ்ப்பறவைச் சாதிகளும் வேட்டமுறும்;

பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான நாட்டமுறும்" என்று பேசுகின்றார்.

நால்வர் நெறியிலே, 'வாழையடி வாழையாக' வந்து தோன்றியவர் வள்ளலார். நால்வர் நெறியிலே அவருக்கு உயிர்ப்பிடிப்பு இருந்தது. மாணிக்கவாசகரின் குழைவை நாம் அருட்பாவிலே காணலாம்; திருவாசகத்திற்கு ஒரு மறு பதிப்பு அருட்பா என்று கூறலாம். திருவாசகத்தில் இவர் கரைந்து பாடியிருக்கிறார் என்பதை அவரது அருட்பாவிலிருந்து தெளிவாக உணரலாம். அவரது வாழ்க்கை வரலாற்றில்கூடச் சொல்லுவார்கள், அவர் திருமணம் நடந்த முதல் நாள் இரவு, வழக்கப்படி கையிலே திருவாசகத்தை எடுத்துக்கொண்டு சென்றார் என்று- வள்ளலாரை வளர்த்தது- அவரை வள்ளலாராக ஆக்கியது- அருட்பா மழையைப் பொழியுமாறு செய்தது- அம்மழை பொழிவதற்கு முகிலாக இருந்தது திருவாசகம் என்றே சொல்லலாம். மாணிக்க வாசகர் காலத்திற்குப் பின் பல நூற்றாண்டுகள் கழித்து வள்ளலார் தோன்றினார். அதன் பிறகும், தமிழகம் திருந்திவிடவில்லை. மாணிக்கவாசகர் காலத்தில் இருந்ததை விடக் கொஞ்சம் அதிகம் கெட்டுப் போய்த்தான் இருந்தது. மாணிக்கவாசகர் அவதரித்த காலத்திலும் இந்நாடு கெட்டுத் தான் போயிருந்தது.

'சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆதமிலி நாயேனை' என்று மாணிக்கவாசகர் பாடிய பிறகு, எத்தனை பேர் எவ்வளவு காலமாக இந்தப் பொல்லாத சாதிப் பேயை இல்லாமல் ஒழிக்க முயற்சித் திருக்கிறார்கள்! ஆனால், சாதி மட்டும் இருந்தபடியே தான் இருக்கிறது. ஓர் அங்குலம் கூடக் குறையவில்லை. எனவே, வள்ளலார் நெறிநிற்கிற அன்பர்கள், இந்நாட்டு மக்களை ஆண்டாண்டுக் காலமாகப் பிடித்துக் கொண்டிருக்கிற சாதிப்பேயை விரட்டியடிப்பதில் முழு முயற்சியோடு ஈடுபட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சாதிப்பேயை அடியோடு அழித்தொழிக்கும் காலமே வள்ளலாரின் மனம் மகிழும் காலம்.

# 32

# வள்ளலார் நெறி II

தமிழகம் தெய்வமணம் கமழும் திருநாடு. இறைமணம் கமழும் இன்பத் திருநாடு. விண்ணளந்து காட்டி வினை மறைக்கும் திருக்கோயில்கள் அழகு செய்யும் திருநாடு. ஞானியர் பலர் தோன்றிய ஞானத் திருநாடு. தமிழக வரலாறு அரசியலால் பெற்றிருக்கும் ஏற்றத்தை விட ஞானத்தால் பெற்ற விளக்கம் அதிகம்.

தமிழகத்தின் சங்க காலத்து பக்குடுக்கை நன்கணியார் முதலாக வள்ளலார் காலம் வரை இடையீடின்றி ஒரு ஞானப் பாரம்பரியம் தொடர்ந்து வந்திருக்கிறது.

*ஓரில் நெய்தல் கறங்க ஓரில்*
*ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்*
*புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்*
*பைத லுண்கண் பனிவார் புறைப்பப்*
*படைத்தோன் மன்ற அப் பண்பிலாளன்*
*இன்னா தம்ம இவ்வுலகம்*
*இனிய காண்கிதன் இயல்புணர்ந்த தோரே* – புறம் 194

என்று பாடிய பக்குடுக்கை நன்கணியார் காலந் தொட்டு 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்று

அழுத வள்ளலார் வரை ஓர் அருள் ஒழுக்கப் பாரம்பரியம் வளர்ந்து வந்திருக்கிறது. வள்ளற் பெருமான், தமக்கு முன்பே தோன்றிய நால்வர் பெருமக்களை நினைந்து நினைந்து நெஞ்சுருகப் பாடுகின்றார். தம்மை அந்த வழிவழி மரபில் வந்த திருக்கூட்டத்தைச் சேர்ந்தவரென்று சொல்லிக் கொள்வதில் பெருமையடைகின்றார்.

> "வாழையடி வாழையென வந்ததிருக் கூட்ட
> மரபினில்யா னொருவன் அன்றோ?"

என்பது அவர் திருப்பாடல். எனவே, வள்ளற் பெருமான் வழிவழி மரபில் தோன்றி, தமது மரபுக்குப் புதுமையும் பொதுமையும் சேர்த்தவர்.

நாம் வாழும் இந்தத் தலைமுறை வரலாற்றுச் சிறப் புடையது. ஏன்? பத்தொன்பதாம் நூற்றாண்டில் வள்ளலார் தோன்றி ஒரு சமய மறுபலர்ச்சி இயக்கத்திற்குக் கால்கோள் செய்தார். தமிழக வரலாற்றில் பத்தொன்பதாம் நூற்றாண்டில், வள்ளற் பெருமான் நமது சமயத்தில்—சமூகத்தில் தேங்கிக் கிடந்த உணர்வுகளுக்கு ஒளியூட்டி எழுச்சி தந்தார்; ஏற்றம் தந்தார். வள்ளலார் சீர்திருத்தம் செய்ய விரும்பினார். அவர் விரும்பிய சீர்திருத்தம் முறையானது. இன்று, பலர் சீர்திருத்தம் பேசுகின்றனர்; செய்ய முனைகின்றனர். ஆனால், அவர்களுக்குச் சீர்திருத்தத்திற்குரிய அடிப்படைக் களங் களில் நம்பிக்கை இல்லை—அல்லது ஊசலாட்டம் இருக் கிறது. நம்பிக்கையில்லாதவர்கள் அல்லது ஊசலாட்டம் உள்ளவர்கள் சீர்திருத்தம் செய்யப் புகுவது சமய வழிப்பட்ட சமுதாயத்திற்குப் பேரிழப்பைத் தரும். பெர்னாட்ஷா, "களை பிடுங்க இறங்குபவர்கள் களை, பயிர் இவற்றின் வேறுபாடு களைத் தெரிந்து கொண்டு இறங்க வேண்டும்" என்றார். அங்ஙனம் தெரியாது இறங்குபவர்கள் பயிரைக் களை என்று பிடுங்கினாலும் பிடுங்கி விடுவர். வள்ளற் பெருமான் காலங்கடந்த பழைமையிற் காலூன்றி நின்றவர். ஆயினும்,

வள்ளற் பெருமான் பழைமைக்கு இளமையும், எழிலும் தந்து, புதுமை நெறி போற்றினார். வள்ளற் பெருமானின் புதுமை, வறட்சித் தன்மையுடையதன்று: வளமான புதுமை; அன்பினை, அருளினை அளித்திடும் புதுமை. மனித குலத்திற்குப் பொதுமை நெறி காட்டிய புதுமை.

வள்ளலார், சீர்திருத்தம் செய்ய முனைந்தவரல்ல. ஆனால், அவருடைய அனுபவத்தில் சீர்திருத்தம் முகிழ்த்தது. அறிதோறும் அறியாமை தோன்றுதலும் அறிவு வளர்தலும் இயற்கையாதல் போல அனுபவ வளர்ச்சி, படிப்படியாகக் குறைகளைக் கடந்த நிறைக்கு அழைத்துச் செல்லும். அறிவில் முகிழ்க்கும் புதுமையை விட அனுபவத்தில் முகிழ்க்கும் புதுமை நிறையுடையது; பயனுடையது. வள்ளற் பெருமான் படிப்படியாகத் தம்முடைய அனுபவ அறிவு முதிர்ச்சி யடைந்தது என்பதை எடுத்துக் கூறியுள்ளார். வள்ளற் பெருமான் தம்முடைய அனுபவ நெறியைப் பின்வருமாறு உணர்த்துகின்றார்;

“சாதியும் மதமும் சமயமும் தவிர்ந்தேன்
சாத்திரக் குப்பையும் தணந்தேன்
நீதியும் நிலையும் சத்தியப் பொருளும்
நித்திய வாழ்க்கையும் சுகமும்
ஆதியும் நடுவும் அந்தமும் எல்லாம்
அருட்பெருஞ் சோதியென் றறிந்தேன்
ஓதிய அனைத்தும் நீயறிந்தது நான்
உரைப்பதென் அடிக்கடி உனக்கே!”

இந்து சமூகத்தில் உள்ள சாதி வேற்றுமை மிகக் கொடுமையானது. இந்தச் சாதி வேற்றுமையை அகற்ற திருவள்ளுவர், அப்பர், உடையவர், இராமாநுசர், மாணிக்க வாசகர், சேக்கிழார் போன்ற சான்றோர்கள் தொடர்ந்து போராடி வந்திருக்கின்றனர். அந்த வரிசையில் வள்ளலார் தோன்றி, சாதி வேற்றுமைகளைக் கடுமையாகச் சாடினார்.

பொதுவாக, இன்றைய சமய நிறுவனங்களைச் சாதிமுறை ஆட்கொண்டதன் மூலம், உய்திபெற வேண்டிய மனிதனுக்கு உய்தியை வழங்கும் வழிபாட்டைத் திருக்கோயில்களில் தாமே நேரடியாகச் செய்து கொள்ளும் உரிமையில்லா திருக்கிறது. செயல், சிந்தனையை வெளிப்படுத்துவது. செயல், சிந்தனையை வளர்ப்பது. செயல், சிந்தனையை நிலை பேறாக்குவது.

சமய உலகின் வழிபாட்டு நிறுவனங்களாகிய திருக் கோயில்களில் சாதாரண, சராசரி மனிதனுக்குத் தானே வழிபாடு செய்து கொள்ளும் உரிமை மறுக்கப் பட்டிருக்கிறது. வள்ளல் இராமலிங்கர் இது நியாயமற்றது என்பதைத் தமிழகத் திருக்கோயில்களில், யானை பூசித்தது; அணில் பூசித்தது; சிலந்தி பூசித்தது; எறும்பு பூசித்தது என்றெல்லாம் கூறுபவர்கள் மனிதனுக்குப் பூசனை உரிமையை ஏன் மறுக்க வேண்டும் என்று வினா எழுப்புகிறார்.

> "......................போற்றுகின்ற
> ஆடுங் கரியும் அணிலும் குரங்கும் அன்பு
> தேடும் சிலம்பியொடு சிற்றெறும்பும்—நீடுகின்ற
> பாம்பும் சிவார்ச்சனைதான் பண்ணியதென் றால்பூசை
> ஓம்புவதற்கு யார்தான் உவவாதார்?................"

என்பது வள்ளற் பெருமான் கேள்வி. கி.மு. 42 இல் கண்ணப்பர் காலத்தில் கேட்ட கேள்வியையே 19ஆம் நூற்றாண்டில் வள்ளற் பெருமானும் கேட்கிறார். ஆனால், கண்ணப்பர் காலத்தில் சிவகோசாரியார் எழுப்பிய வினாவுக்குச் சிவபெருமானே விடை தந்தருளினார். ஆனால், சாதி, குல, கோத்திர வேற்றுமைக்கு ஆளாகிய மனித குலம், அந்த விடையை மீண்டும் அழித்து விட்டது. வள்ளலார்க்கு உண்மையான நினைவு நமது இந்து சமூகத்தில் நிலவும் சாதிகளை அகற்றி ஒரு குலம் அமைப்பதேயாகும்.

வள்ளற் பெருமான் சமூக நெறிகளைக் கூடப் படி முறையிற் கருதினாரே தவிர, அவைகளையும் கடந்த பொதுமை உலகம் தோன்றுதலையே விரும்பினார். வள்ளற் பெருமான் சாதிகளை வெறுத்ததைப் போலவே, சமய நெறிகளையும், மதங்களையும்கூட வெறுத்தார். காரணம் அவை மனித உலகத்தில் இன்ப அன்பினை வளர்த்து அமைதியை வழங்குவதற்குப் பதிலாகப் பகையை வளர்த்துக் கலகம் விளைவித்தன. மனித உலக வரலாற்றில் நிகழ்ந்த போர்களைக் கணக்கெடுத்தால் அவைகளில் மிகுதியானவை சமய—மதச் சண்டைகளாகவே இருக்கும். சமயத் தத்து வங்கள், மதக் கொள்கைகள் பிரச்சாரங்களுக்குப் பயன் படுத்தப் பெற்றன. பிரச்சார முறை தோன்றும் பொழுது நிறுவனங்கள் தோன்றும். நிறுவனங்கள் தோன்றியவுடன் தத்துவங்கள்—கொள்கைகள் பின் தள்ளப்பட்டு நிறுவனம் முன்னிலைப் படுத்தப் பெறும். நிறுவனம் தோன்றிய வுடனேயே அதன் நிழலாக உடைமைகளும் அதிகாரமும் தோன்றும். தத்துவங்களும், கொள்கைகளும் நெறி திறம்பும் திருப்பு முனை, நிறுவனத் தோற்றமேயாகும். நிறுவனம் என்னும் பொழுது விதிமுறைகளாலும் சட்டங்களாலும் கட்டுக் கோப்புகளாலும் காவல்களாலும் கெடுபிடிகளுக் காளாகும் அமைப்பினையே நாம் குறிப்பிடுகின்றோம். ஒரு காலத்தில் திருவானைக்கா, திருக்காளத்தி ஆகிய திருக் கோயில்களில் விலங்குகளும், வேடர்களும் சென்று வழிபாடு செய்திருக்கின்றனர். அந்தச் சூழ்நிலையில் அவை நிறுவனங் களல்ல. அவை நிறுவனங்களானவுடன் பூசனை செய்ய ஒரு சாரார் உரிமை ஆதிக்கம் பெறுகின்றனர்; கதவு கால் கொள்கிறது; பூட்டும் சாவியும் இடம் பெறுகின்றன. முடிவாக, இன்று நுழைவுக் கட்டணம் வசூலிக்கப் பெறுகிறது. இவை நிறுவனத்தின் அடையாளங்கள்.

அதுபோலவேதான் தத்துவப் பிரச்சாரம், யாருக்காக செய்யப்படுகிறதோ அவர்களாலேயே பாதுகாக்கப் பெற

வேண்டும். அவர்களிடமிருந்தே தத்துவப் பிரச்சார கர்த்தாக் களின் அன்றாட வாழ்க்கை நடைபெற வேண்டும். இதுவே பழைய முறை. இந்த அடிப்படையிலேயே 'பிக்ஷை' என்ற வட சொல்லும், 'பிச்சை' என்ற தமிழ்ச் சொல்லும் பிறந்தன. சற்று நாகரிகம் தோன்றிய பிறகு, 'மகேசுவர பூசை' என்ற சொல் தோன்றிற்று. ஆனால், இன்று இவைகள் பிரச்சார கர்த்தாக் களால் நிறுவனமாகிப் பெற்ற உடைமைகள் மூலம் செய்யப் படுகின்றன. உயிர்க்குல மக்கள் மூலம் செய்யப் பெறுவ தில்லை. ஆக, நிறுவனத் தோற்றத்திற்குப் பிறகு மனித குல ஒருமைப்பாடு, உய்தி பெறுதல் ஆகியவை 'முயற்கொம்பு' ஆகிவிட்டன. ஏன்? ஒரே தத்துவத்தைச் சார்ந்த நிறுவனங் களுக்கிடையே கூடப் 'பெருமை', 'புகழ்'ப் போட்டிகள் கால் கொண்டுவிட்டன. இந்த நெறி முறை தவறிய நிகழ்வுகளின் விளைவாக மதச் சண்டைகள் மலியத் தொடங்கின. அனுபவப் பொருளாகிய கடவுளைத் தொழுவதற்குப் பதில் 'யாருடைய கடவுள் பெரியவர்?' என்பது போன்ற வெறுக்கத் தக்க விவகாரங்கள் பெருகின. இந்தக் கலகத்தில் கடவுளையே மறந்துவிட்டனர். வள்ளற் பெருமான் நினைந்து நெஞ்சுருகி இவைகளைப் "பிள்ளை விளையாட்டு" என்று உணர்ச்சி கொப்பளிக்க விமர்சனம் செய்கிறார். வள்ளற் பெருமான்.

> "நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா
> நவின்றகலைச் சரிதமெலாம் பிள்ளைவிளை யாட்டே"

என்றும்,

> "குலத்திலே சமயக் குழியிலே நரகக்
> குழியிலே விழுந்து வீண் பொழுது
> நிலத்திலே போக்கி..........."

என்றும்,

> "சாதியும் மதமும் சமயமும் பொய்யென
> ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ் சோதி"

என்றும்,

"மதித்த சமய மத வழக்கெல்லாம் மாய்ந்தது"

என்றும், உரைத்திடும் உரைகள் உணர்வுக்குரியன உய்தியைக் காட்டும் தகையன.

கடவுளைத் தொழுதல்—அனுபவித்தல் என்பது வேறு. கடவுளைப் பற்றிக் கற்ற அளவிலும் கேட்ட அளவிலும் அவற்றை ஒலிக்குப்பையாக்கி வாதப் பிரதிவாதங்கள் செய்து 'சழக்காடுவது' என்பது வேறு. முன்னையது ஞான வாழ்க்கை; பின்னையது அவ வாழ்க்கை. இன்று பெருகி வளர்ந்திருப்பது பின்னையதே தவிர, முன்னையது அல்ல. மண்ணால் அமைத்த சாலைகள் என்பதை வாழும் ஊர்களை இணைத்து வெற்றி பெற்றுவிட்டன. ஆனால், மனித உயிர்களை—நெஞ்சங்களை இணைத்து ஒருமைப்பாடுடைய தாக்கக் கண்ட உயர்சமய நெறிகள் தமது நோக்கில் வெற்றி பெறவில்லை. அதற்குக் காரணம் கொள்கை குறையுடைய தன்று. கொள்கைக்காகத் தோன்றிய நிறுவனங்கள் கொள் கையை மறைத்து மூடிவிட்டு ஆதிக்கப் போட்டியில் ஈடுபட்டு விட்டதேயாகும். வள்ளற் பெருமான் சமய நெறிகளைக் கடந்த உயிர்க்குலப் பொதுமை நெறி நோக்கியே அவாவு கின்றார்.

"எவ்வுயிரும் பொதுவெனக் கண்டிங்கு
ஆதரித் திடுதல் வேண்டும்..."

என்று ஆணையிடுகின்றார். வள்ளற் பெருமான் ஆன்மநேய ஒருமைப்பாடு கண்டவர். வள்ளற் பெருமான்,

"எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி யுள்ளே
ஒத்துரிமை யுடையவராய் உவக்கின்றார்
யாவர்அவர் உளந்தான் சுத்த

*சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்*
*இடமெனநான் தெரிந்தேன் அந்த*
*வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்*
*சிந்தைமிக விழைந்த தாலோ."*

என்று ஐயத்திற்கிடமின்றித் தமது கொள்கைக்கு விளக்கம் தருகின்றார்.

வள்ளற் பெருமான் மனித உலகத்தைப் பேதப்படுத்தி — பிரிவு படுத்தியிருந்த சாதி, சமய வேறுபாட்டுச் சுவர்களை இடித்துத் தகர்த்தார். வள்ளற் பெருமான் உயிர்க்குல ஒருமைப்பாடு கண்டார். வள்ளற் பெருமான் கண்ட பொதுமை நெறி கடவுள் நம்பிக்கையில் தோன்றிய பொதுமை நெறி. கடவுள் நம்பிக்கையில்லாத பொதுமை நெறி நம்மை ஆட்கொள்ளாதிருக்க வேண்டுமானால் நாம் வள்ளலாரின் பொதுமை நெறியை வாழ்க்கையின் சீலமாக்க வேண்டும். வள்ளற் பெருமான் வேற்றுமை வெப்பம் தணிக்கப் பெய்த கருணை மழை: இருளிடை இடறித் தடுமாறி அலைந்த மனித குலத்திற்கு அருளுடைச் சுடரைத் தந்த ஞானப் பேரொளி. வள்ளற் பெருமான் கண்ட பொதுமை நெறி வையகத்தில் மலர்க!

# 33

# அருள் மழை!

தமிழகம் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வறுமையும் சிறுமையும் பொருந்தி இருண்டு கிடந்தபோது ஒரு மழை பொழிந்தது. தொடர்ந்து பொழிந்தது; அது தமிழ் மழை, அருள் மழை, அருட்பா மழை. இம் மழையினால் தமிழகம் தழைத்தது. வள்ளலார் என்ற புயல் பெய்த மழை தமிழ் மழை. அருள் நலங் கனிந்த மழை. உயிர் தொடும் இனிய பாட்டுக்கள். 'ஊன் படிக்கும் உயிர் படிக்கும்' என்ற அடிகள் அருட்பாவிற்கே பொருந்தும். தமிழ்மொழி, ஆட்சியில் இருந்த ஆங்கிலத்தாலும் — மதத்தில் கொலுவீற்றிருந்த சமஸ்கிருதத் தாலும் ஒடுக்குண்டிருந்த போது தமிழுக்கு இனிய ஏற்றம் தந்து மக்கள் மன்றத்தில் உலவச் செய்த பெருமை வள்ளலாருக்கே உண்டு. "தமிழுக்கு அமுது என்று பேர்" என்று புரட்சிக் கவிஞர் பாடினார். தமிழ் அமுதமாக விளங்குவதை திருவருட்பாவினாலேயே உணர முடிகிறது. அமுது, சுவையில் சிறந்தது; இனிமை தருவது; மரணம் தவிர்ப்பது; இன்ப அன்பினை வளர்ப்பது. திருவருட்பாக்கள் ஆராத் தமிழ்ச் சுவையுடையன; உயிர் வாழ்க்கைக்கு இனிமை கூட்டுவன; மரண மிலாப் பெரு வாழ்வினை அளிக்கு மியல்பின.

மனிதாபிமானத்தில் மிகச் சிறந்து விளங்கும் படைப்பு திருஅருட்பா. துன்பத்திற்கு மாற்று அருள். பிறர் துன்பம்

கண்டு வருந்தாதார் நெஞ்சம் அருளினை அறியாது; பெற முடியாது; அனுபவிக்கவும் முடியாது. வள்ளல் பெருமான் நடமாடும் அருட் கோயிலெனத் திகழ்ந்தார். உயிர் வர்க்கத்தின் துன்பத்தினைக் கண்டு துணுக்குற்றார்; வாடினார்; வருந்தினார்; துன்பத்தினை மாற்றி இன்பம் காண முயன்றார். தம்முடைய சீடர்கள் சரள் கற்களில் உட்கார்ந்து நோகக் கூடாதெனத் தாமே மண் எடுத்துப் பரப்பினார்; அன்று ஆலவாய் அண்ணல் தமது பக்தை வந்திக்காக மண் சுமந்தார். வள்ளலார் தமது சீடர்களுக்காக மண் சுமந்தார். நெஞ்சு நிறைந்த அருள், கருணை நிறைந்த செயலாக வெளிவரும்; இதுவே இயற்கை.

இறைவனை நோக்கி வள்ளல் பெருமான் இரந்து கேட்பது "ஆருயிர்களுக்கு எல்லாம் அன்பு செய்யும்" பண்பாட்டைத்தான்.

'உள்நாடி உயிர்களுறும் துயர்தவிர்தல் வேண்டும்'

என்கிறார்கள். உயிர்களுறும் துன்ப உணர்வுகள் உடனுக்குடன் தவிர்க்கப்படாது போனால் பின் அவை நஞ்சாகி நானிலத்தை அழிக்கின்றன. இதனை அருளுணர்வுடன் உலகியல் நடத்த விரும்பிய வள்ளல் பெருமான் அறிந்து வலியுறுத்துவது சிறப்புடையதாகும். "ஒத்தாரும் உயர்ந்தாரும், தாழ்ந்தாரும் எவரும் ஒருமையுளராகி, உலகியல் நடத்த வேண்டும்" என்ற அருட்பா அடிகள் நினைந்து நினைந்து இன்புறத்தக்கன. வள்ளல் பெருமான் "ஒற்றுமை உடையராகி" என்று குறிப்பிடாமல் "ஒருமை யுடையராகி" என்று குறிப்பிடுகின்றார். ஒற்றுமை புறத்தோற்றம்; ஒருமை அக உணர்வு. ஒற்றுமை உண்மையானதல்ல; ஒருமை உண்மை யானது. ஆதலாலேயே ஒருமை எனும் சொல்லில் வள்ளலார் பெருமானுக்கு அதிக ஈடுபாடு. இறைவனை ஒருமையுடன் நினைக்க வேண்டும் என்பார்கள் வள்ளல் பெருமான். வள்ளலார் புகழ் வாழ்த்தி, ஒருமையுடையவராக — உயிர்களின் நலம் பேணி நல்லவர்களாக வாழ முயற்சிப்போமாக!

**34**

# பணி செய்க!

ஆன்றோர்கள் தம்முடைய வாழ்க்கை அனுபவத்தின் விளைவாக அருளிய முதுமொழிகள் நம்முடைய தாய் மொழியில் ஏராளம். அவற்றைச் சிந்தித்து வாழ்க்கையில் ஏற்றுக்கொண்டால் அவலம் தொலையும்; அமைதி தோன்றும். சிறப்பாக அப்பரடிகள் "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்றருளிச் செய்துள்ளார். இந்த ஓர் அடியில் ஓராயிரம் ஆண்டு முயன்று பெறக்கூடிய அனுபவ ஞானத்தை - வாழ்க்கையை இன்ப மயமாக்கிக் கொள்ளும் அறிவைத் தந்துள்ளார். கடமை என்பது மனித வாழ்வின் குறிக்கோள். கடமையைக் கடமைக்காகவும், நன்மையை அது நன்மை என்பதற்காகவுமே செய்ய வேண்டும். ("நன்மைக் காகவே நன்மையை நாட வேண்டுமே யொழிய வேறொன் றுக்குச் சாதனமாக இருப்பதற்கல்ல") என்ற அரிஸ்டாட் டலின் அறிவுரை சிந்தனைக்குரியதாகும்! கடமையைச் செய்வதில் எதிரொலியான விளைவுகள்—பலாபலன்கள் பற்றி எண்ண் ால் கடமையாற்றலின் தரமும் தகுதியும் குறையும். மேலும் கடமையின் நிழலாகத் தன்னலம் தோன்றி வளர்ந்து, பின் கடமையுணர்வையும் மறைத்து அழித்து ஆதிக்கம் செய்யும். கடமைகளைச் செய்வதையும் கூட

வாணிகமாகவும் புகழ்வேட்டுத் திரியும் சாதனமாகவும் மாற்றிவிடக் கூடும். இத்துறையில் நாம் எதிர்பார்க்கின்ற அளவுக்குப் பலன் இல்லாதபோது கடமைகளிலிருந்துகூட விலகத்தோன்றும். இல்லை. தொண்ணூறு விழுக்காட்டுக்கு மேல் விலகிவிடுவார்கள். அதனாலேயே அப்பரடிகள் 'பணி செய்க! என்றார். பணியின் விளைவுகளை எதிர்பாரா வண்ணம் அஃறிணைகளைப் போலச் செய்க! மரம் பூத்துக் காய்க்கிறது- கனிகளைத் தருகிறது - எனினும் தன்னுடைய செயலுக்காக அது பெருமிதம் அடைவதில்லை-புகழை விரும்புவதில்லை. கடமையை முறையாகச் செய்து பலனில் பற்றின்றிக் கிடத்தலே நல்வாழ்க்கை என்கிறார். அதனாலேயே "கிடத்தலே" என்று குறிப்பிடுகின்றார். வள்ளுவமும் கூட, உதவியைப் பெறுகின்ற மனிதன் நன்றியறிந்து பாராட்ட வேண்டும் என்று கூறுகிறதே தவிர, உதவி செய்தவன் உதவி பெற்றவனிடமிருந்து நன்றியறிதலை எதிர்பார்க்கச் சொல்ல வில்லை. அது நடவாத ஒன்று! அப்படி எதிர்பார்த்தால், ஏமாற்றமே மிஞ்சும். ஆதலால், வாழ்க்கை கடமையை — நன்மையைச் செய்வதற்காகவே யாம். நலன் தழுவிய கடமையைச் செய்கிறவர்கள் பலன் பெறுகிறார்கள் — பெறுவார்கள் என்பது உண்மை. கடமையாற்றலின் மூலம் பிறருக்கு நன்மை விளைவதோடன்றிக் கடமையைச் செய்த வர்களுக்கும் ஒரு பெரிய நன்மை தோன்றுகிறது. அதாவது நங்கை ஒருத்தி தன் உடலை நலமாகவும் அழகுப் பொலி வுடையதாகவும் வைத்துக் கொள்ளும் முயற்சியில் ஈடுபடு வதின் மூலம் அவள் தனது கணவனுக்கு இன்ப நலனும், மகிழ்வும் ஊட்டுகிறாள் என்பது உண்மை. ஆனால், அதே காலத்தில் தான் நோயுறாவண்ணமும் காப்பாற்றப் படுகிறாள் என்பதை மறந்து விடுவதற்கில்லை. அது போலவே கடமைகளைச் செய்வதன் மூலம் நாம் நம்முடைய வாழ்க்கையை இலட்சியச் சார்புடைய தாக்கி—அவ்வழிப் பயனுடையதாக்கி மறுமை இன்பம் பெறுகிறோம்.

கடமைகளை உலகியல் பலன்களாகிய நன்றி பாராட்டுதல் — புகழ்பெறுதல்- தகுதிகளைப் பெறுதல் ஆகிய நோக்கத் தோடு செய்யின் கடமைகளின் வழியாக அடையக் கூடிய—வாழ்க்கையின் குறிக்கோளாகிய- எல்லாவித அவல உணர்வுகளினின்றும் விடுதலை பெற்று இன்ப அன்பிலே நின்று திளைத்தல் ஆகியன கைகூடாமற் போகும். ஏனெனில் கடமைகளைச் செய்வதில் பெரும்பாலும் யாரும் போட்டிக்கு வருவதில்லை. ஆனால், மேற்குறித்த பலன்களுக்குப் போட்டி அதிகம். போட்டி என்றாலே அவ்வழிக் கீழ்மைக் குணங்கள் தோன்றுவதியற்கை. கடைசியாகப் போட்டி நிறைந்த செயல்களில் ஈடுபட்டுக் குறிக்கோளை மறந்துவிடவும் கூடும். இந்நிலைமையையே அப்பரடிகள் "குறிக்கோள் இலாது கெட்டேன்" என்று அருளிச் செய்துள்ளார். இத்தகு சிறந்த வாழ்வியல் ஞானம் நம்முடையதாக இருந்தும் அதற் குள்ளேயே நாம் கிடப்பதாக நினைத்துக் கொண்டிருந்தும் வாழ்க்கைச் செய்முறைக்குக் கொண்டு வராமல் வாழ்வது கொடுமை; அது, இலாபம் கருதி வாணிகம் தொடங்கி இழப்பை அணைத்துக் கொள்வது போல! அவல உணர்வு களிலிருந்து விடுதலை பெற முயற்சிப்போமாக! போற்றிப் புகழ்தலையும் புழுதிவாரித் தூற்றுதலையும் நடுநிலை உணர்வுடன் ஏற்க நம்மை நாம் பக்குவப் படுத்திக் கொள்வோமாக! 'வசைவெலாம் வாழ்த்தெனக் கொள்வேன்' என்ற வள்ளலார் வழியில் வாழ்வோமாக! கடமையை மீண்டும் தொடர்ந்து கடமைக்காகச் செய்வோம்! எந்தவிதப் பலனையும் எதிர் பார்க்காது கடமைகளைச் செய்யும் ஞானத்தை முயன்று பெறுவோமாக! அவ்வழியில் திருவருள் நம்மை வ்ழி நடத்துவதாக!

# 35

## உய்வளிக்கும் தெய்வசிகாமணி

அருள்தரு தெய்வசிகாமணி தேசிகேந்திரன் புகழ் பாடும் நான்மணிமாலை தத்துவச் செறிவுடையது. சிவ ஞானம் பொதுளும் பெருமையுடையது.

அருள்:- அன்பீனுங் குழவி, அருள்! அன்பு வளர்ந்த நிலையில் அருளாகிறது! அன்பு தற்சார்புடையது. உறவுமுறை பற்றியது. உதவிகள் நாடுந்தன்மையது; நன்றி நாடுவது! அருள், பிறர் நலச் சார்புடையது; உறவு முறைகளைக் கடந்தது. திருவள்ளுவர் எடுத்துக் காட்டும் மருந்து மரம் அருளுக்கு ஒரு விளக்கம். அறம் செய்ய வேண்டுமாயின் அருளுணர்வு வேண்டும். பயன் நோக்கிய பணி அறமன்று. தற்சார்புடைய பணி அறமன்று. பயன் கருதிய பணி அறனிலை வாணிகமே யாம்! பிறர் நலம் கருதிய பணிகளே அறம்; அர்ப்பணிப் புணர்வுடன் செய்வதே அறம்!

சிவபெருமானின் ஊர்தி எருது. இந்த எருதினை 'அறம்' என்று கூறுவது மரபு. சிவபெருமான் ஓங்கி உயர்த்தும் கொடியும் எருதுக் கொடியேயாம்! உலகியலில் பசுவே சிறந்தது; வணங்கத்தக்கது என்பர். ஆனால் சிவநெறியில் எருதே உயர்ந்தது; வழிபாட்டுக்குரியது. ஏன்? எருது கடுமையான உழைப்புப் பிராணி! வைக்கோலைத் தின்று

உயிர் வாழும்; தான் உழைத்து மற்றவர்களுக்கு நெல் முதலிய சுவை நிறைந்த நுகர் பொருள்களை வழங்கும்! எருதுகளின் உழைப்பில் விளையும் சுவையும் நலமும் செறிந்த பொருள்கள் மனித குலத்திற்கு! எருதுகள் சாரமற்ற வைக்கோலைத் தின்று உயிர் வாழும்! அதுவும் கூடத் தொடர்ந்து உழைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் தான்! "உழுத நோன்பகடு அழிதின் றாங்கு" என்று புறம் பேசும். அறங்கள் செய்ய வேண்டுமாயின் அன்பின் ஆக்கமாகிய அருள் வேண்டும். இறைவனின் கருணையை அருள் என்று கூறுவது சமய மரபு; வழக்கு! 'அன்பு எனக்கு அருளாம்' என்பது திருவாசகம். இறைவனுடைய அருட்பார்வையால் தான் நமது உள்ளத்தில் அருள் முகிழ்க்க வேண்டும். "அருள் உண்டெனில் அறம் உண்டு".

உயிர்க் குலத்திற்கு அருள் நலஞ் செறிந்த அறங்கள் செய்து வாழவேண்டுமெனில் பொருள் வேண்டும். அந்தப் பொருளும் நல்ல வழியில் ஈட்டிய பொருளாக இருக்க வேண்டும். "அவ்வருளும் நல்ல பொருள் உண்டெனில் உண்டு" பிறர் பங்கைத் திருடிய பொருள் நல்ல பொருள் ஆகாது. சலத்தாற் செய்த பொருள் நல்ல பொருள் அல்ல! பழியஞ்சி, பழிபடரா நிலையில் உழைப்பினால் திரட்டிய பொருளே நல்ல பொருள். நல்ல பொருளுண்டெனில் அறமுண்டு; இன்பமுண்டு. துய்ப்பன போக மலம் துய்க்கும் வாழ்நெறியே உய்யும் நெறியின் தொடக்கம். இன்பம் துய்த்தலும் பல வழிப்பட்ட செயலே! ஆயினும் உய்யுமாறு உய்த்துச் செலுத்தும் போகம் இன்பம்!

உய்யும் நெறியுணராமல் வாழ்தல் இருள் மலஞ் சார்ந்த வாழ்க்கை! இருள் உண்டெனில் பிறப்புண்டு! பிறவாமை வேண்டுமெனில் சிந்தையில் தெளிவு வேண்டும்! அத்தெளி வினுள் சிவம் விளங்குதல் வேண்டும். ஆன்மாக்களுக்கு இருள் உண்டெனில் இருளின் தொடர்ச்சியாகத் தெளிவு வரும்; தெளிவு உண்டு. ஆன்மிக வாழ்க்கையில் தெளிதல்

இன்றியமையாதது. "சிந்தையுள் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி" என்பார் அப்பரடிகள். "தெய்வம் தெளிமின்" என்பார் இளங்கோவடிகள். இருளிலிருந்து - அறியாமை யிலிருந்து மீள்வதற்குரிய தெளிவுண்டெனில், அத்தெருளைத் தெளிவை வழங்கியருள் தேவசிகாமணிச் சிற்குரு உண்டு!

தேவசிகாமணிச் சிற்குருவின் அருட் பார்வையில் ஆன்மாக்களிடம் தெளிவு தோன்றுகிறது; அறியாமை அகலு கிறது; ஞானம் தலைப்படுகிறது. ஞானம் தலைப்பட்டவுடன் இருள் அகலுகிறது. இருள் அகன்றவுடன் நல்ல பொருள் கிடைக்கிறது. நல்ல பொருள் கிடைத்தவுடன் அறம் தலைப்படும் வாழ்க்கை தொடங்குகிறது. அறத்தின் வழியதாக அருள்நலம் கிடைக்கிறது. இவையெல்லாம் கிடைப்பதற்குக் காரணம் தெய்வசிகாமணி தேசிகேந்திர குருமூர்த்தியின் கடைக்கண் பார்வையேயாம்!

*"அருள் உண்டு எனில் உண்டு அறங்க ளெல்*
*லாம்; அவ் வருளும் நல்ல*
*பொருள் உண்டு எனில் உண்டு; போகியர்க்*
*கேயிவர் போகமல*
*இருள் உண் டெனில் உண்டுஇங் கெல்லாம்*
*வராமல் இருந்தும் ஒரு*
*தெருள் உண்டு எனில் உண்டு தேவ*
*சிகாமணிச் சிற்குருவே!"*

என்பது நமது ஆதீன முதல்வராகிய அருள்தரு தெய்வ சிகாமணி நான்மணி மாலை என்னும் நூலின் திருப்பாடல் களில் ஓர் அருட்பாடல்!

# தமிழ்மாமுனிவர்
# தவத்திரு
# குன்றக்குடி அடிகளார்
# நூல்வரிசை

## திருக்குறள்
## இலக்கியம்
## சமய இலக்கியம்
## சமயம்
## பொது